ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

## வ்யாக்யாந அரும்பதங்களுடன்



திருவல்லிக்கேணி

சே. கிருஷ்ணமாசாரியரால்





சென்னை

கமர்ஷியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

காளயுக்தி௵

Price Rs 2.] [விலை ரூ. 2.

சே. கிருஷ்ணமாசாரியர்,

தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை

19, தென்னண்டை மாடவீதி,

திருவல்லிக்கேணி.

## இப்புத்தகத்தில் அடங்கியவை.



ஸ்ரீ ஆண்டாள்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

# திருப்பாவையின்

## தனியன்களுக்குப்

## பிள்ளைலோகஞ் சீயர் அருளிச்செய்த

## வ்யாக்யாநம்.

---

அவதாரிகை.—(நீளாதுங்கஸ்தநகிரி - தடீஸுப்தமித்யாதி). பரதசை யில் மற்றைப் பிராட்டிமார்க்குப் பெரியபிராட்டியார் முன்னிலையாக வேண்டினாற்போலே, க்ருஷ்ணாவதாரத்தில் பெரியபிராட்டியார்க்கும் ஆண்டாளுக்குமகப்பட நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாகவேணும். அங்குத்தை ஐஶ்வர்யத்துக்குப் பிராட்டி ஸத்ருசையானாற்போலே, இங்குத்தைக்கு இவனுடைய எல்லாப்படிகளுக்கும் குலஶீலாதிகளால் ஸத்ருசையாயிருக்குமவள். இந்த ஶ்லோகம், பட்டர் தென்னாட்டிலே எழுந்தருளி யிருக்க, பெருமாளைப் பிரிந்த வ்யஸநத்தாலே திருவுள்ளங் கலங்கியிருக்கிற தசையிலே திருவுள்ளம் ப்ரஸந்நமாகைக்காக, நஞ்சீயர் "ஆண்டாளை ஒருஶ்லோகமும் ஆழ்வார்களை ஒரு ஶ்லோகமும் அருளிச்செய்யலாகாதோ?" என்ன, அதி ப்ரீதராய்த் திருப்பாவைக்கு வாக்யார்த்தமாக அருளிச்செய்து ஆண்டாளை ஶரணம் புகுகிற ஶ்லோகம். 'சேதநராடைய நஞ்சுண்டாரைப்போலே * அநாதிமாயையாலே மயங்கிக்கிடந்துஉறங்க, இப்படி யிருக்கிற ஸம்ஸாரத்துக்குள்ளே, திருவாய்ப்பாடிப் பெண்பிள்ளைகள் பரஸ்பரம் உணருவாரும் உணர்த்துவாருமாய்ப் பரமபதத்தில் யாத்ரைபோலே செல்லாநிற்பதே!' என்று ஆண்டாள் தானும் அநுகாரத்தாலே இவர்களை உணர்த்தினவோபாதி அவன்தன்னையும் உணர்த்தினாள்.

(பராசரபட்டர் அருளிச்செய்தது.)

నీళాతుఙ్గస్తనగిరితటీ సుప్తముద్బోధ్యకృష్ణం
పారార్థ్యంస్వంశ్రుతిశతశిర స్సిద్ధమధ్యాపయన్తీ ।
స్వోచ్ఛిష్టాయాంస్రజినిగళితం యాబలాత్కృత్యభుఙ్క్తే
గోదాతస్యైనమఇదమిదం భూయఏవాస్తుభూయః ॥

நீளாதுங்கஸ்தநகிரிதடீ ஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ச்ருதிசதசிர ஸ்ஸித்தமத்யாபயந்தீ ।
ஸ்வோச்சிஷ்டாயாம்ஸ்ரஜிநிகளிதம் யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம் பூயஏவாஸ்துபூய: ॥

பதவுரை.—నీళా - நீளா-நப்பின்னைப்பிராட்டியினுடைய, తుఙ్గ - துங்க-ஓங்கிப் பணைத்திருந்துள்ள, స్తన-ஸ்தந - திருமுலைத்தடங்களாகிற, గిరితటీ-கிரிதடீ-மலைத்தாழ்வரையிலே, సుప్తమ్-ஸுப்தம்-மயங்கிக் கிடந்துஉறங்கினவனாய், స్వోచ్ఛిష్టాయామ్-ஸ்வோச்சிஷ்டாயாம் - தன்னால் சாத்திக்கழிக்கப்பட்ட, స్రజి-ஸ்ரஜி - மாலையிலே, నిగళితమ్-நிகளிதம்-விலங்கிடப்பட்டவனாயிருக்கிற, కృష్ణమ్-க்ருஷ்ணம் - க்ருஷ்ணனாகிற ஸிம்ஹத்தை,—ఉద్బోధ్య-உத்போத்ய - உணர்த்தி, శ్రుతిశతశిర స్సిద్ధం-ச்ருதிசதசிர ஸ்ஸித்தம் - பலஉபநிஷத்துக்களிலும் தேறின, స్వమ్ - ஸ்வம் - தன்னுடைய, పారార్థ్యమ్ - பாரார்த்யம் - பாரதந்த்ரியத்தை, అధ్యాపయన్తీ (సతీ) - அத்யாபயந்தீ (ஸதீ) - அறிவித்து, బలాత్కృత్య - பலாத்க்ருத்ய - பலாத்கரித்து, యా - யா - யாதொரு, గోదా - கோதா - கோதையென்னும் திருநாமத்தையுடைய ஆண்டாள், భుఙ్క్తే-புங்க்தே-புஜிக்கிறாளோ: తస్యై-தஸ்யை - அப்படிப்பட்ட வைபவத்தையுடையவள்பொருட்டு, భూయోభూయఏవ - பூயோபூயஏவ - காலதத்வமுள்ளதனையும், ఇదమిదంనమః-இதமிதம்நம: - இந்த இந்த அடிமை, అస్తు-அஸ்து - ஆகவேண்டும்.

வ்யாக்யாநம்.—(నీళా - நீளா) அவன் "நந்தகோபன்தனின்னுயிர்ச்சிறுவனே யசோதைக்கடுத்த பேரின்பக்குலவிளங் களிறே" என்றும், "நந்தகோபன்குமரன் ஏரார்ந்தகண்ணி யசோதை யிளஞ்சிங்கம்" என்றும் இருவருக்கும் மகனாக அவதரித்தாற்போலே, இவளும் யசோதைப் பிராட்டி ஸஹோதரரான ஸ்ரீகும்பர் குமாரத்தியாக

அவதரித்தபடி ;— [“స్యాల్లోకే ధననన్దగోపస్య మిథిలేషు గవాంపతిః। ప్రవృద్ధగోధనో దక్షః కుమ్భకో నామ నామతః ॥ దాతా దుగ్ధస్య సర్వేషాం తక్రస్య చ ఘృతస్య చ। జనస్య ప్రియవాగ్నిత్యం యశోదాయా జఘన్యజః ॥ ధర్మదా తస్య భార్యాసీ ద్ధర్మదైవత నామతః। సా సూతాపత్యయుగళం శోభనం గోపభూషణమ్ ॥ తయోస్తత్ర పుమాన్ జజ్ఞే శ్రీదామా నామ విశ్రుతః। సర్వైశ్చాసీద్గుణైర్యుక్త స్సర్వప్రాణిమనోరమః ॥ నీళా నామా చ కన్యాసా రూపౌదార్యగుణాన్వితా”] “ஸ்யாலோகே ஹ நந்தகோபஸ்ய மிதிலேஷு கவாம்பதி:। ப்ரவ்ருத்தகோதநோ தக்ஷ: கும்பகோ நாம நாமத: ॥ தாதா துக்தஸ்ய ஸர்வேஷாம் தக்ரஸ்ய ச க்ருதஸ்ய ச। ஜநஸ்ய ப்ரியவாக்நித்யம் யஶோதாயா ஜகந்யஜ: ॥ தர்மதா தஸ்ய பார்யாஸீ த்தர்மதைவத நாமத:। ஸா ஸூதாபத்யயுகளம் ஶோபநம் கோபபூஷணம் ॥ தயோஸ்தத்ர புமாந்ஜஜ்ஞே ஸ்ரீதாமா நாம விஶ்ருத:। ஸர்வைஶ்சாஸீத்குணைர்யுக்த ஸ்ஸர்வப்ராணிமநோரம: ॥ நீளா நாமா ச கந்யாஸா ரூபௌதார்யகுணாந்விதா.” * நீளாகுலேநஸத்ருஶி யாகையாலே “நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்” என்றதும். அவன் * ஆயர்கொழுந்து; இவள் * குலவாயர்கொழுந்து. [“తుల్యశీలవయోవృత్తామ్”] “துல்யஶீலவயோவ்ருத்தாம்,” “தோளிசேர் பின்னை,” “ஆயனுக்கி யாயர்மங்கை வேயதோள் விரும்பினாய்.” மற்றைப் பிராட்டிமாரில் ஆபிஜாத்யத்தாலும் உகக்கைப்பாடி யாகையாலும் உள்ள வாசி - * கோவலர் பட்டங் கவித்தது இவளுக்கே யாகையாலே; “சூட்டு நன்மாலைகள் - ஓர் மாயையினா லீட்டிய வெண்ணெய் தொடவுண்ணப்போந்து இமிலேற்று வன்கூன் கோட்டிடையாடினை கூத்து அடலாயர்தங் கொம்பினுக்கே” என்னக்கடவதிறே.

(తుఙ్గస్తనగిరితటీసుప్తముద్బోధ్యకృష్ణమ్ - துங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்யக்ருஷ்ணம்) நப்பின்னைப் பிராட்டியுடைய ஓங்கிப் பணைத்திருந்துள்ள திருமுலைத்தடங்களாகிற மலைத்தாழ்வரையிலே நஞ்சுண்டாரைப்போலே மயங்கிக்கிடந் துறங்குகிற க்ருஷ்ணனாகிற ஸிம்ஹத்தை யுணர்த்தினாள்; “நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா” என்றும், “யசோதை யிளஞ்சிங்கம்” என்றும் சொல்லக்கடவதிறே. இக்ஷ்வாகு ஸிம்ஹமான பெருமாள், பிராட்டியைப் பிரிந்து மால்யவானாகிற மலையிலே *மன்னிக்கிடந்துஉறங்கப் பெறுமல் *அநித்ரரா யிருந்தார்; இங்கு அங்ஙனன்றிக்கே, *பிரிவாற்ற கில்லாமையை அறிந்து தானே மேல்விழுந்து அநுபவித்தபடி. பஹு குடும்பியாயிருப்பார் சிலர் ஒரு மலையடியைப் பற்றி ஜீவிக்குமாபோ

லே ஸர்வலோககுடும்பியான ஸர்வேஸ்வரன் இவள் முலையடியைப் பற்றிக் கிடக்கிறான். "துங்க - துங்க" என்கையாலே - அளவிறந்த போக்யதாதிஸயம் சொல்லுகிறது. "தடீஸுப்தம் - தடீஸுப்தம்" என்கையாலே - அவயவைகதேஸத்திலே மக்நனானபடி; "மலராள் தனத்துள்ளான்" என்னுமாபோலே. "ஸ்தநகிரிதடீஸுப்தம் - ஸ்தநகிரிதடீஸுப்தம்" என்கையாலே - அவயவாந்தரத்திற் செல்லாதே * அஸ்தமிதாந்யபாவமா யிருந்தபடி; இத்தால், எம்பெருமானுடைய போக்த்ருத்வம் சொல்லுகிறது.

(நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம் - நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்) "நிறைவினால் குறைவில்லா நெடும்பணைத்தோள் மடப்பின்னை, பொறையினால் முலையணைவான் பொருவிடை யேழடர்த் துகந்த" என்னக்கடவதிறே; ப்ராப்திக்கு உகப்பானும் அவனேயிறே. "உத்போத்ய - உத்போத்ய" என்று - உணர்த்த வேண்டும்படி போக பரவஸனானான். இப்படி அந்யபரனானவன்தான் ஆரென்னில்?—நிரதிஸயஸௌகுமார்ய ரூபனான க்ருஷ்ணனென்கிறாள் (க்ருஷ்ணம் - க்ருஷ்ணம்) என்று. ["க்ருஷிர்பூவாசக: ஸப்தோ ணஸ்ச நிர்வ்ருதிவாசக:"] "க்ருஷிர்பூவாசகஸ்ஸப்தோ ணஸ்ச நிர்வ்ருதிவாசக:" என்னக்கடவதிறே. ["ரஸோ வை ஸ:"] "ரஸோ வை ஸ:" ["ஆனந்தோ ப்ரஹ்ம"] "ஆனந்தோ ப்ரஹ்ம" ["ஆனந்தயாதி"] "ஆனந்தயாதி" "நந்தகோபன்மகன் கண்ணன்" ["பரமானந்தம்"] "பரமானந்தம்" என்னும்படியிறே இருப்பது. (ஸ்தநகிரிதடீஸுப்தம் க்ருஷ்ணம், ஸ்தநகிரிதடீஸுப்தம் - க்ருஷ்ணம்) என்கையாலே - பொற்குப்பியின் நுனியிலே கருமாணிக்கத்தை அழுத்தி வைத்தாற்போலவும், விகாஸோந்முகமான பத்மகோஸத்திலே ஷட்பதம் படிந்தாற்போலவும் இருக்கை. ["மஞ்ஜரீஸுப்தப்ருங்கா"] "மஞ்ஜரீஸுப்தப்ருங்கா" "போதில் பொறிவண்டு கண்படுப்ப" "தெய்வவண்டு" என்றும், ["ஸ்ரீரங்கராஜப்ருங்கம்"] "ஸ்ரீரங்கராஜப்ருங்கம்" என்றும் சொல்லக்கடவதிறே. "மலராள் தனத்துள்ளான்" என்று - ஸ்ரீஸ்தநத்திலும், "தென்னனுயர்பொருப்பும் தெய்வ வடமலையும் - என்னுமிவையே முலையாவடிவமைந்த - அன்னநடைய வணங்கு" என்கிற பூஸ்தநத்திலும் மக்நனாய் * நிலையா நின்றாற்போலே, நீளாஸ்தநத்திலும் ஸுப்தனானபடி; "வடமாமலை யுச்சியை," "மாலிருஞ்சோலை யென்னும் மலையையுடைய மலையை" என்னக்கடவதிறே. "உத்போத்ய" "உத்போத்ய" என்கையாலே - * துயிலெழப்பாடி, "உம்

பர்கோமானே யுறங்கா தெழுந்திராய்", "செற்றார்க்கு வெப்பங் கொடுக்கும் விமலா துயிலெழாய்" என்று எழுப்பும்படி சொல்லுகிறது. இத்தலையிலே இவர்களுணர்த்த உணர்வானாகில் ப்ராணயித்வத்துக்கு நமஸ்காரமன்றோ வென்னில்?—நெருப்புப்பட்டு வேவாநின்றால், "ப்ராணயிநிகள்" என்னுங்காட்டில் உறங்கப்போமோ? இவர்களுடைய ஆர்த்தநாதம் அக்நிஜ்வாலை கதுவினாற்போலே கதுவ, தாய்வேறு கன்றுவேறாய்த் துடித்துக்கொண்டு எழுந்திருந்தார்கள்.

இப்படி யுணர்த்தினவதுக்கு ப்ரயோஜநம் சொல்லுகிறது மேல். (పారార్థ్యం స్వం శ్రుతిశతశిరస్సిద్ధమ్ - பாரார்த்2யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்34ம்) தன்னுடையதா யிருந்துள்ள உபநிஷத்குஹ்யமான பாரதந்த்ர்யத்தினை. [“మన్త్రే బ్రహ్మణి మధ్యమేన నమసా పుంసస్స్వరూపమ్”] “மந்த்ரே ப்3ரஹ்மணி மத்4யமேந நமஸா பும்ஸஸ்ஸ்வரூபம்” என்கிறபடியே ஆத்மாவுக்கு நிலைநின்றதாய், ஸ்வம்மாயிறே பாரதந்த்ர்யந்தா னிருப்பது; [“యస్యాస్మి”] “யஸ்யாஸ்மி” [“పరవానస్మి”] “பரவாநஸ்மி,” “தனக்கேயாக” “உனக்கே நாமாட்செய்வோம்” என்னக்கடவதிறே. * ஸ்வத்வமுண்டானால் ஸ்வாமித்வம் தன்னடையே வரக்கடவது; [“స్వత్వమాత్మని సఞ్జాతం స్వామిత్వం బ్రహ్మణి స్థితమ్”] “ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்3ரஹ்மணி ஸ்தி2தம்.” இதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (శ్రుతిశతశిరస్సిద్ధమ్-ச்ருதிசதசிரஸ்ஸித்34ம்) என்று. மஹாநிதி பர்வதகுஹாங்களிலே ஸஞ்சிதமாய்க் கிடக்குமாபோலே, உபநிஷத்துக்களிலே ஸுரக்ஷிதமாயிருக்கிறபடி. (శ్రుతిశతశిరస్సిద్ధమ్-ச்ருதிசதசிரஸ்ஸித்34ம்) என்கையாலே-இதுதான் ஓரோ ப்ரதேசங்களிலன்றிக்கே எங்கு முண்டாயிருக்கை. [“సర్వే వేదాః”] “ஸர்வே வேதா3:” [“వేదైశ్చ సర్వైః”] “வேதை3ஶ்ச ஸர்வை:” என்னும்படி எங்கு முண்டாயிருக்கை. சேஷியைச் சொன்ன இடமெங்கும் சேஷபூதரு முண்டாயிறே யிருப்பது. இந்த சேஷசேஷிபாவமாகிற பரிமாற்றம், பரமபதத்தில் பரிமாறக்கடவதாயிருக்கும். இப்படி பரமபதத்தில் பரிமாறக்கடவதான பாரதந்த்ர்யத்தை, அதுக்கு எதிர்த்தட்டான ஸ்வாதந்த்ர்யமே பரிமாறும் வழிபறிக்குந் தேசத்திலே இம்மஹாநிதியை வெளியிடுகிறாள்: (అధ్యాపయన్తీ-அத்4யாபயந்தீ)-[“పతింవిశ్వస్య”] “பதிம் விஶ்வஸ்ய” [“యస్యాస్మి”] “யஸ்யாஸ்மி” என்று ஓதிக்கிடக்கிற சேஷசேஷிபாவம் அநுஷ்

டிப்பாரில்லாமையாலே, இவர்களைப்போலே அவனும் மறந்து கை விட்டிருக்க, "பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்" என்று அவனை மறித்துவைத்து, "உன்தன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்று ஓதுவித்தாள். [" [illegible] "] "யொமெவெவெஷாம்ஹு வ்ருஹிணொதி தமெஷூ," "எயிற்றிடை மண்கொண்டவெந்தை யிராப்பகலோதுவித்து" என்கிற நிலைகுலைந்தது. பாதந்த்ரைகளாயிருக்கிறஇவர்கள் நியமிக்கப் பெறுவார்களோ வென்னில்?—ஸ்வதந்த்ரரோபாதி ஆற்றாமையுடையாரும் நியமிக்கப்பெறுவார்கள். ஆர்த்தர்பாடும் ஸ்வாதந்த்ர்ய மேறிப் பாய்வது; "நான், என்னது" என்று அவனை யொழியவும் சொல்லுவார்பாடேயும் ஸ்வாதந்த்ர்யமேறிப் பாய்வது. தந்திருவுள்ளந்தன்னை நியமிக்குங் காட்டில் ஸ்வாதந்த்ர்ய மாகமாட்டா திறே. பண்டும் இப்படி நியமித்தாருண்டு; [" [illegible] "] "[illegible]" என்றாள்; அப்படியே இவளும் நியமித்து "சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே" என்கிறாள்.

இப்படி ஸர்வஜ்ஞனுக்குங்கூட அத்யயநம் பண்ணுவிக்கிறவளுடைய வைலக்ஷண்யஞ் சொல்லுகிறது மேல்; ([illegible]) - தான் சாத்திக்கழித்த மாலையாகிற விலங்காலே இவனைப் போாதபடி விலங்கிட்டு யாவனொருத்தி அவனை பலாத்கரித்து புஜித்தாள்; ([illegible]) இப்படி [க] வேண்டற்பாட்டையுடையளாய், எம்பெருமானுக்கு "மார்வத்துமாலை" என்கிறபடியே நிரதிஶயபோக்யையா யிருக்கையாலே "கோதை" என்னுந் திருநாமத்தையுடைய ஆண்டாள் திருவடிகளிலே காலதத்வமுள்ளதனையும் அடிமை அடிமை அடிமை என்கிறார்.

ஸ்வோச்சிஷ்டமாவது - சூடிக்களைந்தது. "தொடுத்த துழாய் மலர் சூடிக்களைந்தன சூடு மித்தொண்டர்களோம்," [" [illegible] "] "[illegible]

[க] வேண்டற்பாடு - பெருமை.

ணொதஹஸா:" என்னுமது ப்ராணயித்வத்தாலே மாறுடிக் கிடக்கிறது. இப்படி ஈஸ்வரன் யதேஷ்டவிநியோகார்ஹனும்படி தன்னை [க] ஓக்கிவைக்கையாலே, அவனுடைய ஆஸ்ரிதபாரதந்த்ர்யம் தோற்றுகிறது. *பார்வண்ணமடமங்கை பத்தரிறே; *அரங்கர்மௌளி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவளிறே; *வாசஞ்செய் பூங்குழலிலே வாஸிதமாக்கிக் கொடுத்தபடி. (ப்ரஜநாகிர்ஹ் - ஹ்ருஜிநிமஹிதம்) மாலை மாலையாலே விலங்கிட்டாள். கால்விலங்காகிலிறே கழற்றுவது; "தந்தைகாலில் விலங்கற", "தந்தைதளைகழல" என்னக்கடவதிறே. எல்லாரையும் கர்மாநுகுணமாகக் கட்டுமவன் காமிநிகழித்த கண்ணியாலே கட்டுண்டான். *கண்ணியார் குறுங்கயிற்றால் கட்டுண்டபடியாய்த்து *மல்லிகைமாமாலைகொண் டங்கார்த்ததும். *மன்றிலங்குபாதத்தை மாளவூர்ந்த வரையுருவின்மாகளிற்றைப் பொன்னிலங்கு முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு அநுபவித்தாள். *தறியார்ந்த கருங்களிறிறே. ஸ்வேச்சாவிஹாரம் பண்ணித் திரிகிற க்ருஷ்ணமஹாமதங்கஜத்தைத் தன்னுடைய [உ] *குசகுட்மளமாகிற [ங] ஆளாநத்தோடே அணைத்து அநுபவித்தாள்.

(பலாத்க்ருத்ய புங்க்தே - யாபலாத்க்ருத்ய புங்க்தே)-யாதொருத்தி பலாத்கரித்து புஜித்தா ளென்கையாலே - அதுவும் அவனுகப்புக்கு உறுப்பாயிருக்கும்; [அஹமந்நமஹமந்நமஹமந்நம்"] "அஹமந்நாதோஹமந்நாத:" அல்லாதபோது அவனுக்கு அநுபவம் குலையும். "கோதா" "மொழா" என்று - கோதை யென்றபடி; "குழற்கோதை" என்றாரிறே; கோதை - மாலை: மாலைபோலே போக்யையாயிருக்கை; ஸ்ரீமாலாகாரர் மகளாகையாலே "மாலை" என்னலாம்பாடியாளுள்; மாலையானதான் தலையானமாலையை வழங்கினாள்; திருமாலை வழங்கினாளிறே; [ "கஜேந்த்ரேண தாடிதத்தநு ஸ்தேஸ்வயம் ஸுந்தரோ பத்தஶ்சம்பக தாமபி: ஸசததோமகோப்ஜ நாத்ரீஶ்வர:। போகாஹ்வ ஸலஜ்ஜயாஹ்வதமஹோ தாமாங்கணீ ஸ்ஸதபத்ர மேதஸ்து ஸ்தவவிஷ்டி தேந மநஸா கோதேபரம் திஷ்டது"] "ருஜீநதாஸஹேண தாடித தநுஸ்தே ஸ்வயம் ஸுந்தரோ பத்தஸ்சம்பக தாமபி: ஸசததோமகோப்ஜநாத்ரீஸ்வர:। போகாஹ்வலஜ்ஜயாவதமஹோ தாமாங்கணீ ஸ்ஸதபத்ர மேஸ்துஸ்தவ விஷ்டிதேந மநஸாகோதேபரம் திஷ்டதி" என்றிறே ஆண்டாள் வீறுடைமை யிருப்பது.

---

[க] ஓக்கிவைக்கை - ஆக்கிவைக்கை. [உ] குசகுட்மளம் - ஸ்தநமாகிற மொட்டு. [ங] ஆளாநம் - யானைகட்டுந் தறி.

"అధ్యాపయన్తీ - அத்யாபயந்தீ" என்கையாலே - * பாமாலை பாடிக் கொடுத்தபடி சொல்லிற்று. ["స్రజినిగళితంయాబలాత్కృత్యభుఙ్క్తే"] "ஸ்ரஜிநிகளிதம்யாபலாத்க்ருத்யபுங்க்தே" என்கையாலே-பூமாலை சூடிக் கொடுத்தபடி சொல்லுகிறது. எல்லாப்படியாலும், இவளுக்கு எம்பெருமானை வஶீகரித்து ஆத்மாக்களை ரக்ஷிப்பிக்க வல்ல புருஷகாரத்வமும், இருவருமான சேர்த்தியாலே ப்ராப்யத்வமும் சொல்லுகிறது. ஆகையாலிறே, எம்பெருமானார், * நாறுநறும்பொழிலில் இவள் ப்ரார்த்தித்தபடி நடத்தியும், திருப்பாவையை நாடோறும் நடத்தியும், அத்தாலே - * சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் இராமானுசனானதும்; அவளுக்கும் * ஆழ்வார் திருமகளானதுக்குமேலே, ராமாநுசனை அண்ணராக அபிமாநித்த ஏற்றமும் உண்டிறே. இப்படி எல்லாவற்றாலும், நிரவதிக வைபவத்தையுடைய அந்த ஆண்டாள்பொருட்டு அடிமையாய் அற்றுத்தீர்ந்து ஓரொன்றுகளிலே தம்மை எழுதிக்கொடுத்து ஆழங்காற் படுகிறார்.

(భూయఏవాస్తుభూయః - பூயஏவாஸ்துபூய:) - அவள்தான் "எற்றைக்கு மேழேழுபிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்றத்தை, தத்விஷயத்திலே தாம் ப்ரார்த்திக்கிறார். ["నారాయణాయనమ ఇతిప్రణమ్యోత్థాయోత్థాయపునఃపునః ప్రణమ్య"] "நாராயணாயநம இதிப்ரணம்யோத்தாயோத்தாயபுந:புந:ப்ரணம்ய" என்றிறே எம்பெருமானார் பரிமாற்ற மிருப்பது, இதுதான் "అత్రపరత్రచాపినిత్యమ్" "அத்ரபரத்ரசாபிநித்யம்" என்னக்கடவதிறே. அங்கும் ["శ్రీభూమినీళానాయక"] "ஸ்ரீபூமிநீளாநாயக" என்றும், ["ఉభాభ్యాంభూమినీళాభ్యాంసేవితఃపరమేశ్వరః"] "உபாப்யாம்பூமிநீளாப்யாம்ஸேவித:பரமேஶ்வர:" என்றும் சொல்லக்கடவதிறே. இத்தால்-திருப்பாவையின் அர்த்தத்தை அநுஸந்தித்து ஆநந்தமக்நராய், அத்தாலே தாம் ஆண்டாளை ஶரணம்புக்கபடியை அனைவரும் அநுஸந்திக்கும்படி அருளிச்செய்தாராய்த்து.........*

அவதாரிகை.—(அன்னவயல்புதுவை). இதில், ஆபிஜாத்யத்தையுடையளாய், பெரியபெருமாளுக்கு வாசிக காயிகரூப மாலாப்ரதையாய், "கோதை" என்று நிரூபகையான "சூடிக்கொடுத்தாளைச் சொல்" என்கிறது. "சொல்" என்கிறது - நெஞ்சையாதல்; நெஞ்சு போல்வாரையாதல்.

(உய்யக்கொண்டார் அருளிச்செய்தது.)

அன்னவயற்புதுவையாண்டாளரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப்பல்பதியம்—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள்நற்பாமாலைபூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்.

பதவுரை.—அன்னம் - ஹம்ஸங்கள் ஸஞ்சரிக்கிற, வயல் - வயலையுடைய, புதுவை - ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருவவதரித்தருளின, ஆண்டாள்—; அரங்கற்கு - பெரியபெருமாள்விஷயமாக, பன்னு - ஆராய்ந்தருளிச்செய்த, திருப்பாவை - திருப்பாவையாகிற, பல் பதியம் - பல பாட்டுக்களை, இன் - செவிக்கினிய, இசையால் - இசையாலே, நல் - விலக்ஷணமான, பா மாலை - பாட்டுக்களாகிற மாலையாக, பாடி கொடுத்தாள் - பாடிக்கொடுத்தவளாய்,— பூமாலை - (செண்பகம் மல்லிகை செங்கழுநீர் இருவாட்சி முதலான)பூக்களால் (இடையிட்டுத்) தொடுத்த (திருத்துழாய்) மாலையை, சூடி - (தன் திருக்குழலிற்) சூடி, கொடுத்தாளை - ஸமர்ப்பித்தவளை, சொல் - அநுஸந்திப்பாய் என்பதாம்.

வ்யா.—(அன்னவயல்புதுவை) * மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூரிறே; * அன்னநடைத் திங்கள்முக வல்லியான ஆண்டாள்போலேயிறே அவை யிருப்பது; அன்னங்கள் ஸஞ்சரிக்கும் வயலையுடைய புதுவை. "புரவிமுகஞ்செய்து செந்நெலோங்கி விளை கழனிப் புதுவை,...பட்டர்பிரான்," "தண்புதுவைப்பட்டன்" என்றிறே திருத்தமப்பனார்க்கு நிரூபகம்; இவளுக்கும் அப்படியேயாயிருக்கை. (புதுவையாண்டாள்) ஸ்ரீ பூமி நீளைகளுடைய ப்ராதாந்யமாயிறே திருவெள்ளறை ஸ்ரீவில்லிபுத்தூர் திருநறையூரென்கிற த்ரிஸ்தாந மிருப்பது. ஸ்ரீபூமிப்பிராட்டியாரான ஆண்டாள் ஶிஷ்பாதாஸீபக்தைகளாய் * பாடி * வருடி, "உனக்கே நாமாட்செய்வோம்" என்று அடிமைசெய்ய * ஆழ்வார் திருமகளாராய் வந்து அவதரித்தபடி. ஆகிலும், அடியில் திருநாமமே ஆண்டாளென்று அநுவர்த்திக்கிறது. (ஆண்டாளரங்கற்குப் பன்னுதிருப்பாவைப் பல்பதிய மின்னிசையால் பாடிக்கொடுத்தாள்) இவள் க்ருஷ்ணனையன்றோ திருப்பாவை பாடிற்று? பெரியபெருமாளுக்குப் பாடிக்கொடுக்கையாவது - "அண்ணரங்கத் திருக்கவே யாங்கவளைக்கைப்பிடித்த - பெண்ணாளன் பேணுமூர்ப் பேருமரங்கம்" என்றும், "செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப்பெருவார்த்தை" என்றும், "பாசிதூர்த்துக்கிடந்த பார் மகட்குப் பண்டொருநாள் - மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்பன்றியாந் - தேசுடைய தேவர் திருவரங்கர்" என்றும், "நிலமகள்கேள்

வன்'' என்றும் பூமிப்பிராட்டியான இவள் ஆதரித்துப்போருகிற ஸ்ரீவாராஹநாயனார்படியும் அநுகாரத்தாலே ஆதரித்துப்போருகிற கோபாலர் படியும் தர்ம்யைக்யத்தாலும் ஆஸ்ரிதவ்யாமோஹகுணத்தாலும் பெரியபெருமாளிடத்திலே காணலாயிருக்கும். இனித் தான் * பள்ளிகொள்ளுமிடத்தே * துயிலெழப்பாடித் திருப்பள்ளியுணர்த்துவதும் இங்கேயுண்டிறே; வடபெருங்கோயிலுடையானை க்ருஷ்ணனாக அநுகரித்தாற்போலே, * கோவலனாய் வெண்ணெயுண்ட வாயோடே கண்வளர்ந்தருளுகிறதாக அநுஸந்திக்கலாமிறே; "பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிட" என்று - ப்ரார்த்தித்தபடியே * பணவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளரோடு மணம்புணர்ந்து கூடினாளிறே; ஆகையாலே, பாடினவிஷயமும் அவரேயிறே. விஶேஷித்துப் * பாட்டினால்கண்டுவாழும் பாணர்பாட்டுக் கேட்குமிடமாகையாலும், இவள் அவர்மகளாகையாலும் பாடவல்ல நாய்ச்சியாராய், அவ்விஷயத்தையே பாடினாளாய்த்து. (அரங்கற்குப் பன்னு திருப்பாவைப் பல்பதியம்) அர்த்தத்தின் சீர்மையாலே எல்லாராலும் ஆராய்ந்து அநுஸந்திப்பதான திருப்பாவை யென்னுதல், ஆராய்ந்து அருளிச்செய்த திருப்பாவை யென்னுதல். நிரூபித்தால், பல்பதியம் - பலபத்ய மென்றபடி. * சங்கத்தமிழ்மாலை முப்பதுந் தப்பாமலிறே அருளிச்செய்தது; அதுதான் இன்னிசையாலேயாய்த்துப் பாடிக் கொடுத்தது. ["ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம்"] "ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம்", 'செவிக்கினியசெஞ்சொல்'' என்னுமாபோலே. (நற்பாமாலை) விலக்ஷணமாய் சந்தோரூபமாயிருப்பதான மாலையைப் பாடிக்கொடுத்தாள். அதாவது - '' சூட்டினேன் சொன்மாலை'' என்னும்படி ஶிரஸா தரிக்கும்படி பண்ணுகை. பூமாலை சூடிக்கொடுக்கையாவது - * செண்பகமல்லிகையோடு செங்கழுநீ ரிருவாட்சியாலும் இடையிட்டுத் * தொடுத்த துழாய்மாலையை; (சூடிக்கொடுத்தாள்) தன் *வாசஞ்செய் பூங்குழலிலே வாஸிதமாக்கிச் சூடிக்கொடுத்தாளாய்த்து. ஆகையால், திருப்பாவை யநுஸந்தாநத்துக்கு முன்னே (சூடிக்கொடுத்தாளைச் சொல்) என்று - அவளை அநுஸந்திக்கச் சொல்லுகிறது.

இத்தால், அவள் திவ்யப்ரபந்தத்திலும் அவள் திருநாமமே ப்ரதமம் அநுஸந்தேய மென்றதாய்த்து ............................ ...... *

அவதாரிகை.—(சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே.) இதில் சூடிக் கொடுத்தபடியையும் பாடிக்கொடுத்தபடியையும் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணி, திருவேங்கடமுடையா னடியாகச் சொன்ன இதன் அர்த்தங்

களை நாம் அதிக்ரமியாதபடி அநுக்ரஹிக்கவேணுமென்று ஆண்டாளை அர்த்திக்கிறது. கீழ் - "அரங்கற்கு" என்றது; இதில் - "வேங்கடவற்கு" என்றது: கோயில் திருமலைகளிலேயாய்த்து கோதை சூடிக்கொண்டிருப்பது.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம்
நாங்கடவாவண்ணமேநல்கு.

**பதவுரை.**—சூடி - (பூமாலையைத் திருக்குழலிற்) சூடி, கொடுத்த - (பெரியபெருமாளுக்கு) ஸமர்ப்பித்தருளின, சுடர் கொடியே - பொற்கொடி போன்ற வடிவழகையுடையவளே! தொல்-பழையதான, பாவை - நோன்பை, பாடி - (திருப்பாவையென்னுந் திவ்யப்ரபந்தத்தால்) பாடி, அருளவல்ல - உபகரிக்கவல்லவளாய், பல் வளையாய் - பலவகைப்பட்ட வளையல்களை யணிந்தவளே! 'நீ - (மன்மதனை) நீ, நாடி - ஆராய்ந்து, வேங்கடவற்கு - திருமலையிலெழுந்தருளியிருக்கிறவனுக்கு, என்னை - (கையுந்திருவாழியுமான சேர்த்தியழகைக் காணவேணுமென்று ஆசைப்படுகிற) என்னை, விதி - (அந்தரங்க கைங்கர்யம் பண்ணும்படி) விதிக்கவேணும்,' என்ற - என்று அருளிச்செய்த, இ மாற்றம் - இப்பாசுரத்தை, நாம் - (உனக்கடிமையாயிருக்கிற) நாங்கள், கடவாவண்ணம் - அதிக்ரமியாதபடி, நல்கு - உபகரிக்கவேணும் என்பதாம்.

வ்யா.—(சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே) * குழற்கோதையாகையாலே [க] அளகத்திலே வளையமாகச் சூடிக்கொடுத்தாளாய்த்து. (சுடர்க்கொடி) ரூபஸம்ஸ்தாநம் பொற்கொடியென்னலாம்படியிருக்கை. ["ஹேமலேகா"] "ஹேமலேகாவாகு," ["மஜ்ஜலீவதேகா"] "ஜநுஜலீவதெவாகு." (கொடி) அவனைக்கட்டலாங் கொடி; "பெண்ணுக்கையாப்புண்டு" என்னக்கடவதிறே. (சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே) நிரூபகம். (தொல்பாவை பாடியருளவல்ல பல்வளையாய்) தொல் - பழையதான, பாவை - நோன்பை: பஞ்சலக்ஷங் குடியிற் பெண்களுங் கூடி நோற்ற நோன்பை: ["ஹேமந்தே ப்ரதமே மாஸி நந்த வ்ரஜகுமாரிகா:"] "ஹேமந்தெ ப்ரதமெ மாஸி நந்தவ்ரஜகுமாரிகா:" என்று - எல்லாருங்கூடி க்ருஷ்ணனைப்பெறுகைக்கு மார்கழிநீராடி நோற்ற நோன்பை. அன்றிக்கே, பழையதாய்ப்போருகிற திருப்பாவையென்கிற சங்கீதாரூபமான ப்ரபந்தத்தை யென்னுதல். பிற்பாடர்க்கும் அநுஸந்தேயமாம்படி ப்ரபந்தமாக, பாடியருளவல்ல - பாடி உபகரிக்க

[க] அளகம் - முன்னெற்றிமயிர்.

வல்லவ ளென்னுதல். (பல்வளையாய்) "பல்வளையாள்" என்னுமா போலே வளையே நிரூபகமாயிருக்கை. (நாடி நீ வேங்கடவற்கு என்னை விதி என்ற) - நீ திருவேங்கடத்தானை "நான் சென்று நாடி" என்கிறபடியே அபிநிவேஶத்தைப்பண்ணி, "காமதேவா" என்று - உன்னுடைய காமத்தீயாலே "வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" என்ற; (இம்மாற்றம்) இந்தச்சொல்லையென்னுதல்; இந்த ப்ரகாரமென்னுதல்: பகவத்காமத்தாலே சொன்ன பாசுரத்தை யென்னுதல்; அர்த்தத்தை யென்னுதல். (நாம் கடவாவண்ணமே நல்கு) - உனக்கு அடிமையாயிருக்கிற நாங்கள் அதிக்ரமியாத ப்ரகாரம் உபகரிக்க வேணும். நல்குதல் - கொடுத்தல்.

இத்தால் - ஆண்டாளுடைய பகவத் ப்ரேமம் உண்டாகவேணுமென்று அவளை வேண்டுகிறது.......................................... *

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ

# பெரியவாச்சான்பிள்ளை

அருளிச்செய்த

# திருப்பாவை மூவாயிரப்படி

## வ்யாக்யாநத்தின் அவதாரிகை.



தேஹாத்மாபிமாநிகளுக்கும் ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் ரிஷிகளுக்கும் பர்வதபரமாணுவோட்டை வாசி போரும்; ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனைவாசி போரும்; ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வாருக்கும் அத்தனைவாசி போரும்; பெரியாழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் அத்தனைவாசி போரும். அவர்களில் இவளுக்கு வாசியென்னென்னில்?—[“அநாதிமாயயா ஸுப்த:”] “அநாதிமாயயா ஸுப்த:”(க) என்கிறபடியே ஸம்ஸாரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி, எம்பெருமான் தானே தன்னைக்காட்டக் கண்டார்கள் ஆழ்வார்கள்; இவள், தானேசென்று எம்பெருமானை யெழுப்பித் தன் குறையை அறிவித்தாள்; ஆகையாலே, அவர்களிலும் இவள் வில

**அரும்பதவிளக்கம்.**—பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவையென்கிற திவ்யப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநஞ் செய்வதாகக் கோலி, வக்த்ருவைலக்ஷண்யத்தையும் ப்ரபந்தவைலக்ஷண்யத்தையும் ப்ரதிபாத்யவைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்கிறார் (தேஹாத்மாபிமாநிகள் என்று தொடங்கி அபேக்ஷிக்கிறது என்னுமளவும்.)

ஆத்மஸ்வரூபம் கைவந்து என்றது - தேஹாதிரிக்த ஆத்மஸ்வரூபத்தை யோகத்தாலே ஸாக்ஷாத்கரித்து என்றபடி. ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனை வாசி என்றது - ரிஷிகள் ஸ்வயத்நபரராகையாலும், ஆழ்வார்கள் *மயர்வற மதிநலமருளப்பெற்று எம்பெருமானையே தஞ்சமென்றிருக்கையாலும் உண்டான வாசி என்றபடி. ஆழ்வார்களனைவர்க்கும் ஆண்டாளுக்கும் ஜ்ஞாநாதிக்யம் துல்யமாயிருக்க வாசியெங்ஙனே? என்னும் ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (அவர்களில் இத்யாதி வாக்யத்ரயத்தாலே;) ஆழ்வார்களெல்லாரையும்போலே முன்பில்லாத ஜ்ஞாநாதிஶயம் எம்பெருமான் கடாக்ஷத்தாலே வந்ததன்றிக்கே, நித்யஸூரிகளைப்போலே ஸஹஜவிதத்ஜ்ஞாநாதிஶயத்தாலே அவனை யெழுப்புகையாலே ஏற்றமுண்டு என்று கருத்து. அவனை யெழுப்புகையாவது - * நப்பின்னை கொங்கைமேல் வ்யாமோஹத்தாலே உறங்குமவனைத் தங்களிடத்திலும் அபிமுகனாகப் பண்ணிக்கொள்ளுகை.

க்ஷணே. ["ஶாஸ்த்ரோக்த நியமங்கள்"] "ஶாஸ்த்ராதிஸம்ஸித்தி:" (உ) என்கிறபோலே தொடக்கமேபிடித்துப் பகவத்குணங்களிலே அவகாஹித்துப்போரும். புருஷன் புருஷனைக்கண்டு ஸ்நேஹிப்பதிலுங்காட்டில் ஸ்த்ரீ புருஷனைக்கண்டு ஸ்நேஹிக்கை பள்ளமடையாகையாலே, ஆழ்வார்களிற்காட்டிலும் எம்பெருமான்பக்கல் பரமபக்தியுடையளான ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்குக் கருத்து;- மார்கழிநீராட என்று ஒரு வ்யாஜத்தைக் கொண்டு, நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே எம்பெருமான்பக்கலிலே சென்று, "உனக்கு ஶேஷமாயிருக்கிற இந்த ஆத்மா அநர்த்தப்படாதபடி பண்ணி, இதுக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களையுங் கொடுத்து, அதுதானும் யாவதாத்மபாவியாம்படி பண்ணியருளவேணும்" என்று அபேக்ஷிக்கிறது.

இந்நோன்புக்கு மூலம் என்னென்னில்?–மீமாம்ஸையிலே ஹோளாதிகரண ந்யாயத்தாலே ஶிஷ்டாசாரஸித்தம்; "மேலையார் செய்வ

---

இந்தப்ரபந்தத்துக்குஅடியான பக்திபரீவாஹமும் இவளுக்கு ஆழ்வார்களிற்காட்டில் அதிஶயித்திருக்குமென்று உபபாதியாநின்றுகொண்டு, ப்ரபந்தவைலக்ஷண்யங் காட்டுகிறார் (பால்யேத்யாதி.) (கருத்து) இத்யாதியெல்லாம்- ப்ரதிபாத்ய வைலக்ஷண்யம்; இவ்வைலக்ஷண்யமாவது - யாவதாத்மபாவியாய், அநர்த்தரூபமான இதரபுருஷார்த்த வ்யாவ்ருத்தியாயிருக்கை. மார்கழிநீராட என்றுஒரு வ்யாஜத்தைக்கொண்டுஎன்றது - க்ருஷ்ணஸம்ஶ்லேஷமாகிற பலத்தை நெஞ்சிலே வைத்து. நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே என்றது - அந்த பலத்துக்கு அவனே உபாயமென்னும் அபேக்ஷையை நெஞ்சிலே வைத்து. மார்கழி நீராட என்றது - நோன்புக்கு அங்கமாகக் குளிக்கை. இத்தால் - அங்காங்கிகளெல்லாம் வ்யாஜமென்று கருத்து.

மூலமென்னென்னில் என்றது - ப்ரமாணமென்னென்னில் என்றபடி. ["ధర్మజ్ఞసమయః ప్రమాణంస్మృతిశ్చేచతద్విదామ్ । ఆచారశ్చైవసాధూనామ్ "] "ధர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்ஸ்ம்ருதிஶீலேச தத்விதாம் । ஆசாரஶ்சைவ ஸாதூநாம்" என்கிறபடியே ஶிஷ்டர்கள் ஆசரித்ததெல்லாம் கர்த்தவ்யமாகையாலே, ஹோளோத்ஸவாதிகளைப்போலே இதுவும் பலவிஶேஷார்த்திகளுக்கெல்லாம் கர்த்தவ்யமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (மீமாம்ஸையிலே இத்யாதி.) ஹோளையாவது - வஸந்தோத்ஸவம்; இத்தை ஹோளகமென்று சொல்லுவர். அதாவது - பால்குநபௌர்ணமாவாஸ்யாநந்தர ப்ரதிபத்திலே க்ரியமாணமாய், பரஸ்பரஹரித்ராஜலஸேசந ரூபமான உத்ஸவமென்கை. இந்நோன்பு ஶிஷ்டாசாரமென்கைக்கு ப்ரமாணங்காட்டுகிறார் (மேலையார் இத்யாதி.) நோன்பு என்ற ஒரு வ்யாஜமாத்ரத்தாலே, க்ருஷ்

னகள்" என்று ஆண்டாள்தானும் அருளிச்செய்தாள். பொய்யே "நோற்கிறோம்" என்றுசொல்லலாமோ வெனில்?—$ விவாஹங்களிலும் மாரணபர்யந்தமான தசைகளிலும் வந்தால் பொய் சொல்லலாம்.

ஆண்டாள் இப்படி திருவவதரித்து வளர்ந்தருளுகிற காலத்திலே பெரியாழ்வார்வயிற்றிற்பிறக்கையாலும் தானான தன்மையாலும் ஜ்ஞாநபக்திகள் க்ஷணந்தோறும் இட்டுமாறினாற்போலே வடிவிலே காணலாம்படி பெருகிச்செல்லாநிற்க, ["പതിസംയോഗസുലഭം വയോ ദൃഷ്ട്വാ ച മേ പിതാ । ചിന്താർണ്ണവഗതഃ പാരം നാസസാദാപ്ലവോ യഥാ"] "பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா ச மே பிதா । சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா" (ந.) என்கிறபடியே ஒரு கொள்கொம்பிலே சேர்க்கவேண்டும் பருவமாய், * மானிடவர்க்கென்று பேச்சுப்

---

ணன்பக்கலிலே அந்நோன்பு நோற்கச்சொன்ன கோபவ்ருத்தர்களோடே வர்ஷார்த்தமாக நோற்கிறோமென்று சொல்லுகை. தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப் பிறந்தவனை அடுத்திருக்க இவர்களுக்குக் கூடுமோவென்னும் ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (பொய்யே இத்யாதி;) ஒருத்திக்கொருத்தி க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்துக்கு கடகைகளாயிருக்கையாலே விவாஹம்பண்ணுவிக்குமவர்களாகையாலும், க்ருஷ்ணவிஶ்லேஷத்தால் மரணதஶையை ப்ராப்தைகளாம்படியிருக்கையாலும், பொய்சொல்லலாமென்று கருத்து.

இப்படி கோபிமாரைப்போலே நாய்ச்சியாரும் நோன்புநோற்க அநுகரிக்க ப்ரஸக்தி ஏதென்னும் ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்துக்கு விஸ்தரேண உத்தரம் அருளிச்செய்கிறார் (ஆண்டாள் இத்யாதி, தரிக்கப்பார்க்கிறாளென்னுமளவும்.) இப்படியென்றது - நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே எம்பெருமான் பக்கலிலே செல்லும்படியான ஜ்ஞாநத்தையுடையளாயென்றபடி. தானானதன்மையாலுமென்றது-ஸ்திரீ புருஷனைக்கண்டுமிகவும்ஸ்நேஹிக்கும்படியான ஸ்வபாவத்தாலுமென்றபடி. ["പതിസംയോഗേന സുതരാം ലബ്ധും യോഗ്യവയാഃ"] "பதிஸம்யோகேந ஸுதராம் லப்தும் யோக்யவய:" என்று அக்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி, த்ருஷ்டாந்தமுகேந தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (ஒருகொள்கொம்பிலே இத்யாதி;) அந்யதா துர்லபமென்றுகருத்து. தன்மையளுமாய்-ஸ்வபா

---

$ "വിവാഹകാലേ രതിസംപ്രയോഗേ പ്രാണാത്യയേ സർവ്വധനാപഹാരേ । വിപ്രസ്യ ചാർത്ഥേ ഹ്യനൃതം വദന്തി പഞ്ചാനൃതാന്യാഹുരപാതകാനി" "விவாஹகாலே ரதிஸம்ப்ரயோகே ப்ராணாத்யயே ஸர்வதநாபஹாரே । விப்ரஸ்ய சார்த்தே ஹ்யந்ருதம் வதந்தி பஞ்சாந்ருதாந்யாஹுரபாதகாநி" என்கிற ஶ்லோகம் இங்கு அநுஸந்தேயம்.

படில் வாழாத தன்மையளுமாய், "கோல்தேடியோடுங் கொழுந்ததே போன்றதே-மால்தேடியோடும் மனம்" என்கிறபடியே - அபிநிவேஸ த்தைப் பண்ணிக்கொண்டு 'வடபெருங் கோயிலுடையானுடனே *தழுவி முழுசிப் பரிமாறவேணும்' என்று செல்ல ; இவள் நினைத்த படிகளுக்கு அவன் முகங்காட்டாமையாலே மிகவும் அவஸந்நை யாய், "இவனோடுகலந்து பரிமாறப்பெற்றாருண்டோ ? இல்லையோ?" என்று ஆராய்ந்துபார்த்து, "திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகள் யதாமநோரதம் இவனோடே அநுபவிக்கப்பெற்றார்கள்" என்று அநு ஸந்தித்து, "அது காலாந்தரத்திலே யாகையாலே அதுக்கு உதவப் பெற்றிலோமே!" என்று இன்னாதாய் ; "இனி அவன் உலாவிப்போன அடிச்சுவடும், அவனும் பெண்களுமாகத் திளைத்த யமுனையும், அவ னெடுத்த கோவர்த்தநமும் கிடந்ததாகில் அவற்றைக் கண்டாகிலும் தரிப்போம்" என்று பார்க்க, அதுக்கு, தனக்குப் போக பலமில்லா மையாலே அவற்றை அநுஸந்தித்து மிகவும் அவஸந்நையாய், ஸ்ரீஜநகராஜன் திருமகளைப்போலே "வில்" என்று ஒரு அவதிபெறு தல், நப்பின்னைப்பிராட்டியைப்போலே "ரிஷபங்கள்" என்று ஒரு அவதிபெறுதல் செய்யப்பெறாமையாலே மிகவும் தளர்ந்து நமக்கு தரிக்கைக்கு விரகு என் ?" என்று ஆராய ; சில தார்மிகர், அவ்வள விலே சொல்லுகிறார்கள் :—"திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனும் பெண்களுமாய்த் திருக்குரவைகோத்து அதிரஸம் செல்லாநிற்க,ப்ரீதி யாலே குமிழ்நீருண்டு, 'இனி நற்கேடு கெடவொண்ணாது' என்று இந்த ரஸம் மாறுகைக்காகப் பெண்களைப்பிரிந்து க்ருஷ்ணன் ஒளிக்க;

வத்தையுடையவளுமாய். "கொழுந்து-கோல்தேடியோடும், மால்தேடியோடும் மனம் - கொழுந்ததேபோன்றதே" என்று அந்வயம். முழுசி - மிகவும் அவகா ஹித்து என்றபடி. முகங்காட்டாமையாலே என்றது குளிரநோக்குதல் குஸல ப்ரஶ்நம் பண்ணுதல் செய்யாமையாலே என்றபடி. இவனோடே அநுபவிக்க என்றது - அர்ச்சாவதாரத்துக்கும் க்ருஷ்ணாவதாரத்துக்கு முள்ள தர்மைக்யத் தைப் பற்ற. அடிச்சுவடு என்றது - திருவடிகள்பட்ட அடையாளம் என்றபடி. திளைத்த - விளையாடின. (அவற்றைக்கண்டாகிலும்தரிப்போம்) என்றவிடத் தில், க்ருஷ்ணனுக்கும் வடபெருங்கோயிலுடையானுக்குமுண்டான தர்மைக் யத்தாலே அவனே இவனுயிருந்தானேயாகிலும், பெண்களோடு பரிமாறின திருமேனி அதுவாகையாலே அத்தோடு ஸம்பந்தமுடையவர்கள் தரிப்புக்குட லாமென்று கண்டுகொள்வது. தார்மிகர் - பராஶர பாராஶர்யாதிகள். அவர்கள் சொல்லுகிற ப்ரகாரம் எதென்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலே இத்யாதி.) (தரித்தார்கள்) என்ற அந்தரம், அத்தை என்று ஶேஷம்.

பெண்பிள்ளைகள் தங்களாற்றாமையாலே, [“దుష్టకాళియ తిష్ఠాత్ర కృష్ణోహమితి చాపరా”] “துஷ்டகாளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா” (ச)என்கிறபடியே அவர்கள் அநுகரித்து தரித்தார்கள்” என்று கேட்டு, தானும் அவர்களைப்போலே அநுகரித்து தரிக்கப் பார்க்கிறாள்.

இவள்தான் ப்ராஹ்மணியாயிருந்துவைத்து அவர்களைப்போலே அநுகரிக்கும்படி யெங்ஙனேயென்னில்?—யாகத்திலே [க] தீக்ஷித்தவர்கள், தேவதத்தாதிநாமங்களைத் தவிர்ந்து, யாகம் முடியுமளவும் “யஜமாநன்” என்றும், “அத்வர்யு” என்றும், “ஹோதா” என்றும் இத்யாதி நாமங்களே யாகிறாப்போலே; இவளும், ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்கள் இடைப்பெண்களாகவும், தானும் அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலே ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், உள்ளேநிற்கிறவன் க்ருஷ்ணனாகவும் அநுஸந்தித்து, தன்னுடைய திருவுள்ளம் திருவாய்ப்பாடியிலே குடிபோய், [உ] பாவநாப்ரகர்ஷத்தாலே [ங] அநுகாரம் முற்றி, அவைதானேயாய், இடைநடையும் இடைமுடியும் இடைப்பேச்சும் முடைநாற்றமு மாய்விட்டது.

ஸ்ரியஃபதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸ்ரீவைகுண்டநிகேதநனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், நஷ்டமாய்க்கிடக்கிறஜகத்தை க்ருபையா

---

ராஸக்ரீடையில் க்ருஷ்ணன் மறைந்தபோது கோபிமாரில் துஷ்டகாளிய என்றொருத்தியை ஸம்போதித்து ஒருத்தி க்ருஷ்ணோஹம் என்று சொல்லவும் காண்கையாலே, காளியனென்றே நினைவும் க்ருஷ்ணனென்றே நினைவும் தோன்றுகையால் அவர்களுக்கு அந்நினைவே யானாற்போலே, ப்ராம்ஹணீ என்று தன்னை எண்ணிக்கொண்டிருக்கும் ஆண்டாளுக்கும் அந்த நினைவு உண்டாய் அநுகரிக்கிறாளோ? என்னும் ப்ரஶ்நத்தை அநுவதித்து, த்ருஷ்டாந்தமுகேந உத்தரம் அருளிச்செய்கிறார் (இவள்தான் இத்யாதி, முடைநாற்றமுமாய்விட்டது என்னுமளவும்.) நாமங்களேயாகிறாப்போலே என்றது- நாமங்களே உண்டாய் அவற்றை அநுஸந்திக்கிறாப்போலே என்றபடி. அவைதானேயாய் என்றது - அவையேயாக அத்யவஸித்து என்றபடி. இடைப்பேச்சு என்றது - “நெய்யுண்ணோம் பாலுண்ணோம்” என்ற ஜாதிப்பேச்சு என்றபடி. “ஆயர் சிறுமியரோம்” என்றத்தாலே - முடைநாற்றம் அர்த்தஸித்தம்.

கோபிமார் நோற்றப்ரகாரத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் (ஸ்ரியஃபதிஇத்யாதி.) வாரி என்றது - திரட்டி என்றபடி. பிடியாக என்றது -

---

[க] தீக்ஷித்தவர்கள் - வ்ரதத்தை மேற்கொண்டவர்கள்.
[உ] பாவநாப்ரகர்ஷம் - நினைவின் முதிர்ச்சி.
[ங] அநுகாரம் - ஒருவரைப்போலச்செய்தல்.

லே ஸ்ருஷ்டித்து, ஆத்மாக்களுக்குக் கரணகளேபரங்களைக்கொடுத்து [“శాసనాచ్ఛాస్త్రమ్”] “ஶாஸநாச்சாஸ்த்ரம்” (ரு)என்று சொல்லுகிறபடியே - வேதஶாஸ்த்ரங்களைத் தன்னைப் பெறுகைக்கு உபாயமாகக் காட்டிக்கொடுக்க; அவற்றைக் காற்கடைக்கொண்டு விஷயாந்தரங்களிலே மண்டி அநர்த்தப்பட்டுப்போகிறதசையிலே, தான்வந்து பிறந்தருளி, தன்னுடைய ஸௌந்தர்யத்தாலும் ஶீலாதிகுணங்களாலும் இந்த ஜகத்துக்களை ஈடுபடுத்தி, வாரிப்பிடியாகப்பிடித்துக்கொண்டுபோவானொருவனாகையாலே, ததர்த்தமாகத் திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணி, தன்னுடையஸௌந்தர்யத்தாலும் குணசேஷ்டிதங்களாலுமாக, பஞ்சலக்ஷங்குடியிலுள்ள பெண்களைத் தோற்பித்துக்கொண்டு, ஒத்தபருவத்திற் பெண்களும் தானுமாய் வளர்ந்தருளுகிறகாலத்திலே; தானும் ப்ராப்தயௌவநனாய், அவர்களுக்கும் யௌவநம்வந்து தலைக்கட்டினவாறே, கோபவ்ருத்தரெல்லாரும் கூடி, “க்ருஷ்ணன் [க] தூர்த்தனாயிராநின்றான், இவன் முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது” என்று பார்த்து, இவர்களைக்கொண்டு போய் நிலவறைகளிலே யடைக்க; பெண்களும் க்ருஷ்ணனும் பண்ணின பாக்யத்தாலே வர்ஷமின்றிக்கேயொழிய, பெண்கள் இருந்து மநோரதிக்கிறார்கள்; - “கோதநராயிருக்கிற இடையர் வர்ஷார்த்தமாக நம்மை நோற்கச்சொல்லக்கடவர்கள், க்ருஷ்ணன் இதுக்குக் கடைக்கூட்டனாகவுங்கடவன், நமக்கு ஒருதுக்கமில்லை” என்று பெண்கள் ப்ரீதைகளாய் தரித்திருக்கிறதசையிலே; வர்ஷமின்றிக்கேயிருக்கிறபடியைக்கண்டு, கோபவ்ருத்தரெல்லாருந்திரண்டு, “பசுக்களும்மநுஷ்யரும் பிழைக்கும் விரகு ஏதோ?” என்று பார்த்து “வர்ஷார்த்தமாக நோற்க வர்ஷமுண்டாம்” என்று, “இவ்வூரில் பெண்களடைய நோற்கக்கடவர்கள்; இந்நோன்புக்கு, இங்குத்தைக்கு அதிபனான ஸ்ரீநந்த கோபர்மகன் க்ருஷ்ணன் [உ] கடகனாவான்” என்று அத்யவஸித்து, பெண்பிள்ளைகளையடைய அழைத்து க்ருஷ்ணனையும்அழைத்து, பெண்களைநோற்கச்சொல்லி, “இவர்கள்நோன்புக்கு நீ கடகனாகவேணும்”

---

ஒருபிடியாக என்றபடி. இத்தால் - [“పూర్వం సపూర్వమభజన్త హి జన్తవస్త్వామ్”] “பூர்வம் ஸபூர்வமபஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம்” என்கிறபடியே சக்ரவர்த்தித்திருமகனாய்க்கொண்டு போந்தவனாகையாலே என்கை. மநோரதிக்கும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (கோதநர் இத்யாதி, துக்கமில்லை இத்யந்தம்.) கடைக்கூட்டன் - நிர்வாஹகன். (என்று) என்ற அநந்தரம், இப்படி என்று

---

[க] தூர்த்தன் - காமுகன். [உ] கடகன் - சேர்ப்பிக்குமவன்.

என்று க்ருஷ்ணனை அபேக்ஷிக்க; அவன், "எனக்கு க்ஷமமன்று" என்ன; "இத்தனையும் செய்யவேணும்" என்று மறுக்கவொண்ணாத படி நிர்ப்பந்திக்க; அவனும் இசைந்தபின்பு, எல்லாரும் திரளஇருந்து, "பெண்கள் நோற்பார், இதுக்கு வேண்டுவது க்ருஷ்ணன் ஸஹகரித்துக்கொடுப்பான்" என்று ஓ மறைந்து, க்ருஷ்ணன்கையிலே பெண்களைக் காட்டிக்கொடுத்து, கோபவ்ருத்தரெல்லாரும் போன பின்பு, பெண்களும் க்ருஷ்ணனும்கூடவிருந்து "திருக்குரவைகோத்த ராத்ரிபோலே, பெண்காள்! இதுவும் நமக்கு ஒரு ராத்ரியே!" என்று க்ருஷ்ணன் கொண்டாடி, "இனி அசிர்ப்புப்பிறக்க வைகல் இருப்போமல்லோம்; இப்போது எல்லாரும் போய் [க] அபராத்ரியிலே வந்து எழுப்புங்கோள் நோன்புக்குக் குளிக்கலாம்படி" என்று அருளிச்செய்து, க்ருஷ்ணனும் பெண்களைப் பிரிந்துபோய் தரிக்கமாட்டாமே நப்பின்னைப்பிராட்டி திருமாளிகையிலே புக்கான். பெண்களும் பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தாலே கால்நடைதந்துபோய்த் தந்தம்மாளிகையிலே புக்கு உறங்கப்புக்கவிடத்தில்; கண்ணுறங்காமையாலே முற்படவுணர்ந்தவர்கள், க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களை நினைத்து எழுந்திருக்கமாட்டாதே கிடக்கிறவர்களை உணர்த்த, தனித்தனியேசென்று எழுப்பி, எல்லாருங் கூடி, உத்தேஶ்யமான ஸ்ரீநந்தகோபர்திருமாளிகையிலே ¶ சென்று க்ருஷ்ணனை யெழுப்பி, தங்கள் அபேக்ஷிதத்

---

ஶேஷம். ஓமறைந்து என்றது - கோபவ்ருத்தர்களும் மற்றுமுண்டான கோபருங் கூட ஸம்மதித்து என்றபடி. (க்ருஷ்ணன்கையிலே பெண்களைக்காட்டிக்கொடுத்து) என்றதுக்கு - கோக்களும் தாங்களும் பிழைக்கவேண்டி க்ருஷ்ணனால் வந்த அபராதத்தையும் பொறுக்கக்கடவோமென்று நோன்புக்காகக் காட்டிக்கொடுத்தார்களென்று கருத்து. (இருந்து) என்ற அநந்தரம், பின்பு என்று அத்யாஹார்யம். அசிர்ப்பு என்றது - அதிஶங்கை என்றபடி. வைகல் என்றது - நெடும்போது என்றபடி. "நப்பின்னைகொங்கைமேல் வைத்துக்கிடந்த" என்று, க்ருஷ்ணனையெழுப்பும்போது சொல்லுகையைப் பற்ற (நப்பின்னைப்பிராட்டி திருமாளிகையிலே என்றது.)

நந்தகோபர் க்ருஹத்தில்-நப்பின்னையுந் தானுமாகக் கண்வளர்ந்தருளுகிற க்ருஹத்தில் என்றபடி. தங்களபேக்ஷிதத்தை அறிவிக்கையாவது- "இறைவா நீ தாராய்" என்று தங்கள் புருஷார்த்தத்துக்கு நீயே உபாயமாகவேணுமென்று அறிவிக்கையும், "உனக்கேநாமாட்செய்வோம்" என்று தங்கள்புருஷார்த்தஸ்வரூபத்தை அறிவிக்கையுமென்று கண்டுகொள்வது. (தங்களபேக்ஷிதத்தை அறிவித்து-அபேக்ஷிதம்பெற்றுமுடிக்கிறது) என்று அந்வயம். அபேக்ஷிதம்பெற்று

---

[க] அபராத்ரி - இரவின் பின்பாகம்.

¶ "நந்தகோபர் க்ருஹத்தில்" என்று அரும்பதத்திற் பாடம்.

தை யறிவித்து, ["யாவதா வர்த்தே வக்தம்"] "யாவதாவர்த்தே வக்தம்" (ஸூ) என்று-ஸ்ரீபாதாழ்வான் பெருமாள் திருவடிகளிலேவிழுந்து வேண்டிக்கொண்டாற்போலேயும், அர்ஜ்ஜுநன் [க] ஷட்கத்ரயத்திலுங் கூட எடுப்பும் சாய்ப்புமாய்ச்சென்று சரமஶ்லோகம் கேட்டு தரித்தாற்போலேயும் அபேக்ஷிதம்பெற்று முடிக்கிறது.

இவள் மடலூராதே நோன்பிலே கைவைப்பானென்னென்னில்?- "ராஜமஹிஷி உஞ்சவ்ருத்திபண்ணி ஜீவித்தால் ராஜாவுக்கு அவத்யாவஹமாமாபோலே மடலிலுங்காட்டில் இது அவத்யாவஹமாகையாலும், சக்ரவர்த்தித்திருமகனைப்போலே குணவ்யஸநியன்றியே தானும் ஒக்க மடலெடுப்பானொரு சுணைக்கேடனுகையாலும், மடல் இவ்விஷயத்தில் பலியாது" என்று பார்த்து நோற்கிறார்கள். உத்தேஶ்யம் வேறொன்றாய் நோன்பு வ்யாஜமாத்ரமாகில் இவர்களுக்கு தேவதை வர்ஷிக்குமோ வென்னில்? வ்ரதோபவாஸ கர்ஶிதமான வடிவைக் கண்டால், சேதநமன்றோ! வர்ஷியாதோ! என்று பார்த்தார்கள்.

---

முடிக்கையிலே இரண்டு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (யாவதித்யாதி.) வேண்டிக்கொண்டாற்போலேயும் என்றது - ["ஸ்வாமித்வமனுவர்த்தய"] "ஸ்வாமிகுவநுவர்த்தய" என்று வேண்டிக்கொண்டு அபேக்ஷிதமான உபேயத்தைப் பெற்றாற்போலேயும் என்றபடி. எடுப்பும் சாய்ப்பும் என்றது - ஶோகாவிஷ்டனான அர்ஜுநனை க்ருஷ்ணன் எடுக்கவும், மீள அர்ஜுநன் ஶோகிக்கவும் என்றபடி. கேட்டு தரித்தாற்போலேயும் என்றது - உபாயத்வதைக்கேட்டு தரித்தாற்போலேயும் என்றபடி. பெற்றுமுடிக்கிறது என்றது - பெற்றுமுடிக்கிறார்கள் என்றபடி.

ஆண்டாள், தமப்பனாரைப்போலே எம்பெருமான் முகங்காட்டாவிடில் மடலூரவொண்ணாதோ? கோபிகாநுகாரத்தாலே நோன்பிலே கைவைப்பானென்? என்னும் ஶங்கையை அநுவதித்து, அதுக்கு இரண்டுவிதமாகப் பரிஹரிக்கிறார் (இவள்மடலூராதே இத்யாதி.) குணவ்யஸநியன்றியே என்றது - குணத்துக்கு ஹாநி எங்கேவருகிறதோ? என்னும் வ்யஸநமுடையனன்றிக்கே என்றபடி. சுணைக்கேடன் - லஜ்ஜாஹீநன். உத்தேஶ்யம் என்றது - க்ருஷ்ணஸம்ஶ்லேஷம். வ்ரதோபவாஸ கர்ஶிதமான வடிவைக் கண்டால் சேதநமன்றோ, வர்ஷியாதோ என்றது - கோபவ்ருத்தர் தங்களுக்கு வர்ஷார்த்தமாக அநுமதிபண்ணப் பாரதந்த்ரைகளாய் வ்ரதத்தை ஆசரிக்கும் பெண்களுக்கு அந்த பலம் அநுத்தேஶ்யமாகிலும் பண்ணிவைக்கும் கோபவ்ருத்தருக்கு உத்தேஶ்யமாகையாலே வர்ஷிக்கவேணுமென்று அறிந்து வர்ஷிக்கும் என்றபடி. ... ... ... ... ... ... *

---

[க] ஷட்கத்ரயம் - பகவத்கீதையின் பதினெட்டு அத்யாயம்.

அவதாரிகை.—முதற்பாட்டில், இந்நோன்புக்கு ஒருகாலம் நேர்படுவதே! என்று காலத்தைக் கொண்டாடுகிருர்கள். "மார்கழித் திங்கள்" என்று தொடங்கி, "சிறுமீர்காள்" என்னுமளவும் - ப்ராப்யம்; மேல் ப்ராபகம்: ப்ராப்யப்ராபக ஸங்க்ரஹமென்றுமாம்.

க.—மார்கழித்திங்கள்மதிநிறைந்தநன்னுளால்
நீராடப்போதுவீர்போதுமினே நேரிழையீர்
சீர்மல்குமாய்ப்பாடிச்செல்வச்சிறுமீர்காள்
கூர்வேற்கொடுந்தொழிலனந்தகோபன்குமரன்
ஏரார்ந்தகண்ணியசோதையிளஞ்சிங்கம்
கார்மேனிச்செங்கண்கதிர்மதியம்போல்முகத்தான்
நாராயணனேநமக்கேபறைதருவான்
பாரோர்புகழப்படிந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—நேர் இழையீர் - விலக்ஷணமான ஆபரணங்களை யணிந்தவர்களும், சீர் மல்கும் - குணஸம்ருத்தியையும் கோஸம்ருத்தியையுமுடைய, ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடியில், செல்வம் - (பகவத் ஸம்பந்தமாகிற) ஸ்ரீயால் அதிஶயித்திருக்கும், சிறுமீர்காள் - இளம்பருவமுடையவர்களுமாகிய பெண்களே! மார்கழிதிங்கள் - (எல்லாவஸ்துக்களும் பலிக்கும்) மார்கழிமாஸமாய், மதிநிறைந்த - சந்த்ரனுல் பூர்ணமான சுக்லபக்ஷமாய், நல் நாள் - நல்லதிவஸமாய் (இராநின்றது); பாரோர் - (க்ருஷ்ணனையும் நம்மையும்) சேரவொட்டாத கோபவ்ருத்தர்கள் தாங்களே, புகழ - கொண்டாடும்படி, படிந்து - (இந்நோன்பிலே) அவகாஹித்து, நீராட - க்ருஷ்ணஸம்ஸ்லேஷம்பண்ண, போதுவீர் - போகையில் இச்சையுடையீர், போதுமின் - வாருங்கள்; (எனெனில்),—கூர் - வடித்துக் கூர்மையாக்கின, வேல் - வேலைத் தரித்தவராய், (க்ருஷ்ணனை நலிய வரும் சிறிய ஜந்துக்களையுங்கூட), கொடுந்தொழிலன் - க்ரூரமாகத் தண்டிக்கு

---

முதற்பாட்டு (மார்கழிஇத்யாதி.) "திங்கள்-மார்கழி, நாள் - மதிநிறைந்த நல்நாள், ஆல் - ஆஶ்சர்யம்" என்று திருவுள்ளம்பற்றி, இப்பாட்டுக்குக் காலத்தைக் கொண்டாடுகையே ப்ராதாந்யேந ப்ரதிபாத்யமென்று பாவம் அருளிச்செய்கிருர் (இந்நோன்புக்கு இத்யாதி.) இத்தால் - பகவத்ஸமாஶ்ரயணத்துக்கு அநுகூலமான காலம் நேர்படுவதே! என்று ஸ்வாபதேஶம் கண்டுகொள்வது. திருவாய்மொழியிலே முதற்பாட்டு மேல்பரக்கச்சொல்லுகிற அர்த்தங்களுக்கு ஸங்க்ரஹமமாமாபோலே, இப்பாட்டும் மேல் ப்ரதிபாதிக்கப்படும் ப்ராப்யப்ராபகங்களுக்கு ஸங்க்ரஹம். காலத்தைக்கொண்டாடுகை அதுக்கு ஶேஷமென்று திருவுள்ளம்பற்றி, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிருர் (ப்ராப்யேத்யாதி.) "மார்கழித்திங்கள்" என்று தொடங்கி, "செல்வச்சிறுமீர்காள்" என்னுமளவும் - ப்ராப்யத்தை ஸங்க்ரஹித்தபடி; மேலெல்லாம் - ப்ராபகத்தை ஸங்க்ரஹிக்கிறது; "பறை" என்றத்தாலே - அடிமையென்று மேல்சொல்லுகிறது ப்ராபகத்துக்கு ஶேஷமாக என்று கருத்து.

மவரான, நந்தகோபன் - ஸ்ரீநந்தகோபருடைய, குமரன் - பிள்ளையாய்,—ஏர் ஆர்ந்த - அழகால் பூர்ணமான, கண்ணி - கண்களையுடைய, யசோதை - யசோதைப்பிராட்டிக்கு, இள சிங்கம் - ஸிம்ஹக்குட்டிபோலே இருக்குமவனாய்,—கார் - (ஆஸ்ரிதருடைய தாபங்களெல்லா மாறும்படி) மேகம்போலக் குளிர்ந்த, மேனி - திருமேனியையும், செம் - (செந்தாமரைமலர்போலச்) சிவந்த, கண் - திருக்கண்களையும், கதிர்போல் - ஸூர்யனைப்போல் ப்ரகாஶமாய், மதியம்போல் - சந்த்ரனைப்போல் ஸந்தோஷகரமான, முகத்தான் - திருமுகமண்டலத்தையுமுடையனான, நாராயணனே - ஸர்வரக்ஷகனே, நமக்கே - ("அவனாலே பேறு" என்று அவன்கைபார்த்திருக்கிற) நமக்கே, எம் பாவாய் - நமது நோன்பைப் பின்சென்று, பறை - நம்முடைய அபேக்ஷிதத்தை, தருவான் - கொடுக்குமவனாயிராநின்றான் என்பதாம். ஆல் - ஆச்சரியம். ஏல், ஓர் - அசைகள்.

வ்யாக்யாநம்.—(மார்கழித்திங்கள்) ["నాతిశీతానఘర్మదా"] "நாதிஶீதாநவஷ்ஹா" (எ) என்கிற ந்யாயத்தாலே அத்யுஷ்ணமாதல் அதிஶீதளமாதலன்றிக்கே யிருக்கும் மாஸம்; நாளுக்கு ப்ராம்ஹமுஹூர்த்தம்போலே ஸம்வத்ஸரத்துக்கு இம்மாஸமாகையாலே ஸத்த்வோத்தரமான காலம். ["మాసానాంమార్గశీర్షోఽహమ్"] "மாஸாநாம்மார்கஶீர்ஷோஹம்" (அ) என்று - 'மாஸங்களில் வைத்துக்கொண்டு மார்கழிமாஸமாகிறேன்' என்று அவன்தானே அருளிச்செய்கையாலே, வைஷ்ணவமான மாஸம்; ஸர்வவஸ்துக்களும் அங்குரிக்குங் காலமாகையாலே,

இப்பாட்டு ப்ராப்யப்ராபக ஸங்க்ரஹமாம்போது காலவிஶேஷம் விஹிதமல்லாமையால் காலமெல்லாம் ஒத்ததாயிருக்க, காலவிஶேஷத்தைக் கொண்டாட ப்ரஸக்தி என் என்ன; அதுக்கு அஞ்சுபடியாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாதிஶீதேத்யாதி.) அதிஶீதளமாதலன்றிக்கே என்றது - ["మధ్యే కల్యాణాకృతిః"] "ஜகரோகஷ்ணமாக்ருதிஃ" என்கிற மாஸம்போலன்றிக்கே யிருக்கை. இத்தால் - ["నాతిశీతానఘర్మదా"] "நாதிஶீதாநவஷ்ஹா" என்கிற எம்பெருமானோட்டை ஸாத்ருஶ்யத்தாலே ப்ராப்யமென்று கொண்டாடினார்களென்கை. உத்தராயணம் தேவர்களுக்குப் பகலாகையாலே அதுக்குப் பூர்வமாஸம் ப்ராம்ஹமுஹூர்த்தமென்று திருவுள்ளம்பற்றி, இத்தால் ஸாத்விகபலஸித்திக்கும் உறுப்பான ஸாத்விககாலமென்று கொண்டாடுகிறார்கள் என்று - (நாளுக்கு) இத்யாதி வாக்யத்துக்குக் கருத்து. (மாஸாநாம்) இத்யாதிக்கு - ப்ராப்யபூதனபிமாநிக்கையாலே உத்தேஶ்யதமமென்று கொண்டாடினார்களென்று தாத்பர்யம். ஸர்வஸஸ்யங்களும் பலிக்குங் காலமாகையாலே, தங்கள் போகவர்த்தகமான மநோரதமும் பலிக்குங் காலமென்று கொண்டாடுகை - (ஸர்வவஸ்துக்களும்) இத்யாதிக்குக் கருத்து. அங்குரிக்கும் என்றது - பலிக்கும் என்றபடி. அந்யாபதேஶத்திலே, விரோதிநிவ்ருத்திக்குடலான காலமென்று கொண்டாடினார்கள் என்றதாய்த்து.

தங்களுடைய [க] உந்மேஷத்துக்கு $அர்ஹமான காலம். (மார்கழித் திங்கள்) கோபவ்ருத்தர் குளிருக்கு அஞ்சிப் புறப்படமாட்டாத காலம்.

தங்களுக்கு உத்தேஸ்யம் கிடக்கக் காலத்தைக் கொண்டாடுகிற தென்னென்னில்?—[" சைத்ர: ஸ்ரீமாநயம் மாஸ:"] "சைத்ர: ஸ்ரீமாநயம் மாஸ:" (கூ) என்று - ஒரு ஸம்ருத்தியைப்பற்றக் காலத்தைக் கொண்டாடிற்றிறே. [சைத்ர:-சைத்ர:] அல்லாதாரிற் காட்டில் பெருமாளுக்கு உள்ள ப்ராதாந்யம்போலே மாஸங்களெல்லாவற்றுக்கும் முதலான மாஸம். [ஸ்ரீமாந் - ஸ்ரீமாந்] அவர் எல்லாருக்கும் ராஜாவாக ப்ராப்தரானாற்போலே, சைத்ரமாஸம் ஸர்வர்க்கும் ஸுகராமாகையாலே, மாஸங்களுக்கெல்லாம் ராஜா வென்கிறது. [அயம்மாஸ:-அயம்மாஸ:] அபிஷேக மநோரத ஸமயத்திலே ஸந்நிஹிதமான தன்னேற்றம். அங்கு, ஶேஷியை ஶேஷபூதர் லபிக்கைக்குக் கொண்டாடுகிற கொண்

---

தங்களுக்கு ப்ரதாந உத்தேஸ்யமான ப்ராப்ய ப்ராபகங்களைக் கொண்டாடாதே ததுபயுக்தமான காலத்தைக் கொண்டாடுவா னென்னென்கிற ஶங்கையைஅநுவதித்து த்ருஷ்டாந்தமுகேந பரிஹரிக்கிறார் (தங்களுக்கு இத்யாதி.) ஸம்ருத்தியைப்பற்ற என்றது - திருவபிஷேகத்துக்கு உடலான அதிஶயங்களைப் பற்ற என்றபடி. இத்தால் - பெருமாளுடைய திருவபிஷேகோத்ஸவத்தில், ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ததுபயுக்தமான காலத்தைக் கொண்டாடினாற்போலே, இவர்களும் கொண்டாடினார்கள் என்றதாய்த்து. ["அயம் மாஸ:"] "அயம்மாஸ:" என்ன அமைந்திருக்கவும், ["சைத்ர:"] "சைத்ர:" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அல்லாதார் இத்யாதி.) அல்லாதார் - பரதாதிகள். இத்தால் - பெருமாளுக்குத் தக்கது என்றதாய்த்து. காலத்துக்கும் பெருமாளுக்கும் முதன்மையாலே ஸாத்ருஶ்யம் உபபாதித்து ["ப்ரஜாஸுகத்வே சந்த்ரஸ்ய"] "ப்ரஜாஸுகத்வே சந்த்ரஸ்ய" என்கிறபடியே ஸுகரத்வத்தாலே யுண்டான ஸாத்ருஶ்யத்தை அருளிச்செய்கிறார் (அவர் எல்லார்க்கும் இத்யாதி.) ராஜாவாக ப்ராப்தரானாற்போலே என்றது - ரஞ்சகதயா வந்த ஸுகரத்வமென்கிற குணாதிஶயத்தாலே ப்ராப்தரானாற் போலேயென்றபடி. ["அயம்"] "அயம்" என்றத்தாலே அதீதாநாகத சைத்ர மாஸாபேக்ஷயா வ்யாவ்ருத்தி யுண்டாகையாலும் ஓரதிஶயமுண்டு என்கிறார் (அபிஷேகேத்யாதி.) ["அயம்" "அயம்"] என்கிறது - புத்திஸ்த பராமர்ஶியாகையாலே, அவதாரஹேதுவான சைத்ரமாஸமே இதுவென்று அக்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அங்கு இத்

---

[க] உந்மேஷம்-வ்ருத்தி. $ "உத்தேஸ்யத்துக்கு" என்றும் பாடம்.

டாட்டம்; இங்கு, ஶேஷபூதரை ஶேஷி லபிக்கைக்குக் கொண்டாடுகிற கொண்டாட்டம். [పుణ్యాః పుష్పితకాననః]-"புண்யா: புஷ்பிதகாநநா:"-[" పావనస్సర్వలోకానాం త్వమేవ "] "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ" (௰) என்றும், ["పుంసాం దృష్టిచిత్తాపహారిణమ్"] "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (௧௧) என்றும் அவர்க்கு இரண்டாகார முண்டானாற்போலே, இக்காலமும் பாவநமுமாய் போக்யமுமா யிருக்கை. [పుష్పితకాననః - புஷ்பிதகாநநா:] - படைவீடுபோலே நாம் அலங்கரிக்க வேண்டாதே தானே அலங்கரிக்கை. [పుష్పితకాననః-புஷ்பிதகாநநா:] பெருமாள் பொன்முடிசூட, காடு பூமுடி சூடிற்று.

(மதிநிறைந்த) - மாஸம் நேர்பட்டாற்போலே யிருந்ததீ பக்ஷமும் நேர்பட்டபடி! ["అపూర్వమాణేవ ఖ్యుణ్యేనక్షత్రే"] "ஶுபே புண்யே ஶுக்லபக்ஷே புண்யே நக்ஷத்ரே" (௧௨) என்று மங்களகார்யம் செய்வார்க்கு விதிக்கிற விதியும் இவர்களுக்குக் [க] கோல்விழுக்காட்டி யாதிவாக்யத்தாலே.) [" తతశ్చ ద్వాదశే మాసే చైత్రే నావమికే తిథౌ "] "ததஶ்ச த்வாதஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ" என்று - அவதாரகாலத்தில், ["చైత్రమ్"] "சைத்ரம்" என்ற விஶேஷணத்தாலே - இந்த லோகத்தில் ஜநங்களுக்கு ஒரு ராஜாவைச் சக்ரவர்த்தி பெற்றானென்று ரிஷி கொண்டாடினமை தோன்றுகையாலே, ஶேஷியான பெருமாளை ஶேஷபூதரான ஜநங்கள் லபிக்கைக்குத் தக்க மாஸமென்று கொண்டாடின கொண்டாட்டம் என்று முதல்வார்த்தைக்குக் கருத்து: அப்படி கொண்டாடப்பட்ட மாஸமே இப்போதும் பெருமாள் அபிஷிக்தராய் ஜநங்களை லபிக்கைக்கும் அர்ஹமாயிற்று என்று சக்ரவர்த்தி கொண்டாடின கொண்டாட்டம் என்று - இரண்டாம் வாக்யத்துக்குத் தாத்பர்யம். (கொண்டாட்டம்) என்ற அநந்தரம், சொல்லிற்று என்று ஶேஷம். ["పుష్పితమ్"] "புஷ்பிதம்" என்றது - ஸஞ்ஜாதபுஷ்பமென்று அர்த்த மாகையாலே, தானே புஷ்பிதமென்று தோன்றுகையாலே, பெருமாளுடைய போக்யதையைப்போலே காட்டில் போக்யதையும் ஸ்வாபாவிகமென்கைக்காக, வ்யாவ்ருத்திபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (படைவீடித்யாதி.) ["పుష్పితమ్"] "புஷ்பிதம்" என்றதுக்கு ஸ்வாபாவிகமான அர்த்தம் அருளிச்செய்து, ரஸோக்தியாக அர்த்தம் அருளிச் செய்கிறார் (புஷ்பிதகாநநேத்யாதி.)

கீழ்ப்பதத்தோடே ஸமபிவ்யாஹார தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (மாஸம்இத்யாதி.) பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணிக் கைங்கர்யம் பண்ணுமவர்களுக்கு ஶுக்லபக்ஷம் விஹிதமென்று கொண்டாடக்கூடுமோவென்ன அரு

[க] கோல்விழுக்காடு - ஸ்வதஃப்ராப்தி; யத்ருச்சை, தைவகதி.

லே சோவிழுந்தது; பகவத்ப்ரவணராயிருப்பாருடைய தேஹயாத்ரையை விதிதான் பின்செல்லக்கடவதாயிறேயிருப்பது; [" [illegible] "] "க்ஷுதீயமஹீஶ்ரேணோஉநாவஸாயிண:" (கரு) என்னக்கடவதிறே. ஒருவரையொருவர் முகங்கண்டு அநுபவிக்கைக்கும், எல்லாருங்கூடிச்சென்று க்ருஷ்ணனை எழுப்புகைக்குமாக நிலா உண்டாகப்பெற்றது. "நள்ளிருட்கண்" என்ன வேண்டாவிறே இவர்களுக்கு; விரோதிக்கக்கடவ அவ்வூராரே இசைந்து மேலெழுத்திடப்பெற்றதிறே.

(நன்னாளால்) - மாஸத்துக்கும் பக்ஷத்துக்கும் நாயகக்கல்போலே யிருப்பதொரு நாள் நேர்பட்டபடி யென்! நம்மை க்ருஷ்ணனோடு கிட்ட வொட்டாதவர்கள் தாங்களே, க்ருஷ்ணனோடு சேருகைக்கு ப்ரமாணம் பண்ணிக்கொடுத்த நாளாகப் பெற்றதே! பகவத்ப்ரஸாதத்துக்கு இலக்காகப்பெற்ற நாளிறே இவ்வாத்மாவுக்கு நல்நாளாகிறது; [" [illegible] "] "க்ஷிவாஜி" (கச) என்ற அவன்தானே [" [illegible] "] "ஜஶாஜி" (கரு) என்னப்பெற்ற நாளிறே. ஸர்வேஶ்வரனோடே எதி

---

ளிச்செய்கிறார் (ஆபூர்யமாணேத்யாதி வாக்யத்ரயத்தாலே.) [" [illegible] "] "க்ஷுதீயாநாம்ஶம்ஹீரம்ஷேநு:" என்று விவக்ஷிதம். விஹிதமென்று கொண்டாடாதேபோனால் எத்தாலேதான் கொண்டாடுகிறார்கள்? என்ன, அருளிச்செய்கிறார் (ஒருவரைஇத்யாதி.) நிலாவாலே கோபவ்ருத்தர் காணாரோ? அதுக்கு இருள் வேண்டாவோ? என்ன, அருளிச்செய்கிறார் (நள்ளிருட்கண் இத்யாதி.)

மதிநிறைந்த நாளாகையாலே ப்ரகாஶகமாய் ஆநந்தகரமா யிருக்கையே நாளுக்கு நன்மை யென்று திருவுள்ளம்பற்றி, த்ருஷ்டாந்தபூர்வகம் அருளிச்செய்கிறார் (மாஸத்துக்கும் இத்யாதி.) நாயகக்கல்போலே என்றது - ப்ரகாஶகமாயிருக்கையாலே யென்று கண்டுகொள்வது. கழிந்தநாளே, க்ருஷ்ணனோடே தங்களைச் சேரவொட்டாமையால் தீயது; இது அங்ஙனன்றிக்கே, க்ருஷ்ணனோடே சேர்க்கைக்கு அவர்களே நிர்ணயம்பண்ணிக்கொடுத்த நாளாகையாலே நல்ல நாளென்று அந்யாபதேஶத்திலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நம்மை இத்யாதி.) ப்ரமாண மென்றது - [" [illegible] "] "ப்ரமிதி: ப்ரமாணம்" என்கிற ஹாவே வ்யுத்பத்தியாலே, நிஶ்சயம் என்றபடி. ஸ்வாபதேஶத்திலே, நன்மைக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி.) ஆகில், உங்களுக்கு இந்நாள் எப்படிப்பட்டதோ? என்ன, அருளிச்செய்கிறார் (க்ஷிபாமி இத்யாதி.) இத்தால் - ப்ராதிகூல்ய ஸங்கல்பம் தவிர்ந்து தங்கள் விஷயத்தில் ஆநுகூல்யஸங்கல்பம் பண்ணின நாள் என்றதாய்த்து. இன்று இப்படி ஸங்கல்பிக்கைக்கு நிதாநம் அருளிச்செய்

ரம்புகோக்கை தவிர்ந்து, "அவன் நமக்குரக்ஷகன்" என்னும் விஸ்வாஸம் பிறந்த நாளிறே நல்நாளாகிறது. '["அத்ய மே ஸஃபலம் ஜந்ம ஸுப்ரபாதா ச மே நிசா"] "அத்ய மே ஸஃபலம் ஜந்ம ஸுப்ரபாதா ச மே நிசா" (கசு) என்று, கம்ஸன் சோறுண்டு வளர்ந்த எனக்கு, இங்ஙனேயொரு நல்விடிவு உண்டாகப்பெறுவதே!' என்றானிறே அக்ரூரன்.

மாஸத்தைக் கொண்டாடுவது, பக்ஷத்தைக் கொண்டாடுவது, நாளைக் கொண்டாடுவதாய், இதிலே இவர்களுக்குக் கிடக்கிற த்வரை வெள்ளம் என்தான்! இவர்கள் ப்ராப்யருசி இருக்கிறபடி.

(நீராட) - க்ருஷ்ணவிரஹத்தால் பிறந்த தாபம் ஆறும்படி போய்க் குளிக்கை; இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ஶ்லேஷம். தமிழரும், கலவியை, "சுனையாடல்" என்றார்கள். ["விப்ரஸ்ரு ப்ரவிஷ்டேஷு

கிறார் (ஸர்வேஸ்வரனோடே இத்யாதி;) தாத்பர்யாந்தரமாகவுமாம். இப்படி நாளைக்கொண்டாடினமைக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (அத்யமே இத்யாதி.) ["மே-நிசா-ச-அத்ய-ஸுப்ரபாதா"] "மே-நிசா-ச-அத்ய-ஸுப்ரபாதா" என்கையாலே - கழிந்த நாளையில் விடிவு ஸுப்ரபாதையல்லவென்று தோற்றுகையால், அதற்கு ஹேதுவை ["மே"] "மே" என்றதுக்கு அர்த்தமாக அருளிச்செய்யாநின்றுகொண்டு, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கம்ஸன் இத்யாதி.) ["பரம் ஹி பாபம் கம்ஸஸ்ய தர்ஶநம் ஸர்வதேஹிநாம். தஸ்மாத் சிந்தாவிமுக்தஸ்ய ஸம்வாஸஸ் ஸதா மம"] "பரம் ஹி பாபம் கம்ஸஸ்ய தர்ஶநம் ஸர்வதேஹிநாம். தஸ்மாத் சிந்தாவிமுக்தஸ்ய ஸம்வாஸஸ் ஸதா மம" என்கிறபடியே பகவத்த்வேஷியான கம்ஸன் சோறுண்டு அவனோட்டை ஸஹவாஸம்பண்ணுகையால் கழிந்த நாளையில் விடிவு விடிவன்றென்று கருத்து.

காலத்தைக் கொண்டாடவேண்டினால் ["ஸுப்ரபாதா ச மே நிசா"] "ஸுப்ரபாதா ச மே நிசா" என்றாற்போலே "நன்னாள்" என்று நாளைக் கொண்டாடுகையே யன்றிக்கே மாஸத்தையும் பக்ஷத்தையும் சேர்த்துக் கொண்டாடுகைக்கு ஹேதுவை அருளிச்செய்துகொண்டு ஈடுபடுகிறார் (மாஸத்தை இத்யாதி.) த்வரைவெள்ளம் என்றது-கொண்டாடுகையில் இச்சாஸந்தாநமென்றபடி. இந்த த்வரைவெள்ளத்துக்குத்தான் ஹேதுவென்னென்ன, அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி.)

"நீராட" என்றதற்கு நோன்புக்காகக் குளிக்கை வாக்யார்த்தமாய், இத்தைச் சொல்லுமவர்களுடைய ஹார்த்தமான த்வந்யர்த்தத்தை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி.) ஜலத்தில் குளித்தால் விரஹதாபமாறும்படி கண்டதில்லையேயென்ன, அருளிச்செய்கிறார் (இத்தால் இத்யாதி.) இத்தாலென்றது- "நீராட" என்றத்தால் என்றபடி. "நீராட" என்ற அர்த்தத்தால் ஸம்ஶ்லே

ஷ்மே ஶீதமிவ ஹ்ரதம்"] "ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரதம்" (கஎ) என்று - பகவத்ஸம்ஶ்லேஷத்துக்கு [க] க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்தமடுவை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே. தாங்கள் நினைத்தபடி சொல்லுகைக்கு ஈடான முறை உண்டாயிருக்கச் செய்தேயும் அத்தைத் தவிர்ந்து பகவத்ஸம்பந்தத்தையே பார்த்துக் கௌரவித்து, " நீராட " என்கிறார்கள்: புத்ரர்களாகவுமாம், ஶிஷ்யர்களாகவுமாம், பகவத்ஸம்பந்த முடையாரை கௌரவ்யர் என்கிறது: " பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள் " என்னக்கடவதிறே. இத்தால், தங்கள் ப்ராப்யத்தைச் சொல்லுகிறது.

அல்ப பலமான ஸ்வர்க்கானுபவத்துக்கு அதிகாரார்த்தமாகப் பண்ணவேண்டுந் தேவைகளுக்கு ஓரெல்லையில்லை; இந்த நிரவதிக ஸம்பத்தைப் பெறுகைக்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்னில்?- (போதுவீர் போதுமினோ) இச்சையே அதிகாரம். அது அப்ராப்த விஷய மாகையாலே அதிகாரிஸம்பத்தி உண்டாக்கிக்கொண்டு இழிய வேணும்; இது வகுத்த விஷய மாகையாலே இச்சைக்கு மேற்பட வேண்டுவதில்லை. நெடுங்காலமிழந்ததும் இவன்பக்கல் இச்சையில்

---

ஷம் த்வநிக்கு மென்கைக்கு நியாமகம் அருளிச்செய்கிறார் (தமிழர்இத்யாதி.) சுனையாடலாவது - பர்வதத்திலே தேங்கின சுனைகளிலே குளிக்கை. "நீராட" என்றதுக்கு ஸ்வாபதேஶார்த்தத்தை அருளிச்செய்கிறார் (ஏஷ இத்யாதி.) கோபிமார், தங்களோடொத்த தோழிமார்களை, குளிக்க என்று சொல்லலாயிருக்க, கௌரவித்து " நீராட " என்பானென் னென்ன, அருளிச்செய்கிறார் (தாங்கள் நினைத்தபடி இத்யாதி.) முறை - அநுபந்தம். கௌரவித்துச் சொன்னதால் பலிதமான ஸ்வாபதேஶத்தை அருளிச்செய்கிறார் (புத்ரர்களாகவுமாம் இத்யாதி.) உக்தார்த்த ஸம்வாதம் காட்டுகிறார் (பொற்றாமரை இத்யாதி.) இவ்விடத்தில், பட்டர் ஸ்ரீபாதத்தைக் கழுவித் தீர்த்தங்கொள்ளும்ஆண்டாளுடைய அநுஷ்டாநமும், எம்பெருமானார் பெருங்கூட்டத்தோடே எழுந்தருளப் பெரியநம்பி ஆளவந்தாராக நினைத்துத் தண்டனிட்டதும் அநுஸந்தேயம்.

மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அல்பேத்யாதி.) 'பண்ணவேண்டும் தேவைகளுக்கு' என்றது - கூஶ்மாண்டகணஹோமாதிகளுக்கு என்றபடி. கூஶ்மாண்டகணம் - † மந்த்ரவிஶேஷம். " போதுவீர் " என்றதுக்கு - போகையிலே இச்சையுடையவர்க ளென்று அக்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி, கீழ்ஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் (இச்சையே இத்யாதி.) "இச்சையே" என்ற அவதாரணார்த்தத்தை ஹேது பூர்வகமாக உபபாதிக்கிறார் (அது இத்யாதிவாக்யத்வயத்தாலே.) ஆனால் இச்சைதவிர வேறுகார்த்

---

[க] க்ரீஷ்மகாலம்-முதுவேனிற்காலம். †'மாத்ருவிஶேஷம்' என்றுபாடாந்தரம்.

லாமை ; ஆகையாலே, இந்த இச்சையே வேண்டுவது. ஶக்தியும் ப்ராப்தியும் அத்தலையிலே பூர்ணமாகையாலே இச்சைக்குமேற்பட வேண்டுவதில்லை; இனி இவன் சேதநனானவாசிக்கு இச்சையேயிறே வேண்டுவது ; அது இல்லையாகில் இவனுக்கு இது புருஷார்த்தமாக மாட்டாதிறே. க்ஷுத்ரவிஷயாநுபவத்துக்குத் தனித்தேட்டமானாற் போலே, அபரிச்சிந்நமான விஷயத்துக்குத் துணை தேட்டமாகையாலே, ஸஹகாரிகளைச் சொல்லுகிறார்கள். (போதுமினோ) - ப்ரதிகூலரையுமகப்பட [“తేన మైత్రీభవతు తేయదిజీవితుమిచ్ఛసి”] “ததநமெஜீஹவ தாதெயஜிஜீவிதாஜிஹூஷி” (கஅ) என்னுமவர்கள் அபிமுகரைப் பெற்றால் விடுவர்களோ ? (போதுமினோ) - நாங்கள் வாழும்படி புறப்பட்டு இங்ஙனே நடக்கலாகாதோ ? அவர்கள் முன்னேபோக, அந் நடையழகு கண்டு, தாங்கள் பின்னேபோகவிறே நினைக்கிறது.

(நேரிழையீர்) - விலக்ஷணமான ஆபரணத்தை யுடையீர். இவர்கள் “போதுமினோ” என்றபின்பு, அவர்கள் வடிவிலேபிறந்த புதுக்

---

தவ்யயில்லையாகில் நெடுங்காலம் இவன் இழந்துபோவானென் னென்ன, அருளிச்செய்கிறார் (நெடுங்காலம் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) இவனுக்கு இச்சையுண்டாகிலும் ஸஹகார்யந்தரமின்றிக்கே பலங்கொடுக்கமாட்டுமோ வென்றும், வகுத்தவிஷயமாகிலும் நியமேந பித்ராதிகள் கார்யம்செய்யக்கண்டிலோமீயென்றும் வருகிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ஶக்தியும் இத்யாதி ;) பித்ராதிகள் ப்ராப்தி கர்மோபாதிகமாகையாலே, பூர்ணமன்றென்று கருத்து. ஆகில், இச்சைதான் வேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன, அருளிச்செய்கிறார் (இனி இவன் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) “போதுமின்” என்று சொல்லும்இவர்களும் க்ருஷ்ணஸம்ஶ்லேஷார்த்திகளாயிருக்க, அவர்களைமாத்ரம் போகச்சொல்லக் கூடுமோ வென்னும் ஶங்கையிலே, “போதுமின்” என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ஷுத்ரேத்யாதி.) “போதுவீர்” என்றத்தாலே - இச்சையுடையவர்க ளென்று தோற்றுகையாலே அபிமுகராயிருக்குமவர்களை “போதுமினோ” என்று விதித்துச் சொல்ல வேணுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (ப்ரதிகூலரையும் இத்யாதி;) பிராட்டியைப் போலே இவர்களும் கடகராகையாலே திருத்துகை இவர்களுக்கு ஸ்வபாவமென்று கருத்து. வம்மின் என்னாதே, “போதுமினோ” என்றதுக்குக் கருத்து அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

விலக்ஷணமானவிஷயத்தை க்ஷணகாலம் விஶ்லேஷிக்கும்போதும் விஶ்லேஷவ்யஸநம் பெரிதாயிருக்க, இப்போது ஆபரணம்பூண்டிருப்பாரோ? “நேரிழையீர்” என்று ஸம்போதிக்கும்படி என்னென்ன, இதற்கு மூன்றுபரிஹாரம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) ஸம்ஶ்லேஷார்த்தமாகப் போகையா லுண்டான த்வராதிஶயத்தாலே ஆபரணங்களிடும் அவய

கணிப்பு இருந்தபடி! அன்றிக்கே, "கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழிய" என்கிறபடியே க்ருஷ்ணனுடைய வரவைக் கடாக்ஷித்து, 'அவன் எப்போது வந்து மேல்விழும்?' என்று அறியாதபடியாலே, தங்களை எப்போதும் அலங்கரித்தபடியே யிருப்பர்க ளென்றுமாம். ["వసతిహృది-సౌమ్యరూపః"] "வஸதிஹ்ருதி-ஸௌம்யரூப:" (கக) என்னுமாபோலே முன்புத்தை க்ருஷ்ணனோட்டைக் கலவியால் பிறந்த புகர் இப்போது தோற்றும்படி யிருக்கையாலே சொல்லவுமாம்.

(சீர்மல்கு மாய்ப்பாடி) - இவ்வூரில் ஐஶ்வர்யம் வழிந்துபோய் வேறோரூர்க்கு வெள்ளமிடப் போந்திருக்கை. அதாவது - க்ருஷ்ணனுடைய இங்குத்தை நீர்மை பரமபதத்திலும் சென்று அலையெறியும்படியாயிருக்கை. வஸ்துவுக்குக் குணத்தாலேயிறே [க] உத்கர்ஷம்; அங்குத் தன்னிற் குறைந்தா ரில்லாமையாலே குணத்துக்கு விஷயமில்லை; ஆகையாலே, தர்மியைப்பற்றிக் கிடக்குமத்தனை அங்கு; [உ] அந்தகாரத்தில் தீபம்போலே ப்ரகாஶிப்பதும் இங்கேயாகையாலே, ஐஶ்வர்யம் பூர்ணமாய்த்து இங்கேயிறே. [ந] த்ரிபாத்விபூதியி

---

வங்களை மாறாடிப் பூண்கையாலே வந்த வடிவிற் புதுக்கணிப்பு என்று - முதல் வாக்யத்துக்குக் கருத்து. ["వసతిహృదిసనాతనే చ తస్మిన్ భవతి పుమాన్ జగతోऽస్య సౌమ్యరూపః । క్షితిరసమతిరమ్యమాత్మనోऽన్తః కథయతి చారుతయైవ సాలపోతః"] "வஸதிஹ்ருதி ஸநாதநே ச தஸ்மிந் பவதி புமாந் ஜகதோऽஸ்ய ஸௌம்யரூப: । க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோऽந்த: கதயதி சாருதயைவ ஸாலபோத:" என்கிறபடியே ஒருநாளையிற் கலவியில் ஆநந்தம் இவர்களுக்கு அநுவர்த்திக்கையாலே விஶ்லேஷவ்யஸநம் தோற்றாமையால் தங்களை எப்போதும் அலங்கரித்திருப்பர்களென்று மூன்றாம்வாக்யத்துக்குக் கருத்து.

* 'சீர்'பதம் - ஸம்ருத்தியைச் சொல்லுகிறதாய், அதுதானும் - க்ருஷ்ணனுடைய குணஸம்ருத்தியென்றும் ஆய்ப்பாடிக்கு உண்டான கோஸம்ருத்தியென்றும் திருவுள்ளம்பற்றி, மூந்துற குணஸம்ருத்தி பரமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவ்வூரில் இத்யாதி.) அலையெறியும்படியாயிருக்கையாவது - அங்குத்தையில் நாய்ச்சிமார்களும் வைதிகபுத்ராநயநமுகத்தாலே கண்டு அநுபவிக்கலாம்படி யிருக்கை என்றபடி. பரத்வாதிகுணங்களை அநுபவித்துக் கொண்டிருக்கிற நாய்ச்சிமார்க்கு நீர்மை காணவேண்டியிருந்ததோ வென்ன, அருளிச்செய்கிறார் (வஸ்துவுக்கு இத்யாதி.) குணத்தாலே என்றது - ஸௌலப்யத்தாலே என்றபடி. இக்குணந்தான் அங்கேதானே அநுபாவ்யமாயிராதோ வென்ன, அருளிச்செய்கிறார் (அங்கு இத்யாதி வாக்யதாயத்தாலே.)

---

[க] உத்கர்ஷம் - உயர்த்தி. [உ] அந்தகாரம் - இருள்.
[ந] த்ரிபாத்விபூதி - பரமபதம்.

லடங்காத வஸ்து தன்னை நியாம்யமாக்கி வர்த்திக்கிற ஊரிறே. பண்டே கோஸம்ருத்தி யுண்டாயிருக்கச்செய்தே, பிள்ளைகள் கால் நலத்தாலே கறப்பன கடைவனவற்றால் குறைவற்றிருக்கை. நாழிப் பால் நாழிநெய் போருகை யென்றுமாம்.

(ஆய்ப்பாடி)-பரமபதம்போலே தேஹாந்தரபரிக்ரஹம்பண்ணிச் சென்று அநுபவிக்கவேண்டாத ஊர். ஆசாரப்ரதாநரான வஸிஷ்டாதிகள் வர்த்திக்கிற திருவயோத்யைபோலன்றிக்கே, இடக்கையும் வலக்கையு மறியாத இடையர் வர்த்திக்கிற ஊர். பெருமாள் குணங்கண்டு உகக்கும் ஊர்போலன்றியே, க்ருஷ்ணன் தீம்புகண்டு உகக்கும் ஊர்.

(செல்வச் சிறுமீர்காள்) - இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஐஸ்வர்யமாவது பகவத்ப்ரத்யாஸத்தியிறே. ராஜ்யத்தைவிட்டு வெறுங்கையோடே பெருமாள்பின்னே போன இளையபெருமாளை, [“లక్ష్మణో లక్ష్మి సమ్పన్నః”] “லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:” (௨௦) என்றதிறே: ராவணபவநத்திநின்றும் கால்வாங்கிப் பெருமாளிருந்த தேஶத்தைக் குறித்து வருவதாக, [“పరిత్యక్తా మయా లఙ్కా మిత్రాణి చ ధనాని చ”] “பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச” (௨க) என்று ஸர்வத்தையும்விட்டு ஆகாஶஸ்தனான விபீஷணாழ்வானை, [“అన్తరిక్షగతః శ్రీమాన్”] “அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்” (௨௨) என்றதிறே: அவனை ரக்ஷகனாக அத்யவஸித்துத் தன்

இங்கு ஸௌலப்யம் ப்ரகாஶிக்கிறபடியை உபபாதிக்கிறார் (த்ரிபாத்விபூதியில் இத்யாதி.) கோஸம்ருத்திபரமான இரண்டாம்தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (பண்டே இத்யாதி.)

“ஆய்ப்பாடி” என்று - இடைச்சேரியைச் சொன்னால் அதிஶயம் சொல்லத்தக்க தென்னென்ன, அதுக்குத் தாத்பர்யமாக மூன்றுப்ரகாரத்தாலே அருளிச்செய்கிறார் (பரமபதம் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.)

“செல்வம்” என்றதுக்கு - ஸ்வாபதேஶத்திலே அர்த்தம் அருளிச்செய்கிறார் (இவ்வாத்மாவுக்கு இத்யாதி.) ப்ரத்யாஸத்தியாவது - ஸம்பந்தம். பகவத் ஸம்பந்தத்தைச் செல்வமாகச் சொல்லுகைக்கு மூன்று த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (ராஜ்யத்தை இத்யாதி.) [“లక్ష్మీసంపన్నః”] “லக்ஷ்மிஸம்பந்ந:” என்றது - பகவத் ஸம்பந்தமாகிற ஸ்ரீயாலே அதிஶயித்தவரென்றபடி. லக்ஷ்மீ ஶப்தம் ஆர்ஷமாகையாலே “லக்ஷ்மி” என்று குறுகிக்கிடக்கிறது. அந்ய ஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களிரண்டும் பால்யந்தொடங்கி யின்றிக்கே யிருக்குமவர்க்குக் கைங்கர்யபரதையென்றும், ஸ்வாதந்த்ர்யமின்றிக்கே அந்யனான ராவணனுக்குப் பாதந்த்ரரானவர்க்கு அந்த ஶேஷத்வம் கழிகை யென்றும், அந்யஶேஷத்வமின்றியிலே ஸ்வரக்ஷணே ஸ்வாதந்த்ர்ய நிஷ்டரானவர்க்குப்

பக்கல்முதலற்றுக் கைவாங்கின ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, [“ஸதாநாம் வரஸ்த்ரீணாம்”] “ஸதாநாம வராஸ்ரீணாம்” (௨.௩) என்றதிறே: அப்படியே இவர்களும். இங்கு ஐஸ்வர்யமாகச் சொல்லுகிறது, க்ருஷ்ண ப்ராத்யாஸத்தியை; அதாவது - வலிபாதி, வழக்குப்பாதி, தர்மம்பாதியாகப் பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களில் இவனால் புஜிக்கப்படாதாரொருவரு மில்லை. வலியாகிறது - தன்செல்லாமை; வழக்காகிறது - மைத்துனமை; தர்மமாவது - ஆந்ருஸம்ஸ்யம்.

(சிறுமீர்காள்) - க்ருஷ்ணனோடொத்த பருவமாயிருக்கை. [“துல்யஶீலவயோவ்ருத்தாம்”] “துல்யஶீல வயோவ்ருத்தாம்”(௨௪) என்கிறபடியே எல்லாவற்றிலும் அவனுக்கு ஈடாயிருக்கை. பருவம் நிரம்பின ஸ்த்ரீகளையும் புருஷர்களையுங் கண்டால், தேவதாந்தரபஜநம் பண்ணினாரையும், தந்தாமுக்காக நினைத்திருப்பாரையும் போலே நினைத்திருக்கும்; தனக்கு அநந்யார்ஹைகளாக நினைத்திருப்பது இவர்களை. இத்தால், அவனுக்கேயாயிருக்கிற யோக்யதையைச் சொன்னபடி. ஜ்ஞாந

---

பின்பு அதுவுமழிந்திருக்கை யென்றும், த்ருஷ்டாந்தங்களுக்குப் பேதங் கண்டுகொள்வது. உக்தார்த்தத்தை ப்ரக்ருதத்திலே நிகமிக்கிறார் (அப்படியே இவர்களும் என்று.) அந்யாபதேஶத்திலே “செல்வம்” என்றதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் (இங்கு இத்யாதி.) தன் செல்லாமை என்றது - அவர்களோடு ஸம்ஶ்லேஷியாவிடில் தரியாமை. ஆந்ருஸம்ஸ்யமாவது - தன்னோடு கலவாவிடில் தரியாத பெண்களிடத்தில் பண்ணும் காருண்யம்.

இவர்களுடைய சிறுமையை யிட்டு இப்படி ஸம்போதிக்கை*யசோதை யிளஞ்சிங்கமான க்ருஷ்ணனுடைய போகத்துக்கு உடலாயிருக்கும் பருவ மென்று தோற்றுகைக்காக என்று அர்த்தம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் இத்யாதி.) பருவம் ஒத்திருந்தாலும் ஶீலவ்ருத்தாதிகள் ஒத்திராவிடில் போகத்துக்கு உடலாகமாட்டாதென்று அத்தை உபலக்ஷணமாக்கித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (துல்யேத்யாதி.) பெண்கள் பருவம் க்ருஷ்ணன் பருவத்துக்கு ஒத்ததா யிருக்கவேணுமோ? போகார்ஹமாய் விஞ்சியிருந்தாலாகாதோ? என்ன, அருளிச்செய்கிறார் (பருவம் இத்யாதி.) புருஷர்களையும் என்றது - த்ருஷ்டாந்தார்த்தம். (தேவதாந்தரபஜநம்பண்ணினாரையும்) என்றதுக்கு - பருவம் நிரம்பினவர்கள் பர்த்ருபரிக்ரஹம்பண்ணி யிருப்பர்களென்று தாத்பர்யம். (தந்தாமுக்காக நினைத்திருப்பாரையும்) என்றது - ஸ்வதந்த்ரரையும் என்றபடி. பெரியோர்களுக்குச் சிறியவர்கள் வஶ்யராயிருப்பர்களாகையால், அத்தைப் பற்ற “ சிறுமீர்காள் ” என்றதுக்கு - இவர்கள் வஶ்யர்களென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தனக்குஇத்யாதி வாக்யத்ரயத்தாலே.)

லவதுர்விதக்த ரன்றியே இடக்கையும் வலக்கையும் அறியாத கந்யகைகளாயிருக்கை; இவனுடைய விஷயீகாரத்தாலே இளகிப்பதிக்கை. † ([க] அங்கோலத்தைலத்திற் குறைந்த க்ருஷ்ணகடாக்ஷமில்லையிறே. அதாவது - * கோவிந்தனுக்கல்லால் வாயில்போகாதிருக்கை.)

(கூர்வேற்கொடுந்தொழிலன் நந்தகோபன்) - ஸ்ரீநந்தகோபர், முன்பு பசும்புல் சாவ மிதியாதவராய்த்து; நம் சிறியாத்தானைப்போலே ஆந்ருஶம்ஸ்யப்ரதாநராயாய்த்துப் போருவது. பிள்ளைகள் பிறந்தபின்பு அவர்கள்மேலுண்டான வாத்ஸல்யத்தாலே 'அவர்களுக்கு என் வருகிறதோ!' என்று அஞ்சி, வேலைப் புகரெழக்கடைந்து பிடிக்கத்தொடங்கினர். (கொடுந்தொழிலன்) - தொட்டிற்கீழே எறும்பு புகுரிலும் ஸிம்ஹத்தின்மேலே விழுமாபோலே சீற்றத்தின்மிகுதியாலே உதிரக்கையரானர். ["[Grantha text]"] "நஹிம்ஸ்யாத்ஸர்வா பூதாநி" (உரு)என்கிற ஸாமாந்யவிதி, ["[Grantha text]"] "அக்நீஷோமீயம்பஶுமாலபேத" (உசு) என்கிற விசேஷத்தில் வாராதிறே. ஸ்வார்த்தமாகச்செய்யுமன்றிறே நிஷித்தமாவது; 'அத்தலைக்கு என்வருகிறதோ!' என்று அஞ்சிச் செய்யுமன்று அவை தர்மமாகக் கடவது. ["[Grantha text]"] "ஶ்ருதிஸ்ம்ருத்யுதிதம்தர்மம்..."

"நந்தகோபன்குமரன்" என்ன அமைந்திருக்க, இப்போது நந்தகோபரை "கூர்வேற்கொடுந்தொழிலன்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (ஸ்ரீநந்தகோபஇத்யாதி வாக்யத்ரயத்தாலே.) புகரெழக்கடைந்து என்றது - தேஜிஷ்டமாம்படி சாணைபிடித்து என்றபடி.

'கூர்வேல்தொழிலன்' என்ன அமைந்திருக்க, "கொடும்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (தொட்டில் இத்யாதி.) உதிரக்கையர் என்றது - அவற்றை ஹிம்ஸிக்கையாலே வேல்வழியேவந்த ரக்தத்தைக் கையிலே யுடையவரென்கை. அந்யாபதேசத்தில்-பிள்ளைகளிடத்தில் பரிவாலேகொடுந்தொழிலனுனென்று அர்த்தம் அருளிச்செய்கிறர் என்கையாலே, ஸ்வாபதேசத்திலும் - பகவத்விரோதிவிஷயத்திலே இப்படி கொடுந்தொழிலனுயிருக்கை பலிக்கையால், அதில் ஹிம்ஸை நிஷித்தமன்றோவென்று வரும் ஶங்கையைப் பரிஹரிக்கிறர் (நஹிம்ஸ்யாதித்யாதி.) விசேஷத்தில் வாராது என்றது-விஹிதமான பஶ்வாலம்பநத்தை நிஷேதியாதென்கை. ஆகில், இதுக்கு நிஷேத்யந்தான் ஏதென்ன, அருளிச்செய்கிறர் (ஸ்வார்த்தமாக இத்யாதி.) அக்நீஷோமீயஹிம்ஸையைப்போலே பகவத்விரோதிஹிம்ஸை விஹிதமான தர்மமோ? என்ன அருளிச்செய்கிறர் (அத்தலைக்கு இத்யாதி.) இது

† குண்டலித க்ரந்தம் சில ஸ்ரீகோசங்களில் இல்லை. [க] அங்கோலம்-அழிஞ்சில்.

(உள) இத்யாதி; “நின்பால்பொறுப்பரியனகள்பேசில் - ஆங்கே தலையை அறுப்பதே கருமங்கண்டாய்” என்றதிறே. (நந்தகோபன்) - பிள்ளையைக்கண்ட ப்ரீதியாலே ஆநந்தத்தையுடையரென்று சொல்லுதல்; நாமதேயமாதல். இப்போது இவரைச்சொல்லுவானென்னென்னில், உத்தேஶ்யவஸ்துவை நோக்கித்தருவரென்னும் ப்ரீதியாலே. “நந்தகோபாலா வெழுந்திராய்” என்று எழுப்பிக் கார்யங்கொள்ளலாம்படியிறே இவர்களுக்கு அவர் விதேயராயிருக்கும்படி. (குமரன்)- ‘வெண்ணெய் களவுகண்டான், பெண்களைக்களவுகண்டான், ஊரை மூலையடியாக்கினன்’ என்று எல்லாரும்வந்து முறைப்பட்டால், ‘என் கண்வட்டத்திலே வந்து தோற்றினுகில் நியமிக்கக்கடவேன்’ என்று பெரிய உத்யோகத்தோடே யிருந்தால், அவர்முன்பு தோற்றும்போது ஸவிநயமாகத் தோற்றுகையாலே, ‘கெட்டேன்! இவனையோ இங்ஙனே பழியிட்டது!’ என்று அவர்களையே பொடியும்படியாயிருக்கை. யசோதைப்பிராட்டி பொடியும்போதும், “உந்தமடிகள் முனிவர்” என்றன்றே பொடிவது. “படிறுபலசெய்து இப்பாடியெங்குந் திரியாமே - கொடியேனென்பிள்ளையைப்போக்கினேன்” என்றிறே இவள் இருப்பது.

(ஏரார்ந்தகண்ணி யசோதை) - யசோதைப்பிராட்டி கண்ணிலே அழகு குடிகொண்டாய்த்திருப்பது. பிள்ளையை மாறாதே பார்த்துக்

---

தர்மமாகைக்கு விதியைக்காட்டுகிறார் (நின்பால் இத்யாதி.) பொறுப்பரியனகள் - துஸ்ஸஹங்கள். கருமங்கண்டாய் - கர்த்தவ்யங்கிடாய் என்றபடி. க்ருஷ்ணன்பக்கல் பரிவாலே நந்தகோபர் கூர்வேல்கொடுந்தொழிலனாகிலும், பெண்கள் இப்போது அத்தையிட்டு விஶேஷித்து அவரைச் சொல்லுகைக்குக் காரணம் ஏதென்னும் ப்ரஶ்நத்தை அநுவதித்து உத்தரம் அருளிச்செய்கிறார் (இப்போது இத்யாதி.) நோக்கித்தருவர் என்றது - ரக்ஷித்துத் தருவர் என்றபடி. பெரியாழ்வாரைப்போல நந்தகோபரும் பரிவராய் நோக்கித்தருவராகையாலே, பெரியாழ்வார் பெண்பிள்ளைதானே கோபிமார் பாசுரத்தாலே பேசுகையால் அவரிடத்தில் ப்ரீதியுண்டென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். கூர்வேல்கொடுந்தொழிலனுடைய குமரன் என்னாதே, “நந்தகோபன்” என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நந்தகோபாலா இத்யாதி.) ‘நந்தகோபனிளஞ்சிங்கம்’ என்னாதே, “குமரன்” என்றத்தாலே - சிறுபிள்ளையாய், அத்தாலே - பவ்யதை தோன்றுகையாலே பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (வெண்ணெய் இத்யாதி.) நந்தகோபன்பக்கலிலேபோய் ஊரார் முறைப்படும்படி பெற்ற தாய் தீம்புகண்டு முனியாதே விட்டிருக்குமோவென்ன, அருளிச்செய்கிறார் (யசோதை இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

“ஏர்” என்று - அழகாய், * ஆர்தல் - பூர்த்தியாய், அத்தாலே பலிதத்தை அருளிச்செய்கிறார் (யசோதைப்பிராட்டி இத்யாதி.) “யசோதையிளஞ்

கொண்டிருக்கையாலே அவ்வாசியடையக் கண்ணிலே தோற்றும் படியாயிருக்கை. * அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும் தொழுகையும் இவைகண்ட கண்ணிறே. "அம்பன்னகண்ணாளசோதை" என்னக்கடவதிறே. (யசோதை) - "யசோதா யறிவுறாய்" என்று எழுப்பிக் கார்யங்கொள்ளலாம்படியிறே இவர்கள்திறத்தில் அவள் அநுகூலித்திருக்கும்படி.

(இளஞ்சிங்கம்) - ஸ்ரீநந்தகோபர் ஹிதகாமராகையாலே அங்கு விநயந்தோற்ற நின்றபடியைச் சொல்லிற்று; இவள் ப்ரியமே நடத்துமவளாகையாலே, செருக்கும் மேனாணிப்பும் தோற்ற நின்றநிலையைச் சொல்லுகிறது. "அஞ்சவுரப்பா ளசோதை ஆணாட விட்டிட்டிருக்கும்" என்று இவன் செய்ததெல்லாம் உத்தேஸ்யமாகவிறே இவள் நினைத்திருப்பது. ஆரேனும் வந்து முறைப்பட்டால் [அஞ்சவுரப்பாள்] இவன் தீம்பிலே தகணேறும்படியாக வாய்த்து உரப்புவது. (இளஞ்சிங்கம்) - * சிறுமியர்க்கு ஒத்தபருவமா யிருக்கை. "சிங்கக்குருகு" என்று பட்டர் அருளிச்செய்வர்.

(கார்மேனி) - நம்முடைய ஸகலதாபங்களும் ஆறும்படியான வடிவு. "தூநீர்முகில்போல் தோன்றாய்" என்று ப்ரார்த்தித்த வஸ்துவிறே இவர்களுக்கு ப்ரத்யக்ஷித்து நிற்கிறது. மாதாபிதாக்கள் தங்களை மறைத்துவைத்தாலும் விடவொண்ணாத வடிவழகு.

---

சிங்கம்" என்ற பதச்சேர்த்தியைத் திருவுள்ளம்பற்றி, அழகுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (பிள்ளை இத்யாதி.) அவ்வாசி என்றது - ஹர்ஷவிஶேஷம். அம்பன்ன என்றது - அம்பு தைத்து ஈடுபடுத்துமா போலே அழகாலே யீடுபடுத்துகையாலே அம்புபோன்ற என்றபடி.

செருக்கு என்றது - "இளம்" என்ற பதத்தாலே லப்யமான ஹர்ஷாதிஶயம். மேனாணிப்பு என்றது - சிங்கபதத்தாலே தோற்றுகிற தேஜோ விஶேஷம். "ப்ரியமேநடத்துமவள்" என்றதுக்கு ப்ரமாணம் அருளிச்செய்கிறார் (அஞ்ச இத்யாதி.) உரப்பாள் - அதட்டாள். ஆணாட - ஆண்பிள்ளைத்தனங் கொண்டாட. எடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆரேனும் இத்யாதி வாக்யத்தாலே.) தகணேறும்படியாக என்றது - முற்றும்படியாக என்றபடி. "இளஞ்சிங்கம்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (சிறுமியர்க்கு இத்யாதி.) இளமையை யுடையவனாய் ஸிம்ஹம் போன்றவனென்று தோன்றாமைக்காக ஸம்வாதமுகேந ஶப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (சிங்கக்குருகு இத்யாதி.) குருகு - குட்டி.

ப்ரத்யக்ஷித்து என்றது - ப்ரத்யக்ஷமாய் என்றபடி. "கார்" என்றதுக்கு மேகம் அர்த்தமாய், அதுக்குத் தாத்பர்யம்அருளிச்செய்து, அழகு என்று ஶப்தார்த்தமாய்த் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மாதாபிதாக்கள் இத்யாதி.)

(செங்கண்) - அத்திருமேனிக்குப் பரபாகமான சிவப்பையுடைய திருக்கண்கள். அகவாயில் வாத்ஸல்யமடையத் திருக்கண்களிலே தோற்றும்படியாயிருக்கை; ஐஸ்வர்யத்தாலும் குதறியிருக்குமிறே. வடிவாலே அணைத்துக் கண்ணாலே குளிரநோக்குகையிலேயிறே கருத்து.

(கதிர்மதியம் போல்முகத்தான்) - ப்ரதாபத்துக்கும் குளிர்ச்சிக்கும் ஆதித்யனுடைய புகரை யூட்டின சந்த்ரனைப்போலேயாய்த்துத் திருமுகம் இருக்கும்படி. ப்ரதிகூலர்க்கு அநபிபவநீயனாய் அநுகூலர்க்குக் கிட்டிநின்று அநுபவிக்கலாம்படியிருக்கை. ["తత్రేత్యాదిమాసీనం ప్రసన్నాదిత్యవర్చసమ్"] "தத்ரௌவிஷ்ட்ராவஸீநம்வப்ரஸணாதித்ய வர்ச்சஸம்" (உஅ) என்னக்கடவதிறே. (கதிர்மதியம்போல்முகத்தான்)- ப்ரகாஶமுமாய் ஆஹ்லாதகரமுமான முகத்தையுடையவனென்னவுமாம். (முகத்தான்) - அவ்வளவிலும் உபமாநம் நேர்நிற்கமாட்டாமையாலே உபமேயந்தன்னையே சொல்லுகிறது.

---

"செங்கண்" என்றதுக்கு - ஸ்வாபாவிகமான சிவப்பு ஶப்தார்த்தமாய், "கார்மேனி" என்ற ஸமபிவ்யாஹார தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அத்திருமேனிக்கு இத்யாதி.) தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அகவாயில் இத்யாதி.) மூன்றாம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஐஸ்வர்யத்தாலும் இத்யாதி.) இவர்கள் இப்போது "கார்மேனி" என்றும், "செங்கண்" என்றும் அநுஸந்தித்ததுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (வடிவாலே இத்யாதி.)

'புகரையூட்டின' என்றது - தேஜஸ்ஸை யேறிட்ட என்றபடி. ப்ரதிகூலர்க்குக் கிட்ட அரியனாய் அநுகூலர்க்கு எளியனானமைக்கு ப்ரமாணம் அருளிச்செய்கிறார் (தத்ரேத்யாதி.) "ப்ரஸந்ந" என்றது - சந்த்ரனுடைய தெளிவையுடைய என்றபடி. ["ప్రసాదస్తు ప్రసన్నతా"] "ப்ரஸாதஸ்து ப்ரஸந்நதா" என்று சந்த்ரனுடைய தெளிவைச் சொல்லிற்றிறே. "கதிர்" என்று - ஸூர்யகிரணங்களாய், அத்தையுடைய சந்த்ரனைப்போலே யென்று அபூதோபமையாக்கி, அத்தாலே பலிதத்தையும் அருளிச்செய்து, "கதிர்" என்று - ஸூர்யனாய், "மதி" என்று - சந்த்ரனாய், அவர்களைப்போலே யென்று ஶப்தார்த்தமாய், அத்தாலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரகாஶமும் இத்யாதி.) திருமுகமண்டலத்தைக் * கதிர்மதியாகவே விவக்ஷித்து, கதிர்மதியுடையவனென்று அருளிச்செய்யாமல், உபமாநந்தன்னிலும் பேதந்தோற்ற "முகத்தான்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்வளவிலும் இத்யாதி.) அவ்வளவிலும் - உபமாநத்தைச் சொன்னவளவிலும். நேர்நிற்கமாட்டாமையாலே என்றது - பூர்ணஸத்ருஶமாகமாட்டாமையாலே என்றபடி. 'உபமேயந்தன்னையே சொல்லுகிறது'

(நாராயணனே) - கோவர்த்தநோத்தாரணாதி அதிமாநுஷசேஷ்டிதங்களாலே ஸர்வேஸ்வரத்வம் பெண்களுக்கும் தெரியும்படியாயிறே இவ்வவதாரந்தானிருப்பது. தேவதாந்தரங்களையறியாத கோபவ்ருத்தர்கள் நோன்புக்கு அங்கமாக ஜபிக்கும் மந்த்ரமாக உபதேசிக்கையாலே சொல்லுகிறார்களென்னவுமாம். இன்னமும், தன்னுடைய தமப்பன்மார் சொல்லவும் கேட்டிருக்குமிறே. "நன்மை தீமைகளொன்றுமறியேன் நாரணனென்னுமித்தனையல்லால்" என்றும், "நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்றும், "திண்ணம் நாரணம்" என்றும், "நாரணனை நன்கறிந்தேன்" என்றும்; இவ்வர்த்தத்திலே ரிஷிகளும் ["నారాయణశబ్దమాత్రమ్"] "நாராயண ஶப்தமாத்ரம்" (உக) என்றும், ["ఏషనారాయణశ్శ్రీమాన్"] "ஏஷ நாராயணஶ்ஶ்ரீமாந்" (௩0) என்றும்; ஶ்ருதியும் ["నారాయణపరంబ్రహ్మ"] "நாராயணபரம்ப்ரஹ்ம" (௩க) என்றும் பலவிடத்திலும் சொல்லிற்று. (நாராயணனே நமக்கே பறைதருவான்) - ஸர்வஸ்வாமியான

---

என்றதுக்கு - உபமாநத்தையிட்டு மறைத்துச்சொல்லாமல் உபமேயத்தைத் தானே ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறதென்று கருத்து.

இடைப்பெண்கள் க்ருஷ்ணனை ஸர்வேஸ்வரனென்று அறிய ஸம்பாவனையில்லாமையாலே இப்படி ஸம்போதிக்கக் கூடுமோ வென்ன, அதுக்குப் பரிஹாரம் மூன்றுவகையாக அருளிச்செய்கிறார் (கோவர்த்தநேத்யாதி வாக்ய த்ரயத்தாலே.) 'உபதேசிக்கையாலே சொல்லுகிறார்களென்னவுமாம்' என்றதுக்கு - கோபவ்ருத்தர் "நாராயணன்" என்று உபதேசிக்கும் மந்த்ர ப்ரதிபாத்யன் க்ருஷ்ணனே யென்று சொல்லுகையாலே, "நாராயணனே" என்கிறார்களென்று கருத்து. கோபவ்ருத்தர்க்கு க்ருஷ்ணன்பக்கல் பரத்வ ஜ்ஞாநாஜ்ஞாநங்கள் கலந்திருக்குமென்றது ப்ரமாணஸித்தமிறே. 'தமப்பன்மார் சொல்லவும்' என்றது - க்ருஷ்ணனை ஸர்வேஸ்வரனென்று சொல்லவும் என்றபடி. க்ருஷ்ணன் ஸர்வேஸ்வரனேயாகிலும் திருநாமங்கள் மற்றும் பலவுமுண்டாயிருக்க இத்திருநாமத்தை அருளிச்செய்கைக்கு ஆழ்வார் முதலானோர் ஆதரித்ததென்னுமத்தை நியாமகமாகக் காட்டுகிறார் ('நன்மை' என்று தொடங்கி, 'சொல்லிற்று' என்னுமளவும்.) (நன்கறிந்தேன் என்றும்) என்ற அநந்தரம், "ஆழ்வார்கள் அருளிச்செய்தார்கள்" என்று கூட்டிக்கொள்வது.

* நாராயணஶப்தத்துக்கு - தத்புருஷபஹுவ்ரீஹ்யர்த்தங்களை உட்கொண்டு, க்ரமேண ஶப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (ஸர்வஸ்வாமி இத்யாதி வாக்யத்வயத்தாலே;) பஹுவ்ரீஹ்யர்த்தமான அந்தஸ்வாமித்வத்துக்கு வாத்ஸல்யம் பொதுவென்று கண்டுகொள்வது. (கருத்து) என்ற அநந்தரம், "என்னென்னில்" என்று ஶேஷம். ப்ரஹ்மசாரிகளுக்கு ஆயிரம்

வனே நம்முடைய அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுவான். இத்தலை இசையாதவன்றும் தான்விடமாட்டாத வாத்ஸல்யம். அவதாரணத்துக்குக் கருத்து - ஸமிதைபாதி ஸாவித்ரிபாதியன்றிக்கே தானே சென்று தலைக்கட்டவல்லனென்கிற ஸாதநநைரபேக்ஷ்யம் சொல்லுகையிலே நோக்கு. நாராயணத்வம் ஸர்வஸாதாரணமன்றோவென்னில்? - (நமக்கே) - "அத்தலையாலே பேறு" என்றிருக்கிற நமக்கு என்றபடி; அகிஞ்சநராய் அவன்கைபார்த்திருக்கிற நமக்கே என்றுமாம். (பறைதருவான்) - நாட்டுக்கு "பறை" என்று ஒரு வ்யாஜமாய், தங்களுக்கு அபிமதமான அடிமையாய்த்து நினைக்கிறது. இத்தை ஸாதித்துத் தருவார் ஆரென்னில்?—இவர்கள் தாங்களேயிறே: "இற்றைப்பறைகொள்வானன்றுகாண்" என்று மேலே சொன்னார்கள். (தருவான்) - ப்ராப்தியுண்டானாலும் அவன்தரக் கொள்ளவேணு மென்னுமிடம் தோற்றுகிறது.

(பாரோர்புகழ) - க்ருஷ்ணனையும் நம்மையும் சேரவொட்டாதவர்கள் தாங்களே கொண்டாடும்படி. க்ருஷ்ணன் வேண்டும் உபகரணங்கள் கொடுக்க, பெண்கள் நோன்பிலே உபக்ரமித்தார்கள். நாடு அட

---

ஸமிதையும் ஆயிரம் ஸாவித்ரியுமாகக் கூட்டி ஒருப்ரத்யவாயபரிஹாராதியாகப் பலத்தையுண்டாக்குமா போலே யன்றிக்கே நிரபேக்ஷனாகவே பலத்தைக் கொடுக்குமென்று அருளிச்செய்கிறார் (ஸமிதை இத்யாதி.) "நமக்கே" என்று நிரபேக்ஷனாகப் பலங்கொடுக்குமென்று நிஶ்சயிக்கக் கூடுமோ? நாராயணத்வம் ஸர்வஸாதாரணமன்றோ? என்னும் ஶங்கையை அநுவதிக்கிறார் (நாராயணத்வம் இத்யாதி.) அவனாலேதானே பேறு, வேறு ரக்ஷகராலே யல்ல வென்று அநந்யகதிகளாயிருக்கும் நமக்கே என்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, ப்ரஸ்துதஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் (அத்தலைஇத்யாதி.) உபாயாந்தரஶூந்யமென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றிப் பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (அகிஞ்சநர் இத்யாதி.) யத்வா, ஶக்தியுண்டாயிருக்க ஸ்வரூபவிருத்தமென்று உபாயாந்தரஶூந்யரான நமக்கே என்று - (அத்தலையாலே, என்ற வாக்யத்துக்குக் கருத்து. ஶக்தியின்றிக்கே அவன்கை பார்த்திருக்கிற நமக்கே என்று இரண்டாம்வாக்யத்துக்குத் தாத்பர்ய மென்றுமாம். "பறை" என்ற ஶப்தம் வாத்யவிஶேஷவாசகமாயிருக்க, அடிமையைச் சொல்லுமென்னும் இவ்வர்த்தத்துக்கு ஸாதகம் ஏதென்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் (இற்றைஇத்யாதி.) நாராயணன்பக்கல் நாமே பறைகொள்ளுவோ மென்னாதே, "தருவான்" என்று தததீநமாகச் சொல்லுகையாலே தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (ப்ராப்திஇத்யாதி.)

பாருக்கெல்லாம்அநாவ்ருஷ்டியில்லாமையாலே வர்ஷித்தால் பாரெல்லாங் கொண்டாட ப்ரஸக்தியில்லாமையாலும், சேரவொட்டாதவர்கள் புகழ்கையே இவர்களுக்குப் பரமோத்தேஶ்யமாயிருக்கையாலும் "பாரோர்" என்றதுக்கு-

ங்க, அநாவ்ருஷ்டி தீர்ந்து ஸம்ருத்தமாய்த்தது என்று கொண்டாடும்படி. (படிந்து)-இந்நோன்பிலே அவகாஹித்து, "நீராடப்போதுவீர்! போதுமினோ" என்று அந்வயம். (ஏல், ஓர்) - பாதத்தைப் பூரித்துக் கிடக்கிறது. (எம்பாவாய்) - எங்கள் நோன்பு என்னுதல்; எங்கள் சந்தஸ் என்னுதல். (க)

---

கோபவ்ருத்தர்பரமாக அர்த்தம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனையும் இத்யாதி.) "படிந்து" என்றதுக்கு அர்த்தம்அருளிச்செய்துகொண்டு அந்வயங்காட்டுகிறார் (இந்நோன்பிலே இத்யாதி.)

"திங்கள் - மார்கழி, நாள்-மதிநிறைந்தநாள், ஆல்-ஆஶ்சர்யம்; பாரோர் புகழப் படிந்து - நீராடப்போதுவீர் போதுமினோ, நேரிழையீரான சீர்மல்கு மாய்ப்பாடிச்செல்வச்சிறுமீர்காளித்யாதி, நாராயணனே நமக்கே, எம்பாவாய்- எங்கள் நோன்பைப் பின்சென்று, [எங்கள்] வார்த்தையைப் பின்சென்று, பறை தருவான்" என்று ப்ராதாந்யேந காலத்தைக்கொண்டாடுகிற பக்ஷத்திலே அந்வயம்: சிறுமீர்காள் என்னுமளவும் ப்ராப்யஸங்க்ரஹமென்ற பக்ஷத்தில், நேரிழையீரானசெல்வச்சிறுமீர்காள்! திங்கள் - மார்கழி, நாள்-மதிநிறைந்தநாள், ஆல், பாரோர் புகழப் படிந்து - நீராடப்போதுவீர் போதுமினோ, கூர்வேல் இத்யாதி, நாராயணனே நமக்கு - எம்பாவாய் - பறைதருவான்" என்று அந்வயம். இப்பக்ஷத்வயத்திலும் "ஏல், ஓர்" என்றது - நிரர்த்தகாவ்யயம். சந்தஸ் என்றது - உபலக்ஷணயா வார்த்தை என்றபடி.

வ்யாக்யாநாந்தரங்களில் நிர்வஹிக்கும் ப்ரகாரம்—(ஏல்) என்றது-இப்படியாகில் என்றபடி, (ஏல்) என்று - ஸம்போதநமாகவுமாம். (ஓர்) - புத்திபண்ணுங்கோளென்னுதல்; புத்திபண்ணென்னுதல். எம்பாவாய் - எங்கள் சந்தாநுவ்ருத்தி பண்ணியென்னுதல்; * தையொருதிங்களில் காமஸமாஶ்ரயணம் பண்ணுகையாலே, பாவையென்று - அவனகமுடையாளான ரதியைச்சொல்லுதல். "பாவாய்" என்றதுக்கு - சந்தாநுவ்ருத்தி அர்த்தமான போது, 'போதுமினோ, ஏல் - இப்படியாகில், நாராயணனே! எம்பாவாய் - நமக்கே பறைதருவான், இத்தை ஒருங்கோள் - விசாரித்துக்கொள்ளுங்கோள்' என்று அந்வயம். ரதிபரமானபோது, "ஏல் - பாவாய் - ஓர்" என்று அந்வயம். அங்ஙனுமன்றிக்கே, "ஏல், ஓர், எம்பாவாய்" என்ற பதங்களெல்லாம் பாதபூரணமென்று நிர்வஹித்த கட்டளை அநுஸந்திப்பது. ... ... ... (க)

---

ஶ்ரீஸத்வம் தொட்டாசார்யர் அருளிச்செய்த

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அவதாரிகை.—இப்பாட்டில் - அதிகாரி ஸ்வரூபத்தையும், உபாய ஸ்வரூபத்தையும், உபேய ஸ்வரூபத்தையும் ஸங்க்ரஹித்து, இந்நோன்புக்குக் காலம் நேர்பட்டபடியைக் கொண்டாடுகிறார்கள்.

வ்யாக்யாநம்.—(மார்கழி இத்யாதி) - ஸத்வோத்தரமான காலத்திலே ஸதாசார்யப்ரஸாத மடியாக ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநம் பரிபூர்ணமாய், இச்சேதநன் பகவத்விஷயீகார பாத்ர பூதமான திவஸத்திலே தங்களுக்குப் பகவத்கைங்கர்யத்தில் ருசிபிறந்த இன்று மங்களகார்யம் செய்யுமவர்களுக்குத் தேட்டமான காலம் தன்னடையே நேர்பட்டபடியைக் கண்டு ஆஶ்சர்யப்படுகிறார்கள்.

(நீராடப்போதுவீர்) - பகவத்கைங்கர்யம் பண்ணப் போருகையிலே ருசியையுடையவர்களாய்; (நேரிழையீர்)-இதுக்குத் தகுதியான ஜ்ஞாந பக்தி வைராக்யங்களை யுடையாராய்; (சீர்மல்கும் இத்யாதி) - எம்பெருமானுடைய க்ருபா க்ஷமாதி கல்யாண குணங்கள் தந்தம் விஷயங்களிலே சேர்ந்து பொங்கி, பரமபதத்தளவும் சென்று அலையெறியும்படி அபிவ்ருத்தமாகாநின்றுள்ளதாய், ஜ்ஞாந ஜந்மாக்கள் ஸாதரமாக வர்த்தியாநின்றுள்ள ஊரிலே பகவத்ஸம்பந்தமுடையாராய், ததநுபவபரிகரமான அபிநிவேஶாதிஶயத்தை யுடையாராய் அநந்யார்ஹரானவர்கள்; (நீராட - போதுமினோ) - பகவத்கைங்கர்யம் பண்ண வாருங்கோள். "ஆயர்" என்னுங்காட்டில் ஜ்ஞாநஜந்மாக்களைக் காட்டுமோ? என்னில்;—லோகத்தில் ஆயர் பகவதேகபரரா யிருக்குமாபோலே ஜ்ஞாநஜந்ம முடையவர்களும் பகவதேகபரராகையாலே த்ருஷ்டாந்தவிதையாகக் காட்டும்.

"சிறுமீர்காள்" என்று - ஸ்த்ரீத்வேந நிர்த்தேஶம், அநந்யார்ஹத்வ த்யோதநார்த்தம். †ஶரீரஜந்மமான ஆயருக்கு ப்ராக்ருதிஸம்பந்தத்தாலே அந்யபரதை யுண்டாகைக்கு யோக்யதை உண்டு; ஆகையாலே, உபாயாந்தரஸம்ஸர்க்க யோக்யதாகந்த ரஹிதமான விலக்ஷணஜந்மம் ஜ்ஞாநஜந்மமேயா மித்தனையல்லது அத்ரைவர்ணிக ஜந்மமன்று; அந்தஜந்மந்தன்னிலும் சிலரை உபாயாந்தரபரராகவும் உபேயாந்தரபரராகவும் தேவதாந்தரபரராகவும் காணாநின்றோமிறே; ஜ்ஞாநஜந்மந்தன்னில் அப்படி காண விரகில்லையிறே. ஆகையால், நம்ஆசார்யர்கள், உத்க்ருஷ்ட ஜந்ம மென்கிறது - ஜ்ஞாநஜந்மமே என்று கொள்ளவேணும்.

இப்படி நாம் கனக்கப்பாரித்துக்கொண்டுபோங்காட்டில் நமக்கு அப்புருஷார்த்தம் ஸித்திக்குமோ? என்ன, (கூர்வேல்இத்யாதி)-கூரியதாய் ஸர்வாநிஷ்ட நிவர்த்தகமான மங்களாஶாஸநத்தை யுடையராய், அல்பாமங்களஸம்பாவநையிலும் அதிஶயித மங்களாஶாஸநபரராய்,

† "ஶரீரஜந்மாக்களான" என்று சில ஸ்ரீகோஶங்கள்.

பகவல்லாபத்தாலே களித்து, பகவத் விஷயத்தை அசலறியாதபடி ரக்ஷித்துக்கொண்டு போருகிற ஆசார்ய விஷயத்தில் தன்னுடைய நியாம்யதை தோற்றும்படி இருக்குமவனாய்.

“கண்” என்று - ஜ்ஞாநமாய், அதுக்கு அழகாவது - வஸ்துவை உள்ளபடி க்ரஹிக்கையாய், அத்தாலே - பூர்ணமான ஜ்ஞாநத்துக்கு ப்ரகாஶகமாய்த் தன்னை அநுஸந்திப்பார்க்கு ஆபிஜாத்யாதி ஸகலாதிஶயப்ரதமான திருமந்த்ரத்திலே தன்னுடைய ஸகலகாரணத்வாத்யதிஶயங்களெல்லாம் ப்ரகாஶிக்குமவனாய். [“மந்த்ரோ மாதா”] “குரு: பிதா” என்னக்கடவதிறே. இம்மந்த்ரந்தானும் ஸமஸ்த கல்யாண குணாத்மகனை எம்பெருமானைத் தன்னுடைய கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு எல்லாரும் அறியலாம்படி ப்ரகாஶிப்பிக்கையாலே, இம்மந்த்ரத்தை “மாதா” என்னக் குறையில்லை. ஆஶ்ரித ஸகல தாப நிவர்த்தகமாய், பரமோதாரமான திருமேனியை யுடையனாய்: இத்தால் - உபாயக்ருத்யஞ் சொல்லுகிறது. அன்றிக்கே, “கார் மேனி” என்று மேகம்போலே தர்ஶநீயமான திருமேனியையுடையவனென்று அழகைச் சொல்லுகையாலே, உபேயத்வம் சொல்லிற்றாகவுமாம். அத்திருமேனிக்குப் பரபாகஶோபாவஹமாய், அகவாயில் வாத்ஸல்ய ப்ரகாஶகமாயும் பாத்வப்ரகாஶகமாயு மிருந்துள்ள சிவந்த திருக்கண்மலர்களையுடையனாய். “கார்மேனி” என்கையாலே ஸௌலப்ய ஸௌஶீல்யங்களும், “செங்கண்” என்கையாலே - வாத்ஸல்ய ஸ்வாமித்வங்களும் தோற்றுகையாலே, ஆஶ்ரயண ஸௌகர்யாபாதக குணசதுஷ்டயமும் சொல்லிற்றாய்த்து.

(கதிர்மதியம் இத்யாதி) - ஸூர்யகிரணங்களையுடைய மதியம் போலேயிருக்கிற திருமுகமண்டலத்தை யுடையனாய். இத்தால் - அநுகூலர்க்கு அணுகலாம்படி யிருக்கையும் ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணாதபடி யிருக்கையும் தோற்றுகையாலே, அநபிபவநீயத்வம் ஶக்திகார்யமாகையாலே ஆஶ்ரிதகார்யாபாதக குணசதுஷ்டயமும் சொல்லிற்றாய்த்து. இப்படி ஆசார்யபவ்யத்வாதி குணங்களையும், வாத்ஸல்யாதி குணங்களையும், ஜ்ஞாநஶக்த்யாதி குணங்களையு முடையனான நாராயணனே. (நமக்கே)-ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக அவனாலே புருஷார்த்தமென்றிருக்கிற நமக்கே. ‘நமக்கே’ என்கிறவிடத்தில் ஏவகாரத்தாலே உபாயாந்தரங்களையும் தன்னையும் உபாயமாகப்பற்றினவர்களுக்கு ஈஶ்வரன் கர்மாநுகுணமாக பலங்கொடுப்பானத்தனையல்லது க்ருபாநுகுணமாக பலங்கொடானென்னுமிடம் தோற்றுகிறது,

(பறைதருவான் இத்யாதி) - புருஷார்த்தத்தைக்கொடுப்பான். ஆகையாலே, பூமிப்பரப்பிலுள்ள லௌகிக வைதிகபரமவைதிகரெல்லாரும்கொண்டாடும்படி இந்நோன்பிலே அவகாஹித்து நீராடப் போதுமினோ என்று அந்வயம். காமநாதிகாரிகளுக்கு ஸாதநமாயும், நிஷ்காமருக்கு நித்யமாயும், பகவத்ப்ரபந்நர்க்குக் கைங்கர்யமாயும் போருகிற இந்நோன்பிலே பகவதநுபவைகாந்தம் என்று அத்யவஸித்து, ஶ்ரத்தாபூர்வகமாக யதாவிதாநம் அநுஷ்டித்தால், லௌகிக வைதிக பரமவைதிகர்களுடைய கொண்டாட்டம் தன்னடையே ஸித்திக்குமிறே. ["యత్రాష్టాక్షరసంసిద్ధో మహాభాగో మహీయతే"] "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே" என்னக்கடவதிறே.

இப்பாட்டில், ["ఏవం బ్రహ్మ ప్రవిష్టోఽస్మి గ్రీష్మే శీతమివ హ్రదమ్"] "ஏவம் ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரதம்" என்கிறபடியே க்ரீஷ்மகாலத்தில் ஸூர்யகிரண தப்தனானவன் தன் தாப மாறும்படி குளிர்ந்த மடுவிலே நாமரூபவிபாகாநர்ஹனும்படி ப்ரவேஶிக்குமா போலே, ஸம்ஸாரதாபார்த்தனான நான் அந்தத்தாபமாறும்படி ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனை அவனையொழிய ப்ருதக்ஸ்தித்யுபலப்தி யில்லாதபடி ப்ரவேஶித்து ஸ்வஸத்தையை லபித்தேன் என்று ப்ரம்ஹாநுபவத்துக்கு நீராட்டத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே, "நீராட" என்று - ப்ராப்யத்தை ஸங்க்ரஹித்தார்கள். "நீராடப்போதுவீர்" என்று - இப்புருஷார்த்தத்துக்கு இதில் இச்சையையுடையவர்களே அதிகாரிகள் என்று அதிகாரியை ஸங்க்ரஹித்தார்கள். "நாராயணனே" என்று - ப்ராபகத்தை ஸங்க்ரஹித்தார்கள். "நமக்கே" என்று - உபாய அதிகாரிகளை ஸங்க்ரஹித்தார்கள். இத்தால் - உபாயாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக அவனையே உபாயமாகப் பற்றுகை அதிகாரமென்றதாய்த்து ... (க)

---

அவதாரிகை.—இரண்டாம் பாட்டு, க்ருத்யாக்ருத்யவிவேகம் பண்ணுகிறது. இதரவிஷயங்களில் விடப்படுமவை விடவும் அரிதா

(வையத்து) ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (க்ருத்யேத்யாதி.) க்ருத்யமாவது - * பரமனடிபாடுகை முதலானவை; அக்ருத்யமாவது - "நெய்யுண்ணோம்" இத்யாதியிற் சொல்லுகிற போக்யாந்தராந்வயம் முதலானவை. க்ருத்யாக்ருத்யவிவேகம் பண்ணுகை அரிதன்றோ? என்னும் ஶங்கையில் இதரவிஷயங்கள் போக்யங்களாகையாலே அங்கே அரிதாமித்தனைபோக்கி, பரமபோக்யமான பகவத்விஷயத்தைப் பற்றியிருக்குமவனுக்குப் பற்றுகையும் விடுகையும் ஸுகரமென்று உபபாதிக்கிறார் (இத

யிருக்கும்; பற்றப்படுமவை பற்றவும் அரிதாயிருக்கும். அதுக்கு அடி - இவனுடைய கர்மாநுகுணமாக நன்றாயும் தீதாயும் தோற்றுகிற இத்தனை போக்கி, ஸ்வதஃ விஷயத்தைப்பற்றி வருவதொரு நன்மையும் தீமையு மில்லை. எங்ஙனேயென்னில்?—ஒருநாள் ஒருவன் ஒன்றையாதரித்து, அவன்தானே, பின்பு சிலநாள் சென்றவாறே அதுதன்னையே உபேக்ஷியாநின்றான்; முன்பு உபேக்ஷித்ததுதன்னையே பின்பு ஒரு நாளிலே ஆதரிப்பதும் செய்யாநின்றான்; ஆகையால், இவனுடைய கர்மமடியாக நன்றாயும் தீதாயும் தோற்றுகிற இத்தனை போக்கி, விஷயத்தைப்பற்ற வரில் என்றும் ஒருபடிப்பட்டிருக்கவேணும்; அது இல்லாமையால் புறம்புள்ளவை விடவும் அரிது, பற்றவும் அரிது; விடுகிறவற்றுக்கும் பற்றுகிறவற்றுக்கும் வாசிதெரிவிக்க அரிதாகையாலே. இங்ஙனன்றியே, அல்பமுமாய் அஸ்திரமுமாய் ஹேயமுமாயிருக்கிற விஷயங்களை விட்டு ஸமஸ்தகல்யாண குணாத்மகனைப் பற்றுகையாலே, விடுகையும் பற்றுகையும் இரண்டும் எளிதாயிருக்கும்.

கீழிற்பாட்டில் - ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராபகஸ்வரூபத்தையும் அதிகாரிஸ்வரூபத்தையும் சொல்லிற்று; இதில் - அந்த அதிகாரிக்கு ஸம்பாவித ஸ்வபாவங்களைச் சொல்லுகிறது.

உ.—வையத்துவாழ்வீர்காள் நாமும்நம்பாவைக்குச்
செய்யுங்கிரிசைகள்கேளீரோ பாற்கடலுள்
பையத்துயின்றபரமனடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலேநீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டுநாமுடியோம்
செய்யாதனசெய்யோம் தீக்குறளைச்சென்றோதோம்
ஐயமும்பிச்சையுமாந்தனையுங்கைகாட்டி
உய்யுமாறெண்ணியுகந்தேலோரெம்பாவாய்.

---

ரேத்யாதி.) அது இல்லாமையால் - விடுகிறவற்றுக்கும் பற்றுகிறவற்றுக்கும் வாசிதெரிவிக்க அரிதாகையாலே - புறம்புள்ளவை விடவும் அரிது பற்றவும் அரிதுஎன்று அந்வயித்துக்கொள்வது. தெரிவிக்க என்றது-தெரிய என்றபடி.

இவ்வதிகாரிக்கு இச்சைக்குமேற்பட க்ருத்யாக்ருத்யங்களுண்டோ? என்ன, அருளிச்செய்கிறார் (கீழிற்பாட்டில் இத்யாதி.) (அதிகாரிஸ்வரூபத்தையும் சொல்லிற்று) என்று இங்கே கூட்டுகையாலே, முதற்பாட்டில் (ப்ராப்யப்ராபகஸங்க்ரஹம்) என்றது இதுக்கும் உபலக்ஷணமென்று கண்டுகொள்வது. இவ்வதிகாரிக்கு அவன்குணங்களை அநுஸந்தித்தால் அடிபாடுகை முதலானவையெல்லாம் அவர்ஜ்ஜநீயங்களாய் வரும் என்று - (ஸம்பாவிதஸ்வபாவங்களை) என்றதுக்குக் கருத்து.

பதவுரை.—வையத்து - பூமியில், வாழ்வீர்காள் - வாழப்பிறந்தவர்களே! பாற்கடலுள் - திருப்பாற்கடலில், பைய - மெள்ள, துயின்ற - கண்வளர்ந்தருளுகிற, பரமன் - ஸர்வஸ்மாத்பரனுடைய, அடி - திருவடிகளை, பாடி - (ப்ரீதிப்ரேரிதைகளாய்ப்) பாடி, (அவன் வருமளவும்),—நாம் - நாங்கள், நெய் உண்ணோம் - நெய்புஜியாதவர்களாயும், பால் உண்ணோம் - பால்அமுது செய்யாதவர்களாயும், (உபவாஸக்ருஶைகளாய்), நாட்காலே - விடியற்காலத்தில், நீராடி - ஸ்நாநஞ்செய்து, மை இட்டு எழுதோம் - (கண்களை) அஞ்ஜநங்கொண்டு அலங்கரியாதவர்களாய்,—மலர் இட்டு - (நல்லவாஸனையுள்ள) பூக்களைக்கொண்டு, முடியோம் - குழலில் தரியாதவர்களாய்,—செய்யாதன - (முன்னோர்கள்) அநுஷ்டியாதவற்றை, செய்யோம் - செய்யாதவர்களாய்,—தீ-அநர்த்தத்தைவிளைக்கத்தக்க, குறளை-பொய்யானவார்த்தைகளை, சென்று - ஒருவரிடம்போய், ஓதோம் - சொல்லாதவர்களாய்,—ஐயமும் - யோக்யவிஷயத்திற் கொடுக்கும் பொருளையும், பிச்சையும் - (ப்ரம்ஹசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் கொடுக்கும்) பிக்ஷையையும், ஆம்தனையும் - இனி அர்த்திகளில்லையென்னுமளவும், கைகாட்டி - கொடுத்து, (இப்படிகளாலே), உய்யும் ஆறு - உஜ்ஜீவிக்கும்வழியை, எண்ணி - மநோரதித்து, உகந்து - ஸந்துஷ்டசித்தராய்க்கொண்டு,—நாமும் - ("அவனாலே பேறு" என்று இருக்கும்) நாங்களும், நம் பாவைக்கு - நம்முடைய நோன்புக்கு, செய்யும் - பண்ணுகிற, கிரிசைகள் - க்ருத்யங்களை, கேளீர்-கேளுங்கோள் என்கிறார்கள் என்பதாம்.

ஏல், ஓர், எம்பாவாய்—அசைகள்.

வ்யாக்யாநம்.—(வையத்துவாழ்வீர்காள்) - ஸர்வேஶ்வரன் திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனாய்வந்து திருவவதரித்துத் தன்னைத்தாழவிட்டுப் பரிமாறுகிறகாலத்திலே வாழப்பிறந்த பாக்யவதிகாள்! இங்குத்தை வாழ்ச்சிக்குப் பரமபதமும் ஸத்ருஶமன்று. அங்கு மேன்மைகாணலாமித்தனை போக்கி, நீர்மைகண்டு அநுபவிக்கலாம்படி யிருப்பது இங்கேயிறே. அங்கு, போக்தாக்கள் அஸங்குசிதராயிருப்பர்கள்; இங்கு போக்யம் அஸங்குசிதமாயிருக்கும். * தயநீயருண்டான இடத்திலேயிறே தயாதிகுணங்கள் அநுபவிக்கலாவது; அங்கு விஷய

---

(இரண்டாம்பாட்டு.) வையத்திலே - திருவாய்ப்பாடியிலே, வாழ்வையுடையவர்களேயென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, அர்த்தஸித்தமான ஹேதுக்களைக் கூட்டித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரன் இத்யாதி.) "வாழ்வீர்காள்!" என்றவிடம் - பெண்களை ஸம்போதிக்கும்போது க்ருஷ்ணனவதரித்ததேஶத்தில் வாழ்ச்சிஇதுவென்று ஸித்தமாயிருக்க, "வையத்து" என்று விஶேஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (இங்குத்தை இத்யாதி;) பரமபதத்தில் வாழ்ச்சியிலும் வையத்துவாழ்ச்சி விஞ்சினது என்று தோற்றுகைக்காக "வையத்து" என்று விஶேஷித்ததென்று கருத்து. விஞ்சினமையை உபபாதிக்கிறார் (தயநீயர் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) இவ்விடத்தில் வாழ்ச்சி விஞ்சியிருக்குமென்றதுக்கு நியாமகங்களைப் பலபடியாகக்

மில்லாமையாலே தயாதிகுணங்கள் ப்ராகாஶிக்கப்பெறுதே: அக்குறை தீருகைக்காகவிறே நித்யஸூரிகள் இங்கேவந்து அநுபவிக்கிறது. அவதாரத்தில் நீர்மையிலே அகப்பட்டார்க்கும் மற்றேரிடம் பெருத படியாயிருக்கும். ‘[“[illegible]”] “ஹாவொநாந்யத்ர ஹச்சதி” (௩௨) என்றுனிறே திருவடி. “அச்சுவைபெறினும் வேண்டேன்” என்றாரு முண்டிறே. “கண்டகண்கள் மற்றொன்றினைக் காணு வே” என்றாரிறே. அதவா, மருபூமியில் தண்ணீர்போலே ✻ இருள் தருமாஞாலமான ஸம்ஸாரத்திலே யிருந்துவைத்து க்ருஷ்ணநுபவம் பண்ணி வாழப்பிறந்தீர்கா ளென்றுமாம். (வாழ்வீர்காள்) - அவ்வூர் தன்னில் பிறந்துவைத்துப் பருவம்நிரம்பியிருக்கையன்றிக்கே, அவ னுடைய கடாக்ஷத்துக்கு இலக்காம்படி ஒத்தபருவமா யிருக்கை. க்ருஷ்ணவதாரத்துக்கு முன்னுதல் பின்னுதலன்றிக்கே ஸமகாலத்தி லே பிறக்கப்பெறுவதாம்; அதுதன்னிலும் இவ்வூரையொழிந்தவிடத் தேயன்றியே இவ்வூரிலே பிறக்கப்பெறுவதாம்; அதுதன்னிலும் அவனேடொத்த பருவமாகப் பெறுவதாம்; இது ஒருபாக்யாதிஶயம் இருக்கும்படி யென்! (வாழ்வீர்காள்) - அவ்வூரில் வர்த்தநமென்றும் வாழ்ச்சியென்றும் இரண்டில்லைகாணும். அவன் நித்யவாஸம் பண் ணுமிடத்தில் வர்த்தநமே வாழ்ச்சியாயிருக்குமிறே. “வேங்கடத் தைப்பதியாக வாழ்வீர்காள்” என்னக்கடவதிறே; இது கோயிலில் வர்த்தநம்போலே காணும். சொல்லுகிற தங்களுக்கும் வாழ்ச்சி ஒத் திருக்க “வாழ்வீர்காள்” என்று பிறரைச் சொல்லுகிறதென் னென் னில்?—தாங்கள் தனியே அநுபவிக்கும் அநுபவம் ரஸாநுபவமாய்த்

---

காட்டுகிறுர் (அக்குறை இத்யாதி.) நீர்மையிலே என்றது - தயாதிகுணங்களுக் கும் உபலக்ஷணம். ஆதி ஶப்தத்தாலே விவக்ஷித்த குணத்தை அருளிச்செய் கிறுர் (ஹாவ இத்யாதி;) [“[illegible]”] “ஹக்திஶ்ச நியதா வீர” என்று னிறே என்று கருத்து. வையத்துக்கு உண்டான பகவதநுபவ விரோ தித்வத்தைத் திருவுள்ளம்பற்றி, “வையத்து” என்று விஶேஷித்ததுக் குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறுர் (அதவா இத்யாதி.) “வையத்திலுள் ளீர்” என்னுதே ‘வாழ்வீர்’ என்கைக்குத் தாத்பர்யத்தை “சிறுமீர்காள்” என்றதுக்கு அநுகுணமாக அருளிச்செய்கிறுர் (அவ்வூர்இத்யாதி.) உக்தார்த் தங்களை வ்யாவ்ருத்திபூர்வகம் அநுஸந்தியாநின்றுகொண்டு வ்யாக்யாதா ஈடு படுகிறுர் (க்ருஷ்ணவதாரத்துக்குஇத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) ஒத்த பருவமாய்ப் பிறந்தவன் போகத்துக்கு இலக்காமளவும் வேண்டாவிறே, அவன்பிறந்த ஊரிலிருப்பே வாழ்ச்சியென்ன அமையுமென்று விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறுர் (அவ்வூரில்இத்யாதி வாக்யசதுஷ்டயத் தாலே.)

தோற்றுமையாலே, அத்தை ரஸமாக்கித் தருமவர்களைக் கொண்டாடுகிறார்கள்.

(நாமும்) - "அத்தலையாலே பேறு" என்று இருக்கிற நாமும். அவனாலே பேறாகிலும் ருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாதிறே; இந்தப்பலம் ஒருநாள்வரையிலே கைவந்ததாகவற்றே! என்று இருக்கிற நாமும் என்னவுமாம். (நம்பாவைக்கு) - நம்முடைய நோன்புக்கு. அவனையும் அவனுடையாரையும் அழிக்கைக்குப் பண்ணும் இந்த்ரஜித் ப்ரப்ருதிகளுடைய யாகம்போலன்றியே, ததீயரும் அவனும் வாழுகைக்குப் பண்ணும் யாகம்; ப்ரயோஜநாந்தரபரமான நோன்பன்றியே, க்ருஷ்ணனும் க்ருஷ்ணவிபூதியும் உண்டாகைக்குப் பண்ணுகிற நோன்பு.

(செய்யுங்கிரிசைகள்) - பண்ணக்கடவ க்ருத்யங்கள். சேதநனுகையாலே, ப்ராப்யஸித்தியளவும் காலக்ஷேபத்துக்காக இழிந்து அநுபவிக்கக்கடவ அநுஷ்டாநமென்றபடி. ஆரம்பித்துத் தவிருமவையல்ல; பத்தும் பத்தாகச் செய்து அறவேணும்; மடல்போலக்காட்டிவிடுமதல்ல. (கேளீரோ)—"'பெண்கள்கிடாய், க்ருஷ்ணன்கிடாய்' என்று நிஷேதிக்கிற ஊரிலே இங்ஙனே ஒருசேர்த்தி யுண்டாவதே! பகவத்

"நாமும்" என்றதுக்கு இரண்டு அர்த்தம் - "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று உபாயாத்யவஸாயத்தை யுடைத்தான நாமும் என்றும், உபேயத்வராவிஶிஷ்டர் என்றும்; முந்தினது (அத்தலையாலே இத்யாதி.) இரண்டாவது (அவனாலேஇத்யாதி வாக்யத்வயம்.) "பாவைக்கு" என்னஅமைந்திருக்க, "நம்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவனையும்இத்யாதி.) ப்ரப்ருதிகளென்றது - பௌண்ட்ரக வாஸுதேவாதிகளைச் சொல்லுகிறது. அவனிறே க்ருஷ்ணனையும் த்வாரகையையும் நலிகைக்காக யாகம்பண்ணி க்ருத்யையைப் பிறப்பித்தான். கீழே "நம்" என்றதுக்கு - பகவத்விரோதி வ்யாவ்ருத்திபரமாக ஒருயோஜனை அருளிச்செய்து,ப்ரயோஜநாந்தரபர வ்யாவ்ருத்திபரமாகத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரயோஜநேத்யாதி.) உண்டாகையாவது - பெண்களையும் அவனையும் எழுப்பிக் கூட்டிப் பேரோலக்கத்திலே யிருத்திக்காண்கை. ஸித்தஸாதந நிஷ்டனுக்குக் கர்த்தவ்யமுண்டோவென்ன, அருளிச்செய்கிறார் (சேதநனுகையாலேஇத்யாதி.) காலக்ஷேபார்த்தமாகச் செய்கிற க்ரியைகளென்று கீழ்அருளிச்செய்து, "செய்யும்" என்றதுக்கு - அவஶ்யம் செய்யத்தக்கதென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆரம்பித்து இத்யாதி வாக்யத்ரயத்தாலே.)

"வாழ்வீர்காள்!" என்று ஸம்போதித்து, "செய்யும் கிரிசைகள்" என்ன அமைந்திருக்க, "கேளீரோ" என்றதுக்குக் கருத்து அருளிச்செய்கிறார் (பெண்கள் கிடாய் இத்யாதி;) "க்ருஷ்ணனோட்டைச் சேர்த்தி தங்

விமுகர் கோலாஹலத்திலே க்ருஷ்ணாநுபவத்துக்கு இத்தனைபேருண்டாவதே!” என்று அவர்கள் இந்த லாபாநுஸந்தாநத்தாலே ஸ்தப்தைகளாயிருக்கையாலே “கேளீரோ” என்கிறார்கள். மேய்ச்சல் தலையிலே அசையிடுவாருண்டோ? இந்த நாலுநாளும் போனால் நம்மை ஒருவரையொருவர் சேரவொட்டுவர்களோ? (கேளீரோ) - [“సంశ్రవే మధురం వాక్యమ్”] “ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம்” (௧௩) என்னும்படியே ஶ்ரவணந்தானே ப்ரயோஜநமாயிருக்கிறபடி. [“పురుషార్థోయమేవైకో యత్కథాశ్రవణం హరేః”] “புருஷார்த்தோயமேவைகோ யத்கதாஶ்ரவணம் ஹரே:” (௧௪) என்றுனிறே. சொல்லுகிறவர்கள்தான், ஆசார்யபதம் நிர்வஹிக்கைக்காகச் சொல்லுகிறார்களல்லர்; கேட்கிறவர்கள், தங்களுக்கு அஜ்ஞாதமாய்க் கேட்கிறவர்களல்லர்; [“బోధయన్తః పరస్పరమ్”] “போதயந்த: பரஸ்பரம்” (௧௫) என்று இங்ஙனேயல்லது போதுபோகாமலிருந்தபடி.

‘எங்களுக்கு ஏதானால் நல்லது, ஆகில் சொல்லலாகாதோ?’ என்ன? மேல்சொல்லுகிறார்கள்: (பாற்கடலுள் பையத்துயின்ற). பரம

---

களுக்கு உண்டாவதே!” என்றும் “க்ருஷ்ணாநுபவத்துக்கு இத்தனைபேர் துணையுண்டாவதே!” என்றும் பரவசைகளாயிருக்கையாலே, கேளீரோ என்கிறார்களென்று கருத்து. “கேளீரோ” என்றதுக்கு ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிறார் (மேய்ச்சல்தலையிலே இத்யாதி.) மேய்ச்சல் தலை யென்றது - க்ருஷ்ணஸம்ஶ்லேஷம் பண்ணுங் காலம். ஆசையுடனே ஸ்தப்தைகளாயிருக்க, “கேளீரோ” என்கிறதென்று கீழ் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, அங்ஙனன்றிக்கே பரமனடிபாடுகை முதலானவை தங்களுக்கு ரஸ்யமாகையாலே ‘கேளீரோ’ என்கிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்ரவ இத்யாதி.) ஸம்வாதாந்தரம் அருளிச்செய்கிறார் (புருஷார்த்த இத்யாதி;) அதாவது - மஹாபாரதத்திலே ஸபாதலக்ஷக்ரந்தத்தாலும் தர்மார்த்த காம மோக்ஷங்களைச் சொல்லி, அவற்றில் எது புருஷார்த்தமென்றிருந்தாய்? என்று வைசம்பாயநபகவான் தன்ஶிஷ்யனான ஜநமேஜயனைக் கேட்க, “நீ பகவத்குணங்களைச் சொல்ல நான் கேட்கை இது ஒன்றுமே புருஷார்த்தமாக நினைத்திருந்தேன்” என்றானென்கை. பகவத்குணஜ்ஞராயிருப்பவர்களை அஜ்ஞர்க்கு உபதேஶிக்கிறாப்போலே “கேளீரோ” என்று உபதேஶிக்கக்கூடுமோ? என்ன, காலக்ஷேபத்துக்கு உடலாக “கேளீரோ” என்கிறதென்று மூன்றாந் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (சொல்லுகிறவர்கள்தான் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.)

மேலுக்கு அவதாரிகை (எங்களுக்குஏதானால் இத்யாதி;) ஏதானால் நல்லதோ அத்தையாகில் சொல்லுங்கோளென்றபடி. அன்றிக்கே, ஏதானாலும் நல்லதாகில் சொல்லலாகாதோ வென்று சகாரத்தை அத்யாஹரித்துக்கொண்டு யோஜிக்கவுமாம். “பரமனடிபாடி” என்ன அமைந்திருக்க, “பாற்கடலுள்

பதத்தில்நின்றும் ஆர்த்தரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலளவும் ஒரு பயண மெடுத்துவிட்டு ஜகத்ரக்ஷணசிந்தையிலே அவகாஹிதனாய் ஆர்த்தத்வனிக்குச் செவிகொடுத்துக்கொண்டு கிடக்கிறபடி. (பையத்துயின்ற) - "வெள்ளைவெள்ளத்தின்மே லொருபாம்பை மெத்தையாக விரித்து அதன்மேல் - கள்ளநித்திரைகொள்ளுகின்ற" என்னக்கடவதிறே. இவ்வுறக்கத்தின் உண்மை யறிந்தவர், "கள்ளம்" என்று வெளியிட்டாரிறே. (பையத் துயின்ற) - பிராட்டிமாரோட்டை போகத்துக்கு இடங்கொடாதே "ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகிறதோ ?" என்று அதிலே அவஹிதனாய்க்கொண்டு சாய்ந்தபடி. முதற்பாட்டில் - நாராயணத்வஞ்சொல்லி, இப்பாட்டில் - அங்குநின்றும் திருவவதாரார்த்தமாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தபடியைச் சொல்லுகிறது. (பரமன்) - தகட்டிலழுத்தினமாணிக்கம்போலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினபின்பு வடிவிற்பிறந்த புகரின்பெருமையைச் சொல்லுகிறது. அன்றியே, ஜகத்ரக்ஷணார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகையாலே குணத்தினேற்றத்தைச் சொல்லிற்றாகவுமாம். ஸர்வத்தாலும் அதிக னென்றபடி. (அடிபாடி) - அவனுடைய ஆதிக்யத்தி னெல்லையை அநுஸந்தித்தால், பின்னை தங்கள் தாழ்ச்சியினெல்லையிலே நிற்குமத்தனையிறே. ஔசித்யத்தாலும் போக்யதையாலும் க்ருஷ்ணன் திருவடிகளைப் பாடாதே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனைப் பாடுவா னென்னென்னில் ?— இரண்டிடமும் ஒருவனே யாகையால், "நோன்புநோற்கப்புக்கவர்கள் க்ருஷ்ணனைப் பாடாநின்றார்கள்" என்று சொல்லாமைக்காக ஒரு தைவத்தின்பேரைச் சொல்லிற்றாகச் சொல்லுகிறார்கள்.

(பாற்கடலுள் பையத்துயின்ற) - க்ருஷ்ணனை அநுபவிக்கப்புகுந்து க்ஷீராப்திநாதனைச் சொல்லுகிறது என்னென்னில் ?— "க்ருஷ்ணனைச்

---

பையத்துயின்ற" என்றதுக்கு பாவம் அருளிச்செய்கிறார் (பரமபதத்தில் இத்யாதி;) தாங்களும் ஆர்த்தைகளாகையாலே, ஆர்த்தரக்ஷணத்துக்கு உபயுக்தமான ஆகாரத்தை யிட்டுப் பாடுகிறார்க ளென்று விசேஷண மிட்டதென்று கருத்து.

"பைய" என்றதுக்கு - பராக்கில்லாமை அர்த்தமாய், அந்தப்பராக்குக்கு ப்ரஸக்தி அருளிச்செய்யாநின்றுகொண்டு, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிராட்டி இத்யாதி.) 'பரமனைப்பாடி' என்னாதே, "அடி" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதி.)

உத்தமஶங்கா பரிஹாரங்களை விவரியாநின்றுகொண்டு ப்ரமாணம் சொல்லுவாராக ப்ரதீகக்ரஹணம் பண்ணுகிறார் (பாற்கடல் இத்யாதி.) உத்தமநாயகி

சொல்லிப் பண்டே ஶங்கித்திருக்கிற இடையர், நமக்கு தைவம்தந்த இச்சேர்த்தியை அழிக்கிறார்களோ !" என்று பயப்பட்டு, க்ருஷ்ணனுக்கடியான க்ஷீராப்திநாதனைச் சொல்லுகிறார்கள். ["ఏష నారాయణశ్శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః । నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్"] "ஏஷ நாராயணஶ்ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: । நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" (௩௯) என்னக்கடவதிறே. (அடிபாடி) - மஹிஷிகளோடு அல்லாதாரோடு வாசியற ஶேஷத்வம் ஸமானமாயிருக்கையாலே, திருவடிகளைப்பாடி என்கிறார்கள். "பள்ளிகொள்ளு மிடத்தடிகொட்டிட" என்னக்கடவதிறே. அவனுடைய வடிவழகை ப்ரீதிப்ரேரிதைகளாய்க்கொண்டு பாடி.

(பாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்) - போக்யாந்தரங்களில் அந்வயியோம். உண்டார்க்கு உண்ணவேண்டாவிறே. இவர்கள் உண்டார்களோவென்னில் ?— ஓம். "உண்ணுநாள்பசியாவதொன்றில்லை-நமோநாராயணாவென்று - உன்பாதம் நண்ணாநாள் - அவை பட்டினிநாளே" என்றும், "எல்லாம் கண்ணன்" என்றும், "கூறைசோறிவை வேண்டுவதில்லை" என்றும், ["పాథేయం పుణ్డరీకాక్ష నామసఙ్కీర్తనామృతమ్"] "பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்" (௩௭) என்றும், ["వాసుదేవస్సర్వమ్"] "வாஸுதேவஸ்ஸர்வம்" (௩௮) என்றும், இப்படியேயிறே ஜ்ஞாநம்பிறந்தால் இருப்பது. "குடியோம்" என்னாதே, "உண்ணோம்" என்பானென் ? என்னில் ;—"உண்ண"

---

களாயிருக்குமவர்கள் தங்கள் போக்யதையாலே அவனைத் தொழுவித்துக்கொள்ளுமவர்களாயிருந்துவைத்து, அடிபாடக்கூடுமோ ? என்ன, அருளிச்செய்கிறார் (மஹிஷிகள் இத்யாதி.) "அடி" என்றது - உபலக்ஷணமாய், திருமேனியில் ஸௌந்தர்யத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதி.)

அடிபாடுகை "நெய்யுண்ணோம்" இத்யாதிக்கு ஹேதுவென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (போக்யாந்தரங்களில் இத்யாதி.) அந்யாபதேஶத்திலே ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் (குடியோம் இத்யாதி.) பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (முதல்தன்னிலே இத்யாதி.) அதில் என்றது - "குடிக்கக்கடவது, உண்ணக்கடவது" என்ற பேதத்தில் என்றபடி. அதாவது - இவர்கள் பர்த்தாக்கள் காமரஸமறியிலாய்த்து க்ருஷ்ணைகபோகரான இவர்கள் இத்தை யறிவது என்றபடி. "நெய்யுண்ணோம் பாலுண்ணோம்" என்கிறவற்றுக்கு - நெய்முதலானவையும் அறியோமென்று கீழே அருளிச்செய்து, அந்நனன்றிக்கே, "உண்ணோம்" என்றதுக்கு-உண்ணவேண்டோமென்று ஶப்

என்று-குடிக்கைக்குச் சாதிப்பேச்சு; ஆகையிறே, "நெய்யுண்டான், வெண்ணெயுண்டான்" என்று க்ருஷ்ணனுக்குப் போகிறது. முதல் தன்னிலே க்ருஷ்ணன் பிறந்தபின்பு அதில் வ்யுத்பத்தி யில்லாமை. அவன் வருமளவும் உபவாஸக்ருஶைகளா யிருக்கக்கடவோம். இவர்கள் தாம் ஆரைக் கெடுக்கப் பட்டினிகிடக்கிறது என்னில் ?—இவர்கள் உண்ணுதொழிந்தால் பட்டினிவிடுவான் அவன்போலே காணும்; ஆகையிறே, இவர்கள் இங்ஙனே சொல்லுகிறது.

(நாட்காலே நீராடி) - அவன் வந்தால் குளிக்கஇராதே, முன்பே தத்போகபோக்யமாகக் குளித்து. விடிவோரை போய்க் குளிக்கக் கடவோம். அவன் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளினதை அஸத்ஸமமாக்கக்கடவோம் ; மஹிஷியானவள் ஸ்வாக்ஷணத்திலே ப்ரவர்த்திக்கும்படியாக இருக்கைக்குமேற்படப் புருஷனுக்கு அவத்ய மில்லையிறே; அதாவது - தங்கள் த்வரையாலே அத்தலையில் உபாய பாவத்தை அழிக்கிறார்கள் ; "ஓதிநாமங்குளித்துச்சிதன்னுலொளிமாமலர்ப், பாதநாளும்பணிவோம் நமக்கேநலமாதலில்" என்கிறார்கள். ஸ்ரீபரதாழ்வானைப்போலே, விரஹதாபமாறுகைக்காக "நோன்பு" என்று ஒரு வ்யாஜத்தை யிட்டுக் குளிக்கத் தேடுகிறார்களிறே; ["అత్యన్తసుఖసంవృద్ధస్సుకుమారస్సుఖోచితః । కథన్త్వపరరాత్రేషు సరయూమవగాహతే"] "அத்யந்தஸுகஸம்வ்ருத்தஸ்ஸுகுமாரஸ்ஸுகோசித꞉ । கதந்த்வபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே" (ந.கூ) என்கிறபடியே.

---

தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அவன் வருமளவும் இத்யாதி). நாய்ச்சியார்க்குக் கோபிமார்தஶை செல்லாநிற்கச் செய்தேயும் தாமான தன்மையில் தம்முடைய க்ருஷ்ணவ்யஸநம் பின்னுடி வருகையாலே, தம்முடைய தோழிமார்களைக் குறித்து இப்படி அருளிச்செய்தாரென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

"நீராடி" என்றதுக்கு மூன்று தாத்பர்யம் - போகார்த்தமென்றும், அவனைப் பெறுகைக்கு ஸாதநமென்றும், விரஹதாபமாறுகைக் கென்றும். அதில் முந்தினது - (அவன் வந்தால் இத்யாதி.) இரண்டாம் தாத்பர்யம் - (அவன் திருப்பாற்கடலிலே இத்யாதி.) மூன்றாம் தாத்பர்யம் - (ஸ்ரீபரதாழ்வானை இத்யாதி); ஸ்ரீபரதாழ்வான் அபரராத்ரியிலே ஸ்நாநம்பண்ணுமாபோலே இவர்களும் விரஹதாபமாறும்படி க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தைத் தேடுகிறார்களென்று கருத்து.

"நெய்யுண்ணோம்" என்கிறவிடத்தில் உண்ணக்கடவோமல்லோமென்று விரஹதஶைக்கு அநுகுணமாக ப்ரணயரோஷம்தோற்றச் சொன்னாற்போல,

(மையிட்டெழுதோம்) - முதலிலே* மையகண்ணுளிறே. இனி, அஞ்சநமிடுவதும் மங்களார்த்தமாகவிறே; அது தவிரக்கடவோமென்கையாலே - அவனுக்கு அவகாஶப்ரதாநம் பண்ணக்கடவோமல்லோம் என்கிறார்கள்; இவர்கள் அஞ்சநமெழுதப்புக்கால் குறையும் தலைக்கட்டுவான் அவனேயிறே. பரிபூர்ணவிஷயத்தில் இப்படி அவகாஶப்ரதாநம் பண்ணப்பெறுதவன்று கிஞ்சித்கரித்ததாக விரகில்லையிறே. அவனும் பரமப்ராணயியாகையாலே 'இங்கே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவேணும்' என்றிருக்கும்.

(மலரிட்டு நாம் முடியோம்) - "சுரும்பார் குழற் கோதை" என்றும், "வாசஞ்செய் பூங்குழலாள்" என்று மிறே இருப்பது. இனி, பூவுக்குத்தான் நாற்றங்கொடுக்கைக்காக வாய்த்துப் பூ முடிப்பது; அது செய்யக்கடவோமல்லோ மென்கை. (நாம் முடியோம்) - அவன்தான் மாலையைக் கொடுவந்து மயிரை முடித்து அலங்கரித்து விரல்கவ்வி 'இது வாங்கா தொழிய வேணும்' என்னுமாகில், செய்யலாவதில்லை. அவன் தீம்பாலே செய்யுமத்தை நம்மால் செய்யலாவதில்லையே; நாமாகச் செய்யாதொழியு மித்தனையிறே வேண்டுவது. ["అత్రోపవిశ్యసా తేన కాపిపుష్పైరలఙ్కృతా । అన్యజన్మనిసర్వాత్మా విష్ణురభ్యర్చితో యయా"] "அத்ரோபவிஶ்யஸா தேந காரிதா புஷ்பைரலங்க்ருதா । அந்யஜந்மநி ஸர்வாத்மா விஷ்ணுரப்யர்ச்சிதோ யயா" (சO) என்னக்கடவதிறே.

---

"மையிட்டெழுதோம்" என்றதும் ப்ரணயரோஷத்தாலே சொல்லும் பாசுரமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (முதலிலே இத்யாதி.) இவர்கள் இப்படி அவகாஶப்ரதாநம் பண்ணவேண்டுவானென்? அவன்தானும் இவ்வளவைக்கொண்டு மேல்விழுவானென் னென்ன, அருளிச்செய்கிறார் (பரிபூர்ண இத்யாதி வாக்ய த்வயத்தாலே.) இத்தால் - சேதநனுக்கு ஆபிமுக்யமும், அவனுக்கு அதுகொண்டு கார்யம்செய்கையும் ஸ்வரூபம் என்றதாய்த்து.

"முடியோம்" என்றத்தாலே ஸித்தமாயிருக்க "நாம்" என்று சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவன்தான் இத்யாதி.) 'விரல்கவ்வி' என்றது - ப்ரணாமம்பண்ணிப் பெருவிரலைத் திருப்பவளத்தாலே ஸ்பர்ஶித்து என்றபடி; இத்தால் - வேண்டிக்கொண்டு என்றதாய்த்து. உங்கள் ஸ்வரூபத்துக்குச் சேராதத்தை அவன்செய்தால் அதுக்கு இசையக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் (அவன் தீம்பாலே இத்யாதி.) அவன்தான் இப்படி தான் உகந்த விஷயத்திலே அலங்கரித்ததுண்டோ வென்ன, ஸம்வாதங் காட்டுகிறார் (அத்ர இத்யாதி.)

(செய்யாதன செய்யோம்) - விதியுண்டாகிலும், பூர்வர்கள் ஆசரித்ததற்கு மேற்பட ஆசரிக்கக்கடவோ மல்லோம்; அதாகிறது - ["సుహృదం సర్వభూతానామ్"] "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (சக) என்று - அவன் ஸர்வபூதஸுஹ்ருத்தாக இருந்தானேயாகிலும் ததீயரை முன்னிட்டுக்கொண்டல்லது அவனைக் கிட்டக்கடவோ மல்லோமென்கை; பெண்களில் முற்படவுணர்ந்தார் ஒருவரையொருவர் எழுப்பி, எல்லாருங்கூடியல்லது க்ருஷ்ணனைக் கிட்டக்கடவோமல்லோ மென்கை. ["నివేదయత మాం క్షిప్రమ్"] "நிவேதயத மாம் க்ஷிப்ரம்" (சஉ) என்றும், ["పితామహం నాథమునిం విలోక్య ప్రసీద"] "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத" (சங) என்றும் இவையிறே ப்ரமாணங்கள். ஸ்ரீபாதாழ்வானை முடிசூடச் சொன்னவிடத்தில் ஸர்வப்ரகாரத்தாலும் யோக்யதையுண்டாயிருக்க "இக்குடியில் இதுக்கு முன்பு செய்யாதன நான் செய்யமாட்டேன்" என்றானிறே.

(தீக்குறளை சென்றோதோம்) - பிறர்க்கு அநர்த்தாவஹமாகப் பொய்சொல்லக்கடவோமல்லோம்: பிராட்டி, பெருமாள்பக்கல் ஏகாந்தத்திலும் ஏகாக்ஷி ஏககர்ணிகள் நலிந்தபடி சொல்லிற்றாக வில்லையே ஸ்ரீராமாயணத்தில்; நம்மில் நாம் "நப்பின்னை நங்காய்" என்றும், "நாயகப்பெண்பிள்ளாய்" என்றும், "பேய்ப்பெண்ணே" என்றும் ஒருவர்க்கொருவர் இட்டீடுகொண்டு சொன்னவை க்ருஷ்ணன் செவிப்படுத்தக்கடவோமல்லோம்.

---

"செய்யாதன செய்யோம்" என்கைக்குச் செய்ய ப்ரஸக்தியுண்டோ என்ன, அத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, அர்த்தம் அருளிச்செய்கிறார் (விதி இத்யாதி.) இது தொடங்கி ப்ரணயரோஷத்தாலே யன்றிக்கே அதிகாரிஸ்வரூபத்தைச் சொல்லுகையென்று கண்டுகொள்வது. ஸ்வாபதேசத்திலும் அந்யாபதேசத்திலும் தாத்பர்யத்தை விவரிக்கிறார் (அதாகிறது இத்யாதி வாக்ய த்வயத்தாலே.) புருஷகாரத்தை முன்னிட்டுக்கொள்ளுகை பூர்வர்கள் செய்தார்களென்கைக்கு ப்ரமாணங் காட்டுகிறார் (நிவேதயத இத்யாதி.) செய்யாதன செய்யாதிருக்கைக்கு உதாஹரணங் காட்டுகிறார் (ஸ்ரீ பாத இத்யாதி.)

"குறளை" என்றதன் அர்த்தம் (பொய்யென்றது;) அதாவது - குற்றமென்றபடி. ப்ரக்ருதத்திலே கோபிமார்க்குக் குற்றத்துக்கு ப்ரஸக்தியுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (நம்மில்நாம் இத்யாதி.) (நாயகப்பெண்பிள்ளாய்) என்றதுக்கு - "நிர்வாஹகையாயிருந்தபடி இதுவோ?" என்று வெறுத்துச் சொல்லுகையாலே குற்றமென்று கண்டுகொள்வது.

(ஐயமும் பிச்சையு மாந்தனையும் கைகாட்டி) - ஐயமாவது - யோக்யவிஷயத்திலே குருவாக வ்யயிக்குமது; பிச்சை யாகிறது - ப்ராஹ்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் இடுமது. "இங்கு க்ருஷ்ணாநுபவம்பண்ணுவோம்" என்பார்க்கு அவனை அநுபவிப்பித்தும், "ததீயரையநுபவிப்போம்" என்பார்க்கு அவர்களை அநுபவிப்பித்தும் போரக்கடவோம். (ஆந்தனையும்) - அவர்கள் கொள்ளவல்லாந்தனையும்; அர்த்திகள் ஆமளவும். (கைகாட்டி) - ஸர்வத்தையும் கொடுத்தும் "ஒன்றும் செய்யப்பெற்றிலோம்" என்றிருக்கை. இவர்களை க்ருஷ்ணாநுபவம் பண்ணிவைத்தும் இவர்கள்திறத்தில் ஒன்றும்செய்யப்பெற்றிலோம் என்றிருக்கையைச் சொல்லுகிறது. அதவா, ஐயமாகிறது - ஈஶ்வரனுடைய ஸ்வரூபரூபகுணவிஷயஜ்ஞாநம், பிச்சையாகிறது - ஆத்மஸ்வரூபமாத்ரஜ்ஞாநம்; இவற்றைத் தனக்கு உள்ளவளவும் உபதேஶிக்கை யென்றுமாம். (கைகாட்டி) - இப்படி ஜ்ஞாநோபகாரகனானாலும் அவ்வுபகாரம் தன்னெஞ்சில் தட்டாதிருக்கை.

(உய்யுமாறெண்ணி) - இந்தப்ரகாரங்களினாலே உஜ்ஜீவிக்கும்படிகளை எண்ணி. பகவத்விஷயத்திலே உள்புக்கவன்றிறே இவன் உஜ்ஜீவித்தானாகிறது; அது இல்லாதபோது * அஸந்நேவவிறே. (எண்ணியுகந்து) - மநோரதவேளையே தொடங்கி ரஸிக்கிறபடி. ["ஸுஸுகம் கர்த்துமவ்யயம்"] "ஸுஸுகம் கர்த்துமவ்யயம்" (௪௪) என்கிறபடியே-ஸ்மர்த்தவ்யவிஷயத்தின் ரஸ்யதையாலே ஸ்ம்ருதிவேளையே தொடங்கி ரஸிக்குமிறே. "எண்ணியுகந்து - செய்யுங் கிரிசைகள் கேளீரோ" என்று அந்வயம்.

---

"ஐயம்" என்றது - விபுவான க்ருஷ்ணனை அநுபவிக்கை யென்றும், "பிச்சை" என்றது - அணுஸ்வரூபரான ததீயரை அநுபவிக்கை யென்றும் திருவுள்ளம்பற்றி, ப்ரக்ருதத்திலே யேறிடுகிறார் (இங்கு இத்யாதி.) யோஜநாந்தரம் அருளிச்செய்கிறார் (அர்த்திகள் இத்யாதி;) அதாவது - அர்த்திகளாக வந்தவர்களெல்லார்க்கும் கொடுத்து, இனி அர்த்திகளில்லையென்னுமளவும் என்றபடி. 'கொடுத்து' என்னாதே, "கைகாட்டி" என்றதுக்குப் பலிதத்தை அருளிச்செய்கிறார் (ஸர்வத்தையும் இத்யாதி.) இப்பாட்டிலே, "ஏல், ஓர், எம்பாவாய்" என்றதெல்லாம் பாதத்தைப் பூரித்துக்கிடக்கிறது.(௨)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—(வையத்துஇத்யாதி) - இப்பாட்டில், பகவத்கைங்கர்யத்திலே ருசியுடையாராய் அவனையே உபாயமாகப்பற்றியிருக்கிற இவ்வதிகாரிக்கு ஸம்பாவித ஸ்வபாவவிஶேஷங்களை அருளிச்செய்கிறார்.

வ்யாக்யாநம்.—(வையத்து வாழ்வீர்காள்) - * இருள்தருமாஞால மான இவ்விபூதியிலே பிறந்துவைத்துப் பகவதநுபவம் பண்ணப் பெற்ற பாக்யவதிகாள்! பகவத்குணங்கள் ஸ்வஸ்வவிஷயத்திலே சேர்ந்து விளங்காநின்றுள்ள இவ்விபூதியிலே பிறந்து பகவத்குணா நுபவம் பண்ணுகிற பாக்யவதிகா ளென்கிறார்க ளாகவுமாம். இத் தால் - "விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்கிறது. விண்ணுளாருக் கும் இங்கே வந்திறே ஶீலாதிகுணங்களை அநுபவிக்க வேண்டுவது. இங்குள்ளார்க்கு ஸ்வரூபஜ்ஞாநமுண்டானல் யாவத்குணவிஶிஷ் டனை இங்கே அநுபவிக்கலா மிறே.

(நாமும்) - "அவனாலே புருஷார்த்தம்" என்றிருக்கிற நாமும். (நம் பாவைக்கு) - ப்ராப்யருசிபாவஶராய் நாம்அநுஷ்டிக்கிற நோன் புக்கு. அவனும் அவன் விபூதியும் வாழ்கைக்குப் பகவத்விஷய மங் களாஶாஸநபரரான நாம் அநுஷ்டிக்கிற நோன்புக்கு என்னவுமாம். (செய்யும் கிரிசைகள்) - அவஶ்யம் அநுஷ்டேயமான க்ரியைகளை. (கேளீரோ) - அந்யபரதையில்லாமல் கேளுங்கோள். பகவத்விமுக கோலாஹலத்திலே தாங்கள் பகவதநுகூலராய், பகவதநுகூலரைத் தேடியழைக்கும்படி இத்தனைபே ருண்டாவதே! என்று அந்யபரரா யிருக்க, "கேளீரோ" என்று அந்யபரதையைத் தவிர்க்கிறார்கள்.

(பாற்கடல் இத்யாதி) - திருப்பாற்கடல்நடுவே திருவநந்தாழ்வா னாகிற படுக்கையிலே பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கி யணைத்தாலும் அவர்களுக்கு முகங்கொடாதபடி ஜகத்ரக்ஷணசிந்தை யிலே அவஹிதனாய்க் கண்வளர்ந்தருளுகிறவனாய், அதஏவ பரம பதத்தில்நின்றும் ஸம்ஸாரிசேதநஸம்ரக்ஷணார்த்தம் திருப்பாற்கட லிலே அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு கண்வளர்ந் தருளுகையால் வந்த குணதிஶயத்துக்கு ஒப்பில்லாதவனாய், திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தருளுகையால் வந்த பரபாகஶோபைக்கு ஒப்பில்லாத வனாயிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளைப் ப்ரீதிக்குப்போக்கு வீடாகப் பாடி போக்யாந்தரங்களில் அந்வயியோம்.

(நாட்காலே நீராடி) - ப்ராதஸ் ஸ்நாநத்தைப் பண்ணி. இத்தால் - கர்மயோகத்தை உபலக்ஷிக்கிறது. இத்தால்-தத்தத்வர்ணாஶ்ரமோசித மான ஸ்நாநாதி நித்யகர்மங்கள் இவ்வதிகாரிக்கு யதாவதநுஷ்டேய மென்றதாய்த்து. "பாடி" என்றது - பாடக்கடவோ மென்றபடி. "நீராடி" என்றது - நீராடக்கடவோ மென்றபடி. ["తత్పూర్వ సమాచరేత్"] "தத்தூகாரஸாேவெரக" என்று - இவ்வதிகாரிக்கு அநபிஸம்ஹித

பலமான கர்மம் அநுஷ்டேய மென்றதிறே. (மையிட்டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்) - மை கண்ணுக்கு ப்ரகாஶகமாகையாலே, ஆத்மயாத்தாத்ம்யப்ரகாஶகமான ஜ்ஞாநயோகத்தில் அந்வயிக்கக் கடவோ மல்லோம்; பூச்சூடுகை போகரூபமாகையாலே, "மலரிட்டு நாமுடியோம்" என்று - பகவதநுபவரூபமான பக்தியோகத்தில் அந்வயிக்கக்கடவோமல்லோ மென்கிறது.

(நாம் முடியோம்) - நாமாய்ப் பகவத்ப்ராப்தி ஸாதநங்களான ஜ்ஞாநயோக பக்தியோகங்க ளிரண்டிலும் அந்வயியா தொழிகையே வேண்டுவது; அவன்தானே இவ்வாத்மவஸ்துவை அநுபவிக்கும் போது ஜ்ஞாநபக்திக ளிரண்டையுங் கொடுத்து, "இவற்றை நீ தவிரா தொழியவேணும்" என்று நிர்ப்பந்திக்கும்போது, நம்மால் செய்ய லாவதொன்றில்லையிறே. நாமாய் அநுஷ்டிக்கிறபோதும் அவன் கொடுக்க நாம் பரிக்ரஹியாதபோதும் ஸ்வஸ்வாதந்த்ரியம் குலை யாமையாலே, அது குலைகைக்காக நாமாய் அநுஷ்டியாதொழிகை யும் வேணும், அவன்தர நாம் பரிக்ரஹிக்கையும் வேணும்.

(செய்யாதன இத்யாதி) - ப்ரமாணமுண்டேயாகிலும் பூர்வாசார் யர்கள் அநுஷ்டியாதவற்றை அநுஷ்டிக்கக் கடவோ மல்லோம். அதா வது - எம்பெருமான் வாத்ஸல்யாதிகுணவிஶிஷ்டனேயாகிலும் ததீ யரை முன்னிட்டல்லது அவனைப் பற்றக்கடவோ மல்லோம். (தீக் குறளை சென்றோதோம்) - பராநர்த்தாவஹமான பொய் சொல்லக்கட வோமல்லோம்.

(ஐயம் இத்யாதி) - பகவத்வைபவத்தையும் பாகவதவைபவத்தை யும் தாம்அறிந்தவளவும் உபதேஶித்து "நாம் ஒன்றும் உபதேஶித் திலோம்" என்று தம் கார்ப்பண்யத்தை அநுஸந்தித்து. அர்த்திக ளுள்ள வளவும் உபதேஶிக்கக்கடவோம்.

(உய்யுமாறெண்ணியுகந்து) - ஏவம்ப்ரகாரேண உஜ்ஜீவிக்கும்படி எண்ணியுகந்து - செய்யுங் கிரிசைகள் கேளீரோ என்று அந்வயம்.



அவதாரிகை.—மூன்றாம்பாட்டு. ஸ்வர்க்கார்த்தமாக யஜிக்குமவனுக்கு ஸ்வர்க்கம் ப்ராதாநபலமாயிருக்கச்செய்தேயும், ["ஆயுஷ்யாந் புத்ராந்"] "ஆயுஷ்மாந் புத்ராந்" (௪௫) என்கிறபடியே ஆயுஸ்ஸும் புத்ரனென்று அவாந்தரபலமாயிருப்பன சில உண்டாயிருக்கும்; இவர்களுக்கு அங்ஙனம் ஒன்றுமின்றிக்கே, ["ஸர்வலோகேச்வரோ ஹரிः"] "ஸர்வலோகேச்வரோ ஹரிः" (௪௬) ["மாதாபிதா ப்ராதா"] "மாதாபிதா ப்ராதா" (௪௭) "சேலேய்கண்ணியரும்" என்றும் எல்லாம் அவன்தானே யாகையாலே, தங்களுடைய நோன்புக்கு அநுமதி பண்ணினர்க்கு வரக்கடவதான பல மிருக்கும்படியைச் சொல்லுகிறார்கள். ["அநஸூயவே"] "அநஸூயவே" (௪௮) என்று அஸூயையைப் பண்ணுதொழிய அமையுமிறே அதிகாரிகளாகைக்கு. ["யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தः"] "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தः" (௪௯) இத்யாதியாலே ஒருத்தனைச் சொல்லக்கடவது; ஆனபின்பு, இவர்கள் இத்தனை பே ரிருந்தால் நாடுவாழச் சொல்லவேண்டாவிறே.

---

மூன்றாம்பாட்டு. (ஓங்கி இத்யாதி.) கீழிரண்டுபாட்டாலும் எம்பெருமானை ப்ராப்யமும் ப்ராபகமுமென்று நிஸ்சயித்திருந்த இவர்களுக்குப் பலாந்தரங்கள் இப்பாட்டிற் சொல்லும்படி எங்ஙனே கூடுவது? இது ப்ரதாநபலமென்றுதல், ஆநுஷங்கிகபலமென்றுதல் சொல்லக்கூடாமையாலே யென்னும் ஸங்கையிலே அருளிச்செய்கிறார் (ஸ்வர்க்கார்த்தம் இத்யாதி.) புத்ரனென்றது - ["ஸுப்ரஜாஸ்த்வம்"] "ஸுப்ரஜாஸ்த்வம்" என்றத்தைப் பற்ற. 'எல்லாம் அவன்தானே யாகையாலே' என்றது - "உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கேநாமாட்செய்வோம்" என்றத்தைப் பற்ற. ஒருவர் நோன்புநோற்க மற்றொருவர்க்கு அநுமதிமாத்ரத்தாலே பலம் ஸித்திக்கும்படி என்னென்ன, அருளிச்செய்கிறார் (அநஸூயவே இத்யாதி;) ["இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே"] "இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே" என்று கீதோபநிஷதாசார்யன், அஸூயாராஹித்யமே உபாயாந்வயத்துக்கும் பலாந்வயத்துக்கும் அமையுமென்றிறே திருவுள்ளம்பற்றி அருளிச்செய்தது; ஆகையால், இவர்களும் அஸூயையின்றிக்கே அநுமதியும் பண்ணினார்களாகையால் இந்நோன்பால் பலாந்வயம் வரத் தட்டில்லையென்று கருத்து. அவதாரிகாந்தரம் அருளிச்செய்கிறார் (யத்ரேத்யாதி); ["யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே। ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்பிக்ஷதஸ்கராः"] "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே। ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்பிக்ஷதஸ்கராः" என்று ஒருவர் இருக்கும்போது நாடுவாழச் சொல்லுகையாலே, அப்படி இவர்கள் பலர் அஷ்டாக்ஷரஸித்தராயிருந்தால் அநுமதிபண்ணினரோடு அநுமதிபண்ணாதாரோடு வாசியற வாழச் சொல்லவேண்டாவிறே யென்று கருத்து.

௩.—ஓங்கியுலகளந்தவுத்தமன்பேர்பாடி
நாங்கள்நம்பாவைக்குச்சாற்றிநீராடினால்
தீங்கின்றிநாடெல்லாந்திங்கள்மும்மாரிபெய்து
ஓங்குபெருஞ்செந்நெலூடுகயலுகளப்
பூங்குவளைப்போதிற்பொறிவண்டுகண்படுப்பத்
தேங்காதேபுக்கிருந்துசீர்த்தமுலைபற்றி
வாங்கக்குடநிறைக்கும்வள்ளற்பெரும்பசுக்கள்
நீங்காதசெல்வம்நிறைந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—(மஹாபலிவார்த்த நீர் கையில்விழுந்தவாறே), நாங்கள் - (அவன்திருநாமத்தைச் சொல்லாவிடில் தரிக்கமாட்டாத) நாங்கள்,—ஓங்கி - (ஆகாசத்தளவும்) உயர வளர்ந்து, உலகு - மூன்று உலகங்களையும், அளந்த - (தன் திருவடிகளாலே) அளந்துகொண்டு தேவர்கள் துன்பத்தைப் போக்கின, உத்தமன் - புருஷோத்தமனுடைய, பேர் - திருநாமங்களை, பாடி - (ப்ரீதி பூர்வகமாகப்) பாடி, நம் பாவைக்கு சாற்றி - எங்கள் நோன்புக்கு என்று ஒரு வ்யாஜத்தை யிட்டு, நீராடினால் - ஸ்நாநஞ்செய்தால்,—நாடு எல்லாம் - தேசமெங்கும், தீங்கு - (வ்யாதி துர்ப்பிக்ஷம் வெள்ளக்கேடு வறட்கேடு முதலான) அமங்களங்களெல்லாம், இன்றி - நீங்கி (ஸம்ருத்தமாய்), திங்கள் - மாஸந்தோறும், மும்மாரி பெய்து - மூன்றுமழை பெய்திட, (அத்தாலே), நீங்காத - அழிவில்லாத, செல்வம் - ஸம்பத்து, நிறைந்து - நிறைந்திடும்படி, கயல் - கயல்மீன்கள், ஓங்கு பெரு செந்நெல் ஊடு - வளர்ந்து பருத்த செந்நெற்பயிர்களினுள்ளே, உகள - (போக இடம்பெறாமையாலே) துள்ளவும்; பொறி வண்டு - அழகிய வண்டுகள், பூ - தர்ஶநீயமான, குவளைப் போதில் - நெய்தல்மலரிலே, கண்படுப்ப - உறங்கவும்; வள்ளல் - பெருந்தன்மையுடையவாய், பெரு - மிகப்பருத்திருக்கிற, பசுக்கள் - பசுக்களானவை, தேங்காதே- ஏங்காமல், புக்கு - (பால்கறக்குமவர்கள்) கறக்க வொருப்பட்டு, இருந்து - ஒருநிலையாக இருந்து, சீர்த்த முலை - பருத்த முலைகளை, பற்றி - இருகையாலும் அணைத்து, வாங்க - இழுக்க, குடம் - குடங்களை, நிறைக்கும் - நிறையாநிற்கும்; ஏல் ஓர் எம்பாவாய் - அசைகள்; இனி, ஏல் - யான்சொல்வதை அங்கீகரி, எம்பாவாய் - எங்கள்வார்த்தையைப்பின்சென்று, ஓர் - அவன் வைபவத்தைப் புத்திபண்ணு என்று கூறுவாருமுளர். இதனால், நோன்பு நோற்றலின்பயனை யுணர்ந்தவள் உணராதார்க்கு அப்பயனை யுணர்த்துகின்றன ளென்க.

வ்யா.—(ஓங்கியுலகளந்த) - இவர்கள் முதலே தொடங்கி "நாராயணன்" என்று - உபயவிபூதியோகத்தைச் சொல்லி, "பாற்கடலுள் பையத்துயின்ற" என்று அவதாரார்த்தமாகப் பள்ளிகொண்டருளினபடியைச் சொல்லி, அங்குநின்றும் போந்து அவதரித்தவளவும் வர அடியொற்றுகிறார்கள்.

(ஓங்கி)-ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினபோது ஆர்த்தரக்ஷணம் பண்ணப்பெறாமையாலே, பனிப்பட்டுச் சாய்ந்த மூங்கில்போலேயாய், அது ஆதித்யகிரணம் பட்டுக் கிளம்புமாபோலே, மஹாபலியாலே நோவுபட்ட தேவர்களார்த்தத்வநி கேட்டபின்பு பேர்ந்து வளர்ந்தபடி. பிறர்காரியஞ் செய்யப்பெறுகையாலே வளர்ந்தபடி யென்னவுமாம். "உவந்த வுள்ளத்தனாயுலகமளந்து" என்னக்கடவதிறே. அங்ஙனன்றிக்கே, இரப்புப்பெறுவதற்கு முன்னே வாமநனானவன் இரப்புவாய்த்த ப்ரீதியாலே வளர்ந்தபடியாகவுமாம். கையில் நீர்விழுந்தபின்பு வளர்ந்த கடுமை, ப்ரஹ்மா திருவடிகள் விளக்கின நீரும் கூட விழுந்தபடியிறே.

(உலகு அளந்த)-["ஜிசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம்"] "விசக்ரமெவப்ருதிவீமெஷஏதாம்" (ருo) என்கிறபடியே குணாகுணநிரூபணம் பண்ணாதே ஸர்வப்ராணிகள்பக்கலிலும் திருவடிகளை வைத்தபடி. வ்யாப்தியில் வரைதலில்லாதாப்போலேயாய்த்து இதுவும். வ்யாப்திக்குக் கருத்து-இவற்றினுடைய ஸத்தையுண்டாக்குகைக்காக. இங்கு இவற்றோட்டை ஸ்பர்சம் தனக்கு தாரகமாகவிறே நினைத்திருப்

'நாராயணனடிபாடி' என்றுதல், 'பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடிபாடி' என்றுதல் சொல்லுகையன்றிக்கே,"ஓங்கியுலகளந்த" என்றதுக்கு நியாமகம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி.) "ஓங்கி" என்று இப்போது சொல்லுகையாலே - முன்பு இப்படி ஓங்குதலில்லாமை தோன்றுகையாலும், கீழ்ப்பாட்டில் "பையத்துயின்ற" என்ற பதத்தைக் கடாக்ஷித்தும் இரண்டுக்கும் ஹேது பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஜகதித்யாதி.) ஆர்த்தத்வநி கேட்கையே வளருகைக்கு ஹேதுவானபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (பிறர் இத்யாதி.) "உவந்த" என்றதுக்கு - பிறர்காரியம் செய்யப் போருகையாலே உகந்த என்று கருத்து. 'வளர்ந்து உலகளந்த' என்னாதே "ஓங்கி" என்றத்தால் பலிதமான த்வரையின் மிகுதியை அருளிச்செய்கிறார் (கையில் இத்யாதி.) இத்தால் - தாராஜலமும் ஸ்ரீபாததீர்த்தமும் கூட விழும்படியான வேகம் சொல்லிற்றாய்த்து.

உலகுபதவாஸனை (குணாகுண இத்யாதி). உக்தார்த்தத்தை த்ருஷ்டாந்த பூர்வகம் ஸ்திரீகரிக்கிறார் (வ்யாப்தியில் இத்யாதி.) வரைதல் - தாரதம்யம். ஆகில் வ்யாப்தியே அமையாதோ, உலகளப்பானென்னென்னை அருளிச்செய்கிறார் (வ்யாப்திக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே.) (உண்டாக்குகைக்காக) என்ற அநந்தரம், 'என்று' என்று ஶேஷம். திருவடிகளோட்டை ஸ்பர்சம் லோகத்துக்கு தாரகமென்ன வேண்டியிருக்க, அவாப்தஸமஸ்தகாமனான

அ

பது. இவற்றுக்கு அபேக்ஷிதமின்றிக்கே யிருக்கச்செய்தேயும், உறங்குகிற ப்ரஜையை அணைத்துக்கொண்டு கிடக்கும் மாதாவைப் போலே, இவற்றோட்டை ஸ்பர்ஶந்தனக்குத் தான் உகக்கிறானிறே. வரையாமையும், அதிமாநுஷ சேஷ்டிதங்களும், வடிவழகும் க்ருஷ்ணாவதாரத்தோடு ஒத்திருக்கையாலே, ஸ்ரீவாமநாவதாரத்தை அநுபவிக்கிறார்கள்.

(உத்தமன்) - இத்தை, இவர்களுக்கு ஒருஉபகாரம் பண்ணிணாக வன்றிக்கே தன்பேறாக நினைத்திருக்கிறபடி; பிறரை ஹிம்ஸித்துத் தன் வயிற்றை வளர்க்கவேணுமென்று இருக்குமவன்-அதமன்; 'பிறரும் ஜீவிக்கவேணும், நாமும் ஜீவிக்கவேணும்' என்று இருக்குமவன் - மத்யமன்; தன்னை அழியமாறியாகிலும் பிறர் ஜீவிக்கவேணுமென்னுமவன் - உத்தமன். [“భక్తానాం”] “ஹக்தாநாஂ”

தனக்கு தாரகமாகக் கூடுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (இவற்றுக்கு இத்யாதி.) ஸ்பர்ஶந்தனக்கு-முழுச்சொல்லு. க்ருஷ்ணன்பக்கல் வ்யாமுக்தரான இவர்கள், மதுரையிற்பிறந்த உத்தமனென்ன வேண்டியிருக்க, “ஓங்கியுலகளந்த” என்னக்கூடுமோ? என்ன, அருளிச்செய்கிறார் (வரையாமையும் இத்யாதி.) க்ருஷ்ணன்பக்கல் வ்யாமோஹம் இவன்போலியளவும் பெருகிச் சென்றது என்று கருத்து.

இத்தை யென்றது - மஹாபலி நிரஸநார்த்தமாக உலகளந்தத்தை என்றபடி. இவர்களுக்கு என்றது - இந்த்ராதி தேவதைகளுக்கு என்றபடி. “உத்தமன்” என்றதுக்கு - தன்பேறாக நினைத்திருக்கை அர்த்தமாக அருளிச்செய்து, தன்னை அழியமாறியும் பிறர்காரியஞ் செய்கையென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (பிறரை இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) இரண்டு அர்த்தத்துக்கும் அடைவே ப்ரமாணங்கள் அருளிச்செய்கிறார் (பக்தாநாம் இத்யாதி.) [“న తే రూపం న చా కారో నాయుధాని న చాస్పదమ్। తథాపి పురుషా కారో భక్తానాం త్వం ప్రకాశసే”] “நதெ ரூவஂநவாகாரொ நாயுயாநிநவாஸ்வஃ। தயாவி வுருஷாகாரொஹக்தாநாஂ கூஹகாஶஸெ.” இது கீஷேத்ரமன்று, ஸ்வாதீநதையைத் தவிர்க்கிறது. நமக்கு * [అహమపి నమమ, భగవత ఏ వాహమస్మి-] அஹமவி நமம, ஹமவதணவாஹமஸ்மி போலே, இவனுக்கு [“న తే రూపం-భక్తానాం”] “நதெரூவஂ-ஹக்தாநாஂ” என்கை; [“అప్యహం జీవితం జహ్యాం త్వాం వా సీతే సలక్ష్మణామ్। న హి ప్రతిజ్ఞాం సంశ్రుత్య బ్రాహ్మణేభ్యో విశేషతః”] “அவ்யஹஂஜீவிதஂஜஹ்யாஂ

(ருக) ["ஶஸ்யஸம்ஜீவநஜஸ்யம்"] "ஶஸ்யஸம்ஜீவிதம்ஜஹ்யாத்" (ருஉ) என்றிருக்கை.

(பேர்பாடி)-இக்குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை ப்ரீதி பூர்வகமாகப் பாடி. 'உத்தமன்பேர்'' என்கிறது - திருமந்த்ரத்தை. முதற்பாட்டில், ''நாராயணன்'' என்கையாலும், இரண்டாம்பாட்டில், "பரமன்" என்று அந்த மந்த்ரார்த்தமான குண பூர்த்தியைச் சொல்லுகையாலும், இதில் மந்த்ரோக்தவ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாகாரமான த்ரைவிக்ரமாபதாநத்தைச் சொல்லுகையாலும், திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. திருமங்கையாழ்வார் ''மந்திரத்தை மந்திரத்தால்'' என்று மந்த்ரத்தைச் சொல்லி, அநந்தரத்திலே அதில் உக்தமான வ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாகாரமான த்ரைவிக்ரமாபதாநத்தை அநந்தரம்பாட்டிலே அருளிச்செய்தாரிறே. (உத்தமன்பேர்)- அவன்தனக்கும் பிறர்க்கு முண்டான வாசிபோரும், அவனுக்கும் திருநாமத்துக்கும். கட்டிப்பொன்போலே அவன்; பணிப்பொன் போலே திருநாமம். அவன்தன்னை இல்லை செய்கிறவர்களும் திரு

---

ஸ்வாம்வாஸீதேவஸநுக்ஷணாத்| நஹிவ்ருத்திஜ்ஞாம ஸம்ஶ்ரு தஸ்ஸாஹ்ஹணெஹ்ராவிஶேஷதஃ'' என்று * என்னையும் என்னுடைமையையும் சேர்ந்தாசிலும் ஒருவர்க்குச் செய்கிறேனென்றத் தைத் தவிருகிறிலேனென்கிறபடியே, தன்னை அழியமாறியும் பிறர்காரியஞ் செய்யுமவ னென்கை.

''பேர்'' என்றதுக்கு - எல்லாத்திருநாமங்களையும் என்று அருளிச் செய்து, திருமந்த்ரபரமாக அர்த்தம் அருளிச்செய்கிறார் (உத்தமன் இத்யாதி.) "பேர்'' என்று திருமந்த்ரத்தைச் சொல்லும்படி எங்ஙனே யென்ன, அருளிச் செய்கிறார் (முதல் இத்யாதி.) நம் ஆசார்யர்களுக்கு ஶப்தம் முன்னுதல் அர்த்தம் முன்னுதல் சேர்ந்த திருமந்த்ரத்தை யநுஸந்திக்கை நியதமாகையாலே - முதற்பாட்டில் ஶப்தமும், இரண்டாம்பாட்டில் "பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்'' என்கையாலே-தத்புருஷனிற்சொன்ன குண யோகமும், இப்பாட்டில் ''ஓங்கியுலகளந்த'' என்று பஹுவ்ரீஹ்யர்த்தமான வ்யாப்தியும் பலித்ததாகையாலே, இது திருமந்த்ரத்தைச் சொல்லுகிறதென்று கருத்து. ப்ரத்யபிஜ்ஞாகரமான த்ரைவிக்ரமாபதாநமென்றது-குணகுண நிருபண மின்றிக்கே யிருக்கையாகிற ஸாத்ருஶ்யத்தருலே ஸ்மாரகம் என்றபடி. உத்தமனைப்பாடி யென்றால், பாடும்போது பேரின்றிக்கே பாடக்கூடாதே, ''பேர்'' என்று விஶேஷிப்பா னென்னென்ன, அருளிச்செய்கிறார் (அவன்தனக்கும் இத்யாதி.) பணிப்பொன் - ஆபரணரூபமான பொன். இத்

நாமங்கொண்டு காரியங் கொள்ளாநிற்பர். அதாவது - வ்யாதி பரிஹாரார்த்தமாகத் திருநாமஸங்கீர்த்தநத்தை விதித்தால் அப்போதே அத்தைச் செய்யாநிற்பர்கள். இனி, மாத்ருகாதுகனுக்கும் கைநொந்தால் "அம்மே!" என்ன ப்ராப்தி யுண்டாமாபோலே, திருநாமம் சொல்லுகைக்கு எல்லார்க்கும் ப்ராப்தி உண்டாயிருக்கும். திருநாமஞ்சொல்லுகைக்கு யோக்யதை ஸம்பாதிக்கவேண்டா, இது தானே யோக்யதையைப் பண்ணிக் கொடுக்க வற்று.

(நாங்கள்)-திருநாமத்தை வாயாலே சொல்லாவிடில் தரிக்கமாட்டாத நாங்கள். 'நெஞ்சு காவலிடுகிற ஊரிலே இது நமக்கு ஸித்திப்பதே!' என்று ப்ரீதைகளாய்,தங்களைஶ்லாகிக்கிறார்களென்னவுமாம். (நம்பாவைக்கு) - ப்ராபகதயாவன்றிக்கே, ப்ராப்யருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமல் செய்கிற நோன்புக்கு. (பாவைக்குச் சாற்றி நீராடினால்)-நாட்டார்க்கு "நோன்பு" என்று ஒரு வ்யாஜத்தை யிட்டு நம்முடைய விரஹதாபம் போக நாம் குளித்தால். நோன்பு என்று ஒரு வ்யாஜத்தையிட்டு க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தைப் பண்ணினால் என்றுமாம். (பேர்பாடி - நீராடினால்) - ஸம்பந்தஜ்ஞாநபூர்வகமாக க்ருஷ்ணஸம்ஶ்லேஷம் பண்ணினால்; பலமும் பலப்ரதாதாவான உலகளந்தவன்படியாகை.

---

தால், அவனிலும் அவன்திருநாமம் பரமபோக்யமாகையாலே அவனுடைய அபிப்ராயத்தையே உள்ளீடாக வைத்துத் திருநாமத்தைப் பாடுகை விவக்ஷிதமென்றதாய்த்து. கீழே-போக்யதையால் வந்த வைபவத்தை நியாமகமாக அருளிச்செய்து, பலப்ரதத்வத்தாலும் அவனிலும் இதுக்கு உண்டான பெருமையை நியாமகமாக அருளிச்செய்கிறார் (அவன்தன்னை இத்யாதி.) இல்லை செய்கிறவர் - ஸ்ரீ ஶ்ருவரமீமாம்ஸகர். இப்படி சீர்மையை யுடைத்தான திருநாமத்தைச் சொல்லும்போது ப்ரீதனுயச் சொல்லவேண்டாவோ? என்ன, அருளிச்செய்கிறார் (இனி இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) ப்ராப்தி யுண்டா மாபோலே என்றது-யோக்யதை யுண்டாமாபோலே என்றபடி.

"நம்பாவைக்கு" என்றபோதே நாங்கள் என்றது அர்த்தஸித்தமாயிருக்கவும், "நாங்கள்" என்றத்துக்கு இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (திருநாமத்தை இத்யாதி வாக்யத்வயத்தாலே). 'இது' என்றது-க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தை. நாங்கள் பாவைக்கு என்ன அமைந்திருக்க, "நம்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ப்ராபகஇத்யாதி.) "நம்பாவைக்கு" என்ற அநந்தரம், "பாவையென்றொரு பேரை" என்று அத்யாஹரித்து, சாற்றி" என்றதுக்கு-இட்டு என்று அர்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்

(தீங்கின்றி நாடெல்லாம்) - நாட்டில் * வ்யாதி துர்ப்பிக்ஷாதி அமங்களங்களெல்லாம் போய் ஸம்ருத்தமாய், தந்தாமுடையஸுக்ரு தம் அநுபவிக்கிலிறே அவ்வளவிலே நன்மையாவது. [“రామే రాజ్యం ప్రశాసతి”] “ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி” (ருங) என்கிறபடியே தந்தாமுடைய புண்யாநுகுணமாக வன்றிக்கே, பெருமாளுடைய பாக்யத்தாலே, [“ప్రహృష్టముదితో లోకః”] “ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோக:” (ருச) என்று ராஜ்யம் சென்றாற்போலே, இவ்வூரே யன்றிக்கே இவ்வூரோடே ஸம்பந்தித்த நாடெல்லாம் மங்களமாகை. (திங்கள் மும்மாரிபெய்து)-வெள்ளக்கேடும் வறட்கேடும் இன்றிக்கே ஊறெண்ணெய் விட்டாற்போலே யிருக்கை, ஒன்பதுநாள் வெயிலும் ஒருநாள் மழையுமாய். [“నికామే నికామే నః పర్జన్యో వర్షతు”] “நிகாமே நிகாமே ந: பர்ஜந்யோ வர்ஷது” (ருரு) என்று அபேக்ஷித்த காலத்திலே உண்டாயிருக்கை. (ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள)-கீழ்ச்சொன்ன திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வரனோடு ஒத்திருக்கை. விடிவோரைநட்டு நாயிறுபட்டபோது வந்துபார்த்தால்,

---

கிறார் (நாட்டார்க்கு இத்யாதி.) “பேர்” என்றதுக்கு - திருமந்த்ரம் அர்த்தமான பக்ஷத்திலே அருளிச்செய்கிறார் (ஸம்பந்த இத்யாதி.)

(ஸம்ருத்தமாய்)என்றதுக்குமேலே, “நீங்காத செல்வம் நிறைந்து” என்றது - ஊரில் ஸம்ருத்தியைச் சொல்லுகையாலே, நாட்டுக்கு அமங்களங்கள் போகையைச் சொன்னது உபலக்ஷணமாய், ஸம்ருத்திபர்யந்தம் சொல்லுகிறது என்று கருத்து. நீராடினால் நாடெல்லாம் ஸம்ருத்தமாம்படி எங்ஙனே யென்ன, அருளிச்செய்கிறார்(தந்தாம்இத்யாதி.) இத்தால் - சேதநகர் மோபாதிகமன்றிக்கே இவர்களிடத்தில் அநுக்ரஹத்தாலே இவர்களிருந்த நாடெல்லாம் ஸம்ருத்தமாமென்று கருத்து. த்ருஷ்டாந்த பூர்வகம் உக்தார்த்தத்தை விவரிக்கிறார் (ராமேராஜ்யம் இத்யாதி.) (மங்களமாகை) என்ற அநந்தரம், ‘கூடும்’ என்று ஶேஷம். ‘ஊறெணணெய் விட்டாற்போலே’ என்றது - தலையிலே ஊறவூற எண்ணெயிட்டாற்போலே என்றபடி. “பெருஞ்செந்நெல் ”என்ன அமைந்திருக்க, “ஓங்கு” என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கீழ்இத்யாதி.) ‘வளர்ந்த பெருஞ்செந்நெல்’ என்ன அமைந்திருக்க, “ஓங்கு” என்றத்தாலே தோற்று கிற அர்த்தத்தை அருளிச்செய்கிறார் (விடிவோரை இத்யாதி.) நாயிறுபட்ட போதென்றது - ஸூர்யனுச்சிப்பட்டபோது என்றபடி. கைகவித்து என்றது - ஸூர்யகிரணங்கள் கண்ணுக்குத் தாங்காதபடி தன் கையை வைத்துக் கொண்டு என்றபடி. தாங்கள் நீராடினால் வரும் ஸம்ருத்தி சொல்லுமளவில்,

கைகவித்துப் பார்க்கவேண்டும்படி யிருக்கை. மாரீசன் பெருமாளை ["వృక్షే వృక్షే చ పశ్యామి"] "வ்ருக்ஷேவ்ருக்ஷே ச பஶ்யாமி" (ருகூ) என்றாற் போலே, இவர்களுக்கும் ஸ்ரீவாமநநிமித்தமாக ["వృక్షే వృక్షే చ పశ్యామి"] 'வ்ருக்ஷேவ்ருக்ஷே ச பஶ்யாமி" இருக்கிறபடி. (ஓங்குபெருஞ் செந்நெல்) - ஒருமுதலே ஒரு செய்யை விளாக் கொலைக்கொண்டு அங்குன் ஒரு வரம்பில்லாமையாலே ஆகாஶ அவ காஶமுள்ளளவளவும் வளர்ந்திருக்கை. (ஊடு கயலுகள)- செருக்காலே யானைக்கன்றுபோலே வளர்ந்த கயல்களானவை செந்நெல்களின் உள்ளேபுக்குப் போகவிடம் பெருமையாலே துள்ளாநிற்கும். விழுக் காடறியாமே அகப்பட்டபடி. திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வர னைக் கண்ட அநுகூலர் பட்டது படாநிற்குமாய்த்து இவை.

(பூங்குவளைப்போதில் பொறிவண்டு கண்படுப்ப) - பூததகுவளை யிலே என்னுதல்; காலத்திலே என்னுதல்; தர்ஶநீயமான குவளைப் பூவிலே என்னுதல். (பொறிவண்டு கண்படுப்ப) - மதுபாநத்தாலும் அந்யோந்ய ஸம்ஶ்லேஷத்தாலும் பிறந்த புகரையுடைய வடிவிலே தொடைகொள்ளலாம்படி யிருக்கிற வண்டுகள், தன்னில்தான் ஒரு மகாபாரதத்தைப் பாரித்துக்கொண்டு புக்கு, புஷ்பத்திலே ஸ்பர்ஶ ஸௌக்யத்தாலே நஞ்சுண்டாரைப் போலே கிடந்து உறங்கி

---

"திங்கள் மும்மாரி" என்றாற்போலே ஸ்வாபாவிகமான ஸம்ருத்தியைச் சொல்லவேண்டியிருக்க, ஓங்குகையை இப்படி விஶேஷித்து அதிஶயோக் தியாகச் சொல்லுவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (மாரீசன் இத் யாதி;) பயத்தாலே மாரீசனுக்குத் தோற்றுமாபோல இவர்களுக்கு ப்ரேமா திஶய்யத்தாலே வாமநனுடைய தர்மங்கள் எங்குந் தோற்றிச் சொல்லு கிறார்களென்று கருத்து. கீழெல்லாம் தாத்பர்யம் அருளிச்செய்து, "பெரும்" என்றதுக்கும் "ஓங்கு" என்றதுக்கும் ஹேதுபூர்வகம் ஶப்தார்த் தம் அருளிச்செய்கிறார் (ஒருமுதலே இத்யாதி.) "செந்நெல்" என்ற ஏகவசநத்தாலே (ஒருமுதலே என்றது.) ஸஸ்யங்களை இப்படி வர்ணித்த துக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (திருவுலகளந்தருளின இத்யாதி.)

"பொறி" என்று - அழகாய், அதுக்கு ஹேதுபூர்வகம் அர்த்தம் அருளிச் செய்கிறார் (மதுபாநம் இத்யாதி.) கண்படுக்கை - உறங்குகையாய், அதன் எல்லை நிலத்தை அருளிச்செய்கிறார் (தன்னில் தான் இத்யாதி.) பகுவாயல வன் -பெரிய வாயையுடைய புருஷநண்டு. நள்ளி-பெண்நண்டு. ஊடும்-வெறுக்

யுணர்ந்து எழுந்திருக்கும்போது, "என்னை நீ எழுப்பிற்றிலை, என்னை நீ எழுப்பிற்றிலை" என்று ஒன்றுக்கொன்று "சீறு, பாறு" என்னாநிற்கும். "பள்ளிக்கமலத்திடைப்பட்ட பகுவாயலவன் முகம் நோக்கி - நள்ளியூடும்" என்னக்கடவதிறே. (ஊடு கயல் உகள - பூங்குவளைப்போதில் பொறிவண்டு கண்படுப்ப) - குவளைப்பூவிலே வண்டு மதுபானம்பண்ண என்று படிந்த தசையிலே கயல் ஊடே உகள, செந்நெல்லும் குவளையும் ஒக்கஅசைந்து, தூங்கு மெத்தையிலே உறங்கும் ராஜபுத்ரர்களைப்போலே வாயில் மதுவோடே வண்டுகள் கண்படுப்ப என்றபடி.

இது, வயலின் ஸம்ருத்தி; இனி, ஊரில் ஸம்ருத்தியிருக்கும்படி சொல்லுகிறது:—(தேங்காதே புக்கிருந்து)-எத்தனையேனும்முன்கையுரவியராயிருப்பார் இழியவேணுமாய்த்து பசுகறக்கப் புகும்போது. இதுக்கு அடி - பால் மாறாமையாலே எழுந்திருக்கப் போகாது. இத்தால், பால்போரும் பெருமையை அநுஸந்தித்தவாறே கறக்க ஒருப்படுவாரில்லை. திருவடி ஸமுத்ரம் கடக்க ஒருப்பட்டாற்போலே, ஒருப்பட்டுக்கொண்டு இழியவேண்டும்படியாய்த்து இருப்பது. (இருந்து) - பால்மாறிலிறே எழுந்திருக்கலாவது; ஸ்தாவரப்ரதிஷ்டைபோலே யிருந்து. (சீர்த்த முலை)-விரலிட்டுச் சுற்றிப்பிடிக்கவொண்ணாது இரண்டு கையாலும் அணைத்துக் கறக்கவேண்டும்படி கனத்திருக்கை.(பற்றிவாங்கக் குடம் நிறைக்கும்)-வாங்குகை-வலிக்கையாய், பற்றிக்கறக்கக் குடம்நிறைக்கு மென்னுதல்; முலையைப்பற்றிக் கைவாங்க, தானே நின்று பால் சொரியு மென்னுதல்; இட்ட

---

கும் என்றபடி. ஸமபிவ்யாஹார தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (குவளை இத்யாதி.)

தேங்காதே - ஏங்காதே, புக்கு - கறக்க ஒருப்பட்டு, இருந்து - ஒருநிலையாகஇருந்து என்று ப்ரஸ்தார்த்தமாய், ஏங்குகைக்கு ப்ரஸக்தியையும், ஒருப்படுகையிலுள்ள அருமையையும், இருக்கைக்கு ஹேதுவையும் அருளிச்செய்கிறார் (எத்தனையேனும் இத்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே.) பால்போரும் என்றது- பால் சுரக்கும் என்றபடி. "இருந்து" என்றதுக்குச் சொன்ன அர்த்தத்தை விவரிக்கிறார் (பால் இத்யாதி.) "சீர்த்த" என்றதுக்கு - பருத்த என்றுஅர்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார்(விரல் இத்யாதி.) 'பற்றி' என்றது- பற்ற என்றாய், "சீர்த்த முலைபற்றி - குடம் - வாங்க-நிறைக்கும்" என்றுஅந்வயம் திருவுள்ளம்பற்றி மூன்றாமர்த்தம்அருளிச்செய்கிறார் (இட்ட இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) "குடம்" என்றது-ஜாத்யேகவசநம்.

குடங்கள் வாங்கவாங்க நிறைக்கு மென்னுதல். குடமிடாதார் இழக்கிறது பசுவின்குற்றமன்றே. இச்சையுடையார் ஈஶ்வரனைப்பற்றி க்ருதக்ருத்யராமாபோலே யாய்த்து இவையும்.

(வள்ளல்)-கீழே பால்போரும் பெருமையைச் சொல்லிற்றாகில், இனி, வள்ளல்தனமாவது என்னென்னில்;—க்ருஷ்ணன்படி இவற்றுக்கும் உண்டாயிருக்கை. ஆரேனும் இவன்கழுத்திலே ஓலைகட்டி "தூதுபோ" என்றால் போமாபோலே யாய்த்து, இவையும்; சிறு ப்ரஜைகளுக்குங்கூடக் கட்டவும் அடிக்கவும் ஆம்படி தன்னைக்கொடுத்துக்கொண்டு நிற்கை. (பெரும்பசுக்கள்) - புல்லும் தண்ணீரும் தாரகமாக வளர்ந்தவையன்றிக்கே, க்ருஷ்ணஸ்பர்ஶமே தாரகமாக வளர்ந்தவை யாகையாலே, ஶ்ரீஶத்ருஞ்ஜயனைப்போலே யாய்த்து இருப்பது.

(நீங்காதசெல்வம் நிறைந்து)-அழிவில்லாத ஸம்பத்து நிரவதிகமாம்படி. சேதநருடைய புண்ய பாபாநுரூபமாகப் படிவிடும் ஸர்வேஶ்வரனடியாக வந்த ஸம்பத்தாகிலிறே அளவுபட்டிருப்பது; ["పాపానాంవాశుభానాంవా"] பாபாநாம்வாஶுபாநம்வா (ருஎ) என்னுமவளடியாகவந்த ஸம்பத்தாகையாலே ஊற்றுடைத்தாயிருக்குமிறே இது : ஆகையாலே, "நீங்காத செல்வம்" என்கிறது....(ந)

---

ஐஹிகபலமான ஸம்பத்தைத் தேஶவிச்சேதமும் காலவிச்சேதமுமின்றிக்கே நிரவதிகமென்னக் கூடுமோ? என்ன அருளிசெய்கிறார் (சேதநருடைய இத்யாதி.) (பாபாநாம்) இத்யாதிக்கு - புண்யபாபமடியாக வருமதன்றிக்கேயிருக்கையாலே அவள் க்ருபை அளவுபட்டிராமையால், அத்தால்வரும் ஸம்பத்தும் அளவில்லாதே நிரவதிகமாம்படி யிருக்குமென்று கருத்து.

(ஓங்குஇத்யாதி.) நீராடினால்-நாடெல்லாம்-தீங்கின்றி, திங்கள் மும்மாரி பெய்திடும்; கயல் - ஓங்கு பெருஞ்செந்நெலூடு - உகள, பொறிவண்டு - பூங்குவளைப்போதில் - கண்படுப்ப இருக்கும்; வள்ளல் பெரும்பசுக்கள் - தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி வாங்கக் குடம்நிறைக்கும்; இப்படி நீங்காத செல்வம் நிறைந்திடும்; எம்பாவாய் - எங்கள் வார்த்தையைப் பின்சென்று, ஓர் - ஓருங்கோள், [அஷ்டாக்ஷர ஸித்தருடைய வைபவத்தைப் புத்திபண்ணுங்கோள் என்றபடி] என்று அந்வயம் கண்டுகொள்வது. (ந)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—மூன்றாம்பாட்டு. (ஓங்கி இத்யாதி.) இப்பாட்டில் தங்கள் நோன்புக்கு அநுமதிதாநம்பண்ணினருக்கு வரக்கடவ த்ருஷ்டபலத்தைச் சொல்லுகிறார்கள்.

(ஓங்கி)-ஸம்ஸாரிசேதநோஜ்ஜீவநார்த்தமாகப் பரமபதத்தினின்றும் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளி; * ரக்ஷயாபேக்ஷாம் ப்ரதீக்ஷனாயிருக்கிற காலத்திலே, ஒருவனுக்கு ஆகஸ்மிக ஸ்வகடாக்ஷத்தாலே ஸத்வோத்ரேகம் பிறந்து, "அஹங்காராபிபூதரான நமக்கு ரக்ஷகனாவான் ஆர்?" என்று ரக்ஷகாபேக்ஷை பிறந்தவாறே, அது வே விளைநீராக அபிவ்ருத்தனாய். (உலகளந்த) - ஆபிமுக்யமுடைய ஒரு சேதநனை மாத்ரமன்றிக்கே, "எமர்-கீழ்மேல்-ஏழெழுபிறப்பும்-கேசவன்தமர்" என்கிறபடியே அவனோடே ஸம்பந்தமுடைய அனைவரையும் தன் திருவடிகளாலே அளந்து தனக்கு ஶேஷமாக்கிக் கொண்ட: இத்தால், அஹங்கார க்ரஸ்தரானவர்களை, மஹாபலியபிமாநத்தினின்றும் பூமியை மீட்டுத் தன்திருவடிகளாலே அளந்து தனக்கு ஶேஷமாக்கிக்கொண்டாற் போலே, தனக்கு ஶேஷமாக்கிக் கொண்டமையைச் சொல்லுகிறது. (உத்தமன்) - தன்னை அழிய மாறியாகிலும் பிறர்காரியம் செய்யுமவனாகையாலே "உத்தமன்" என்கிறது. (பேர்பாடி) - உத்தமன் பேருண்டு - அவனுடைய வாத்ஸல்ய ப்ரகாஶகமான திருமந்த்ரம்; அத்தை ஸ்வயம்புருஷார்த்தமாகப் பாடி.

(நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி) -அநந்யோபாயரான நாங்கள், ஸ்வயம்ப்ரயோஜநமான நோன்பை உத்தேஶித்து வ்யாஜமாக்கி. (நீராடினால்) - பகவதநுபவத்தைப் பண்ணினால். (நாடெல்லாம்)-பூமியெங்கும். (தீங்கின்றி) - தேஹாத்மாபிமாநாதி தோஷங்களொன்றுமின்றிக்கே. (திங்கள்மும்மாரிபெய்துஇத்யாதி.)-ஸத்வோத்தரமான காலத்திலே அநந்யார்ஹஶேஷத்வ அநந்யஶரணத்வ அநந்யபோக்யத்வங்களாகிற ஆகாரத்ரயஜ்ஞாநமுண்டாய் அத்தாலே அபிவ்ருத்தங்களாய் ஒருருக்கு ஒருவரே போரும்படியான சேதநருடைய நடுவிலே தத்ஸம்பந்திகளாய்த் தத்தேகதாரகரான ஆத்மவர்க்கங்கள் களிப்பாலே துள்ளாநிற்க. (பூங்குவளை இத்யாதி.) - ["ஸௌம்யரூபஃ"] "ஸௌம்ய ரூபஃ" என்கிறபடியே ஜ்ஞாநிகளோடு ஒக்கவளர்ந்து அத்தாலே தர்ஶநீயரான ஜ்ஞாநாதிகரிடங்களிலே, ஸ்வாமித்வஸூசகமான

திருவபிஷேக முடையனாய்ப் பரஞ்ஜ்யோதிஸ்ஸான ஸர்வேஶ்வரன் லக்ஷ்மீஸநாதனாய் ஜ்ஞாநலப்தனாய் வந்து அவர்களுடைய ஹ்ருதயங்களிலே ஸாகஸ்பர்ஶத்தாலே கண்வளர. இது, சேதநஸம்ருத்தி; இனி, சைதந்யஸம்ருத்தியைச் சொல்லுகிறது. இது ஶிஷ்யஸம்ருத்தியைச் சொல்லுகிறதாகவுமாம்.

(தேங்காதே இத்யாதி) - ["[illegible]"] "யதோ ப்ரஹ்மணஆவாமதஃ" என்கிறபடியே பிற்காலியாமல் குருகுலத்திலே ப்ரவேஶித்து; ["[illegible]"] "ஸம்வத்ஸரம்" இத்யாதிப்படியே ஸாஸ்திரனாயிருந்து தன்னைப் பற்றினார்க்குப் பரமபதநாதனோடே பரமஸாம்யாபத்தியைப் பண்ணிக்கொடுக்கும் சீர்மையையுடையனாய், ப்ரஜைக்கு முலைபோலே ஶிஷ்யனுக்கு தாரகமான திருவடிகளைப்பற்றி ப்ரார்த்திக்க, உபதேஶபாத்ரபூதரான ஶிஷ்யரைப் பரிபூர்ண ஜ்ஞாநிகளாக்குமவர்களாய் ஶிஷ்யவிதேயராய் நிரந்தர பகவத்குணாநுபவத்தாலே பரிபுஷ்டரான ஆசார்யர்களுடைய அவிச்சிந்நமான ஸம்பத்து பரிபூர்ணமாய்த்து. ... ... ... ...(௩)

அ.—நான்காம் பாட்டு. உபயவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரன் இங்கே க்ருஷ்ணனாய்வந்து தன்னைத் தாழவிட்டு, பெண்கள் சொல் விற்றுச் செய்யும்படிக்கு ஈடாகத் தான் கையாளாய், அவர்களுடைய அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணிப் போருகிறபடி கண்டால், இதர தேவதைகளுக்குச் சொல்லவேண்டாவிறே. இவர்களும் அவனுமான சேர்த்தியிலே கிஞ்சித்கரித்து அத்தாலே ஸ்வரூபலாபமாயிரு

---

௪-ஆம் பாட்டு. (ஆழி இத்யாதி.) நாட்டாருக்கு நோன்பு என்று பேரிட்டு க்ருஷ்ணஸம்ஶ்லேஷம் பண்ணத் தேடுமவர்கள் நோன்புக்காக வர்ஷதேவதையை ப்ரார்த்திக்கிறார்க ளென்னுமது கூடிற்றேயாகிலும், இவர்கள் அஷ்டாக்ஷர ஸம்பந்தராகையாலே தேவதாந்தர ப்ரார்த்தனை ஸ்வரூபவிருத்த மாகையால் அவர்களை விதிக்கிறார்களென்று திருவுள்ளம்பற்றி அந்தத்தேவதைகள் விதேயராகைக்குக் கைமுதிக ந்யாயத்தாலே உபபத்தி அருளிச்செய்கிறார் (உபய இத்யாதி.) அவன் பரமப்ரணயியாகையாலே கையாளாயிருந்தானேயாகிலும்இவர்களிருக்கும்படி எங்ஙனே யென்ன, அருளிச்செய்கிறார்(இவர்களும் இத்யாதி.) ஸ்வரூபலாபத்தில் ஆசையாலே கிஞ்சித்கரிக்க வருமவர்கள் என்னுமளவே யன்றிக்கே,["[illegible]"]'பீஷாஸ்மாத் வாதஃபவதே"இத்யாதிப்படியே எம்பெருமான்பக்கல் பீதியாலும், ததீயரைக்கண்டு அஞ்சிக் கிஞ்சித்கரிக்குமவர்க

க்குமிறே. ["ద్రవన్తి దైత్యాః ప్రణమన్తి దేవతాః"] "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:" (ருஅ) என்கிறபடியே பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினார்க்கு தேவதைகள் தாங்களே வந்து [க] உபஸ்திதராகக் கடவரிறே; ["స్వపురుషమ్"] "ஸ்வபுருஷம்" (ருஅ) இத்யாதி. இந்தஶ்லோகார்த்தத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச்செய்தார்; "திறம்பேன்மின்" இத்யாதி. ஆக, இப்படி பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினாரை இதரதேவதைகள் அநுவர்த்திக்கக்கடவராகையாலே, வர்ஷதேவதையான பர்ஜந்யன், "நாம் இச்சேர்த்தியிலே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவேணும்" என்று வந்து, "நான் இங்குத்தைக்குச் செய்யவேண்டும் அடிமையை நியமிக்கவேணும்" என்ன, செய்யக்கடவ படியை "இன்னபடியும், இன்னபடியும்" என்று கையோலைசெய்து கொடுக்கிறார்கள்.

---

ளென்று நியாமகாந்தரத்தை ப்ரமாணபூர்வகம் அருளிச்செய்கிறார் (த்ரவந்தி இத்யாதி.) ஸம்வாதாந்தரங்களை அருளிச்செய்கிறார் (ஸ்வபுருஷம் இத்யாதி; ["స్వపురుషమభివీక్ష్య పాశహస్తం వదతి యమః కిల తస్య కర్ణమూలే । పరిహర మధుసూదన ప్రపన్నాన్ ప్రభురహమన్యనృణాం న వైష్ణవానామ్"] "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாஶஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே | பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்." திறம்பேன்மின்கண்டீர் - தப்பாதே கிடிகோள். திருவடி தன்நாமம்மறந்தும்-வகுத்தவனுடைய திருநாமத்தை மறக்கவுமாம்; ["భగవచ్ఛరణం"] "பகவச்சரணம்." என்கிறதும் கழியுண்கிறது இத்தாலே. புறந்தொழா மாந்தரை - தேவதாந்தர ஸ்பர்சமின்றிக்கே யிருக்குமவர்களை. பர்த்தாவோடு பார்யைக்குப் பொருத்தமில்லையே யாகிலும் ருசியுண்டானவன்று கூடலாம்; பர்த்ரந்தர ஸம்ச்லேஷமுண்டானால் யோக்யதையும் கெடுமத்தனையிறே. இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்களென்றான் - வணங்கி அநுகூலவேஷத்தோடே போருங்கோளென்றான். நமனும் தன் தூதுவரைக் கூவிச்செவிக்கு - ["స్వపురుషమ్"] "ஸ்வபுருஷம்" என்றதுபோலேயும், ["కర్ణమూలే"] "கர்ணமூலே" என்றதுபோலேயும், "தன் தூதுவர்" என்றும் "செவிக்கு" என்றும் அருளிச்செய்தாரிறே. 'கையோலை செய்து' என்றது -ஜ்ஞாபகத்துக்குச் சீட்டெழுதிக்கொடுக்கையை.

---

[க] உபஸ்த்திதர் - சேஷபூதர்.

ச.—ஆழிமழைக்கண்ணாவொன்றுநீகைகரவேல்
ஆழியுட்புக்குமுகந்துகொடார்த்தேறி
ஊழிமுதல்வனுருவம்போல்மெய்கறுத்துப்
பாழியந்தோளுடைப்பற்பநாபன்கையில்
ஆழிபோல்மின்னிவலம்புரிபோல்நின்றதிர்ந்து
தாழாதேசார்ங்கமுதைத்தசரமழைபோல்
வாழவுலகினிற்பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீராடமகிழ்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—ஆழி - கடல்போலே கம்பீரமான ஸ்வபாவத்தையுடைய, மழைக் கண்ணா-வர்ஷத்துக்கு நிர்வாஹகனானவனே! நீ-நீ, ஒன்றும்-அல்பமும், கைகரவேல் - (உன் ஔதார்யத்தில்) மாறுதொழியவேணும்: (என்று வர்ஷதேவதையான பர்ஜந்யனைப்பார்த்துச்சொல்ல); (அவன் 'நான்செய்ய வேண்டும் அடிமையை நியமிக்கவேணும்' என்ன), ஆழிஉள் - நடுக்கடலில், புக்கு - இழிந்து, முகந்துகொடு - (நீரையெல்லாம்) மொண்டுகொண்டு, ஆர்த்து - பெருமுழக்கமிட்டு, ஏறி - (ஆகாசமெங்கும்) பரவியும்,—ஊழி முதல்வன்- காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனுடைய, உருவம்போல் - வடிவுபோலே, மெய் கறுத்து - உடம்பு கறுத்தும்,—பாழி- இடமுடைத்தாய், அம் - அழகிதாயிருந்துள்ள, தோள்உடை - திருத்தோள்களையுடையனாய், பற்பநாபன் - திருநாபீகமலத்தை யுடையனான ஸர்வேச்வரனுடைய, கையில் - வலத்திருக்கையில் வர்த்திக்கிற, ஆழிபோல் - திருவாழியாழ்வானைப்போல், மின்னி - ப்ரகாசித்துக்கொண்டும்,—கையில் - இடத்திருக்கையில் வர்த்திக்கிற, வலம்புரிபோல் - ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானைப்போல, நின்று அதிர்ந்து - மாறாதே நின்று ஶப்தித்தும்,— உலகினில் வாழ - லோகத்திலுள்ளார் வாழும்படியாகவும்,—நாங்களும் - (நோன்பு நோற்கின்ற) நாங்களும், மார்கழி - (எங்கள்நினைவு பலிக்கும்படியான) மார்கழிமாஸத்தில், மகிழ்ந்து - (க்ருஷ்ணனது சேர்க்கையால்) ஸந்தோஷித்து, நீராட - ஸ்நாநஞ்செய்யவும், —தாழாதே - காலவிளம்பமின்றியே, சார்ங்கம் உதைத்த - ஸ்ரீஶார்ங்கத்தால் தள்ளப்பட்ட, சரமழைபோல் - பாணவர்ஷம்போலே, பெய்திடாய் - மழைபெய்யவேணும் என்பது. இதனால், தங்கள் நோன்பிற்கு அங்கமான ஸ்நாநத்தைச் செய்யும்படி மழைபெய்யவேணுமென்று பர்ஜந்யதேவதையை ப்ரார்த்திக்கின்றார்களென்க.

வ்யா.—(ஆழிமழைக்கண்ணா)-கம்பீரஸ்வபாவத்தையுடையனாய் வர்ஷத்துக்கு நிர்வாஹகனானவனே! ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை ப்ரஹ்மருத்ரர்தலையிலே போகட்டு, ஸ்வரூபத்துக்குச்சேர்ந்த பாலநவிதியைத் தான் நடத்துமாபோலே, நாட்டாரைக் கட்டுவது விடுவதா

கிற க்ரௌர்யவ்யாபாரத்தை யமாதிகள் தலையில் ஏறிட்டு, “நம்மோபாதி ஜக்த்தை ஈரக்கையாலே தடவி நோக்கவல்லன்” என்று ஈஶ்வரனாலே மதிக்கப்பட்டவனல்லையோ நீ? இத்தால் – நாட்டார் சிறுமை பாராதே, உன்பெருமைக்கு ஈடாக வர்ஷியென்கை. “ஆழி மழை” என்று-மண்டலவர்ஷ மாக்கி, மண்டலவர்ஷத்துக்கு நிர்வாஹகனானவனே! என்னவுமாம். ஸுக்ருதம்பண்ணின ரிருந்தவிடத்தே வர்ஷித்தும், பாபம்பண்ணின ரிருந்தவிடத்தே வர்ஷியாதும் போருவதொன்றுண்டிறே; எங்கள்பாக்யத்தையே நினைத்துப் புஜிக்கும் நாடாகையாலே நீ அங்ஙன் புதைத்துப் பார்க்கவொண்ணாது; [“వావానాంవాశ్లాఘానాంవా”] ‘வாவாநாஂவாஶ்லாநாஂவா” (ருஎ) என்கிற எங்கள்கோடியிலே யாகவேணும். நாட்டுக்குஇட்ட நினைவைக்கொண்டு படுக்கைப்பற்றிலே செல்லாதேகொள். இவனை இங்ஙனேசொல்லுவா னென்னென்னில்? இப்பெண்கள் பாலைகளாகையாலே இவன்பேர்சொல்லஅறியார்கள்; ஆகையாலே, இவன் அதிகரித்த கார்யந்தன்னையிட்டே சொல்லுகிறார்கள்.

---

“ஆழி” என்று - ஸமுத்ரமாய், அதுபோன்றவனென்று ஶப்தார்த்தமாய்,பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (கம்பீரம் இத்யாதி.) அவனுக்குக் காம்பீர்யம் ஏதென்ன, எம்பெருமானாலே மதிக்கப்படுகையால்வந்தபெருமையென்று அத்தை ஸத்ருஷ்டார்தமாகஅருளிச்செய்கிறார்(ஸ்ருஷ்டி இத்யாதி.) “ஆழி” என்று வட்டமாய், அத்தால் நினைக்கிறது மண்டலத்தையாய், அது தானும் ஓரோவிடங்களிலே சுழித்து வர்ஷிக்கையாய்,மண்டலவர்ஷத்துக்கு நிர்வாஹகனே யென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார்(ஆழிமழை இத்யாதி.) இப்படி இவனை விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகங்காட்டுகிறார் (ஸுக்ருதம்இத்யாதி.) ‘புதைத்து’ என்றது - சிலதேசத்திலே பெய்யாதே நீரை அடக்கிக்கொண்டு என்றபடி.எம்பெருமான் நியமித்தபடியன்றோ நான் செய்வதென்ன, அருளிச்செய்கிறார் (நாட்டுக்கு இத்யாதி.) ‘படுக்கைப்பற்றிலே’ என்றது - அந்தப்புரத்துக்குவிட்ட தேஶத்திலே என்றபடி. பர்ஜந்யனே! என்று பேரிட்டுச் சொல்லாதே, “ஆழிமழைக்கண்ணா” என்று தொழிலையிட்டுச் சொல்லுகைக்குத் தாத்பர்யத்தைச் சங்காபரிஹார ரூபேண அருளிச்செய்கிறார் (இவனையித்யாதி.) தேவதை அப்ரஸித்தமானமையாலும் தங்கள் ராஜகுலத்தாலும் இன்னபடிக்குக் கடவனென்பாரைப் போலே தொழிலையிட்டுச் சொல்லுகிறார்களென்று நிர்வஹிப்பாருமுண்டு.

“நீ, கையில், ஒன்றும் -அல்பமும், கரவேல்” என்று அந்வயித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்(உன்னுடையஇத்யாதி.)மாறுகைக்கு ப்ரஸக்தியைக் காட்டிக்கொண்டு விவரிக்கிறார் (சேதநனுடைய இத்யாதி.) குசாண்டு - குஸ்ருஸ்டி. பச்சை - உபஹாரம்.

(ஒன்றும் நீ கைகரவேல்) - உன்னுடைய ஔதார்யத்தில் ஒன்றும் மாறுதபடி தோற்றவேணும். "கை" என்று - கொடை. கரக்கை - மாறுகை. சேதநனுடைய நன்மைதீமைகளைக் கணக்கிட்டுப் படிவைக்கும் குசாண்டுள்ள ஈஸ்வரகோஷ்டியைப் பார்த்து விஷமமாக வர்ஷியாதே, ["நக்ஷுப்திர்நாவபராத்யதி"] 'நக்ஷுப்திர் நாவபராத்யதி' (ருக்.) என்று பாபமே பச்சையாக ரக்ஷிக்கும் எங்கள் படியைப் பார்த்து எங்குமொக்க வர்ஷிக்கவேணும்.

(ஆழியுள்புக்கு)-ஸகரர் கல்லின சிறுகுழியிலன்றிக்கே, ஸமுத்ரத்திலே போய்ப் புகவேணும். அதிலும் வாய்கரையிலேயாகவொண்ணாது, நடுவே சென்றிழியவேணும். (முகந்துகொடு) - இழிந்தால், மேற்பட்டஜலம் கொண்டுபோரவொண்ணாது, கடலை மணலே யோஷிக்கும்படி க்ரஹிக்கவேணும். (ஆர்த்து)-இராமடம் ஊட்டுவாரைப்போலே முகம்தோற்றுமல் நின்று ரக்ஷிக்கும் ஈஸ்வரனைப்போலேயாகவொண்ணாது; [க] அநஶநத்திலே தீக்ஷித்த முதலிகளுடையத் திருவடிவரவாலே ஸத்தைபெற்று ஸம்ப்ரமித்தாற்போலே, நாடுடைய உங்களுடைய த்வநி கேட்டு வாழும்படி, மின்னி முழங்கி வில்லிட்டுக்கொண்டு பெரிய ஸம்ப்ரமத்தோடே வந்து தோற்றவேணும். (ஏறி)- ஆகாஶாவகாஶம் இடமடையும்படி உங்கள் வடிவைக்கொண்டு [உ] பாரிக்கவேணும்; "விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்" என்றும், "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" என்றும் சொல்லுகிறபடியே.

---

"ஆழி" என்றது - ஸ்வாபாவிகமான ஆழத்தை யுடைத்தான தென்று விவக்ஷித்து, வ்யாவ்ருத்தி பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸகரர் இத்யாதி.) 'ஸகரர்கல்லின சிறுகுழியில்' என்றது - ஸகரபுத்ரர்கள் கல்லின இந்தப் பக்கத்தில் முன்பாழியிலே என்றபடி. "ஆழியுட்புக்கு" என்ற பதச்சேர்த்தியைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இழிந்தால் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) "ஆர்த்து" - த்வநித்து என்றாய், இது மேகத்துக்கு ஸஹஜமாயிருக்க இப்படிச் சொல்லுகைக்கு வ்யாவ்ருத்தி பூர்வகம் அர்த்தம் அருளிச்செய்கிறார் (இராமடம் இத்யாதி.) அவிதேய புத்ரராய்த் தர்மச்சாவடியிலே பட்டினியே கிடப்பார்க்குத் தங்கள் ப்ரேமத்தாலே மாதாபிதாக்கள் இராவிலே மடத்திலே தர்மச்சாவடியிலே, அந்நத்தைக் கூவியிடுவார்கள்; அவர்களைப்போலே யென்றபடி. 'முகம்தோற்றுமல்' என்றது . இவர்கள் தங்களையும் அறியாமல் என்றபடி. 'திருவடிவா

---

[க] அநஶநம்—பட்டினியிருக்கை. [உ] பாரிக்கை—பரப்புகை.

(ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து)- ஜகத்காரணபூதனானவனுடைய வடிவுபோலே இருக்கவேணும். இந்நிர்த்தேஶத்துக்குக் கருத்து என்னென்னில்?-நெடுநாள் தன்பக்கலிலே [க]ஸம்ஹ்ருதமாய்க்கிடந்த ஜகத்தை உண்டாக்குவதாக ஸங்கல்பித்தவாறே, பண்டுபோலன்றிக்கே கருவடைந்த பயிர்போலே நிறத்திலே வருவது ஒருவேறுபாடு உண்டு; அத்தை நினைக்கிறார்கள். காலோபலக்ஷித ஸகல பதார்த்தங்களையும் உண்டாக்கினவனுடைய வடிவு உங்களுக்கு உண்டாகவேணும். (மெய்கறுத்து) - அகவாயில் நீர்மை உங்களாலுண்டாக்க வொண்ணாதிறே; வர்ஷித்தால் அநந்தரம் வெளுத்துப் போமவையிறே இவை.

(பாழிஅம்தோள்)-[“బాహుచ్ఛాయామవష్టబ్ధో యస్యలోకోమహాత్మనః”] ‘வாஹூச்சாயாமவஷ்டப்தோயஸ்யலோகோமஹாத்மந:’’(கூ௦) என்கிறபடியே உபயவிபூதியும் ஒதுங்கினாலும் ஒதுங்கின ரக்ஷய

---

வாலே’ என்றது, பிராட்டியைத் திருவடிதொழுத ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஆர்த்துக்கொண்டுவந்த திருவடிவரவாலே என்றபடி. முகந்துகொடார்த்துப் பெய்திடாய் என்ன அமைந்திருக்க, “ஏறி” என்றதுக்குக் கருத்து (ஆகாஶ இத்யாதி.) மேலாப்பு - விதாநம்.

“ஊழி” என்று - காலத்தைச் சொல்லுகிறதாய், அது உபலக்ஷணமாய் ஜகத்தைச் சொல்லுகிறதாகத் திருவுள்ளம்பற்றி ஶப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (ஜகத்காரணபூதன் இத்யாதி.) ‘இந்நிர்த்தேசத்துக்கு’ என்றது, க்ருஷ்ணனென்னாதே ‘ஊழிமுதல்வன்’ என்ற நிர்த்தேசத்துக்கு என்றபடி. கரு கர்ப்பம். “ஊழி” என்ற பதம் ஜகத்தைச்சொல்லும் ப்ரகாரத்தை முக்தகண்டமாகத் தாமே காட்டாநின்றுகொண்டு, உக்தார்த்தத்தை நிகமிக்கிறார் (கால இத்யாதி.) “உருவம்போல்—கறுத்து” என்றபோதே மெய் அர்த்தஸித்தமாயிருக்கவும், “மெய்” என்று விஶேஷித்ததுக்கு மெய்யே கறுத்தென்று அர்த்தம் திருவுள்ளம்பற்றி, வ்யாவர்த்யங்காட்டுகிறார் (அகவாயில் இத்யாதி.) நீர்மை - க்ருபை. அகவாயில் க்ருபையில்லாமைக்கு நியாமகங்காட்டுகிறார் (வர்ஷித்தால் இத்யாதி.) ஜகத்துக்கு வர்ஷத்தையுபகரிக்கும்போது க்ருபையுண்டாகில் பின்பு வைவர்ண்யம் ஜநிகவொண்ணாதிறேயென்று கருத்து.

“பாழி” என்றதுக்கு - இடமுடைத்தாயென்று அர்த்தத்தை விவக்ஷித்து, த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (பாஹுச்சாயாம் இத்யாதி.) “யஸ்ய” என்றபோதே லோகத்துக்கெல்லாம் ஆஶ்ரயமாயிருக்கிற அதிஶயம்

---

[க] ஸம்ஹ்ருதமாய்—லயித்து.

வர்க்கம் அளவுபட்டு,ரக்ஷகனுடைய காவல்துடிப்பே மிக்கிருக்கை. (பாழித்தோள்)-வலியுடைய தோள் என்னுதல்; இடமுடைய தோள் என்னுதல். (அம்தோள்)-அழகியதோள். அங்ஙனன்றிக்கே, குழைச் சரக்கேயாகிலும் விடவொண்ணாத போக்யதை மிக்கிருக்கை: ரக்ஷக முமாய் அதுதானே போக்யமுமா யிருக்கை. (பாழிஅம்தோளுடைப் பற்பநாபன்)-பிள்ளைகளைத் தொட்டிலிலேவளர்த்திப் புற்பாயிட்டுப் பூரித்து ஆயுதங்கொண்டு நோக்கியிருப்பாரைப்போலே, திருநாபீ கமலத்திலே வ்யஷ்டிஸ்ருஷ்டிக்குக் காரணபூதனான ப்ரஹ்மாவைப் பெற்றுவைத்துத் திருத்தோள்களாலே காத்துக்கொண்டிருக்கிற வன்.(பற்பநாபன்கையில்ஆழிபோல்மின்னி)-ஸ்ருஷ்டிக்கு முதலான ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த திருநாபீகமலத்தையுடைய ஸர்வேஶ் வரன்கையில் திருவாழியோபாதி மின்னவேணும். இங்கிர்ப்பந்தத் துக்குக் கருத்து என்னென்னில்?-["ஸுதஶ்ச ஜாதஃ"] "வஸுதஶ்ச ஜாதஃ" என்றால் அத்தால் வந்த ஹர்ஷம் விஞ்சியிருக்கச்செய்தே யும் காம்பீர்யத்தாலே அது தோற்றாதிருப்பர்கள். அவ்வவர்க்கு உரிய அகம்படியரானவர்கள், அந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டு நெய்யாடல் போற்றிக்கொண்டு திரியுமாபோலே ப்ரதமஜனான ப்ரஹ் மா உண்டானபின்பு ஸர்வேஶ்வரனுக்குப் பிறந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுக் கொண்டாடினான் திருவாழியாழ்வான்; ஆகையாலே, அவனை ஒப்பாகச் சொல்லுகிறது.

---

தோற்றியிருக்கவும், 'மஹாத்மந:' என்கைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கி றார் (உபய இத்யாதி.) † குழைச்சரக்கு - அஸாரமான வஸ்து. "பர்பநாபன்" என்ன அமைந்திருக்க "பாழியந்தோளுடை" என்று விசேஷித்ததுக்கு ஸத் ருஷ்டாந்த தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிள்ளைகளை இத்யாதி.) கர்ணி கை தொட்டிலாகவும், அத்தைச் சூழ்ந்திருக்கும் கேஸரங்கள் புற்பாயாகவும், த்ருஷ்டாந்தரூபம் கண்டுகொள்வது. 'ஆழிபோல்' என்ன அமைந்திருக்க, "பற்பநாபன் கையில்" என்றதுக்கு சங்காபரிஹாரரூபேண பாவம் அருளிச் செய்கிறார் (இங்கிர்ப்பந்தத்துக்கு இத்யாதி.) அகம்படியர் - சேஷபூதர்.

"வாழவுலகினிற்பெய்திடாய்" என்று -லோகமெல்லாம் வாழவேணுமென் னுமவர்கள் அபிப்ராயத்தைத் திருவுள்ளம்பற்றி "வலம்புரிபோல்" என்றது

---

† 'கோழைச்சரக்கு' என்றும் பாடம்.

(வலம்புரிபோல் நின்றதிர்ந்து)-பாரதஸமரத்தில்ஸ்ரீபாஞ்சஜந்ய த்வநிபோலே யிருக்கவேணும். ["ஸ ঘোষো ধার্তরাষ্ট্রাণাং হৃদয়ানি ব্যদারয়ৎ"] "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம்ஹ்ருதயாநி வ்யதாரயத்" (கூக என்கிறபடியே அநுகூலர் வாழவும் ப்ரதி கூலர் முடியவும் ஆகவேணும். (நின்று அதிர்ந்து)-அதுபோலே ஒரு கால் முழங்கி விடவொண்ணாது, மாறாதே நின்று அதிரவேணும். (தாழாதே)-நோன்பிலே நின்று உபக்ரமித்து உபவாஸக்ருஶைகளா யிருந்த எங்கள் வடிவு இருந்தபடி கண்டாயிறே; அத்தனை கால விளம்பத்தோடே யாகவொண்ணாது. ஆர்த்திக்கு முற்பாடனாய் ரக்ஷிக்கும் ஈஶ்வரனைப் போலே யாகவேணும். [க] தேவமாத்ருகம் போலன்றிக்கே, பகவத்ஸமாஶ்ரயணம் நதீமாத்ருகம்போலே [உ] சரதமென்கை. (சார்ங்கம் உதைத்த சரமழைபோல்)-இரைபெறாத பாம்புபோலே, முன்பு விஷயம் இல்லாமையாலே அடங்கியிருந்த ஸ்ரீஶார்ங்கம், சக்ரவர்த்தித்திருமகன் கடைக்கணித்தவாறே நூறாயிரம்ஶரவ்ருஷ்டியைத் தானேபண்ணிற்று;* எய்வண்ணவெஞ்சிலை யிறே. உடையவன் அம்பு பெருக்கியிடுகை. (சார்ங்கமுதைத்த)- அகம்படியர் கிளர்ந்தால் அரசனாலும் அடக்கப்போகாதிறே; அது போலே, பெருமாள் கடைக்கணித்தபின்பு பெருமாளாலும் விலக்க வொண்ணாதாயிருக்கை: ["অবষ্টভ্য মহদ্ধনুঃ"] "அவஷ்டப்ய மஹத்

---

க்கு - வ்யாவர்த்யபூர்வகம் தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (பாரத இத்யாதி.) இத்தை விவரிக்கிறார் (ஸகோஷ இத்யாதி.) ப்ரதிகூலரென்றது - அதிமாத்ர ப்ரதிகூலர் என்றபடி. பர்ஜந்யன் தேவதாந்தரமாகையாலே தாழ்த்திருக்க ப்ர ஸக்தி யுண்டென்று திருவுள்ளம்பற்றி, தாழாதிருக்கைக்கு ஹேதுபூர்வகம் தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (நோன்பிலே இத்யாதி.) 'கண்டாயிறே' என்ற அநந்தரம்,'ஆகையாலே' என்று ஶேஷம். தேவதாந்தரங்கள் விளம்பிக்கைக் கும், ஈஶ்வரன் அவிளம்பேந ரக்ஷிக்கைக்கும் த்ருஷ்டாந்தம் அருளிச்செய் யாநின்றுகொண்டு ஸமர்த்திக்கிறார் (தேவ இத்யாதி.) சரதம் - அமோகம். எய்கையே- சரம் விடுகையே. வண்ணம் - ஸ்வபாவமாகவுடையதாய், வெம்- க்ரூரமான, சிலை-தநுஸ் என்று பாசுரார்த்தம். 'சரமழை' என்ற அநந்தரம் ["ততো রামো মহাতেজাঃ ধনুরাদায় বীর্যবান্ । প্রবিশ্য রাক্ষসং সৈন্যম্"] "ததோராமோமஹாதேஜா: தநுராதாயவீர்யவாந் |

---

[க] தேவமாத்ருகம் - வானம் பார்த்த நிலம். [உ] சரதம் - நிச்சய மாகப் பயனை விளைப்பது.

ஊடநு:'' (சூஉ) என்னக்கடவதிறே. (சரமழை)-["ஶரவர்ஷ ஂவவர்ஷ கூ''] "ஶரவஷ-ுஂவவஷ-ுஹ" (சூங) என்கிறபடியே (வாழ உலகினில் பெய்திடாய்) - த்ருஷ்டாந்தமான ஶரவர்ஷத்தில் ராக்ஷஸ ஜாதியடங்க முடிந்தது; அங்ஙனன்றிக்கே அநுகூல ப்ரதிகூல விபாகமின்றிக்கே லோகமாக வாழவேணும்.

அழகிது! ஈஶ்வராஜ்ஞையாலே நான் முன்பே அதிகரித்ததொரு கார்யமன்றோ, இங்குத்தைக்கு நான் கிஞ்சித்கரித்தவனும்படி யென்னென்ன? (நாங்களும் மார்கழிநீராட)-நாங்கள் காலத்திலேபோய் மார்கழி நீராடக்கடவோம். அதுவும் முன்பே ஊராக நிஶ்சயித்த தொன்றன்றோ; இப்போது வந்த தன்னேற்றமென்னென்ன? (மகிழ்ந்து)-நாங்களும் நோன்பு நோற்றோமாய், அந்த நோன்புக்குப் பலமான வர்ஷமு முண்டாய்த்ததாய், க்ருஷ்ணனோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே மகிழ்ந்து நீராடக்கடவோம். (மகிழ்ந்து) - ஊரார்க்கு, மார்கழி நீராடுகைக்கு மேலே ப்ரீதிபூர்வகமாகக் குளிக்கவேண்டுவதொரு நிர்ப்பந்தமில்லையே. உனக்கு ப்ரியகரமாக க்ருஷ்ணனும் நாங்களும் மகிழ்ந்து குளிக்கிறோம் என்கிறார்கள். † ... ... ... ... ... ... (ச)

---

ஹவிஸ்ஸாராக்ஷவஸஂவெவஹ நா்'' என்று வசநஶேஷம் சொல்லிக்கொள்வது.

மேலுக்கு அவதாரிகை (அழகிது இத்யாதி.) 'தன்னேற்றம்' என்றது - நான் உங்களுக்குக் கிஞ்சித்கரித்தேனும்படியான அதிஶயம் என்றபடி. மகிழுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (நாங்களும் இத்யாதி.) ப்ரதீகக்ரஹணபூர்வகம் உத்தரார்த்தத்தை அருளிச்செய்கிறார் (ஊரார்க்கு இத்யாதி.) 'ஊரார்க்கு' என்றதுக்கு 'நிர்ப்பந்தமில்லை' என்றதோடு அந்வயம். 'உனக்கு ப்ரியகரமாக' என்றது - உனக்குப் புருஷார்த்தமாக என்றபடி. இத்தால்-நாங்களும் க்ருஷ்ணனும் மகிழ்ந்துகுளிக்கை அலப்யலாபமன்றோ என்றுகருத்து. இவர்கள் மகிழ்ந்துகுளிக்கை அவனுக்குப் புருஷார்த்தமென்கைக்கு ஸம்வாதங்காட்டுகிறார் (ப்ரஹர்ஷயிஷ்யாமி இத்யாதி.)

ஏல் ஆழிமழைக்கண்ணா! எம்பாவாய்-எங்கள் வார்த்தையைப் பின்சென்று, ஓர்-கையோலை செய்தபடியில் ஒன்றும்குறையாமல் விசாரித்துக்கொள் என்று அநுக்ரஹபுத்தியாலே சொல்லுகிறார்களென்று கண்டுகொள்வது.

---

† இங்கு "ப்ரஹர்ஷயிஷ்யாமி' இத்யாதி வாக்யத்தைக் கோசாந்தரங்களிற் காண்க.

## ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—நாலாம்பாட்டு. (ஆழியித்யாதி)-இப்பாட்டில், இவர்களை, வர்ஷதேவதை, "அடியேனுக்கு ஒரு கிஞ்சித்காரம் நியமித்தருள வேணும்" என்று ப்ரார்த்திக்க, இவர்கள் அவனுக்குக் கைங்கர்யம் நியமித்தபடியைச் சொல்லுகிறது.

வ்யா.—(ஆழி)-அபரிச்சேத்யமான ஜ்ஞாநவைபவத்தை யுடையையாய் (மழைக்கண்ணா)-பகவத்காருண்யவர்ஷநிர்வாஹகனானவனே! என்னுதல்; பூமிப்பரப்பிலுள்ள சேதநரடைய பகவத்காருண்யத்துக்கு விஷயமாம்படி பண்ணவல்லவனே! என்னுதல்; பகவத்குணாம்ருதவர்ஷிகளான ஆசார்யர்களுக்கும் ஆசார்யபதம் நிர்வஹிக்குமவனே ! என்னுதல். (ஒன்றும்)-ஏகதேஶமும். (நீ) - ஸ்வஸம்பந்தமே ஹேதுவாக அனைவரையும் பகவத்காருண்யத்துக்கு விஷயமாக்கவல்ல நீ. வர்ஷியாவிட்டால் உடம்புவெளுக்கும் நீ. (கைகரவேல்) – பகவத்குணவர்ஷத்தில் சோராதே கொள்ளாய்.

(ஆழி) - பகவத்குணாம்ருதஸாகரத்திலே. (உள்புக்கு)-உள்ளே அவகாஹித்து.(முகந்துகொடு)-யாவத்குணங்களையும் புத்திஸ்தமாம்படி [க] அகஞ்சுரிப்படுத்திக்கொண்டு. அதாவது - எப்பேர்ப்பட்ட அபராதிகளாகிலும் தாம் அபிமாநித்தவர்களில் காருண்யத்தைப் பண்ணும்படி எம்பெருமானை விதேயமாம்படி பண்ணிக்கொள்ளுகை. (ஆர்த்து) - ஸஸம்ப்ரமமாக. (ஏறி) - ஆசார்யபதத்திலேறி.

(ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து) - ஸ்ருஷ்ட்யுந்முகனான ஈஶ்வரனுடைய திருமேனியைப்போல் காருண்யஸ்ருஷ்ட்யுந்முகனான உன்திருமேனியிலும் வேறுபாடு உண்டாய்.

(பாழிஅம் தோளுடைப் பற்பநாபன்கையில் ஆழிபோல் மின்னி) - பலிஷ்டமாய் ஸர்வாபாஶ்ரயமாய் அதிஸுந்தரமான புஜங்களை யுடையனாய், ஸமஷ்டிஸ்ருஷ்டிக்குக் கடவனாய், ப்ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்தாநமான திருநாபீகமலத்தையுடைய எம்பெருமானுடைய திருக்கையிலே யிருக்கிற திருவாழியாழ்வானைப்போலே, காருண்ய ஸ்ருஷ்டிக்குக் கடவரான எம்பெருமானை யோகபலத்தாலே ஸாக்ஷாத்கரிக்கையால்வந்த மிக்கபுகரை யுடையராய். (வலம்

---

[க] அகஞ்சுரிப்படுத்துகை - நெல்லைக்குவுக்கின விடமுண்டாமா போலே ஸங்கோசிப்பிக்கை; உட்புறத்தில் தானே யடங்குமாறு செய்கை யென்றபடி.

புரிபோல் நின்று அதிர்ந்து) - இவ்விடத்திலேயும் "பற்பநாபன்கையில்" என்று அநுஷங்கிக்க வேணும். அவன்கையில் வர்த்திக்கும் ஸ்ரீ பாஞ்சஜந்யம்போலே இடைவிடாமல் த்வநித்து. அதாவது - ப்ரணவார்த்தத்தை அனைவரும் அறியும்படி திருவாய்மொழி முகத்தாலே வெளியிட்டு அருளிச்செய்கை.

(தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்)-அவிச்சிந்நமாக ஶார்ங்கம் வர்ஷித்த பாணவர்ஷம்போலே. ப்ரணவத்தில் ஶேஷ ஶேஷிபாவ ஸம்பந்த ப்ரயுக்தமான பகவத்காருண்ய வர்ஷத்தை. (வாழ) - லௌகிகரெல்லாரும் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து வாழும்படி. (உலகினில்) - லௌகிகரிடங்களிலே. (பெய்திடாய்) - பகவத்குண கதாம்ருதத்தை வர்ஷிக்கக்கடவாய்.

(நாங்களும் மார்கழி நீராட) - பகவத்கைங்கர்யைகபோகரான நாங்களும், "நோன்பு" என்கிற வ்யாஜத்தாலே பகவத்ஸம்ஶ்லேஷத்தைப் பண்ணி. (மகிழ்ந்து)-மகிழக்கடவோம். அதாவது - 'பகவதநுபவஸஹகாரிகள் இத்தனைபேருண்டாவதே!' என்று அவர்களோடே கலந்து பகவதநுபவத்தைப்பண்ணி ஆநந்திக்கை.

இப்பாட்டில், வர்ஷதேவதைக்கு அவன் அதிகரித்த கார்யத்தையே தங்களுக்கு இஷ்டமாக நியமிக்கையாலே பகவத்பாகவதஇஷ்டத்வேந நித்யநைமித்திகாதி தர்மங்களை யதாவாக அநுஷ்டிக்கை, ப்ரபந்நாதிகாரிகளுக்கு ஆவஶ்யகமென்றதாய்த்து. ... (ச)

அ.—அஞ்சாம்பாட்டு:—பெண்பிள்ளைகளிலே ஒருத்தி, "நாம் இப்படியே கனக்கப் பாரித்துக்கொண்டு இழியாநின்றோம்; நமக்குத்தான் இது தலைக்கட்டுகைக்கு விஶ்வாஸமென்? அநாதிகால ஸஞ்சிதமான கர்மங்கள் இதுக்கு விரோதத்தைப் பண்ணுதோ? ["ஸ்ரீ ஶ்ரீ॰

அஞ்சாம்பாட்டு.—(மாயனை இத்யாதி.) "செப்பு" என்று - ஒருத்தியைப் பார்த்துச் சொல்லுகிறதாக இருக்கிற பாசுரத்துக்குச் சேரவேண்டி, ஒருத்தி ப்ரஶ்நம்பண்ணினதாகவும், அவளைக்குறித்துப் பலர் சொல்லுமளவில் பலமிடறுகையால் விசதமாகத் தெரியாதென்று ஒருத்தியே சொன்னாளாகவும் பாவம் அருளிச்செய்கிறார் (பெண்பிள்ளைகளிலே இத்யாதி.) விச்வாஸமென் - நிச்சயஹேது வென். 'பஹுவிக்நாநியன்றோ' என்றதுக்கு - சக்ரவர்த்தித் திருமகன் திருவபிஷேகத்துக்கு வஸிஷ்டன் முஹூர்த்தமிடவும், பாக்யாதிகரான பெருமாள் முடிசூட இருக்கவும், ஜகத்தடைய ["ஸர்வாந்தேவாந் நமஸ்யந்தி"] "ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி"

ಿబహువిఘ్నాని”] “ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி” (ஸூச)யன்றோ?” என்று ப்ரஶ்நம்பண்ண, அவர்களிலே வேதாந்தஜ்ஞாநமுடையா ளொருத்தி, “நாம் நம்முடைய விரோதிகளைப் போக்கிக்கொண்டு வந்து இதிலே யிழிகையென்று ஒரு பொருளில்லை; நமக்கு அடைத்த பகவதநுபவத்தைப் பண்ணுகின்றால், சேர்பால் போசரூபமாகப் பருகுமவனுக்குத் தன்னடையே பித்தம் போமாபோலே, இவை தன்னடையே விட்டு ஓடிப்போம்; ஆனபின்பு, இனி அயோக்யதையைப் பார்த்து அகலவேண்டா” என்கிறாள்.

மாயனைமன்னு வடமதுரை மைந்தனைத் தூயபெருநீர்யமுனைத் துறைவனை ஆயர்குலத்தினில் தோன்றும் மணிவிளக்கைத் தாயைக் குடல்விளக்கஞ்செய்த தாமோதரனைச் செப்பு; போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்கிறாள்.

---

என்று ப்ரார்த்திக்கவும், பெரியபெருமாள் ஆச்ரயணீயராயிருக்கவும், [“శ్రేయాంసి బహువిఘ్నాని భవన్తి మహతామపి”] “ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி பவந்தி மஹதாமபி” என்று அங்கும் விக்நம் வந்தபடி கண்டோமே யென்று கருத்து. சேர்பால் - குழம்புப்பால். ‘தன்னடையே விட்டு ஓடிப்போம்’ என்றதுக்கு - எம்பெருமான் தன் ஸங்கல்பத்தை அழியமாறி ஸ்ரீபீஷ்மார்ஜுநஸங்கல்பத்தை முடிய நடத்துமவனாகையாலே, நாம் இம்மஹோத்ஸவத்திலே அதிகரித்துச் செல்லாநிற்கவே, அதுக்கு விக்நங்களைத் தன்னடையே போக்குமென்று கருத்து. பெருமாள் தாம் முடிதவிர்ந்தது, மஹாராஜர்க்கும் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கும் முடிசூட்டுகைக்காக என்று கண்டுகொள்வது.

“அகலவேண்டா வென்கிறாள்” என்றத்தை அந்வயமுகேந விவரிக்கிறார் (மாயனை இத்யாதி.) “செப்பு” என்றது - பாடுஎன்றாய், அது உபலக்ஷணமாய், தூமலர்தூவித்தொழுது, பாடு - சிந்தி யென்றபடி. “செப்பு” என்ற அநந்தரம், “தூயோமாய்” இத்யாதியையுங்கூட்டிக்கொள்வது. ஏல்-இப்படி, எம்பாவாய் - எம்வார்த்தையைப் பின்சென்று, ஓர் - த்ருடமாக விசாரித்துக் கொள். அன்றிக்கே, ஏல்பாவாய் - வாராய் பெண்ணே! ஓர் - நன்றாகப் புத்திபண்ணு என்று இங்ஙனே யாகவுமாம்.

மூ.—மாயனைமன்னுவடமதுரைமைந்தனைத்
தூயபெருநீர் யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினிற்றோன்றும்மணிவிளக்கைத்
தாயைக்குடல்விளக்கஞ்செய்த தாமோதரனைத்
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது
வாயினாற்பாடி மனத்தினாற்சிந்திக்கப்
போயபிழையும்புகுதருவானின்றனவும்
தீயினிற்றூசாகுஞ் செப்பேலோரெம்பாவாய்.

பதவுரை.—மாயனை - ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையவனும்,-மன்னு-பகவத்ஸம்பந்தம் மாறாத, வடமதுரை - ஸ்ரீமதுரையில் (திருவவதரித்த), மைந்தனை - மிடுக்குடையவனும்;—தூய - பரிசுத்தமாகிய, பெரு - ஆழம் மிக்க, நீர் - ஜலத்தையுடைய, யமுனைத்துறைவனை - யமுனையாற்றங்கரையில் வர்த்திக்குமவனும்,-ஆயர்குலத்தினில் - இடைக்குலத்தில், தோன்றும்-திருவவதரித்தருளினதாக ப்ரகாஶிக்கும், மணிவிளக்கை - ச்லாக்யமான விளக்குப்போன்றவனுமான,—தாயை - யசோதைப்பிராட்டியின், குடல் - திருவயிற்றை, விளக்கம்செய்த - ப்ரகாஶிக்கப்பண்ணின, தாமோதரனை - இடையர்க்கும் இடைச்சிகளுக்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி ஸுலபனானவனை, செப்பு - (அவன் திருநாமங்களை) அநுஸந்தி; நாம் - (அவன் வர இருக்கக்கடவ) நாம், தூயோம் ஆய் - பரிசுத்தராய்க்கொண்டு, வந்து - வந்துகிட்டி,—தூ மலர் - தூயனவான புஷ்பங்களை தூவி - அடைவுகெடப்பரிமாறி, தொழுது - அஞ்சலிபண்ணி, வாயினால் பாடி வாயால் திருநாமஸங்கீர்த்தநஞ்செய்து, மனத்தினால் சிந்திக்க - மநஸ்ஸால் த்யாநிக்க,—போய பிழையும் - (பகவத்ஜ்ஞாநம் பிறப்பதற்கு) முன்புசெய்த பாபங்களும், புகுதருவான் நின்றனவும் - பின்பு (நம்மை யறியாமல்) வருகிற பாபங்களும், தீயினில் தூசு ஆகும் - நெருப்பிலிட்ட பஞ்சுபோல் உருமாய்ந்துபோம் என்கிறாள். இதனால், 'நமது நோன்பு முற்றுப்பெறுமோ? பெறாதோ?' என்று ஸந்தேஹித்து ஒருத்திகூற, வேதாந்தஜ்ஞாநமுடைய மற்றொருத்தி பூர்த்தியாகாமைக்குக் காரணமான பாபங்களெல்லாம் தன்னடையே போமென்று ஸந்தேஹத்தைப் போக்குகிறாளென்கை.

வ்யா.—(மாயனை) - பரமபதத்திலே * அயர்வறுமமரர்களதிபதியாய்க் கொண்டு தன் ஐஶ்வர்யவ்யாவ்ருத்தி தோற்றவிருக்கும் இருப்பை நினைத்து, அதுதான் வாசாமகோசரமாயிருக்கையாலே

"மாயன்" என்றதுக்கு - க்ரித்ரிமனென்று சொல்லுகை ப்ரக்ருதத்துக்குச் சேராமையாலே, ஆஶ்சர்யபூதனென்று திருவுள்ளம்பற்றி, ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பரமபதத்திலே இத்யாதி.) க்ருஷ்ணாவதாரத்திலேப்ரவணரான இவர்கள் பரமபதத்திலிருப்பை நினைக்க ப்ரஸக்தி ஏதெ

"மாயன்" என்கிறது. க்ருஷ்ணாவதாரத்தில்நீர்மை தங்களுக்கு நிலமல்லாமையாலே பரமபதத்திலே அநுபவிக்கக் கோலி, அது தானும் நிலமல்லாமையாலே "எத்திறம்!" என்கிறார்கள். (மாயனை)- ஒருருக்குத் தன்னைக்கொடுத்த நீர்மையிறே இது ; ஒரு நாட்டுக்காகத் தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கிற நீர்மையாகையாலே ஏற்ற முண்டே அங்குத்தைக்கு. அன்றிக்கே, ["ஜாதோஸி தேவ தேவேஶ ஶங்கசக்ர கதாதர"] 'ஜாதோஸி தேவதேவேஶ ஶங்கசக்ர கதாதர" (ரு) என்கிறபடியே நித்யஸூரிகளுக்கும் நேர்நின்று பார்க்க வொண்ணாத நிரங்குஶ ஐஶ்வர்யத்தை யுடையவன்கிடீர் அவதரித் தானென்று, அவதாரஸௌலப்யத்தை யநுஸந்தித்து, அந்தஆஶ்சர் யத்தைச் சொல்லுவதற்கு முன்பே ஆழங்காற் பட்டு "எத்திறம்!" என்கிறார்களாகவுமாம். [ஜாதோஸி] (ஜாதோஸி)—தேவகிவயிற்றில் பன்னிரண்டுமாஸம் குடியிருந்துபிறந்த பிள்ளைத்தனத்தில் குறை வறப் பிறந்தவனுக்கும் இல்லைசெய்யவொண்ணாதபடி மூதலித்துக் கொடுக்கலாயிருக்கை, [தேவதேவேஶ] (தேவதேவேஶ) - இப்படி

---

ன்ன, அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி.) பரமபதத்தில் நீர்மையை அநுஸந்தித்து ஈடுபடுகிறார்களென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஒருருக்கு இத்யாதி.) ["ஜாதோஸி தேவதேவேஶ ஶங்கசக்ரகதாதர | திவ்யம்ரூப மிதம் தேவ ப்ரஸாதேநோபஸம்ஹர"] "ஜாதோஸி தேவதேவேஶ! ஶங்கசக்ர கதாதர | திவ்யம்ரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம் ஹர" என்றவிடத்தில் ["தேவ-இதம் திவ்யரூபம்-ப்ரஸாதேந-உபஸம்ஹர"] "தேவ-இதம் திவ்ய-ரூபம்-ப்ரஸாதேந-உபஸம்ஹர" என்று - இவ்வளவே சொல்ல அமைந்திருக்க ["ஜாதோஸி"] "ஜாதோஸி" என்று பிறந்திருக்குமதைச் சொல்லு கைக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார்(தேவகி இத்யாதி.)நான் உன்மந்திரத் தில் பிறக்கையால் கம்ஸாத்பீதனுப்உபஸம்ஹரிக்கச்சொல்லாநின்றாய்; இந்த திவ்யரூபம் ஏது? மநுஷ்யரூப மேது? நான் உன்க்ருஹத்திலே பிறக் கையென்று ஒருபொருளுண்டோ? என்று இல்லைசெய்யப்போகிறானென்று வஸுதேவர் மூதலித்துக் கொடுக்கிறாரென்று கருத்து. ["தேவதேவேஶ"] "தேவதேவேஶ" என்றவிடத்தில் இரண்டு தேவபத மிருக்கை யாலே முந்தினது ["தீவ்யந்தீதி தேவாঃ"] "தீவ்யந்தீதி தேவாঃ" என்கிற வ்யுத்பத்தியாலே ஸநாதநத்யோதமாநத்வம் தாத்பர்த்தமாய், ஆக்கரான தேவர்களைச்சொல்லுகையன்றிக்கே அகர்மவச்யரைச் சொல்லுகிறதென் றும், இரண்டாம் தேவபதம் [தேவயதி - மோதயதி] 'தேவயதி -

யிருக்கிறவன்ஆரென்னில்? ஒருகாலத்திலும் கர்மஸ்பர்ஶமில்லாத நித்யஸூரி பரிஷந் நிர்வாஹகனான * அயர்வறுமமரர்களதிபதி யென்கை. அது அறிந்தபடி என்னென்னில், [ശംഖചക്രഗദാധര] "ஶங்கசக்ரகதாதர"-[ "தமஸஃபரமோ தாதா ஶங்கசக்ரகதாதரঃ" ]"தமஸঃபரமோதாதா ஶங்கசக்ரகதாதரঃ" (கக) என்று பரமபதநிலயமுமாய் ஸூரிநிர்வாஹகமுமான வஸ்துவுக்கு அஸாதாரண சிஹ்நமான [க] ஆழ்வார்களோடே அவதரிக்கையாலே.

(மன்னுவடமதுரை)-பகவத்ஸம்பந்தம்மாறாத தேஶம். முன்பு ஸித்தாஶ்ரமமாய் ஸ்ரீவாமநன் நெடுங்காலம் தபஸ்பண்ணி, ஶத்ருக்நாழ்வான் [உ]வன்னியமறுத்துப் படைவீடுசெய்து, ஸர்வேஶ்வரன் எப்போதும் இப்படி அவதரித்துப் போருவதொரு தேஶம். (வடமதுரை)["மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ ஶுபா | யஸ்யாம் ஜாதோ ஜகந்நாதஸ்ஸாக்ஷாத் விஷ்ணுஸ்ஸநாதந:"] "மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ ஶுபா| யஸ்யாம் ஜாதோ ஜகந்நாதஸ்ஸாக்ஷாத் விஷ்ணுஸ்ஸநாதந:".(கஎ) [மதுரா நாம] (மதுரா நாம)—"நலமந்தமில்லதோர்நாடு" என்னுமாபோலே: பரமபதம்போலே போக்யதையால் ப்ரஸித்தமானஊர். [நகரீ] (நகரீ)-பரமபதம் கலவிருக்கை யென்னும்படி பிறந்து விரும்பின படைவீடு. [புண்யா] (புண்யா) - அவனைத் தருகைக்கு உபாயமாகை. [பாபஹரீ] (பாபஹரீ)-

---

தாரயதி' என்கிற வ்யுத்பத்தியை அவலம்பித்து ஆநந்தஜநகத்வத்தாலே வந்த நிர்வாஹகத்வத்தைச் சொல்லுகிறதென்றும்; ஈஶபதம் - இந்த நித்யஸூரிகளுக்கு ஸ்வாமி யென்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்றும் ["தேவஶ்சாஸாவீஶஶ்ச தேவேஶ:, தேவாநாம் தேவேஶ: தேவதேவேஶ:"] "தேவஶ்சாஸாவீஶஶ்ச தேவேஶ:, தேவாநாம்தேவேஶ:தேவதேவேஶ:"என்று திருவுள்ளம்பற்றி சங்காபூர்வகமாக அர்த்தம் அருளிச்செய்கிறார் (இப்படி இத்யாதி.) இரண்டாம் தேவ பதார்த்தம் (நிர்வாஹகனை என்றது.) ஈஶபதார்த்தம் (அயர்வறுமித்யாதி.) [ "தமஸঃபரம:"] "தமஸঃபரம:-"ப்ரக்ருதிமண்டலத்துக்கும் அவ்வருகேயிருக்குமவன். தாதா-ஸ்வாநுடைய ப்ரதாநத்தாலே அங்குள்ளாரைத் தரிப்பிக்குமவனென்னுதல்; போஷிக்குமவனென்னுதல். "ஶங்கசக்ரகதாதர:" "ஶங்கசக்ரகதாதர:"...

---

[க] ஆழ்வார்கள் - சங்க சக்கரங்கள். [உ] வன்னியம் - குறும்பு.

விரோதிநிரஸநத்துக்கும் தானேயாகை. [ஸிஷ்] (ஸாஹா)-ப்ராப்ய மும் தானேயாகை. [யஸ்ரஜாத:] (யஸ்ரோஜாத:) - இத்தனைக் கும் அடி திருவவதரித்தருளுகை. [ஜநஹநாய:] (ஜநஹநாய:)-தன் ப்ரஜைகள் பட்ட ஆபத்தை நீக்குகைக்கு அவர்களை இழக்கமாட் டாமல் பிறந்தபடி. [ஸாக்ஷாத்] (ஸாக்ஷாத்)- "அங்குவைத்து இங் குப்பிறந்த" என்னுமாபோலே, அஜஹத்ஸ்வபாவனாய்க்கொண்டு. [விஷ்ணு:] (விஷ்ணு:)- வ்யாபகவஸ்து வ்யாப்யைகதேஶத்திலே அந்தர்ப் பவித்தபடி. [ஸநாதந:] (ஸநாதந:) - நித்யனானவன்; ஆஶ்ரிதஸ ஜாதீயனாய்ப்பிறந்த மெய்ப்பாடு. (மைந்தனை) - மிடுக்கனை; "தந் தைகாலிற் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண்,வந்த வெந்தை" என்று மாதாபிதாக்கள்காலில் விலங்கு கழலவந்து திருவவதரித்த படி. பிள்ளை யென்றுமாம்; திருவவதரித்து எனக்கு உபகரித்த பின்பு இளகிப் பதித்தபடியாதல்; ராஜா வென்றுமாம். தன்னழ கைக்காட்டி இருந்ததே குடியாகத் தன்வஶமாக்கினபடி.

(தூயபெருநீர் யமுனைத்துறைவனை)—விரஜைபோலே போந்த விடத்துக்கு ஓராறுஉண்டானபடி. (தூய)-["வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநு மாத்ரோதகோ யயௌ"] "வஸுதேவோவஹந்க்ருஷ்ணம்ஜாநுமாத்ரோதகோயயௌ" (கூஅ) என்று ஶ்ரீவஸுதேவர் எழுந்தரு

ஷணயொ:" என்றிறே தாது. இத்தால் -தேவதேவத்வம் சொல்லிற்றாய்த் து. இத்தைச் சொல்லுகிறார்(பரமபத நிலயமுமாய் ஸூரிநிர்வாஹகமுமான வஸ்துவுக்கு என்று.) "மன்னு" என்றதுக்கு-வர்த்திக்கப்பட்ட என்று அர்த்தமாய், பலிதார்த்தம் அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி.) "மல்லை மூதூர்வடமதுரை" என்று ஆழ்வார் ஈடுபடுமாபோலே, இவர்களும் "மன்னு வடமதுரை" என்று ஈடுபடுகிறார்களென்று திருவுள்ளம்பற்றி, ரிஷி ஈடுபட் டமையை ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (மதுராநாம இத்யாதி.) "மைந் தன்" என்றதுக்கு நாலர்த்தம்;-மிடுக்கனென்றும், பிள்ளையென்றும், யுவா வென்றும், ராஜாவென்றும்: இத்தைக்காட்டுகிறார் (மிடுக்கனை இத்யாதி வாக்யடஞ்சகத்தாலே.) ["ரஞ்ஜயதி" "ராஜயதி"] என்கிற வ்யுத்பத தியை உட்கொண்டு உபபாதிக்கிறார் (தன்னழகை இத்யாதி)

* கலங்காப்பெருநகரம் விட்டு வந்தவனுக்குத் திருவாய்ப்பாடி யென்றொரு [க] அஞ்சினான்புகலிட முண்டானாப்போலே, விரஜையை மறுக்கும்படி ஓராறு உண்டாவதே! என்று ஈடுபடுகிறார்களென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (விரஜை இத்யாதி.)

[க] அஞ்சினான் புகலிடம் - பயந்தார்க்கு ஒதுங்குமிடம்.

ளுவித்துக்கொண்டு போகிறபோது பாங்காக வற்றிக்கொடுத்தபடி. க்ருஷ்ணனும் பெண்களும் மாறிமாறிக் கொப்பளிக்கையாலே வந்த தூய்மையாகவுமாம். ["ప్రసాదంనిమ్నగా యథా"] "ப்ரஸாதம் நிம்நகா யதா" (௬௧) என்று - நீரில் தெளிவைச் சொல்லிற்றாகவுமாம். (பெருநீர்)-("యమునాజ్ఞాతిగమ్భీరాం నానావర్తఝషాకులామ్") "யமுநாஞ்சாதிகம்பீராம் நாநாவர்த்தஜஷாகுலாம்" (௭௦) என்று அத்யகாதமான ஆறு பாங்காக வற்றிக்கொடுத்தது; மநோஹரமாகையாலும் பாவநமாகையாலும் ஶ்லாக்யதையைச் சொல்லிற்றாகவுமாம். (யமுனைத்துறைவனை) - திருக்குரவைஸ்தாநமாகையாலே பெண்கள் படிந் துறையையுடையவனை.

(ஆயர்குலத்தினில்தோன்றும்அணிவிளக்கை)-பரமபதத்திற்காட்டில் குணங்கள் இடைச்சேரியிலே அத்யுஜ்ஜ்வலமானபடி; அந்தகாரத்தில் தீபம்போலே (தோன்றும்) - ["అచ్యుతభానునా । దేవకీపూర్వసన్ధ్యాయామావిర్భూతమ్"] "அச்யுதபாநுநா । தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்" (௭௧) என்றுகொண்டு கர்ப்பத்தில் தோற்றில்லாமை. கீழைத்திக்குக்கு ஆதித்யனோடு உள்ள ஸம்பந்தம் இவளோடு அவனுக்கு உள்ளது. ஸ்ரீமதுரையிலே அவதரித்திருக்

---

["వల్లవీవదనోచ్ఛిష్ట పవిత్రాధరవిద్రుమః"] "வல்லவீவதநோச்சிஷ்ட பவித்ராதரவித்ரும:" என்கிறபடியே - க்ருஷ்ணன் திருப்பவளத்துக்குப் பவித்ரதையையுண்டாக்கும் இடைப்பெண்களுடைய எச்சில் ஆற்றுக்கு உண்டாகச் சொல்லவேண்டாவிறே யென்று திருவுள்ளம்பற்றி, அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனும் இத்யாதி.) "தூய" என்ற பதச்சேர்த்தியைத் திருவுள்ளம்பற்றி முதலர்த்தத்துக்கு அநுகுணமாக ஈடுபாடுதோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (யமுநாம் இத்யாதி.)

ஆயர்குலத்தினில் வர்த்திக்குமதாய், தேவகிவயிற்றில் தோற்றினதாய், அத்தாலே ச்லாக்யமான விளக்கென்று திருவுள்ளம்பற்றி, "மாயன்" என்றத்தைக்கடாக்ஷித்து, "ஆயர்குலத்தினில்" என்றதுக்குப் பரமபதம் வ்யாவர்த்யமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பரமபதத்தில் இத்யாதி.) "வடமதுரைமைந்தனை" என்றத்தைக் கடாக்ஷித்து, ஆயர்குலத்தினில் தோன்றும் - அவதரித்ததாக ப்ரகாசிக்கும், ச்லாக்யமான விளக்கென்று சப்தார்த்தமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸ்ரீமதுரை இத்யாதி).

கச்செய்தே திருவவதாரப்ரகாஶம் திருவாய்ப்பாடியிலே சென்றது என்றுமாம். (அணிவிளக்கை) - திருவாய்ப்பாடிக்கு மங்களதீப மென்றுமாம்.

(தாயைக் குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை) - வயிற்றில் தழும்பாலே யசோதைப்பிராட்டியை விளங்கப்பண்ணினவனை. (தாயைக் குடல்விளக்கஞ்செய்த)-[“కౌసల్యా శుశుభే తేన పుత్రేణామిత తేజసా”] “கௌஸல்யா ஶுஶுபே தேந புத்ரேணாமித தேஜஸா” (எ௨) என்றும், “என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்” என்றும் நாட்டார் புகழ்ச்சியாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டங்கட்டினவனை. (தாமோதரனை) - தன்னுடைய பவ்யதையாலும் அவளை நாட்டார் கொண்டாடும்படி பண்ணினவனை. நம்முடைய பந்தம் நம்மாலறுக்கப்போகாதாபோலே, அவனுடைய பந்தமும் அவனாலறுக்கவொண்ணாதே. இந்தப்பந்தத்தை அநுஸந்தித்தால் ஆஶ்ரிதருடைய ஸம்ஸாரபந்தம் போமென்கை.

(தூயோமாய்வந்து நாம்)—அங்குத்தைக்கு நாம் யோக்யரோ அயோக்யரோ என்று பாராதே இருந்தபடியே வந்து. இருந்தபடி

---

ஆயர்குலத்தினில் அணிவிளக்காய்த்தோன்றினவனை யென்று விவக்ஷித்து மூன்றாம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடிக்கு இத்யாதி.)

(தாமோதரனை) - அத ஏவ, தாயைக் குடல்விளக்கம் செய்தவனை யென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வயிற்றில் இத்யாதி.) “மாயனை” இத்யாதிகளைக் கடாக்ஷித்து பாத்வாதி குண விஶிஷ்டனுகையாலும் தாமோதரத்வத்தால் வந்த பவ்யதையாலும் தாயைக்கொண்டாடும்படிபண்ணினவனென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (கௌஸல்யா இத்யாதி.) கீழ்ப்பதங்களைப்போலே இப்பதத்தாலும் ஈடுபாடு தோற்றவேண்டி, பவ்யனானபடியைத் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நம்முடைய இத்யாதி.) ஸம்ஸாரிகள் பந்தத்துக்கும் அவனுடைய பந்தத்துக்கும் ஸாதர்ம்யத்தைப்பற்றி ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச்செய்து, வைதர்ம்யத்தைப்பற்ற ஈடுபாடாகப் பாவம்அருளிச்செய்கிறார் (இந்த இத்யாதி.) இத்தால் - இவனுடைய பந்தமாகில் அநுக்ரஹகார்யமாகையாலே அநுபவித்தேயறவேணு மென்றபடி.

வேதாந்த ஜ்ஞாநமுடையாளொருத்தி சொல்லுகிறாளாகையாலே வேதாந்த முக்யதாத்பர்யமான ப்ரபத்திக்கு ஸ்நாநாதிகள் அநபேக்ஷிதங்களாகையாலே யோக்யரோஅயோக்யரேவென்று பாராமையே தூய்மை என்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அங்குத்தைக்கு இத்யாதி.) உக்தத்துக்கு ப்ரமா

யே வருகைக்கு மேற்பட சுத்திதேடவேண்டாவிறே. [[illegible]] "ஸாக்ஷாத்வெ த்ரிவிபீஷண:" (எ௩) என்றதிறே இருந்தபடியே வந்த ஸ்ரீவிபீஷணாழ்வானை. (வந்து நாம்) - அவன்வர இருக்கடவநாம் வந்து. [[illegible]] "உபஸ்தேயைரு பஸ்தித:" (எச) என்றும், [[illegible]] 'வக்ஷ்யாமி ஹைவ' (எரு) என்றுமிறே அவன்வார்த்தை. முறைகெட வருவானென்னென்னில்? - உபாயத்தில் துணிவு புறப்படவொட்டாதாபோலே உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்கவொட்டாதிறே.

(தூமலர் † ) - "மிக்கசீர்த்தொண்டரிட்ட பூந்துளவம்" என்றும், "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி" என்றும், அநங்யப்ரயோஜநமான பூவிறே. (மலர்) - யோக்யமென்றும் அயோக்யமென்றும் பாராதே கண்ணுக்குத்தோற்றின மலரென்றுமாம். (தூவி)- [[illegible]] "யதாததாவாபி" (எசு)என்னும் ந்யாயத்தாலே அடைவு கெடப் பரிமாறி; ப்ரேமம், அடைவுபார்க்கவொட்டாதிறே. (தொழுது) - அவனுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அஞ்சலியைப்பண்ணி. [[illegible]] "ருணம்ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி"(எஎ) என்றிறே அவன்படி. அவனைத் தொழுவித்துக்கொள்ளுமவர்களிறே தொழுகிறார்கள். பித்ராதிகளுக்கு அடைவுகேடென்று தோற்றாதபடி அஞ்சலி பண்ணுகிறார்கள் என்றுமாம்.

---

ணங் காட்டுகிறார், (ஸாக்ஷாத் இத்யாதி.) [[illegible]] 'ஆஜகாமமுஹூர்த்தேந ஸாக்ஷாத்வெ த்ரிவிபீஷண:' என்று - மஹாராஜர், கடலிலே ஒருமுழுக்கிட்டு வாராதிருக்க, பாவசுத்தியைக்கண்டு [[illegible]] 'ஸாக்ஷாத்' என்றானிறேயென்று கருத்து. "நாம்" என்றதன் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவன் இத்யாதி.) நாம் இப்படியிருக்கைக்கு அவன் வரும் ஸ்வபாவனேயென்ன அருளிச்செய்கிறார் (உபஸ்தேயைரித்யாதி.)

அவன் அஞ்ஜலியைப்பொறுக்கமாட்டாமையை இரண்டுவகையாக உபபாதிக்கிறார் (ருணமித்யாதி வாக்யத்ரயத்தாலே.)

---

† "தூமலர்கள்" என்றும் பாடம்.

(வாயினால்பாடி) - வாய்படைத்த லாபம் பெற்றோமென்று திருநாமத்தைச்சொல்லி; மநஸ்ஸஹகாரமின்றிக்கே யென்றுமாம். [ఉవాచ]“உவாச” என்னுமாபோலே-வருவதற்குமேலே சொல்லுவதும் செய்தோமென்றுமாம். (மனத்தினால் சிந்திக்க) - மநஸ்ஸைப்படைத்த லாபம் பெற்றோமென்று; [“యత్పురుషో మనసాఽభిగచ్ఛతి, యద్ధి మనసా ధ్యాయతి, తద్వాచా వదతి, తత్కర్మణా కరోతి”] ‘யத்புருஷோ மநஸாऽபிகச்சதி, யத்தி மநஸா த்யாயதி, தத்வாசா வததி, தத்கர்மணா கரோதி” (எஅ) என்று மநஸ்ஸடியாக வரக்கடவ உக்தியும் வ்ருத்தியும் தவிர்ந்து, தொழுது. “வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க” என்று - தனித்தனியே கரணங்கள் மேல்விழுந்தபடி சொல்லுகிறது.

(போயபிழையும்புகுதருவான்நின்றனவும்)-உத்தரபூர்வாகங்கள். (தீயினில் தூசு ஆகும்) - நெருப்பிலிட்ட பஞ்சுபோலேயாம். தூசு- பஞ்சு. பாலும் கண்டசர்க்கரையும் குடிக்கப் பித்தம் தன்னடையே போமாபோலே, பகவதநுபவம்பண்ண நெருப்பிலிட்ட பஞ்சுக் குவைபோலே உருமாய்ந்துபோம். [“ఇషీకతూలమగ్నౌ ప్రోతం ప్రదూయేత] - “இஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத” (எசு) என்று முண்டிறே.

“பாடி” என்ன அமைந்திருக்க, “வாயினால்” என்றதுக்கு மூன்றுதாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வாய்படைத்த இத்யாதி.) “தாமோதரனை” என்னுமளவும் கடாக்ஷித்து முந்தின தாத்பர்யம்; “மனத்தினால்சிந்திக்க” என்றத்தைப்பற்ற இரண்டாம்தாத்பர்யம்; “தூயோமாய்வந்து” என்றதைப் பற்ற மூன்றாம்தாத்பர்யம். [“ఉవాచ చ మహాప్రాజ్ఞః స్వరేణ మహతా మహాన్। సుగ్రీవం తాంశ్చ† సంప్రేక్ష్య సర్వాన్ వానరయూథపాన్”] “உவாச ச மஹாப்ராஜ்ஞஸ் ஸ்வரேண மஹதா மஹாந்। ஸுக்ரீவம் தாம்ஸ்ச ஸம்ப்ரேக்ஷ்ய ஸர்வாந் வாநரயூதபாந்” என்று வசநசேஷம், “மனத்தினால்” என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மநஸ்ஸை இத்யாதி). ச்ருதிக்ரமேணவன்றிக்கே, மநஸ்ஸுக்கு முன்னே தொழுகையும் பாடுகையும் சொல்லுகையால் ஆற்றாமையின் மிகுதி தோற்றுகிறதென்கிறார் (யத்புருஷ இத்யாதி.) ... ... (ரு)

† “సంప్రేక్ష్య ఖస్థ ఏవ విభీషణః” “ஸம்ப்ரேக்ஷ்ய வஸ்த ஏவ விபீஷண:” என்று சில ஸ்ரீகோசங்களில் பாடம்.

(செப்பு)-சொல்லுமையு மென்கை. பூர்வாகமாவது-அநாதி காலம் புத்திபூர்வமாகப் பண்ணிப்போந்தவை; உத்தராகமாவது-பகவத்ஜ்ஞாநம் பிறந்தால் ப்ரக்ருதிவாஸனையாலே ப்ராமாதிகமாகப் பிறந்தவை. (ரு)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

†அ.—அஞ்சாம்பாட்டு. (மாயனை இத்யாதி.) (மாயனை)-["𑌸𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿"] "ஸதா பஶ்யந்தி" என்கிறபடியே விஶ்ருங்கலஜ்ஞாநிகளான நித்யஸூரிகளாலும் கரைகாணவொண்ணாத பரத்வத்தை யுடையவனை. (மன்னு வடமதுரை மைந்தனை)-பகவத்ஸம்பந்தம் மாறாத வடமதுரையிலே யிருக்கிற ராஜாவாய், மிடுக்கனாய், யுவாவானவனை. (தூய)-ஸ்ரீவஸுதேவர் கண்ணனை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளுகிறபோது * ஜாநுமாத்ரோதகரா யெழுந்தருளலாம்படி பாங்காக வற்றிக்கொடுத்த தூய்மையாகவுமாம்; ஜலக்ரீடையிலே பெண்களும் அவனுமாகக் கொப்பளிக்கையால் வந்த தூய்மையாகவுமாம். (பெருநீர்) – மஹாஜலத்தை யுடைத்தாகையாலே அத்யகாதமான.(யமுனைத் துறைவனை)-யமுனையினுடைய துறையைத் தனக்கு நிரூபகமாகவுடையவனை. (ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை) - திருவாய்ப்பாடியிலே வளராநின்றுகொண்டு அக்குலத்துக்கு மங்களதீபமாயுள்ளவனை. (தாயைக் குடல்விளக்கம்செய்த தாமோதரனை)- * கண்ணிக் குறுங்கயிற்றாலேஉரலோடேகட்டுண்டு பெற்றதாயானயஶோதைப் பிராட்டியினுடைய ஹ்ருதயத்துக்கு ப்ரகாஶகனானவனை.(நாம்)-"அவனே உபாயம்" என்றிருக்கிற நாம். (தூயோமாய்)- அநந்ய ப்ரயோஜநராய், (வந்து) - ப்ராப்யருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமையால் வந்து. (தூமலர்)-யோக்யமோ, அயோக்யமோஎன்று தேடப்படாத மலர்களை. (தூவி) - அக்ரமமாக அவன்திருவடிகளிலே பரிமாறி. (தொழுது)- ஸேவித்து. (வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க)- "அவன் கொடுத்த கரணத்தால் அவனை ஆஶ்ரயிக்கப் பெற்றோம்" என்று பாடி நினைக்க. (போயபிழையும்)-கழிந்த அநாதியான பூர்வாகங்களும். (புகுதருவான் நின்றனவும்)- ப்ரவேஶத்தைத் தருகிறவையாய் நின்ற உத்தராகங்களும். (தீயினில் தூசுஆகும்)- நெருப்பிலிட்டபஞ்சுபோலேயாம். (செப்பு)-ஆகையால், உக்தகுணவிஶிஷ்ட

†இப்பாட்டின் அவதாரிகையைக் கோஶாந்தரங்களிற் கண்டுகொள்வது.

னை எம்பெருமானை அநுஸந்தியுங்கோள். 'ஆயர்குலம்' என்றது-அநந்யஸாதநரான பாகவதகுல மென்றபடி. (ரு)

அ. —ஆறும்பாட்டில்—முதற்பாட்டில் - 'பகவத்ஸம்ஶ்லேஷமே ப்ராப்யம், அநந்யஸாத்யமான இதுக்கு ஸாதநமும் அவனே; அந்த ஸாதநத்திலே அந்வயிக்கைக்கு அதிகாரிகளும் அந்த ப்ராப்யத்தில் இச்சையுடையவர்களே' என்று ஸாத்யஸ்வரூபத்தையும் ஸாதநஸ்வரூபத்தையும் அதிகாரிஸ்வரூபத்தையும் ஸாதித்து; இரண்டாம்பாட்டில் - ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டும் ஈஶ்வரனே யென்றிருக்கும் இச்சாதிகாரிகளுக்கு ஸம்பாவிதமாய் குர்வத்ரூபமான கரணங்களுக்கு வகுத்த வ்யாபாரவிஷயங்களைக் காட்டிக் கொடுக்கவேண்டுகையாலும், காலக்ஷேபத்துக்காகவும், ராகப்ரேரிதமாக அநுஷ்டேயமான கர்த்தவ்யாம்ஶத்தைச் சொல்லிற்று; மூன்றும்பாட்டில் -பகவதநுபவஸஹகாரிகள்பக்கல் உபகாரஸ்ம்ருத்யதிஶயத்தாலே அவர்களுக்கு யாவை யாவை சில அபேக்ஷிதங்கள், அந்த ஸம்ருத்திகளடைய அபேக்ஷிக்கக்கடவ தென்றது; நாலாம் பாட்டில்-தேவதாந்தரஸ்பர்ஶரஹிதராய், இப்படி அநந்ய ப்ரயோஜநராய், பகவதேகப்ரவணராய், பகவதநுபவோபகரணமானவற்றிலே இழிந்தவர்களுக்கு அந்தத் தேவதாந்தரங்களும் ஏவல்செய்யு மென்னுமிடம் சொல்லிற்று; அஞ்சாம்பாட்டில் - இப்படியே பகவதநுபவத்தி லிழிந்தவர்களுக்கு வரும் அநுபவவிரோதிகளை அவ்வநுபவம் தானே நிரோதிக்கு மென்னுமிடம் சொல்லிற்று. ஆக, இப்படி கீழ் அஞ்சுபாட்டாலே - ப்ராப்யமான க்ருஷ்ணாநுபவத்துக்கு ஏகாந்தமான உபகரணங்களைச் சொல்லி, அநந்தரம், மேல் பத்துப்பாட்டாலே - அந்தஉபகரணங்களைக்கொண்டு அநுபவிக்குமவர்களை எழுப்புகிறது.

---

ஆறும்பாட்டு. "ஆறும்பாட்டில்" என்றதுக்கு அநந்தரம், 'வ்யாக்யாநம் பண்ணவிழிகிறோம்' என்றுகூட்டுவது; இப்பாட்டின் வ்யாக்யாநாந்தத்திலே "எழுந்திராயென்கிறார்கள்" என்கிற வாக்யத்தோடு அந்வயமாதல் கண்டுகொள்வது. கீழ்அஞ்சுபாட்டும் ஒருபேடிகையாகவும், மேல் பத்துப் பாட்டும் ஒருபேடிகையாகவும் திருவுள்ளம்பற்றி ஸங்கத்யர்த்தம் வ்ருத்தகீர்த்தநம்பண்ணுகிறார் (முதற்பாட்டில் என்றுதொடங்கி 'எழுப்புகிறது' என்னுமளவும்.)

தந்தாமுக்கே அவ்வநுபவத்துக்கு ப்ரதாநோபகரணமான ப்ரேமமும், கர்த்தவ்யதயா உக்தமான உபகரணங்களும், அநுபாவ்யனான க்ருஷ்ணனும், அதுக்கு ஏகாந்தமான காலமும், ஊரில் மேரபவ்ருத்தருடைய இசைவும் உண்டானபின்பு தனித்தனியே அநுபவிக்க அமைந்திருக்க, ஒருவரை யொருவர் எழுப்பவேண்டுகிறது என்னென்னில்?—பெருக்காற்றி லிழிவார்க்குத் துணை தேட்டமாமா போலே, "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும், "உயிர் காத்தாட்செய்ம்மின்" என்றும், "ஆழியொடும், பொன்னார்சார்ங்க முடைய வடிகளை, யின்னாரென்றறியேன்" என்றும் இழிந்தாரைக் குமிழிநீரூட்டக்கடவதான விஷயத்திலே இழிகிறவர்களாகையாலே துணை தேட்டமாய் ஒருவரை யொருவர் எழுப்புகிறார்கள். "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவ தென்றுகொலோ" என்று சொல்லுகிறபடியே பராவஸ்தையில் புருஷோத்தமனை அநுபவிக்கும்போதும் விஶ்ருங்கலஜ்ஞாநபலங்களை யுடையரான நித்யஸூரிகளுக்கும் துணை தேட்டமாகாநிற்க, "இமையோர்தமக்கும் - செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூ ணென்னு மீனச்சொல்" என்று - அந்த நித்யஸூரிகளுக்கும் அநுபவிக்கவொண்ணாதபடி நீர்மைக்கும் மேன்மைக்கும் அழகுக்கும் நிரவதிகஸாகரமான க்ருஷ்ணனை அநுபவிக்குமிடத்தில், இடக்கையும் வலக்கையும் அறியாத இடைச்சிகளுக்குத் துணை தேட்ட மென்னுமிடம் சொல்லவேணுமோ? அதுக்குமேலே, ["ఏకస్స్వాదు నభుఞ్జీత"] "ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத" (அ0) என்று நிரதிஶயபோக்யமான அவ்விஷ

கர்த்தவ்யதயா உக்தமானஉபகரணங்கள் என்றது- ப்ராப்ய ப்ராபகங்களவனேயென்கையும், த்யாஜ்யோபாதேய ஜ்ஞாநபூர்வகமான அநுஷ்டாநமும், பரஸம்ருத்த்யைகப்ரயோஜநதைமுதலான குணங்களும். க்ருஷ்ணாநுபவம் துணைதேட்டமாம்படியை கைமுதிகந்யாயத்தாலே த்ருடீகரிக்கிறார் (அடியார்களித்யாதி.) (விஶ்ருங்கலஜ்ஞாநபலங்களை யுடையரான) என்றதுக்கு எதிர்த்தட்டான ஜ்ஞாநபலஶூந்யதையை அருளிச்செய்கிறார் (இடக்கை இத்யாதி.) இடைச்சிகளென்று - ஸ்த்ரீத்வம் தோற்றுகையாலே, பலஶூந்யதை ஸித்தம். விஷயம் தனி யநுபவிக்க அரிதாகையாலும் என்றது - 'கூர்வேல்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் - ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம் - கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான்' இத்யாதியிற்சொன்ன பரமபோக்யதையைப்பற்ற. இவர்கள் தனியநுபவிக்கவல்ல ப்ரக்ருதிகளல்லாமையாலும் என்றது-"வையத்துவாழ்வீர்காள்"

யத்தைத் தனியநுபவிக்கமாட்டாத ப்ரக்ருதிகளாகையாலும் எழுப்புகிறார்கள்; அதுக்குமேலே, இவ்வஸ்துவை அநுபவிக்கைக்கு ருசியுடையராயிருக்குமவர்கள் இழக்கவொண்ணாதென்னும் நினைவாலும் எழுப்புகிறார்கள்; அதுக்குமேலே, பகவத்விஷயத்தை யநுபவிக்கும்போது ததீயரை முன்னிட்டல்லது அநுபவிக்கமாட்டாதவர்களாகையாலும் எழுப்புகிறார்கள். விஷயம் தனி யநுபவிக்க அரிதாகையாலும், இவர்கள் தனி யநுபவிக்கவல்ல ப்ரக்ருதிகளல்லாமையாலும், ருசியுடையாரிழக்கை நெடுந்தட்டென் றிருக்கையாலும், ததீயரையொழிய அநுபவிக்கமாட்டாமையாலும், முந்துறவுணர்ந்தவர்கள் உறங்குகிறவர்களை எழுப்பத் தட்டில்லை.

எல்லார்க்கும்ஒக்க க்ருஷ்ணாநுபவத்தில் கௌதுகம் அவிசிஷ்டமாயிருக்குமாகில், சிலர்எழுப்பச் சிலர் உறங்குகை கௌதுகத்துக்குக் குறையன்றோவென்னில்?—அநுபாவ்யமான க்ருஷ்ணகுணங்கள், நஞ்சுண்டாரைப்போலே சிலரை மயங்கப்பண்ணுகையாலும், சிலரை இருந்தவிடத்தில் இருக்கவொட்டாதே துடிக்கப்பண்ணுகையாலும், அவர்கள் கௌதுகத்துக்குக் குறையில்லாமையாலே, சிலரைச் சிலர் எழுப்பத் தட்டில்லை.

இதில் இப்பாட்டுக்கு வாக்யார்த்தம்:—பகவத்விஷயத்தில் புதியளாகையாலே இந்நோன்பின் சுவடறியாதா ளொருத்தியை எழுப்புகிறார்கள்.

---

என்று கொண்டாடினமைக்குத் தாத்பர்யமாக, தங்களநுபவத்தை ரஸமாக்கித் தரும்வர்களென்று சொல்லப்பட்ட ஸ்வபாவத்தைப் பற்ற. 'ருசியுடையாரிழக்கை நெடுந்தட்டென் றிருக்கையாலும்' என்றது - ''ஐயமும் பிச்சையும்'' என்றவிடத்தில் சொல்லப்பட்டதாய் பகவத்பாகவதாநுபவம் பண்ணுவிப்பவர்களென்னும் ஸ்வபாவத்தைப் பற்ற. 'நெடுந்தட்டு' என்றது - மஹாப்ரதிஹதியென்றபடி, அத்தால் - அதிதுஸ்ஸஹ மென்றபடி. 'ததீயரையொழிய அநுபவிக்கமாட்டாமையாலும்' என்றது - ''செய்யாதனசெய்யோம்'' என்றவிடத்திற் சொன்ன புருஷகாராஸ்ரயணத்தைப் பற்ற.

'இதில்' என்றது - இப்பத்துப்பாட்டிலென்றபடி. ''பிள்ளாய்'' என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி.) 'எழுப்புகிறார்கள்' என்ற அநந்தரம், 'என்று' என்று சேஷம்.

மூ.—புள்ளுஞ்சிலம்பினகாண் புள்ளரையன்கோயிலில்
வெள்ளைவிளிசங்கின் பேரரவங்கேட்டிலையோ
பிள்ளாயெழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு
கள்ளச்சகடங்கலக்கழியக்காலோச்சி
வெள்ளத்தரவிற் றுயிலமர்ந்தவித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும்
மெள்ளவெழுந்தரியென்ற பேரரவம்
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—(நூதநமாகப் பகவத்ஸம்பந்தம் பெற்று இந்நோன்பின் வாசியறியாதா ளொருத்தியை "போதுவிடிந்தது, எழுந்திராய்" என்று எழுப்ப; "விடிந்தமைக்கு அடையாளமென்?" என்று அவள்கேட்க, "நாங்கள் உணர்ந்துவந்தோமே" என்ன; "உங்களுக்கு உறக்க மில்லாமையால் அது அடையாள மன்று, வேறு அடையாள முண்டோ?" என்று அவள் வினவ,) —புள்ளும் - (காலமுணர்த்த உணரும்) பக்ஷிகளுங்கூட, (இரைதேடுகைக்காக எழுந்திருந்து), சிலம்பினகாண் - கூவிக்கொண்டு செல்லாநின்றன காண்; (என்று ஒருத்திகூறவே), ("நீங்களிருந்தவூரில் பக்ஷிகளுணர்த்தியும் விடிவுக்குடலன்று, மற்றை யடையாளங்க ளுண்டாகிற் சொல்லுங்கோள்" என்று படுத்திருந்தவள் கேட்க), புள் அரையன் - பட்சிராஜனான பெரிய திருவடிக்கு, கோ - நிர்வாஹகனான ஸர்வேச்வரனுடைய, இல்லில் - கோயிலிலே, (திருப்பள்ளியெழுச்சிக்கு ஊதுகிற), வெள்ளை - வெளுத்தநிற முடைத்தாய், விளி(பணிக்குக்கடவாரைச்- சாமங்கள்தோறும்) அழைக்கைக்குறுப்பான, சங்கின் - சங்கத்தின், பேர் அரவம் - மிக்க த்வநியையும், கேட்டிலையோ- கேட்கவில்லையோ? (என்ன); (பின்பும் அவள் பேசாதே கிடக்க), (மீண்டும் துயி லெழுப்புபவள்), 'பிள்ளாய் - (பகவத் விஷயத்தில் புதியையாய் க்ருஷ்ண ஸம்ச்லேஷத்தளவில் நிற்கிற) பெண்ணே! எழுந்திராய் - எழுந்திரு' (என்று மீளவுமெழுப்ப);- ("நான் பிள்ளையாகிலாகிறேன், உங்களை உணர்த்தினரார்?" என்று வினவ;—'எங்களை ஒருவரும் எழுப்பவில்லை;) பேய் - தாய்வடிவுகொண்டுவந்த பூதனையினுடைய, நஞ்சு முலை - விஷம் நிறைந்த முலைவழியே, உண்டு -(அவளுயிரையும்) வாங்கினவனாய்,—(தாயால் காவலாக வைக்கப்பட்டு அஸுராவேசத்தாலே தன்மேல் ஊரத்தொடங்கின), கள்ளம் - க்ருத்ரிமமான, சகடம் - சகடமானது, கலக்கு அழிய - கட்டு அழிந்து சிதறும்படியாக, கால் ஓச்சி - (ஸ்தந்யார்த்தியாய்த் தொட்டிலையுதைத்த) திருவடிகளை நிமிர்த்து முடித்து, வெள்ளத்து - திருப்பாற்கடலில், அரவில் - திருவனந்தாழ்வான்மேலே, துயில் அமர்ந்த - கண்வளர்ந்தருளுகிற, வித்தினை - ஜகத்காரணபூதனானவனை, முனிவர்களும்- (ஒரு ப்ரவ்ருத்திக்கு க்ஷமரன்றிக்கே) மநநசீலரான குணாநுபவபரரும்,

யோகிகளும் - (யோகாப்யாஸம் பண்ணுகிற) கைங்கர்யபரரும், உள்ளத்து கொண்டு - ஹ்ருதயத்தில் த்யாநித்து, மெள்ள எழுந்து - ஸர்வேஶ்வரன் தளும்பாதபடி எழுந்திருந்து,அரிஎன்ற பேர் அரவம்- ஹரி என்ற மஹாத்வநி யானது, உள்ளம் புகுந்து - எங்கள் நெஞ்சிற்புகுந்து, குளிர்ந்து - குளிர்ந்தது; (அத்தாலே நாங்களும் உணர்ந்தோம், எழுந்திராய்)' என்கிறாள். குளிர்ந்து - குளிர்ந்தது என்பதன் விகாரம். குளிர்ந்து - குளிர, எழுந்திராய் என்று கூட்டிப் பொருள்கூறுவாரு முளர். இனி, பத்துப்பாட்டாலே துயிலுணர்ந்தவர்கள் துயிலுணராதவர்களை யெழுப்புகின்றார்க ளென்க.

வ்யா.—(புள்ளும்சிலம்பினகாண்)- இப்பெண்பிள்ளைகள் "போதோடே வாசலிலே சென்று உணர்த்தக்கடவதாக ஸங்கல்பித்துப் போது விடியச்செய்தே கிடந்து உறங்குவதே!" என்று ஶிஷ்டகர்ஹை பண்ணினவாறே, "போதுவிடியவேண்டாவோ எழுந்திருக்க?" என்ன, "போதுவிடிந்தது எழுந்திராய்" என்ன, "விடிந்தமைக்கு அடையாளமென்?" என்று கேட்க; "நாங்கள் உணர்ந்து வந்தது போதாதோ?" என்ன; "உறங்கினாருணரிலன்றோ விடிவுக்கு அடையாள மாவது? "உண்டோ கண்கள் துஞ்சுதல்"என்கிறபடியே உங்களுக்கு உறக்கமுண்டோ? உங்களுணர்த்தி விடிந்தமைக்கு அடையாள மன்று;வேறு அடையாளமுண்டோ?"என்ன; (புள்ளும் சிலம்பினகாண்) - 'போதுவிடிந்து, பக்ஷிகளகப்படக் கிளம்பி இரை தேடிப்போகாநின்றனகாண்' என்ன; அது விடிந்தமைக்கு அடையாளமோ வென்ன, ஏன்அல்லவோவென்ன;'ஓம்,அல்லவீ' என்ன;ஆவதென்னென்ன; 'நீங்கள் அவற்றை உறங்கவொட்டாதே கிளப்பின

"புள்ளும்" என்ற சகாரத்தாலே - வேறே அடையாளமும் விவக்ஷிதமென்று தோற்றுகையால், இரண்டடையாளம் சொல்லுகைக்கு உக்திப்ரத்யுக்தி ரூபேண தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இப்பெண்பிள்ளைகள் இத்யாதி.) "சிலம்பின" என்ன அமைந்திருக்க, "காண்" என்கையாலும், "கேட்டிலையோ" என்றத்தாலும் வெறுப்புத்தோற்றுகையாலே, (ஶிஷ்டகர்ஹை பண்ணினவாறே என்றது.) சிலம்புகை - சப்திக்கையாய், பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (போது இத்யாதி.) 'இவ்விடத்திலே' இத்யாதி ஐதிஹ்ய வாக்யத்தை 'போகாநின்றனகாண்' என்ற அநந்தரம் அநுஸந்திப்பது. (லோகத்தில் பெண்கள்பேச்சான ரீதி தோற்றும்படி உக்திப்ரத்யுக்திரூபேண மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அதுவிடிந்தமைக்கு இத்யாதி.) 'ஆவதென்னென்ன' என்றது-அடையாளமாகாமையாவதென்னென்னவென்றபடி. இதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (நீங்கள் அவற்றை இத்யாதி.) உன்னையெழுப்பவந்த எங்களுக்கு அவற்றையெழுப்புகை பணியோ?

வாறே கிளம்பிற்றின அல்லது விடிந்தமைக்கு அடையாள மோ?' இவ்விடத்திலே "பிள்ளைப் பிள்ளையாழ்வான், பகவத்ஸமாஶ்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிகளின் நாதமல்லது இவ்வாத்மாவுக்கு உத்தேஶ்யமில்லை என்று பணிக்கும்" என்று அருளிச்செய்வர். 'நீங்கள் பிறந்தவூரில் பக்ஷிகளுக்கு உறக்கமுண்டோ? "காலையெழுந்திருந்து கரியகுருவிக் கணங்கள் - மாலின்வரவு சொல்லி மருள்பாடுதல் மெய்ம்மை கொலோ" என்றன்றோ இருப்பது, வேறு அடையாளமுண்டாகில் சொல்லுங்கோள்' என்று கிடந்தாள்.

(புள்ளரையன் இத்யாதி) - அது கிடக்கிடாய்: இதுவும் உன் செவிப்பட்டதில்லையோ? புள்ளுக்கு நிர்வாஹகனான பெரியதிருவடியுண்டு, அவனுடைய கோவுண்டு - ஸர்வேஶ்வரன், அவனுடைய இல் என்னுதல்; "புள்" என்று - பக்ஷியாய், அத்தாலே பெரிய திருவடியாய், அவனுக்கு நிர்வாஹகனானவனுடைய கோயில் என்னுதல். திருப்பள்ளியெழுச்சியில் சங்கத்வநி கேட்டிலையோ? க்ருஷ்ணன் திருவவதரித்துத் திருவாய்ப்பாடியிலே இருந்ததே குடியாக அவனழகிலே பத்தபாவராய்ச் செல்லுகிற காலத்திலே கொண்டாடுகைக்கு ஒரு திருமுற்ற முண்டோ வென்னில்? சக்ரவர்த்தித்திரு

நாங்களெழுப்பினோமென்கிற தென்னென்ன, அருளிச்செய்கிறார் (நீங்கள் பிறந்த இத்யாதி.) நாங்கள் பிறந்த ஊரிலே பக்ஷிகள் உறங்காதிருக்கைக்கு நியாமகம் என்னென்ன, ஸம்வாதமுகேந நியாமகம் அருளிச்செய்கிறார் (காலைஇத்யாதி.) [காலையெழுந்திருந்து] - * ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே எழுந்திருந்து. [கரியகுருவிக்கணங்கள்] - க்ருஷ்ணன்வடிவை ஸ்மரிப்பிக்குமவை. [மாலின்வரவுசொல்லி] - அவன் வ்யாமுக்தனாய்வரும்படியைச் சொல்லி. [மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ]- ப்ரேமாந்த்யத்தாலே பாடுகை மெய்யாகப் புகுகிறதோ என்று; இப்படியே பட்சிகளும் உங்களைப் போலே வ்யாமோஹத்தாலே கூப்பிடும்படியிறே நீங்கள் பண்ணிவைப்பது; ஆகையால், உங்கள் ஸ்வபாவம்போலே அவையும் உறக்கமற்றுச் சிலம்பிற்றின இத்தனை; இது விடிவுக்கு அடையாளமன்று என்றதாய்த்து.

இரண்டாம்அர்த்தத்தில் "கோயில்" என்றது - முழுச்சொல்லு. 'க்ருஷ்ணன் திருவவதரித்துத் திருவாய்ப்பாடியிலே' என்ற அநந்தரம், "இருக்கையாலே" என்று ஶேஷம். 'இருந்ததேகுடியாக' என்றது - குடியிருந்தவர்களெல்லாரும் என்றபடி. 'கொண்டாடுகைக்கு' என்றது - "புள்ளரையன்கோயிலில்" என்று ஸ்துதிக்கைக்கு என்றபடி. க்ருஷ்ணனிடத்தில் பத்தபாவராகிலும் அவன்விரும்பின விஷயமென்று கொண்டா

மகன் திருவவதாரம்பண்ணி இருந்ததேகுடியாக அவனழகிலே ஈடுபட்டுச் செல்லாநிற்க, ["సహపత్న్యా విశాలాక్ష్యా నారాయణముపాగమత్"] 'ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்'' (அக) என்று – அவர் தாம் பெரியபெருமாளை ஆஶ்ரயிக்குமாபோலே, க்ருஷ்ணனையும் குமிடுகொள்கைக்கு ஒரு திருமுற்ற முண்டு. (புள்ளரையன்) - பெரியதிருவடியை நிரூபகமாகவுடையவன், ஆஶ்ரிதர் தனக்கு நிரூபகமாம்படியிறே இவர்களுக்குக் கொடுத்த ஐஶ்வர்யம்; ["లక్ష్మణో లక్ష్మిసమ్పన్నః"] 'லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:'' (அஉ) என்றிறே இருப்பது. பகவத்விஷயத்தில் வழியே யிழியுமவர்களாகையாலே பெரியதிருவடியை முன்னிடுகிறார்கள். (வெள்ளை விளிசங்கு) - சங்கு வெளுத்திருக்குமது விடிந்தமைக்கு அடையாளமோ? இது, வ்யர்த்த விஶேஷணம். (விளிசங்கு) - சாமங்கள் தோறும் முறையுடையாரை அழைக்கிறார்களாகில் போது விடியவேணுமோ ? அங்ஙனல்ல ; (பேரரவம்) - விடிந்தமைக்கு அடையாளமன்றோ, ஸ்ரீபாஞ்சஜந்யத்வநியிலும் இது அதிகமாகவன்றோ த்வநிக்கிறது. நீயும் உணருகைக்குப் போரும் த்வநி ; இவர்கள் சங்கின் வெளுப்புச் சொல்லுவா னென்னென்னில் ? சங்கத்வநி வழியே ஊதும்போதை முகமுத்ரையும் சங்கின் வெளுப்பும் உத்தேஶ்யமாகையாலே. (விளிசங்கு :— விளிக்கை - அழைக்கை; "கை விளிக்கின்றதும் கண்டேநின்றேன்'' என்னக்கடவதிறே; கையாலே

---

டுகைக்குக் கோயிலுண்டென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் (சக்ரவர்த்தி இத்யாதி.) 'இவர்களுக்குக்கொடுத்த ஐஶ்வர்யம்' என்றதுக்கு-தன்னையும் தன் விபூதியையும் ஆஶ்ரிதரிட்டவழக்காக்கிவைக்கையாலேஅவர்கள் ப்ரஸித்தராய் அவர்களையிட்டு நிரூபிக்கலாம்படியிருக்கும் என்று கருத்து. தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி.) வழியே யிழிகையாவது - புருஷகார புரஸ்ஸரமாகப் பற்றுகை. சங்குக்கு வெளுப்பு ஸித்தமாயிருக்க, 'வெள்ளை'' என்று சொல்லும்போது விடிந்தமைக்கு அடையாளமாகச் சொல்லிற்றாகவேணும்; அது இல்லாமையாலே இது வ்யர்த்தமாகையால் உங்கள் வார்த்தை விஶ்வஸநீயமன்றென்னும் சங்கையை உத்க்ஷேபிக்கிறார் (சங்குவெளுத்து இத்யாதி.) முறையுடையார் - அவ்வவகாலத்துக்குத்தக்க கைங்கர்யம்பண்ணும் ப்ராப்தியுடையவர்கள். "வெள்ளை" என்னுமது வ்யர்த்தமாகிலும் * விளிசங்கின் அரவம் பேரரவமாகையாலே அடையாளமோவென்று திருவுள்ளம்பற்றி இவர்களுடைய ப்ரத்யுக்திமுகேந பரிஹரிக்கிறார் (அங்ஙனல்ல இத்யாதி.) "வெள்ளை'' என்றத்தை அடையாளமாக்காவிடில் அத்தை இவர்கள் சொல்லுகைக்குக் காரணமென்னென்று

யழைக்கை என்றபடி. ஸத்த்வோத்தரமான காலத்திலே அடிமை செய்ய வாருங்கோளென்று அழைக்கிறபடி. (கேட்டிலையோ) - இது கேட்க பாக்யமின்றிக்கே யொழிவதே !

இவர்கள் இப்படிச் சொல்ல, பின்பு நிருத்தரையாய்க் கிடந்தாள் - (பிள்ளா யெழுந்திராய்) - பகவத்விஷயத்தில் புதியையிறே: பாகவதஸம்ச்லேஷத்தில் இனிமையறியாயிறே: அநுபாவ்யங்களில் காஷ்டா பூமியான பாகவத ஸம்ச்லேஷரஸம் பிறக்குமளவும் பகவத்விஷயத்திலே அவகாஹிக்கப் பெற்றிலையே: நாங்கள் உன்னைக் காண ஆசைப்பட்டவோபாதி நீயும் எங்களைக்காண ஆசைப்பட வேண்டாவோ ?

அறிந்திருக்கிற உங்களை யெழுப்பினா ரரென்ன, (பேய்முலை இத்யாதி.) எங்களை எழுப்பினாரில்லை; தந்தாங் காரியஞ்செய்வார் த்வநிகேட்டு எழுந்திருந்தோம் என்கிறார்கள் :— (பேய்முலை நஞ்சுண்டு) - பெற்ற தாயும் உதவாத தனிமையிலே பாதிக்கவந்த பூதனையை முடித்து ; இத்தலையை முடிக்கவந்தவள் தன்னோடேபோம்படி பண்ணி.

---

ஸங்கித்து விவரிக்கிறார் (இவர்கள் இத்யாதி.) சங்காலேயழைக்கிறபடியை அருளிச்செய்கிறார் (ஸத்த்வோத்தரேத்யாதி.) "சிலம்பினகாண்" என்னுமாபோலே பேரரவம் முழங்கிற்றென்று சொல்ல அமைந்திருக்க, "கேட்டிலையோ" என்கைக்கு உபாலம்பம்தோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இதுகேட்க இத்யாதி.)

போதுவிடிந்தமைக்கு அடையாளம் சொல்லியிருக்கையால், "எழுந்திராய்" என்றது அர்த்தஸித்தமாயிருக்கவும், சொன்னதுக்கு பாவம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி.) "பாவாய்" என்னலாயிருக்க, "பிள்ளாய்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பகவத்இதயாதி வாக்யத்வயத்தாலே.)உக்தவாக்யத்வயத்தையும் க்ரமேண விவரிக்கிறார் (அநுபாவ்யங்களில் இத்யாதி.)

பாகவதஸம்ச்லேஷரஸம் அறிந்திருக்கிற உங்களை யாரேனும் பாகவதர் வந்து எழுப்ப அவர்களோடே ஸம்ச்லேஷிக்கைக்கு எழுந்திருந்திகோளோ? காலமறியாமல் எழுந்திருந்திகோளித்தனையென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (அறிந்து இத்யாதி.) நாங்கள்வந்து உன்னை எழுப்புகிறாப்போலே எழுப்பினாரில்லை, நாங்களே ஸ்வாநுபவத்துக்கு உடலாக ரிஷிகள் சொல்லும் சப்தம் கேட்டு உணர்ந்தோம் பாகவதஸம்ச்லேஷத்துக்காகவென்று தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி.) 'முடிக்கவந்தவள்' என்ற அநந்தரம் "சினைவை அவள்" என்று சேஷம்.

(கள்ளச்சகடம்) - பேயாகில் ஆராய்ந்து கொள்ளலாம்; தாயே ரக்ஷையாகவைத்த ஶகடம். அஸுராவேஶத்தாலேபிறந்த அபாய மாகையாலே "கள்ளச்சகடம்" என்கிறது. (கலக்கழியக் காலோச்சி) - ஶகடமானது கலக்கழியும்படி திருவடிகளையோச்சி. முலை வரவு தாழ்த்ததென்று மூரிநிமிர்த்த திருவடிகள் பட்டு முறிந்தது. இப்போது இவ்வபதாநங்கள் சொல்லுகிறது - பிறந்த அபாயங்கள் கேட்டுத் துணுக்கென்று எழுந்திருக்கைக்காக.

(வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை) -இவ்வபாயப்ரஸங்கமில்லாத விடத்திலே, பரிவனான திருவநந்தாழ்வான்மேலே சாயப் பெற்றதே! என்று ஹ்ருஷ்டைகளாகிறார்கள். (வெள்ளம்) - ஸௌகுமார்யத்துக்குச்சேரக் குளிர்ச்சியுண்டானபடி. (அரவில்) - அந்நீர் உறுத்தாமைக்குப் படுத்த படுக்கை; மென்மை குளிர்த்தி நாற்றங்கள் ப்ரக்ருதியான திருவநந்தாழ்வான்மேலே. இவன் மூச்சுப் பட்டு மதுகைடபர்கள் பொடிபட்டுப்போகையாலே, பயப்படவும் வேண்டாவென்கை. (துயில்) - ஜகத்ரக்ஷணசிந்தை. "பணிக் கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந் தென்மனக்கடலில் வாழவல்ல மாயமணாளநம்பி" என்று - ஓராஶ்ரிதனுடைய ஹ்ருதயத்தைக் கணிசித்துக்கிடக்குமவ னென்னவுமாம். (அமர்ந்த) - பிராட்டிமார் திருமுலைத் தடத்தாலே நெருக்கினாலும் உணராமை. (வித்தினை) - திருவவதாரத்துக்கு நாற்றங்கால். பிறந்த பிறவிகள் போராமே திரியப் பிறக்கைக்கு அடியிட்டபடி.

(உள்ளத்துக்கொண்டு) - "அரவத்தமளியினோடு மழகிய பாற் கடலோடும் அரவிந்தப்பாவையுந்தானு மகம்படிவந்து புகுந்து" என்

---

கலக்கு - அவயவஸந்திபந்தம். "கலக்கழியப்பண்ணி" என்னாதே, "காலோச்சி" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (முலைஇத்யாதி.) இத்தால் - கள்ளச்சகடு அழியவேணுமென்னும் நினைவாலே கலக்கழியச் செய்தமைதோற்றாதே, முலைவரவுதாழ்த்து நிமிர்த்த திருவடிகளாலே கலக் கழிந்தமை தோற்றுகைக்காக "காலோச்சி" என்றது என்றதாய்த்து.

அவள் துணுக்கென்று எழுந்திருக்கைக்காக அபாயப்ரஸங்கம் பண்ணுவது தங்களுக்கு பயஹேதுவாகையாலே, தந்நிவ்ருத்தியாம்படி க்ஷீராப்தி சாயியை அநுஸந்திக்கிறார்களென்கிறார் (இவ்வபாயம் இத்யாதி.) "வெவ்வுயிர்ப்ப வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகிமாண்டார்" என்கிற பாசுரத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் (இவன் இத்யாதி.)

கிறபடியே திருப்பாற்கடலோடும் திருவநந்தாழ்வானோடும் நாய்ச்சிமாரோடுங் கூடத் தங்கள் நெஞ்சிலே கொண்டு. (முனிவர்களும் யோகிகளும்) - யோகாப்யாஸம் பண்ணுகிறவர்களும், மநநசீலரும். அவர்களாகிறார் வ்ருத்தி நிஷ்டரும், குண நிஷ்டரும்; இங்கு உறங்குகிறவர்களையும் எழுப்புகிறவர்களையும் போலேயிருக்கிறவர்கள். (மெள்ள வெழுந்து)- கர்ப்பிணிகள் ப்ரஜைகளுக்கு நோவுவாராமே எழுந்திருக்குமாபோலே; ["హృదయేనోద్వహన్ హరిమ్"] "ஹ்ருதயேநோத்வஹந் ஹரிம்" (அங) என்று - வளையம் அலையாமே என்றிறே எழுந்திருப்பது. திருவாய்ப்பாடியிலே முனிவர்களும் யோகிகளுமுண்டோவென்னில்? க்ருஷ்ணன் வந்து அவதரித்தபின்பு இடையருடைய பசுநிரைக்கொட்டில்களிலே வந்து அவர்கள் படுகாடுகிடப்பர்கள். (அரியென்ற) - அரியென்கையாவது-["హరిర్హరతి పాపాని"] "ஹரிர்ஹரதி பாபாநி" (அச) என்கிறபடியே பகவதநுபவ விரோதிகளைப் போக்கியருளவேணுமென்கை. பின்னை இவர்களுக்குப் பாபமாவது- க்ருஷ்ணனுக்கு அஸுரர்களாலே வரும் தீங்கு; அத்தை அவன்தானே போக்கித் தந்தருளவேணுமென்றுமங்களாஶாஸநம்பண்ணுகையென்றுமாம். ["అథ సో౭భయం గతో భవతి"] "அத² ஸோऽப⁴யங்க³தோ ப⁴வதி" (அரு) என்று - அவனாலே பயங்கெட்டால் பின்பு அத்தலைக்குப் பயப்பட்டுத் திருப்பல்லாண்டு பாடுமித்தனையிறே. பகவத்ஸம்பந்த ஜ்ஞாநம் பிறப்பதற்குமுன்பு இழவுபேறுகள் தன்னளவிலேயாயிருக்கும்: ஸம்பந்தஜ்ஞாநம் பிறந்தபின்பு, இழவுபேறுகள் அவனளவிலே யாயிருக்கக்கடவதிறே. (பேரரவம்) - பஞ்சலக்ஷம்குடியிலும் இந்தத்வநியேயாயிருக்கை. எல்லாரும் ப்ரபுத்தரான கால மாகையாலே ஒருவர் சொல்லுமளவன்றிக்கே எல்லாரும் சொல்லுகை.

(உள்ளம்புகுந்து குளிர்ந்து) –படுக்கைக்கீழே வெள்ளங்கோத்தாற்போலே, திருநாமம் செவிவழியே புகுந்து வவ்வலிட்டது: அவன் அவர்கள் நெஞ்சிலே புகுந்து ஆநந்திப்பித்தாற்போலே

---

(மநநசீலரும்-யோகாப்யாஸம் பண்ணுகிறவர்களும்) என்று அந்வயித்துக் கொள்வது. வளையம் - திருமாலை. ஏன்திறே என்றது-ஏந்திக்கொண்டிறே என்றபடி. 'எல்லாரும்' என்றது - எல்லாரிஷிகளும் என்றபடி.

வவ்வலிட்டது - வவ்வலிடப்பண்ணிற்று. 'ஆகையாலே' என்றது-நாங்களெழுந்திருந்து ஆநந்திக்கும்படி ஆநந்திப்பிக்கையாலே என்றபடி."உள்ளம்

க்ருஷ்ணவிரஹத்தாலே கமர் பிளந்து கிடக்கிற நெஞ்சு பதஞ்செய்யும்படி இவர்களுடைய த்வநியும் எங்கள்நெஞ்சிலே புகுந்து எங்களை ஆநந்திப்பித்தது. ஆகையாலே, எழுந்திராய்என்கிறார்கள். (கூ)

ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—ஆறும்பாட்டு (புள்ளும் இத்யாதி.) முதற்பாட்டில்-ப்ராப்ய ஸ்வரூபத்தையும் ப்ராபக ஸ்வரூபத்தையும் அதிகாரி ஸ்வரூபத்தையும் ஸங்க்ரஹேண அருளிச்செய்து, இரண்டாம்பாட்டில்- அவ்வதிகாரிக்கு ஸம்பாவிதமான ஸ்வரூபத்ர்மங்களை அருளிச்செய்து, மூன்றாம்பாட்டில் - அவ்வதிகாரிகளநுஷ்டாநத்தாலே அவர்களிருக்கும் நாட்டிற்பிறக்கும் ஸம்ருத்தியைச் சொல்லி,நாலாம்பாட்டில்-அவ்வதிகாரிகளுக்கு பகவதநுகூலரானவர்கள் கிஞ்சித்கரிக்கும்படி சொல்லி, அஞ்சாம்பாட்டில் – அவ்வதிகாரிகளுக்குப் பூர்வாக உத்தராகங்கள் ஸித்தோபாயபலத்தாலே நெருப்பிலிட்ட பஞ்சுபோலே தன்னடையே நஶித்துப்போம்படி சொல்லி, இனி மேல் பத்துப்பாட்டாலே - பகவதநுபவஸஹகாரிகளை யெழுப்புகிறபடியைச் சொல்லுகிறது; அதில், இப்பாட்டில் – நூதநமாகப் பகவத்ஸம்பந்தம் பெற்ற அதிகாரியை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(புள்ளும் சிலம்பினகாண்)- இப்போது இவள் புள்ளென்கிறது,*"சேர்ப்பாரை"யில் சொல்லுகிறபடியே ஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே பகவத்ஸம்பந்தகடகரான பாகவதர்களை. ஆகையாலே, ஸத்வோத்தரகாலமானவாறே ஸாத்விகரான பாகவதர்கள் பகவத்குணாநுஸந்தாந பூர்வகமாகப் பகவத்கைங்கர்யரூபங்களாய்த் தத்தத்வர்ணாஶ்ரமோசிதங்களான காலிககர்மங்களை அநுஷ்டிக்கைக்காக ஸர்வதோதிக்கமாக எழுந்திருந்து புறப்பட்டார்கள். (பிள்ளாயெழுந்திராய்) - பகவதாராதநகாலமாய்த்து, எழுந்திரா யென்ன; அவர்களும் 'உங்களாரவாரம் கண்டு எழுந்திருந்தார்கள்: வேறு அடையாள முண்டோ?' என்ன; (புள்ளரையன்கோயிலில் வெள்ளைவிளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ) - புள்ளுக்கு - பெரியதிருவடிக்கு, அரையன் - அரையனான எம்பெருமானுக்கு ப்ரதிபாதகத்வேந கோயிலான திருமந்த்ரத்தில் உகாரத்தை மத்யத்திலே

"புகுந்துகுளிர்ந்து" என்ற அநந்தரம், "நாங்களெழுந்திருந்தோம்" என்று ஈட்டிலே கூட்டிக்கொள்வது. "ஒல், ஓர்" இத்யாதி - பாதபூரணம். (கூ)

யுடைத்தாகையாலே பரிஶுத்தமாய், அகிலாத்மவர்க்கத்துக்கும் பகவத்கைங்கர்யோபயுக்தமாய், பகவத்ஸம்பந்த ஜ்ஞாபகமாய், தக்ஷிணாவர்த்த சங்கதுல்யமான ப்ரணவத்தின் மகாத்வநியைக் கேட்டிலையோ? (பேய் இத்யாதி.) - பேயுண்டு - ப்ரக்ருதி, முலையுண்டு - அஹங்காரமமகாரங்கள், நஞ்சுண்டு-அவைகளாகிற விஷம், உண்டு-அநுபவித்து; அதாவது - ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமாய்ச் சேதநருக்கு வரும் அஹங்கார மமகாரங்களைப் போக்கி என்றபடி. (கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி) - காமக்ரோதங்களையும் நிவர்த்திப்பித்து. (வெள்ளத்து) -திருப்பாற்கடலிலே. (அரவில்)-திருவநந்தாழ்வான்மேலே. (துயிலமர்ந்த) - யோகநித்ரையிலே அந்யபரதையில்லாமல் அமர்ந்திருக்கிற. (வித்தினை) - ஜகத்காரணபூதனை. (உள்ளத்துக் கொண்டு) - ஹ்ருதயத்தில் த்யாநித்து. (முனிவர்களும் யோகிகளும்) - குணாநுபவபரரும், கைங்கர்யபரரும். (மெள்ள) - ஸாவதாநமாக. (எழுந்து) - ஜாகரூகராய். (அரியென்ற)- 'ஹரிர்ஹரிః' என்ற. (பேரரவம்) - மஹாத்வநியானது. (உள்ளம் புகுந்து) - ஹ்ருதயத்தில் ப்ரவேஶித்து. (குளிர்ந்து) - குளிர்ந்தது. எழுந்திராய் இத்யந்வயః. (சு)

அ.—ஏழாம்பாட்டு,—பகவத்விஷயத்தில் சுவடறிந்தே மறந்து கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

மூ.—கீசுகீசென்றெங்குமானைச்சாத்தன்கலந்து
பேசினபேச்சரவங் கேட்டிலையோபேய்ப்பெண்ணே
காசும்பிறப்புங் கலகலப்பக்கைபேர்த்து
வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்ததயிரரவங் கேட்டிலையோ
நாயகப்பெண்பிள்ளாய் நாராயணன்மூர்த்தி
கேசவனைப்பாடவும் நீகேட்டேகிடத்தியோ
தேசமுடையாய் திறவேலோரெம்பாவாய்.

பதவுரை.—(பகவத்விஷயத்தின் வாசியறிந்தும் மறந்து உறங்குகிறாளொருத்தியை நோக்கி, உணர்ந்துவந்த மற்றவர்கள்),—'ஆனைச்சாத்தன் - வலியன் என்னும் பாரத்வாஜபக்ஷிகள், கலந்து - சேர்ந்து, கீசு கீசு என்று - (எழுத்தும் பொருளும் தெரியாதே) கீசுகீசு என்று, எங்கும் - எல்லாத்

---

ஏழாம்பாட்டு. (கீசுகீசு என்று இத்யாதி.) "நாயகப்பெண்பிள்ளாய்" என்றத்தைப்பற்ற (சுவடறிந்தே என்றது.) "பேய்ப்பெண்ணே" என்றத்தைக் கடாக்ஷித்து (மறந்துகிடக்கிறாள் என்றது.)

திக்குக்களிலும், (விடிவுக்கடையாளமாக), பேசின-ஒலிக்கிற;பேச்சு அரவம்-பேச்சின் த்வநியை, கேட்டிலையோ - (நீ) கேட்கவில்லையோ?’ (எழுந்திராய் என்று எழுப்பியும் பேசாதே கிடக்க;பின்னும் அவர்கள்),‘பேய்ப்பெண்ணே-அறிவில்லாதவளே! நறு வாசம் - மிக்கபரிமளம் வீசாநின்றுள்ள, குழல் - மயிர்முடியையுடைய, ஆய்ச்சியர் - இடைச்சிகள், (கிருஷ்ணன் கண்ணழகில்தோற்றுப் பாடுகின்ற த்வநியும்),—காசும் பிறப்பும்-அச்சுத்தாலியும் முளைத்தாலியும், கலகலப்ப - கலகலவென்று ஒலிக்க, கைபேர்த்து - கை சலிக்கும்படி, மத்தினால் ஓசைபடுத்த தயிர் அரவம் - மத்தால் கடைகிற தயிரோசையும், கேட்டிலையோ - உன்செவியிற் பட்டதில்லையோ? (என்னச் செய்தேயும்,இவ்வூரில் எப்பொழுதும் இடைவிடாமல் தயிர்கடைகைஸ்வபாவமன்றோ என்று பேசாதேகிடக்க; பின்னும்), ‘நாயகப்பெண்பிள்ளாய்-பெண்களுக்கெல்லாம் நிர்வாஹகையானவளே! நாராயணன் - வாத்ஸல்யத்தாலே எல்லார்க்கும் ரக்ஷகனாய், மூர்த்தி - (ஸௌசீல்யத்தாலே) கிருஷ்ணனாக வந்து திருவவதரித்தவனாய், கேசவனை-கேசியை நிரஸித்தாற்போலே நமது விரோதிகளைப் போக்குமவனான ஸர்வேஶ்வரனை, பாடவும்- (நாங்கள்) பாடாநிற்கச்செய்தேயும், கேட்டே - (அவன் விஜயத்தைக்) கேட்டிருந்தும், நீ கிடத்தியோ - நீகிடந்து உறங்குகிறாயோ? தேசம் உடையாய் - மிக்க தேஜஸ்ஸை யுடையவளே! திற - கதவைத்திறந்துவிடாய்’ என்கிறார்கள்.

**வ்யா.**—“போது விடிந்தது, எழுந்திராய்” என்ன; விடிந்தமைக்கு அடையாளம் என்னென்ன; ஆனைச்சாத்தன் † கீசுகீசு என்னாநின்றது. (கீசு) -அநக்ஷரரஸமாயிருக்கை. ஓரானைச்சாத்தன் பேசுங்காட்டில் போதுவிடிந்ததாக வேணுமோ? என்ன,—எங்கும் பேசாநின்றதென்ன; அவற்றைக் கலக்குகைக்கு நீங்களுண்டே யென்ன; எங்களாலன்று, தாமே யுணர்ந்தன வென்ன; அதுக்கு அடையாளம் என்னென்ன; (கலந்துபேசின பேச்சரவம் கேட்டிலை

---

அப்ருஷ்டோத்தரமாகாமைக்காகப் பாதாவதாரிகை அருளிச்செய்கிறார் (போதுஇத்யாதிவாக்யத்ரயத்தாலே.) ‘ஆனைச்சாத்தன்கலந்துபேசினபேச்சு’ என்று இவ்வளவே அமைந்திருக்க, “கீசுகீசு” என்னவேணுமோ வென்ன, அதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (அநக்ஷரேத்யாதி;)அவ்யக்தமதுரதையை ஸூசிப்பிக்கிறதுஎன்றுகருத்து. “எங்கும்”என்றதுக்கு ப்ரஶ்நப்ரதிவசநரூபேண தாத்பர்யம்அருளிச்செய்கிறார்(ஓரானைச்சாத்தன் இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) கலக்குகையாவது - உறங்கவொட்டாதே கிளப்புகை. கலந்து - ஸம்ச்லேஷித்து. அநந்தரம் விச்லேஷிக்கப் புகுகிறபோது பேசின

---

† ‘ஆனைச்சாத்தம்’ என்று சில ஸ்ரீகோசங்கள்.

யோ) - கலந்துபேசினபடி அறிந்தபடியென்? என்ன,—பிரிந்துபோனால் பகலெல்லாம் தரிக்கும்படி கலந்து, 'பிரியப் புகாநின்றோம்' என்னும் தளர்த்தி தோற்றப் பேசுகிற மிடற்றோசை கேட்டிலையோ? கேளாமைக்கு அங்கே ஆரவார முண்டாயாகாதே செல்லுகிறது என்று மர்மம் சொல்லுகிறார்கள் 'கேட்டிலையோ' என்று. (பேய்ப்பெண்ணே) - இவர்களாகில் இப்படிசொல்லுகையே பணியென்று பேசாதே கிடக்க, அறிந்துவைத்துக் காற்கடைக்கொள்வாயே! மதிகேடீ! என்கிறார்கள். இவர்களுக்கு அறிவாகிறது - பகவத்விஷயத்திலும் ததீயவிஷயம் நன்றென்று அறிகை. அத்தை அறிந்துவைத்துப் பேசாதே கிடக்கையாலே சொல்லுகிறார்கள்.

என்னறியாமை சொல்லாதே விடிந்தமைக்கு அடையாளஞ் சொல்லுங்கோ ளென்ன; தயிர் கடைகிற ஓசை கேட்டிலையோ? (காசும் பிறப்பும்) - அச்சுத்தாலியும் முளைத்தாலியும். (கலகலப்ப)- கடைகிறபோதை வ்யாபாரத்தாலே, "அரவூறுசுலாய் மலைதேய்க்கு மொலி" என்னுமாபோலே த்வநிக்கை. (கைபேர்த்து) - தயிரின்

---

பேச்சென்று திருவுள்ளம்பற்றி, ப்ரஶ்நப்ரதிவசநரூபேண அபிப்ராயத்தை அருளிச்செய்கிறார் (கலந்து இத்யாதி.) "கேட்டிலையோ" என்றதுக்கு- அவற்றின் தளர்த்தி ஸ்பஷ்டமாகத் தோன்றும்படி பேசின மிடற்றோசையைக்கேளாதேபோனாயோ? கேட்டிருந்தாய் என்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, இப்படி ஸ்பஷ்டமான இதுவும் க்ருஷ்ணாநுபவத்தில் ஆதரத்தாலே கேளாதிருந்தாயோவென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (கேளாமைக்கு இத்யாதி.) "பெண்ணே" என்னாதே "பேய்ப்பெண்ணே" என்றதுக்கு ப்ரஸக்தி பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவர்களாகில் இத்யாதி.) தாங்கள் விஶ்லேஷ து:கிகளாகையாலே அவற்றின் மிடற்றோசையிலேயும் தளர்த்தியை ஆரோபித்துச் சொல்லுகிறார்களித்தனை: இது விடிவுக்கு அடையாள மன்றென்று பேசாதே கிடந்தாள் என்று இப்படி ஸம்போதிக்கிறார்களென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அறிந்துவைத்து இத்யாதி.) மதியை இன்னது என்னுநின்று கொண்டு, மதிகேட்டை விவரிக்கிறார் (இவர்களுக்கு இத்யாதி.)

"காசும்" இத்யாதிக்கு ப்ரஶ்நோத்தரரூபேண ஸங்க்ரஹமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (என்னறியாமை இத்யாதி.) அச்சுத்தாலியாவது-அச்சாலே போட்டுஅடித்து மாலையாகக் கோத்துக் கழுத்திலேதரித்த ஆபரணம். முளைத்தாலியாவது - முளைமுளையாகப்பண்ணிக் கோத்துத் தரித்த ஆபரணம். அரவு - வாஸுகி. "கை" என்றது - மத்தைப்பற்றின கையென்றாய், பேர்க்கை - சலிப்பிக்கையாய், அதிலருமைக்கு நாலுஹேதுக்

பெருமையாலும் இவர்கள் ஸௌகுமார்யத்தாலும் மலைபேர்த்தாற்போலே கைபேர்க்கப் போகாதபடி; க்ருஷ்ணன் ஸந்நிதியில்லாமையாலே கைசோர்ந்த தென்னவுமாம்; அன்றியே, அவன்தானே ஸந்நிஹிதனாய் நின்று "தயிரை மோராக்கவொட்டேன்" என்று கையைப்பற்றி நாலுகையாலே யென்றுமாம்; "மோரார் குடமுருட்டி" என்னக்கடவதிறே. (வாசம் இத்யாதி)- ஆயாஸத்தாலே மயிர்முடி நெகிழ்ந்து பரிமளந்தானே புறப்பட்டு ப்ரவஹிக்கிறபடி. (மத்தினாலோசைப்படுத்த தயிரரவம் கேட்டிலையோ)-மந்தரத்தாலே கடலைக் கலக்கினாற்போலே, இந்தக் கோஷமும் செவியில் பட்டதில்லையோ? ["உத்காயதீநாம் அரவிந்தலோசனம் வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத்த்வநி: । தத்நஶ்ச நிர்மந்தனசப்தமிஶ்ரிதோ நிரஸ்யதே யேன திஶாமமங்கலம்"] "உத்காயதீநா மரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத்த்வநி:। தத்நஶ்ச நிர்மந்தநஶப்தமிஶ்ரிதோ நிரஸ்யதே யேந திஶாமமங்கலம்" (அசு) என்று - அவன் கண்ணழகிலே தோற்றுப் பாடுகிற த்வநி

---

களை அருளிச்செய்கிறார்(தயிரின் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.)நப்பின்னைப் பிராட்டி திருமாளிகையிலே க்ருஷ்ணன் உறங்குகிறதாகவும் தாங்கள் ஒருவரையொருவர் எழுப்பி அவனையும் எழுப்புகிறதாகவும் வருகிற ப்ரகரணத்தில், க்ருஷ்ணன் கையைப்பிடித்து நாலுகிறது சொல்லும்படி எங்ஙனேயென்ன; அவன் விசித்ரஶக்தியோகத்தாலே அகங்கள்தோறும் நாநாப்ரகாரேண வர்த்தித்துக்கொண்டிருப்ப னென்று இவர்களநிந்தபடியாலே இப்படி சொல்லுகிறார்க ளென்னுமது கூடுமென்று கொள்ளக்கடவது. "வாசம்" என்றும், "நறு" என்றும் - பரிமளத்தைச் சொல்லுகையால், அதன் மிகுதியைத் திருவுள்ளம்பற்றி ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் (ஆயாஸத்தாலே இத்யாதி.) "ஆய்ச்சியர் - ஓசைபடுத்த தயிரரவம்" என்னவே, மத்து அர்த்தஸித்தமா யிருக்கவும், விசேஷித்ததுக்குப் புந:ப்ரதீகக்ரஹணபூர்வகம் த்ருஷ்டாந்தமுகேந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மத்தினால் இத்யாதி.) கீழ் எடுத்த ப்ரதீகஶேஷத்துக்குப் பாவம் அருளிச்செய்கிறார் (இந்த இத்யாதி.) அரவம் - சப்தம். "காசும்பிறப்பும்' இத்யாதியிற் சொன்ன அர்த்தங்களுக்கும் ஸம்வாதம் காட்டாநின்றுகொண்டு அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் (உத்காயதீநாம் இத்யாதி.) ["வ்ரஜாங்கநாநாம் - தத்நஶ்ச-த்வநி: - நிர்மந்தன ஶப்தமிஶ்ரிதஸ்ஸன் - திவமஸ்ப்ருஶத்"] வ்ரஜாங்கநாநாம்-தத்நஶ்ச - த்வநி:- நிர்மந்தநஶப்தமிஶ்ரிதஸ்ஸந் - திவமஸ்ப்ருஶத் இத்யந்வய:. நிர்மந்தநத்தில் - கடைகிற போதையில், உண்டான ஶப்தமாவது - பூஷணத்வநியென்று திருவுள்ளம்.

யும், கடைகிற தயிரோசையும் ஆபரணவோசையும் கிளர்ந்து, ஊர்த்த்வலோகங்களிலே சென்று கிட்டுவதான ஓசை உன்செவியிற் படாதொழிவதே!

இவ்வூரில் "முப்போதும் கடைந்தீண்டிய வெண்ணெய்" என்று - இரவும் பகலும் இடைவிடாதே தயிர்கடைகை ஸ்வபாவமன்றோ வென்று பேசாதே கிடக்க; (நாயகப்பெண்பிள்ளாய்) – இப்பெண்களுக்கெல்லாம் நிர்வாஹகையானபடி இதுவோ? என்கிறார்கள்; சொல்லிற்றுக்கெல்லாம் மறுமாற்றம் சொல்லிக்கிடக்கிறது உன்னுடைய ஐஶ்வர்யச்செருக்காலே என்னவுமாம். "பேய்ப்பெண்ணே" என்றதோடு "நாயகப்பெண்பிள்ளாய்" என்றதோடு வாசியில்லையிறே, அகவாயில் பாவம் ஒன்றாகையாலே.

என்றவிடத்திலும் வாய்திறவாமையாலே, (நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ) - நீ எழுந்திருப்புதியென்று நாங்கள் பாட, அதுவே குறங்குகுத்தக் கிடந்து உறங்கு

---

"தயிரரவம் கேட்டிலையோ" என்று அடையாளமாகச்சொன்ன அநந்தரமே இவளெழுந்திருந்தாளாகில், மேலே "கேட்டேகிடத்தியோ" என்னக்கூடாமையாலே எழுந்திராமை ஸித்தமாகையால், அதுக்கு ஹேதுவாக இவ்வடையாளத்தையும் அந்யதாகரித்தாளென்று உத்தரார்த்தத்துக்கெல்லாம் அவதாரிகைஅருளிச்செய்கிறார் (இவ்வூரில்இத்யாதி.) 'என்று'என்றது–என்று சொல்லியபடி என்றபடி. கீழே "பேய்ப்பெண்ணே" என்று சொல்லிவைத்து, இங்கே "நாயகப்பெண்பிள்ளாய்" என்று தங்களுக்கு ரோஷியாகச் சொல்லி வெறுக்கக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (பேய்ப்பெண்ணே இத்யாதி.) அகவாயில்பாவமொன்றாகையாலே'என்றதுக்கு-["[illegible]"] வ்யணயாவுாஹிஶாநாவுவரிவிக்ஷ வராவவழ" என்கிறபடியே "பேய்ப்பெண்ணே" என்கிறபோதும் தங்களுக்கு ரோஷியென்னும் நினைவுண்டாய் வெறுத்தார்களென்று கருத்து.

மேலுக்குஅவதாரிகை (என்றவிடத்திலும்இத்யாதி.) 'வாய்திறவாமையாலே' என்ற அநந்தரம், "சொல்லுகிறார்கள்" என்று ரோஷம். "பாடவும்" என்ற சகாரத்தாலே- எழுந்திருக்கைக்கு ஹேதுவாகத் தோன்றுகையாலும் 'கேட்டே' என்ற ஏகாரத்தாலே அதுவே கிடக்கைக்குஹேதுவாய்த் தோன்றுகையாலும் அருளிச்செய்கிறார் (நீஎழுந்திருப்புதிஇத்யாதி.)குறங்கு-துடை. "நாராயணன், மூர்த்தி, கேசவன்" என்ற பதங்களைத் தனித்தனியே ப்ரதானமாக்கி, நாராயணஶப்தத்துக்கு-பஹுவ்ரீஹ்யர்த்தம் விவக்ஷித்து, தனித்தனியே பதார்த்தங்களை அருளிச்செய்யாநின்றுகொண்டு, உக்தார்த்தத்தைத்

கிருயோ? (நாராயணன்) - முகம் தோற்றுமே நின்று வாத்ஸல்யத்தாலே ரக்ஷிக்கக்கடவ ஸர்வேஶ்வரன். (மூர்த்தி) - தன்னுடைய ஸௌஶீல்யத்தாலே பிறந்தது. (கேசவனை) - கண்ணுக்குத் தோற்ற நின்று நம்விரோதிகளைப் போக்குமவனை. (பாடவும்)- இப்படி வாத்ஸல்யத்தையும் ஸௌஶீல்யத்தையும் ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்தையும் பேசினவிடத்திலும்; பின்னையும் இவர்கள் பேச்சே தனக்குத் தாரகமாய்க் கிடக்கையாலே,'கேட்டேகிடத்தியோ' என்கிருர்கள் இவள் துணுக்கென்றெழுந்திருக்கைக்காக, நிருபாதிகஸ்வாமியான ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதவத்ஸலனாய் க்ருஷ்ணனாய் வந்து அவதரித்தவிடத்திலே கேஶி வந்து நலியப்புக, அவனை க்ருஷ்ணன் கொன்றான்காண் என்ன, அதுக்கும் பேசாதே கிடந்தாள். (பாடவும் நீ கேட்டே கிடத்தியோ)- அவனுடைய விஜயத்தைக் கேட்டு கேஶி வந்து நலியப்புக்கான் என்கிற துணுக்கும் கேட்டு, கரவதாநந்தரம், ["ధర్తాం హారం వక్షసి జే"] "ஹாரம் வக்ஷஸி ஜே" (அஎ) என்று சக்ரவர்த்தித் திருமகனை ஸ்ரீஜநகராஜன்திருமகள் அணைத்தாற்போலே, நீயும் க்ருஷ்ணனை அணைக்கப் புறப்படுவாயோ?என்று

---

தொகுத்து அருளிச்செய்கிருர் (நாராயணனென்று தொடங்கி, என்கிருர்கள் என்னுமளவும்.) பிறந்தது என்றது-பிறந்தவனென்றபடி. ["యస్మాత్త్వయా దుష్టాత్మా హతః కేశీ జనార్దన। తస్మాత్కేశవనామా త్వం లోకే ఖ్యాతిం గమిష్యసి"] "யஸ்மாத்த்வயைஷ துஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்தந। தஸ்மாத்கேஶவநாமா த்வம் லோகே க்யாதிம் கமிஷ்யஸி" என்கிற நிருக்தியைத் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிருர் (கண்ணுக்கு இத்யாதி.) [కేశిశబ్దఉపపదే "వష హింసాయామ్" ఇతిధాతోః "అన్యేష్వపిదృశ్యంతే" ఇతిడప్రత్యయే "అచోఞ్ణితి" ఇతి వృద్ధిసంజ్ఞకస్య ఆప్ ఇత్యేతస్య లోపే పృషోదరాదిత్వాత్ ఇకారస్య అకారే కేశవశబ్దోనిష్పన్నః] * கேஶிஶப்த உபபதே "வஷ ஹிம்ஸாயாம்" இதி தாதோ: "அந்யேஷ்வபி த்ருஶ்யதே" இதி ட ப்ரத்யயே "ஆதோ லோப இடி ச" இதி ஆகாரலோபே ஸித்தே ஆகாரஸ்ய அகாரே கேஶவஶப்தோ நிஷ்பந்ந: என்று ப்ரக்ரியை கண்டுகொள்வது. "நாராயணன், மூர்த்தி" என்ற இரண்டையும் விஶேஷணமாக்கி*கேசவபதத்தை விஶேஷ்யமாக்கி,நாராயணபதத்துக்குத் தத்புருஷார்த்தத்தைத்திருவுள்ளம்பற்றித்தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிருர் (இவள் துணுக்குஇத்யாதி.) விவரணம் (அவனுடைய இத்யாதி.)

சொன்னோம்; அதுவும் உனக்கு க்ருஷ்ணவிரோதிபயம்தீர்ந்து மார் பிலே கைவைத்து உறங்கலாம்படியாய்விடுவதே! என்றுமாம்.

(தேசமுடையாய் திற) - உன்னைக் காணப்பெறாதே அந்தகார மாய்க் கிடக்கிற எங்களுக்கு இத்தைத் திறந்து புறப்பட்டு, உன்னு டைய நிரவதிக தேஜஸ்ஸாலே வெளிச்செறிப்பிக்கைக்காகவும், உன் னுடைய அழகு காண்கைக்காகவும் நீயே வந்து திற. (தேசமு டையாய் திற) - இவள் பின்னையும் பேசாதே கிடக்கையாலே, ஜாலக ரந்த்ரத்தாலே பார்த்தார்கள்; இவளுக்கு க்ருஷ்ண விஜயாநு ஸந்தாந ப்ரீதியாலே வடிவிற் பிறந்த புகரைக் கண்டு கிண்ணகத் தை அணைசெய்யாதே வெட்டிவிடா யென்கிறார்க ளாகவுமாம். (எ)

ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—ஏழாம்பாட்டு. (கீசுகீசு இத்யாதி). இப்பாட்டில், பகவத் விஷயத்திலும் பாகவதவிஷயம் நன்று என்று அறிந்தும் மறந் திருப்பா ரொருவரை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து - கீசு கீசு என்று பேசின பேச்சரவம் கேட்டிலையோ) - ஸர்வதோதிக்கமாக, அஹங் கார நிவர்த்தகரான மகாபாகவதர் "நாம் பிரியப்புகாநின்றோமே!" என்று பிரிந்தால் மறுபடி கூடுந்தனையும் தரித்திருக்கைக்காகப் பரஸ்பரம் ஸம்ஶ்லேஷித்து, கத்கதஸ்வர மாகையாலே அநக்ஷர ரஸமாக, பேசினபேச்சரவம் - விஶ்லேஷவ்யஸநம் தோற்றும்படி

"கிடத்தியோ" என்கையாலே- எழுந்திருந்து வரச்சொல்லுகை அர்த்த ஸித்தமாகையாலே, கதவுதிறவாமல் வரக்கூடாமையால் அதுவும் அர்த்த ஸித்தமாயிருக்க, "தேசமுடையாய்திற" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (உன்னை இத்யாதி.) முன்பு தாங்கள் கண்டிருக்கும் ஸ்வாபா விக தேஜஸ்ஸைப் பற்ற ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, கேசவனைப் பாடினபின்பு பிறந்த தேஜஸ்ஸாகத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (இவள் பின்னையும் இத்யாதி.) 'பின்னையும்' என்றது - "கிடத்தியோ" என்ற அநந்தரமும் என்றபடி. 'கிண்ணகத்தை அணைசெய்யாதே' என்றது- இப்போதையில் புகரின் ப்ரவாஹத்தைக் கதவால் அணைசெய்யாதே கொள் என்றபடி. 'வெட்டிவிடாய்' என்றது - கதவைத் திறந்துவிடாய் என்றபடி.

ஆனைச்சாத்தன் - கீசுகீசென்று எங்கும் - கலந்துபேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே! வாசநறுங்குழலாய்ச்சியர் - காசும்பிறப் பும் கலகலப்பக் கைபேர்த்து - மத்தினாலோசை இத்யாதி அந்வயம் கண்டு கொள்வது. ஏல் இத்யாதி - பாதபூரணம். (எ)

யாகப் பேசின பேச்சினுடைய த்வநியைக் கேட்டிலையோ? (பேய்ப் பெண்ணே) - அறிந்துவைத்துப் பேசாதே கிடக்கையாலே மதி கேடீ! என்கிறார்கள்.

'அவர்களை யெழுப்புகைக்கு நீங்களுண்டே, வேறு அடையாள முண்டோ?' என்ன, சொல்லுகிறார்கள்.—(காசும் பிறப்பும் கலகலப் பக் கைபேர்த்து) - திருமந்த்ரமும் த்வயசரமஶ்லோகங்களும் ஒன்றோடொன்று சேர்ந்து த்வநிக்க, ஸ்வரூபோபாய புருஷார்த்த ஜ்ஞாநம் தலையெடுத்து. (வாசநறுங்குழல் இத்யாதி) - மிக்கபரி மளத்தையுடைய பகவத்விஷய வ்யாமோஹத்தை யுடைய அநந் யார்ஹ சேஷபூதரான ஶ்ரீவைஷ்ணவர்கள் ஸங்கல்பத்தாலே ஶிக்ஷிதரான ஸம்ஸாரிசேதநருடைய திவ்ய ப்ரபந்தாநுஸந்தாந த்வநியைக் கேட்டிலையோ?

(நாயகப் பெண்பிள்ளாய்) - இதுவன்றோ நமக்கு நீ நிர்வாஹகை யானமைக்கு அடையாளம்; அதாவது - சொன்னதுக்கெல்லாம் மறுமாற்றஞ்சொல்லி யெழுந்திராமலிருக்கை. (நாராயணன் மூர்த்தி கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ) - ஸர்வஸ்மாத்பர னான நாராயணனுடைய அவதாரமாய்க் கேஶிஹந்தாவான க்ருஷ்ண னைப் பாடச்செய்தேயும், ["కంసఘ్న"] "கம்ஸக்ந" என்கிற படியே க்ருஷ்ணவிஜயத்தைக் கேட்டுப் புறப்பட்டு அவனை அணைக் கக்கடவ நீ, அதுவே துடைகுத்தாகப் பகவதபாயபயம் தீர்ந்து உறங்கக்கடவையோ? (தேசமுடையாய் திற) - இப்படிச் சொன்ன விடத்திலும் எழுந்திராமையாலே ஜாலகரந்த்ரத்தாலேபார்த்துப் பக வத்குணாநுபவத்தாலுண்டான மஹாதேஜஸ்ஸை யுடையவளே! இத்தேஜஸ்ஸை காட்டிலெறித்த நிலாவாகாமே நாங்கள் அநுபவிக்க லாம்படி எங்கள் அஜ்ஞாநத்தை நீக்காய் என்கிறார்கள். (எ)

அ.—எட்டாம்பாட்டு. எல்லாரும் வந்து அழைக்கும்படி க்ருஷ்ணனாலே வேண்டற்பாடுடையா ளொருத்தியை எழுப்பு கிறார்கள்.

---

எட்டாம்பாட்டு. (கீழ்வானம் இத்யாதி.) "கோதுகலமுடையபாவாய்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகையிடுகிறார் (எல்லாரும் இத்யாதி.) 'எல்லாரும்' என்றது - "மிக்குள்ளபிள்ளைகளும்" என்றத்தைப் பற்ற. வேண் டற்பாடு - வால்லப்யம்.

மூ.—கீழ்வானம்வெள்ளென் றெருமைசிறுவீடு
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும்
போவான்போகின்றாரைப் போகாமற்காத்து உன்னைக்
கூவுவான்வந்துநின்றோம் கோதுகலமுடைய
பாவாயெழுந்திராய் பாடிப்பறைகொண்டு
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால்
ஆவாவென்றாராய்ந்தருளேலோரெம்பாவாய்.

**பதவுரை.**—(எல்லாரும் வந்து அழைக்கும்படி க்ருஷ்ணவல்லபையாயிருப்பாளொருத்தியைப் பார்த்து),—'கீழ்வானம் - கிழக்குத் திக்கில் ஆகாசமானது, வெள்ளென்று - வெளுத்ததாக, எருமை - எருமைகள், மேய்வான் - (பனிப்புல்) மேய்கைக்காக, சிறுவீடு -(விடியற்காலத்தில்) சற்று நேரம் அவிழ்த்து விடப்பட்டதனால், பரந்தனகாண் - (வயல்களெங்கும்) பரம்பினகாண்,' (என்று சொல்ல, 'உங்களையொழிந்தாரெல்லாரும்போனார்களோ?' என்று அவள் கேட்க),—'போவான் போகின்றார் - போகையே ப்ரயோஜநமாகப் போகாநிற்கிற, மிக்குள்ள பிள்ளைகளையும் - உன்னையொழிந்தாரெல்லாரையும், போகாமல் காத்து - போகாதபடி தடுத்து, உன்னைக் கூவுவான் - உன்னை யெழுப்புகைக்காக, வந்து நின்றோம் - (உன்வாசலில்) வந்து நிலைபெற்றுநின்றோம்; கோதுகலமுடைய பாவாய் - கௌதூஹலமுடைய பெண்ணே! எழுந்திராய் - எழுந்திரு', (என்றுஎழுப்ப);—(எழுந்திருந்து செய்வதென்? என்று அவள் வினவ); —மா வாய் - குதிரைவடிவு கொண்டுவந்த கேசி யென்னும் அஸுரனுடைய வாயை, பிளந்தானை - இருபிளவாகக் கிழித்துப் போகட்டவனுப்,மல்லரை மாட்டிய-(சாணூர முஷ்டிகரென்னும்) மல்லர்களை அழியச்செய்த, தேவாதிதேவனை - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனை,—பாடி -, குணகீர்த்தநம் பண்ணி, பறைகொண்டு - (அவனை ஸேவிக்கையாகிற) நோன்பை மேற்கொண்டு, நாம் சென்று - நாமே (அவன் பக்கல்) சென்று, சேவித்தால் - ப்ரபத்திபண்ணினால்,—ஆராய்ந்து - (நம்முடைய குறைகளை) விசாரித்து, ஆ ஆ என்று அருள் - ஐயோ! என்று இரங்கி க்ருபைபண்ணுவன் என்கிறார்கள். அருள் - அருளும் என்பதன் விகார மென்பர்.

**வ்யா.**—(கீழ்வானம் வெள்ளென்று) - கிழக்குவெளுத்தாலும் கிடந்துஉறங்குமித்தனையோ? எழுந்திரா யென்கிறார்கள். கிழக்கு வெளுத்த தன்று, உங்களிலே யாரேனும் அத்திக்கைப் பார்க்கையாலே

---

"வெள்ளென்று" என்றதுக்கு - வெளுத்ததென்று அர்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கிழக்கு இத்யாதி.) 'கிழக்குவெளுத்தாலும்' என்ற சகாரத்தாலே - "புள்ளும்சிலம்பினகாண்," "கீசுகீசு" என்கிற பாட்

உங்கள் முகத்திலொளி ப்ரதிபலிக்கையாலே கிழக்கு வெளுத்ததா யிருக்கிறது ; இவர்கள் தாங்கள் * திங்கள் திருமுகத்துச்சேயிழை யாரிறே.

அது அந்யதாஜ்ஞாநம்: மற்று அடையாளமுண்டோ? என்ன,—(எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்) - பனிப்புல்மேயக் காலத்திலே விட்டு வயல்களெங்கும் பரந்தனகாண். ஸ்ரீநந்தகோபர்க்கு முத்திறமும் உண்டே ; அவற்றின்பின்னே க்ருஷ்ணன் போம்: பின்னை யாரைக் காண்பது? எழுந்திரா யென்ன ;

உங்கள் முகத்திலொளியைக்கண்டு இருள் திரைந்துபோகிறது இத்தனை; [*அது உங்களுடைய விபரீதஜ்ஞாநமிருக்கிறபடி; ஸத்வ நிஷ்டர் ஸந்நிதியில் அந்தகாரம் நில்லாதிறே. பெரியாழ்வார் பெண் பிள்ளை அக்நிஹோத்ராநுஷ்டாநம்அறிகையொழிய,சிறுவீடு வாசியறியும்படியான மெய்ப்பாடு.] அருணோதயத்துக்கு அஞ்சி இருள் சிதறிப்போகிற தென்னவுமாம். "மேட்டிளமேதிகள் தளைவிடு மாயர்கள் என்று இவள் தகப்பனுர் எம்பெருமானை யெழுப்பினுர் ; இவள் இவர்களை யெழுப்புகிருள். நாங்கள் ப்ரமித்தோமாயிடுக ; நீ

டுக்களிற் சொன்ன காலங்களுமெல்லாம் தப்பிப்போய், அதுக்குமேலே கிழக்கும்வெளுத்ததென்று தோற்றுகிறது. ப்ரதிபலிக்கையாலே - வ்யாபிக்கையாலே.

"எருமை-மேய்வான்-சிறுவீடு-பரந்தனகாண்"என்று அந்வயித்து, எருமைகள் பனிப்புல் மேய்கைக்காகச் சிறுவீடு காலத்திலே விடப்பட்டு, பரம்பினவென்று அருளிச்செய்கிறுர் (பனிஇத்யாதி.) முத்திறம் - மூன்றுவகைப்பட்ட [க] ப்ருந்தம் - ஆட்டுத்திறம், மாட்டுத்திறம், எருமைத்திறம். பால் கறக்கை முதலான அடையாளம் சொல்லாமல் எருமை விடுகையைச் சொல்லுகைக்குப் பாவம் அருளிச்செய்கிறுர் (அவற்றின் இத்யாதி.)

"மிக்குள்ளபிள்ளைகளும்" இத்யாதிக்கு உக்திப்ரத்யுக்திருபமாக அவதாரிகை அருளிச்செய்வதாக, கீழ்ச்சொன்ன அடையாளத்தை அந்யதாகரிக்கிறபடியை இரண்டுவகையாகக் காட்டுகிறுர் (உங்கள் இத்யாதி வாக்ய த்வயத்தாலே.) 'இருள் திரைந்து போகிறதித்தனை' என்றது, இருள் கூட்டம்கூட்டமாகப் போகிறதித்தனை : எருமைபோகிறதன்று என்றபடி. இப்படி அந்யதாகரிக்கும்படி எருமைகளைச் சொல்லுவானென்? முத்திறமுண்டாயிருக்கப் பசுக்களைச்சொல்லவொண்ணுதோவென்று தடஸ்தசங்கையை த்ருஷ்டாந்த முகேந பரிஹரியாநின்றுகொண்டு ஈடுபடுகிறுர் (மேட்டிள இத்யாதி.)

* இந்த வாக்யங்களுக்குப் பதிலாக "அதுவும் அந்யதாஜ்ஞாநம்." என்று சில ஸ்ரீகோசங்களிற் காண்கிறது. [க] ப்ருந்தம் - கூட்டம்.

விடிந்ததில்லை யென்று அறிந்தபடி எங்ஙனே யென்ன ; பஞ்ச லக்ஷம்குடியிற் பெண்களில் உங்களையொழிய அல்லாதாருணராமை யாலே யென்ன,--(மிக்குள்ள பிள்ளைகளும்) - உன்னை யொழிந்தா ரெல்லாரும் ஆற்றாமையாலே போனார்கள்; நீயே எழுப்பக்கிடந்தாய். (போவான் போகின்றாரை) - அர்ச்சிராதிகதி, அக்ரூரயாநம், திரு வேங்கடயாத்ரைபோலே, போகையே ப்ரயோஜநமாகப் போகாநின் றார்கள்; நான் இனிஎங்கேபோக அவர்கள் போனார்களாகில்? என்ன,- (போகாமல்காத்து) - "செய்யாதன செய்யோம்" என்று அடியில் நம்முடைய வ்யவஸ்தையை யுணர்த்தி, நீ வந்ததில்லையென்று அவர் கள் போகாதபடி தடுத்து. (உன்னைக்கூவுவான்) - உன் வாசலிலே வந்து எழுப்பினோ மென்னும் தரம் பெறுகைக்கு. (வந்து) - [ఉత్తరం తీరమాసాద్య] "உத்தரம் தீரமாஸாத்ய" (உஅ) என்னுமா போலே. (நின்றோம்) - [తస్థుః వైహాయసే] "வஹாயஸ வவ்ருதிஷ்டத" (அகூ) என்று நிலைபெற்று நின்றோம்.

எல்லார்க்கும் க்ருஷ்ணனோட்டை ஸம்பந்தம் ஒத்திருக்க, நீங் கள் என்பக்கல் ஸாபேக்ஷராய் வந்தோமென்று சொல்லக் கட விகளோ? என்ன, (கோதுகலமுடைய பாவாய்) - உன்னை முன்னி ட்டுக்கொண்டு செல்ல, க்ருஷ்ணவிஷயீகாரம் உண்டென்னும்படி

---

"மேட்டிளமேதிகள் தளைவிடுமாயர்" என்றது-பெருத்து இளைசான எருமை களுடைய காலில்கட்டுகிற கயிற்றினை விடுகிற இடையர்என்றபடி.'மிக்குள்ள' என்றது - அவஶிஷ்டமான என்றபடி. "போவான் போகின்றாரை - மிக் குள்ள பிள்ளைகளையும்" என்று அந்வயம். "போவான்" என்று - போகை உத்தேஶ்யமாகத் தோற்றச் சொல்லுகையாலே, அத்தை த்ருஷ்டாந்தமு கேந அருளிச்செய்கிறார் (அர்ச்சிராதி இத்யாதி.) தரம் - அதிஶயம். "கூவு வான் - நின்றோம்" என்றுதல், "வந்தோம்" என்றுதல் சொல்ல அமைந்திரு க்க, இரண்டும் சொல்லுகைக்கு த்ருஷ்டாந்தமுகேந ப்ரயோஜநம் அரு ளிச்செய்கிறார் (உத்தரம்இத்யாதி.)["ఉత్తరే తీరే తస్థుః వైహాయసే"]"உத்தரே தீரே வஹாயஸ வவ்ருதிஷ்டத" என்றதே, ["తీరమాసాద్య"] "தீரமா ஸாத்ய" என்கையாலே - அத்தேஶப்ராப்தியே ப்ரயோஜநமென்று தோற் றுகிறது. ["తస్థుః వైహాయసే"] "வஹாயஸ வகுதிஷ்டத" என்றதே["వి"] "வி" என்றுசொன்னதால் - நிற்கையே ப்ரயோஜநமென்னும் தோற்றுகிறது.

"கோதுகலம்" என்றது - கௌதூஹலமென்றாய், தன்பக்கல் க்ருஷ்ண னுடைய கௌதூஹலமுடையவளென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (உன்னை இத்யாதி வாக்யத்வயத்தாலே.) நீத

அவனாலே கொண்டாடப்படுமவளிறே. பத்நீத்வம்அவிஶிஷ்டமானாலும் க்ருஷ்ணவல்லபை நீயன்றோ? நாங்கள் அவனுக்கு நல்லோம், நீ அவனோட்டை ஸம்பந்தத்தாலே எங்களுக்கு நல்லையாயிருப்புதி; ஆகையாலே, அவனிலும் ததீயரை உகக்குமென்னும் வேண்டற்பாடுடையை நீயன்றோ? (பாவாய்) - [“నారీణాముత్తమావధూః”] “நாரீணா முத்தமாவதூ:” (கூo) என்கிறபடியே நிருபாதிகஸ்த்ரீத்வ முடையளாகை, பாரதந்த்ரிய பராகாஷ்டை யுடையளன்றோ வென்கை. (எழுந்திராய்) - இப்போது எழுந்திராயாகில் அவையெல்லாம் அஸத்ஸமமாங்கிடாய். பெண்ணின் வருத்தம் அறியாதவனைப் போலன்றிக்கே அறியக்கடவ நீ கிடக்கக்கடவையோ? (எழுந்திராய்) - எழுந்திருக்கும்போதை பரிஸ்பந்தம் காண்கைக்காக; நாங்கள் உணர்த்த உணர்ந்தாயாகிற ஏற்றத்தை எங்களுக்குத் தாராய்.

எழுந்திருந்து செய்வது என்னென்ன,—(பாடிப் பறைகொண்டு) - இதுக்கு முன்பு நாம் பெற்ற ஐஶ்வர்யம்போலேயோ இப்போது நாம் பெறப் புகுகிற ஐஶ்வர்யம்? முன்பு, “க்ருஷ்ணன்கிடாய், பெண்கள்கிடாய்” என்கிற நாட்டார்க்குத் தெரியாதபடி நெஞ்சாலே க்ருஷ்ணனை யநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீதியானது புறம்பொசியாதபடி அடக்கிப்போந்தோம்; இப்போது நாட்டார் தாங்களே அநுமதி பண்ணுகையாலே வாய்க்கால்வெட்டி நெஞ்சிலே கங்கும் கரையும் அறப்பெருகுகிற க்ருஷ்ணகுணாநுபவ ப்ரீதிக்குப் போக்கு அணைவெட்டிவிட்டு க்ருஷ்ணகுணங்களை நாம் வாயார நினைத்தபடி பாடக்கடவோம். பறைகொள்ளுகையாவது - நாட்டார்க்கு நோன்பு; தங்களுக்கு ஸேவிக்கையே பலம்.

பாடுவது எத்தையென்ன,—(மா வாய் பிளந்தானை மல்லரை மாட்டிய) - க்ருஷ்ணனுடைய வீரசரிதங்களைப் பாடி. (மாவாய்

---

யரிடத்தில் கௌதூஹலமுடையவளென்று விவக்ஷித்து, ஸஹேதுகமாகத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி.) “பாவாய்” என்று ஸம்போதித்ததுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (பெண்ணின் இத்யாதி.) “கூவுவான் வந்து நின்றோம்” என்னவே இவளை யெழுந்திருக்கச் சொல்லுகை ஸித்தமாயிருக்க, “எழுந்திராய்” என்றதுக்கு இரண்டுதாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எழுந்திருக்கும் இத்யாதி.)

கீழ்வாக்யவிவரணம் (முன்பு இத்யாதி.) கங்கு - அணை. கரை - இருகரை.

பிளந்தானை) - நமக்காகக் கேஶியைப் பிளந்து, நம்மையும் தன்னையும் உண்டாக்கித் தந்தவனை. தன்னை நாம் கிட்டி யநுபவிக்கைக்கு ஈடாக, இடையில் வன்னியம் அறுத்த ஆண்பிள்ளையைப் பாடக்கடவோம். (மல்லரைமாட்டிய) - ["సఖ్యౌగపశ్యత"] "ஸவ்யஃவஶ்யத" (கூக) என்கிறபடியே அவ்வூரில் பெண்களுக்கு உதவினபடி; அது தங்களுக்கு உதவிற்றென்று இருக்கிறபடி. (தேவாதிதேவனை) - ["జాత్రోసిదేవదేవేశ"] "ஜாதொஸிதெவதெவெஶ"(கூரு)என்றும், ["సోహంతేదేవదేవేశ"] "ஸொஹம்தெதெவதெவெஶ" (கூஉ) என்றும் சொல்லுகிறபடியே * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கிறவனை. ["నగరస్త్రీకలాలాప మధురశ్రోత్రణపాస్యతి . మధురాంపాప్య గోవిన్దోక ధంగోకులమేష్యతి"] "நகரஸ்த்ரீகலாலாபமதுரஶ்ராத்ரணவாஸ்யதி | மதுராம்ப்ராப்யகோவிந்தஃகதம்கோகுலமேஷ்யதி" (கூ௩) என்கிறபடியே பெரியமேன்மையுடையனாயிருக்கிறவன் ஸ்ரீமதுரையிலே போய்க் குவலயாபீட சாணூர முஷ்டிகளை அழியச்செய்து, படைவீட்டிற் பெண்பிள்ளைகளோட்டைப் பழக்கத்தாலே பெரிய [க] விதக்தனானவன் இடக்கையும் வலக்கையுமறியாத நம்பக்கலிலே வரக்கூடுமோ? என்ன,—(சென்று) – விரஹம் தின்று குறைக்கொள்ளியான நம் ஶரீரத்தை அவன் கண்டு புண்படும்படி அவனிருந்தவிடத்தே செல்லக்கடவோம். அவன் வேண்

"மா" என்று - குதிரை; அத்தைப்பற்ற, (கேசியை என்றது.) வன்னியம் - குறும்பு. ஸ்ரீப்ருந்தாவநத்தில் கேசிசிரஸநாதிகளைப்போலே இடைச்சிகளான தங்களுக்கு உதவினதன்றிக்கே, மதுரையில்செய்த வீரசரிதத்தை இவர்கள் பாட ப்ரஸக்தியென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஸக்ய இத்யாதி.) ["సఖ్యౌగపశ్యతచాణూరనియుద్ధార్థమయంహరిః । సముపైతినసంత్యత్రకింవృద్ధాయుద్ధకారిణః"] "ஸவ்யஃவஶ்யதசாணூரநியுத்தார்த்தமயம்ஹரிஃ | ஸமுபைதிநஸந்த்யத்ரகிம்வ்ருத்தாயுத்தகாரிணஃ" இத்யாதிப்படியே பெண்கள் கண்காண மல்லரைக்கொன்றதாலே அவர்களுக்கு உதவினதே தங்களுக்கு ப்ரயோஜந மென்கை. மேலுக்கு அவதாரிகை (నగరస్త్రీ-நகரஸ்த்ரீ இத்யாதி.) "தேவாதிதேவனை, மல்லரைமாட்டிய" என்ற இரண்டையும்பற்றக்கீழ் ஓர்அவதாரிகைஅருளிச்செய்து, "தேவாதிதேவனை" என்றதைமாத்ரம் கடாக்ஷித்து அவதாரிகாந்தரம் அருளிச் செய்கிறார்

[க] விதக்தன் - ஸமர்த்தன்.

டற்பாட்டிலே இருக்கிலோ வென்னில்,—(சென்று) - அவன் வர ப்ராப்தமாயிருக்க நாம் சென்று. [''ஃஃஃஃஃ''] ''உவஷெ யொ ''வஷிதஃ'' (எச) என்றும், [''ஃஃஃஃ''] ''வஃ ஹி மஉாவெவ'' (எரு) என்றும் இவர்கள் சொல்லுகை அத்தலைக்கு மிகுதியாயிறே யிருப்பது. (நாம் சேவித்தால்) - அத்தலை இத்தலையானல்.

(ஆவாவென்று ஆராய்ந்துஅருளும்) - ''நம்மாலே பேறு என்று நாம் வரப் பார்த்திருக்குமவர்கள் நாமிருந்தவிடத்தே வந்தது இவர்கள் செல்லாமையிறே'' என்று இரங்கி நமக்கும் உகந்தருளுங் காண். ப்ரணயித்வம் போனுலும் ஆர்த்தரக்ஷணம் தவிருமோ? [''ஃஃஃஃ''] ''ஆநூஶஂஸ்யஂபரோ தர்ம:'' (கூச) என்று சொல்லிவைத்து, அநுஷ்டியா தொழியுமோ? ஆனபின்பு, அவனருளுக்கு ஹேதுபூதையான நீ எழுந்திராய்.

ஆவாவென்று ஆராய்ந்தருளும்; கோதுகலமுடைய பாவாய் எழுந்திராய் என்று அந்வயம். (அ)

---

(அவன்வேண்டற்பாடு இத்யாதி.) 'வேண்டற்பாட்டிலே' என்றது - ப்ரணயித்வத்தைவிட்டுப் பெருமையிலே என்றபடி. ''நாம் - சென்று'' என்று அந்வயித்து ஶப்தார்த்தம் அருளிச்செய்கிறர் (அவன்வர இத்யாதி.)

''ஆராய்ந்து - ஆவாவென்று - அருளும்''என்று அந்வயம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (நம்மாலே இத்யாதி.) ''ஆ ஆ'' என்றதுக்கு - ஐயோ! என்று சப்தார்த்தமாய், பலிதம் 'இரங்கி' என்றது இரண்டாம் அவதாரிகாநுகுணமாக ''அருளும்'' என்றதுக்குப் பாவம் அருளிச்செய்கிறர் (ப்ரணயித்வம் இத்யாதி.)

பாடிப் பறைகொண்டு என்று தொடங்கி, அருளும், கீழ்வானம் என்று தொடங்கிஎழுந்திராயென்று அந்வயமென்றுகாட்டுகிறர்(ஆவாஇத்யாதி.)(அ)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—எட்டாம்பாட்டு. (கீழ்வானம் இத்யாதி) - இப்பாட்டில் பாகவத ஶேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வமுடைய ளாகையாலே பகவதபிமதரானவரை எழுப்புகிறர்கள்.

வ்யா.—(கீழ்வானம் வெள்ளென்று) - ''வெள்ளென்று'' என்றது - வெள்ளென்றது என்றபடி. அசேதநத்துக்கும் சைதந்யமுண்டாம்படி ஸத்த்வோத்தரமான காலமாயிற்று: எழுந்திராய் என்ன ;

அசேதநத்துக்குச் சைதந்யம் உண்டாய்த்தது, ஸத்த்வோத்தரமான காலக்ருதமல்ல; "மரங்களு மிரங்கும்வகை" என்கிறபடியே உங்கள் ஸ்வாநுமாநக்ருதம்; வேறு அடையாளம் உண்டோ? என்ன;

(எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்)- அஜ்ஞாநமானது ஸத்த்வோதயகாலத்திலே விடப்பட்டு, தனக்கு அபாஶ்ரயம் தேடிப் போகாநின்றதுகாணென்ன;—அதுவும் உங்கள் ஸந்நிதியாலே; ஸந்நிஹித சேதநஅஜ்ஞாநம் போம், உங்களைப்பிரிந்தவாறே பழையபடியே உண்டாம்; அது ஸத்வகுண க்ருதமன்று என்ன;—ஆனால், விடியாமைக்கு அடையாளம் என் சொல்லுகிறாய்? என்ன; உங்களையொழிந்த பகவத்ப்ரவணருணராமை யென்ன;—

(மிக்குள்ள பிள்ளைகளும்) - நம்மை யொழிந்த பாகவதரெல்லாரும் போனார்களென்ன, (போவான் போகின்றாரைப் போகாமல் காத்து)- பகவத்ஸந்நிதிக்குப் போகையே ப்ரயோஜநமாகப் போமவர்களை, பாகவதரை முன்னிட்டல்லது திருவடி தொழக்கடவோமல்லோமென்கிற நியமத்தை யுணர்த்தி, போகாமல் தடுத்து. (உன்னைக் கூவுவான் வந்து நின்றோம்) - உன்னை யெழுப்பினோமென்கிற அபிப்ராயம் பெறுகைக்காக உன்வாசலிலே வந்து நின்றோம். (கோதுகலமுடைய பாவாய்) - பகவதபிமாந விஷயபூதராய் அநந்யார்ஹரான ஸ்வாமிநீ! (எழுந்திராய்) - நீ யெழுந்திருந்தால் நமக்குஏதேனும் குறையுண்டோ? எழுந்தால் செய்யவேண்டுவதென்னென்ன,— சொல்லுகிறார்கள்.

(பாடிப் பறைகொண்டு) - பாடுகையாகிற புருஷார்த்தத்தை லபித்து. (மாவாய் பிளந்தானை)- அஹங்காரநிரஸகனை. (மல்லரை மாட்டிய) - காம க்ரோத நிவர்த்தகனை. (தேவாதிதேவனை) - நித்யஸூரி நிர்வாஹகனை. (சென்று) - ப்ராப்யத்வரையாலே சென்று. (நாம்) - அவன் வர இருக்கக்கடவ நாம். (சேவித்தால்) - அத்தலை இத்தலையானால்; ஆவாவென்று க்ருபை பண்ணி (ஆராய்ந்தருள்) - விசாரிக்கும். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. "க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான்" என்று தான் போகையை அநாதரித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். அதாவது - ஸ்வரூபத்தை யுணர்ந்துவந்து அநுப

---

ஒன்பதாம்பாட்டு. (தூமணி இத்யாதி.) "தூமணிமாடம்" என்றுதொடங்கி, "துயிலணைமேல் கண்வளரும்" என்னுமளவும் கடாக்ஷித்து 'க்ருஷ்ணன்

விக்கையும் அவன் கார்யமிறே. ["ததஸ்ஸத்யஸம்பத்தி"] "ததஸ்வ ஸஹஸ்ரஸம்ஹவெசு" (கூடு) என்று இருப்பாளொருத்தி யென்கை.

மூ.—தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரியத்
தூபங்கமழத் துயிலணைமேற்கண்வளரும்
மாமான்மகளே மணிக்கதவந்தாள்திறவாய்
மாமீரவளையெழுப்பீரோ உன்மகள்தான்
ஊமையோவன்றிச் செவிடோவனந்தலோ
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய்.

பதவுரை:—(க்ருஷ்ணன் வந்தபோது வருகிறானென்றிருப்பா ளொருத்தியைப்பார்த்து), 'தூமணி மாடத்து - நிர்த்தோஷங்களான ரத்நங்களிழைத்துச் செய்த மாளிகையில், சுற்றும் - கண்டவிடமெங்கும், விளக்கு எரிய - விளக்குக்கள் (மங்களார்த்தமாக) ப்ரகாசிக்கவும்,—தூபம் கமழ - (அகில் முதலியவற்றின்) புகை பரிமளிக்கவும்,— துயில் அணைமேல் - (எப்போதும்) உறங்கப்பண்ணும் (மிருதுவான) படுக்கையில்,கண்வளரும்-கண்ணுறங்குகிற, மாமான்மகளே - அம்மான்பெண்ணே! மணி கதவம் தாள்-மாணிக்கக்கதவுகளின்மணித்தாள்களை,திறவாய்-திறக்கவேண்டும்,'(என்றுசொல்ல),—(இதை உள்ளிருக்கும்தாயார்கேட்டு," அவர்கள் ஆர்த்தைகளாய்வாசலில்நின்றுதுவள நீபேசாதே கிடந்து உறங்குவது என்?" என்று வினவ;புறம்பில் நின்றும் அதைக் கேட்டவர்கள்),(அப்போதும்உணரக்காணாமையாலே), உன் மகள் தான் - உமது பெண்பிள்ளை தான், ஊமையோ -வாய்ப்புலனில்லாதவளோ? அன்றி - அல்லாவிடில், செவிடோ-செவிப்புலனில்லாதவளோ? அனந்தலோ - சோம்பலுடன் உறங்குகிறாளோ? ஏமப்பட்டாளோ - (எழுந்திராதபடி) காவலிடப்பட்டாளோ? பெருந்துயில் -பேருறக்கம்கொள்ளும்படி ,மந்திரப்பட்டாளோ- மந்திரத்தாற் கட்டப்பட்டாளோ? (என்று திருத்தாயாரைக் கேட்க, அந்தத் தாயார்'அவளுணருகைக்கு அவன் திருநாமங்களைச் சொல்லுங்கள் என்ன),— 'மாமாயன் -அளவிடவொண்ணாதஆச்சரியகுணசேஷ்டிதங்களை யுடையவன், மாதவன் - பெரியபிராட்டியார்க்கு வல்லபன், வைகுந்தன் - ஸ்ரீவைகுண்ட

---

வந்தபோது வருகிறான்' என்றது. "மாமீர்" இத்யாதியைக் கடாக்ஷித்து, க்ருஷ்ணஸம்ச்லேஷத்துக்கு உபயுக்தமாக,'தான்போகையை அநாதரித்துக் கிடக்கிறாள்' என்றது. மடலெடுத்தாகிலும் பெறவேண்டும் க்ருஷ்ணஸம்ச்லேஷத்துக்காகப் போகையை அநாதரிக்கக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (அதாவது இத்யாதி.)

நாதன்', என்று என்று - என்று இப்படியாக, நாமம் பலவும் - ஆயிரந் திருநாமங்களையும், நவின்று-சொல்லி, 'மாமீர்- மாமிமாரே! அவளை எழுப்பீரோ- உம்மகளை யெழுப்பலாகாதோ? என்று துயிலுணர்த்துமவர்கள் சொல்லுகிறார்களென்க.

வ்யா.—(தூமணிமாடத்து) - "துவளில் மாமணிமாடம்" என்று - குற்றம் எடுத்துக்கழிக்கவேண்டாத நன்மையையுடைய மணியாலே செய்த மாடம். ஸம்ஸார கந்தமுண்டாய்க் கழிந்த முக்தர்க்கும் அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்த்ரான நித்யர்க்கும் உண்டான வாசிபோந்திருக்கை. (சுற்றும் விளக்கு எரிய) – மாணிக்கத்தினொளியாலே பகல்விளக்குப்பட்டிருக்கச்செய்தே மங்களார்த்தமாக விளக்கு எரிகிறது. (சுற்றும் விளக்கு எரிய)-க்ருஷ்ணன் வந்தால் தன் கையைப்பிடித்து உலாவுமிடமடையப் படுக்கையும் விளக்குமாக்கி வைத்தபடி. புறம்பு நிற்கிறவர்களுக்கு உள்ளே விளக்கெரிந்தது தெரிகிறபடி எங்ஙனே யென்னில்?—மாணிக்கக்குப்பிபோலே, புறம்பே நிற்க உள்ளுள்ளதெல்லாம் தோற்றாநிற்கும். (தூபம் கமழ) - புகைகாணவொண்ணதே பரிமளம் வெள்ளமிட. "சீருற்ற வகிற்புகை" இத்யாதியிற் சொல்லுகிறபடியே எங்களுக்கு அஸஹ்யமான பரிமளம் உனக்கு ஸஹ்யமானபடி எங்ஙனே யென்கை. (துயிலணைமேல் கண்வளரும்)- க்ருஷ்ண விரஹத்தையும் ஆற்றவற்றான படுக்கையிலே உறங்குகிற. எங்களுக்கு * மென்மலர்ப் பள்ளி வெம்பள்ளியாயிருக்க, உனக்குப் படுக்கை பொருந்திக் கண்ணுறங்குவதே!

---

சுற்றும் ஏற்றின விளக்குகளெரியவென்று ஆர்த்தம் விவக்ஷித்து "சுற்றும்" என்றதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் வந்தால் இத்யாதி.) 'படுக்கையும்' என்றது - அர்த்தஸித்தம். அதாவது - தூமணி மாடமாகையாலே சுற்றும்விளக்குவேண்டாமையாலும், மங்களார்த்தமாகில் ஒன்றே அமைந்திருக்கையாலும், "சுற்றும்"என்றது வ்யர்த்தமாகாமைக்காக ப்ரதிபர்யங்கம் மங்களதீபம் வேணு மென்கை. "தூபம்" என்றபோதே பரிமளிக்கை அர்த்தஸித்தமா யிருக்கவும், "கமழ" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புகை இத்யாதி.) இப்படிமள ப்ராசுர்யத்தை இவர்கள் சொல்லுகைக்கு உட்கருத்தை அருளிச்செய்கிறார் (சீருற்ற இத்யாதி.) துயிலைத்தாராநிற்கும் அணையென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, இப்படி விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண விரஹத்தையும் இத்யாதி.) (இப்படி சொன்னதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (எங்களுக்கு இத்யாதி.)

(மாமான்மகளே) - ஸ்வாமிநியாயும் தோழியாயும் அநுபவித்த தொழிய, ப்ரக்ருதிஸம்பந்தத்தாலும் ஆண்டாள் அநுபவிக்கிறாள்: "மாமான்மகளே" என்று - இட்டீடுகொள்ளுகைக்கு விடவொண்ணாத உறவு சொல்லுகிறாள்; திருவாய்ப்பாடியிலே ஒரு ப்ராக்ருத ஸம்பந்தம் தனக்கு உஜ்ஜீவந மென்றிருக்கிறாள். பகவத்ஸம்பந்திகளுக்கு எல்லாம் அடிக்கழஞ்சு பெற்றிருக்கிறபடி. (மணிக்கதவம் தாள்திறவாய்) - நீங்களே திறந்துகொண்டு புகுருங்கோள் என்ன; மாணிக்கங்களின் ஒளியாலே தாள் தெரிகிறதில்லை, நீயே திறவா யென்கிறார்கள்.

"அவர்கள் அழையாநிற்க, நீ பேசாதே கிடக்கிறது என்?" என்று தாயார் கேட்க; புறம்பு நின்றவர்கள் அதுகேட்டவாறே "மாமீர் அவளை எழுப்பீரோ" என்கிறார்கள். (மாமீர்)-அவளுடைய திருத்தாயாரென்று அவளுறவாலே சொல்லுகிறார்கள். பின்னையும் உணரக் காணாமையாலே சிவிட்கென்று "உன்மகள்தான் ஊமையோ" என்கிறார்கள்; - வ்யவஹார யோக்யையன்றோ வென்கிறார்கள். (அன்றிச் செவிடோ) - ஊமைக்கும் கேட்டுவந்து திறக்கலாம்; அதுக்குமேலே, செவியில் துளையில்லையோ? எங்கள்வார்

---

"பாவாய்" என்னாதே, இப்படி ஸம்போதித்ததுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் (ஸ்வாமிநி இத்யாதி.) "நாயகப் பெண்பிள்ளாய்" இத்யாதியைக் கடாக்ஷித்து (ஸ்வாமிநியாயும்என்றது.) "சுற்றத்துத்தோழிமார்" என்றதைப் பற்ற (தோழியாயும் என்றது.) ப்ரக்ருதி ஸம்பந்தத்தைச் சொல்ல வேண்டினால் மற்றும் முறைகளுண்டாயிருக்க இப்படி ஸம்பந்தத்தைச் சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மாமான் இத்யாதி.) இட்டீடு கொள்ளுகை - வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகை. ப்ரக்ருதி ஸம்பந்தம் த்யாஜ்யமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலே இத்யாதி வாக்யத்வயத்தாலே.) அடிக்கழஞ்சு - ஶ்லாக்யம். "மணி" என்று விசேஷித்ததுக்கு உக்திப்ரத்யுக்தி முகேந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நீங்களே இத்யாதி) "புகுருங்கோளென்ன" என்றதுக்கு - புகுருங்கோளென்று அபிப்ராயமாக என்றபடி. இங்ஙனன்றாகில், மேல் "ஊமையோ" என்னக்கூடாதிறே.

சிவிட்கென்று - சீக்ரமாகச் சீற்றமுண்டாய். வ்யவஹாரம் - வார்த்தை சொல்லுகை. "அன்றிச் செவிடோ" என்றதுக்கு இரண்டு அர்த்தம் - ஊமையானவளவன்றிக்கே செவிடாயுமிருக்கிறாளோ வென்றும்; அங்ஙனன்றிக்கே; செவிடுபோலே யிருக்கிறாளோவென்றும். அதில் முந்தினது (ஊமைக்கும் இத்யாதி.) இரண்டாவது (எங்கள் இத்யாதி.) 'அர்யபரையோ'

த்தை கேளாதபடி அங்யபரையோ? (அனந்தலோ) - நெடும்போது க்ருஷ்ணநுபவம்பண்ணி, படுக்கையிற் சாய்ந்தது இப்போதோ? (ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாளோ) - "ஏமம்" என்பது - காவல். எழுந்திராமைக்குக் காவலிட்டா ருண்டோ? நெடும்போது உறங்கும்படி மந்த்ரவாதம் பண்ணினா ருண்டோ? "மையலேற்றி மயக்க உன்முகம் மாயமந்திரந்தான்கொலோ" என்று - அம்மான் பொடி தூவினா ருண்டோ? என்கை.

"அவளுணரும்படி திருநாமங்களைச் சொல்லுங்கோள்" என்று திருத்தாயார் சொல்ல, 'நாங்கள்சொன்ன திருநாமங்கள் அநேகமன்றோ?' என்கிறார்கள்; அவைதான் எவையென்னச் சொல்லுகிறார்கள்:—(மாமாயன்) - ஆஸ்சர்ய குணசேஷ்டிதங்களாலே அபலைகளான பெண்களை எழுதிக்கொண்டவன். (மாதவன்) - அதுக்கடியான ஸ்ரீயஃபதி; அந்த ஸௌலப்யத்துக்குக் குருகுலவாஸம் பண்ணின இடம். (வைகுந்தன்) - ஸ்ரீயஃபதித்வத்தாலே வந்த மேன்மைக்குத் தகுதியான தேஶவிஶேஷத்தை யுடையவன். அப்பெரிய மேன்மையுடைய ஸ்ரீயஃபதியானவன் கிடீர் பெண்களுக்கு எளியனானானென்கை.

மேன்மைக்கு அடியான திருநாமங்களும், நீர்மைக்கு அடியான திருநாமங்களும், இரண்டுக்கும் நிதாநமான ஸ்ரீயஃபதித்வத்துக்கு வாசகமான திருநாமங்களுமாக ஒரு ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்துக்குப் போரும் திருநாமங்கள் சொல்லிற்றென்கிறார்கள்.

நாமம்பலவும் நவின்று - மாமீர் அவளை யெழுப்பீரோ என்று அந்வயமாகவுமாம். (௯)

---

என்றது - 'செவியுண்டாயிருக்க க்ருஷ்ணநுபவம் நடக்கிறதோ?' என்றபடி. அனந்தல் - ஶ்ராந்தியோடே கூடின உறக்கமென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ப்ரஸக்தி பூர்வகம் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (நெடும்போது இத்யாதி.) "ஏமப்பட்டாளோ, பெருந்துயில் மந்திரப்பட்டாளோ" என்று விவக்ஷித்து ஶப்தார்த்த கதநபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஏமம் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) 'அம்மான்பொடி' என்றது - 'அம்மான், அம்மான்' என்றுகொண்டு பின்தொடரும்படியான சுக்குப்பொடி யென்றபடி. 'ஸ்ரீயஃபதி' என்றது - ஶ்ரியஃபதித்வமென்றபடி.

"என்றென்று நாமம் பலவும் நவின்றோம்" என்று க்ரியையாக்கி, அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மேன்மைக்கு இத்யாதி.) (௯)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—ஒன்பதாம்பாட்டு. (தூமணி இத்யாதி). உபாயாத்யவஸாய நிஷ்டரான அதிகாரியை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(தூமணிமாடத்து)- அப்ராக்ருதமாய்ப் பஞ்சோபநிஷந்மயமான திவ்யமங்கள விக்ரஹத்திலே. (சுற்றும் விளக்கு எரிய) - ஸர்வதோமுகமாக ஜ்ஞாநதீபம் ப்ரகாஶிக்க. (தூபம்கமழ) - ஜ்ஞாநம் பரிமளிக்க; ஜ்ஞாநம் பரிமளிக்கையாவது - அநுஷ்டாந ஶேஷமாயிருக்கை. (துயிலணைமேல் கண்வளரும்) - நித்ராப்ரதமான ஶயநத்திலே கண்வளருகிற. அதாவது – ஸ்வப்ரயத்நஸாமாந்ய நிவ்ருத்திபூர்வகமான பகவதேகோபாயாத்யவஸாயத்திலே நிஷ்டனாயிருக்கை. (மாமான்மகளே) – "மாமான்" என்றும் "அம்மான்" என்றும் இரண்டும் பர்யாயமாகையாலே ஸ்வாமியான எம்பெருமானாலே புத்ரத்வேந அபிமதராய் அநந்யார்ஹரான பாகவதரே! (மணிக்கதவம் தாள்திறவாய்) - மணிமாடத்தினுடைய மணிக்கதவையும் மணித்தாள்திறவாய். அதாவது-த்வதநுபவ விரோதியான தேஹாத்மாக்களிரண்டிலு முண்டான மமகாரத்தைத் தவிர்ப்பியா யென்றபடி. அன்றிக்கே, த்வதநுபவவிரோதியான பகவத்ஸௌந்தர்யத்திலும் பகவத் பக்தியிலும் மமகாரத்தைத் தவிர்ப்பியா யென்கிறார்கள். இவர்கள் இப்படிச் சொன்னவிடத்திலும் இவ்வதிகாரி பேசாதே கிடக்கையாலே, இவ்வதிகாரிக்கு ஜநகையாயிருக்கிற அநந்யோபாய த்வரூபஜ்ஞாநமாகிற திருத்தாயார், 'அவர்கள் இப்படியழைக்க, நீ பேசாதே கிடப்பதே?' என்ன, (மாமீர் அவளை யெழுப்பீரோ) என்கிறார்கள். அதாவது - ஸ்வாமிநி யானவளே! உனக்கு ஸ்வம்மான அவளை எழுப்பீரோ? என்றபடி. தன்னிடத்தில் அநந்யோபாயத்வஜ்ஞாநம் பிறந்தபின்பிறே ததேகோபாயாத்யவஸாயம் ஜநிப்பது. இப்படிச் சொன்னவிடத்திலும் எழுந்திராத இன்னாப்பாலே. "உன்மகள்தா னூமையோ" என்கிறார்கள். அதாவது - மறுமாற்றஞ் சொல்லவல்ல ளல்லளோ? என்றபடி. இவளைப் பேசவொட்டாதே வாயை மூடினா ருண்டோ ? என்று பாவார்த்தம். (அன்றிச் செவிடோ) - ஊமையான மாத்ரமன்றிக்கே, நம்வார்த்தை கேளாதபடி செவிடோ ? நம்பேச்சுக் கேளாதபடி அங்கே ஆரவாரமுண்டோ? என்று பாவார்த்தம். (அனந்தலோ) - சோம்பலோ? என்றபடி. நெடும்போது நாயகனோடு கூடியிருந்து படுக்கையிலே சாய்

ந்தது இப்போதோ? என்று பாவார்த்தம். தனித்தனியே வாகாதி இந்த்ரியங்கள் பகவத்விஷயத்திலே ப்ரவணங்களாகையாலே ஒரு கார்யத்திலும் ஸக்தையல்ல ளென்றுமாம். (ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ) - காவலிடப்பட்டாளோ? மஹாநித்ரை யுண்டாம்படி மந்த்ரவாதம் பண்ணப்பட்டாளோ ? ஸ்வப்ரவ்ருத்தி ஸாமாந்யமும் உபாயவிரோதியாகையாலே இதில் அந்வயியாதபடி தடுத்துவைத்தவர்க ளுண்டோ ? அதாவது - நமஸ்ஸு தடுத்ததோ? என்றபடி. உபாயவைலக்ஷண்யம் ப்ரவ்ருத்யந்தரத்தில் அந்வயியாதபடி மோஹிப்பித்ததோ? என்றபடி.

இப்படி இவர்கள் இன்னாதாக, திருத்தாயார், 'திருநாமத்தைச் சொல்லுங்கோள் இவளெழுந்திருக்கைக்கு' என்ன, (மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று நாமம்பலவும் நவின்று)—(மாமாயன்)-அத்யந்தம்ஸுலபன்.(மாதவன்)-இதுக்குக்குருகுலவாஸம்பண்ணின இடம். (வைகுந்தன்) - இந்தஸௌலப்யம் குணமாகைக்கு ஈடான பரத்வமுடையவன். (என்றென்று நாமம்பலவும் நவின்று, மாமீர் அவளை யெழுப்பீரோ) – ஸ்வார்த்தப்ரவ்ருத்தி ஸாமாந்யமும் உபாயவிரோதி, பரார்த்தப்ரவ்ருத்தி ஸாமாந்யமும் உபாயபலமாயும் உபாயாநுகூலமாயு மிருக்குமென்று அறிவித்து. (அவளை) - உபாயாத்யவஸாயநிஷ்டரை (எழுப்பீரோ) என்று அந்வயம். (கூ)

அ.—பத்தாம்பாட்டு. பெண்களெல்லாரும், "க்ருஷ்ணன்" என்றால் படும்பாட்டை அவன்தான் பட்டு "தண்ணீர், தண்ணீர்" என்னும்படி வீறுடையா ளொருத்தியை எழுப்புகிறார்கள். ,,[ఆనన్దం బ్రహ్మణో విద్వాన్''] 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்'' (கூகூ) என்னாதே, [''ఏష హ్యేవానన్దయాతి''] 'ஏஷஹ்யேவாநந்தயாதி'' (கூஎ) என்றிருப்பாளொருத்தி யென்றுமாம். க்ருஷ்ணன் அசல்திருமா

---

பத்தாம்பாட்டு. (நோற்று இத்யாதி.) "அருங்கலமே" என்றதுக்கு - ஹாரத்துக்கு நாயகக்கல்போலே யிருக்குமவ ளென்றுதல்; நல்லபெண்ணென்றுதல் வக்ஷ்யமாணமான சப்தார்த்தத்தைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகையிடுகிறார் (பெண்கள் இத்யாதி.) வீறு-அதிசயம். "சுவர்க்கம்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆநந்தம் இத்யாதி.) [''ఆనన్దం బ్రహ్మణో విద్వాన్] '(ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்'' என்னாதே) என்றதுக்கு - வேதநம் ஸாதநமென்றிராதே என்று கருத்து. [''ఏష హ్యేవ''] "ஏஷஹ்யேவ" என்றதுக்கு இந்த ஈஶ்வரனே ஆநந்த

ளிகையாய் நடுவிட்ட வாசலாகையாலே (க) ஒருபோகியாக அநுபவிக்கிறாளென்றுமாம்.

மூ.—நோற்றுச்சுவர்க்கம்புகுகின்றவம்மனாய்
மாற்றமுந்தாராரோவாசல்திறவாதார்
நாற்றத்துழாய்முடிநாராயணன் நம்மால்
போற்றப்பறைதரும்புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்தகும்பகரணனும்
தோற்றுமுனக்கேபெருந்துயில்தான்தந்தானோ
ஆற்றவனந்தலுடையாயருங்கலமே
தேற்றமாய்வந்துதிறவேலோரெம்பாவாய்.

**பதவுரை.** (க்ருஷ்ணன் தானேவந்து மேல்விழும்படி அதிசயமுடையாளொருத்தியை நோக்கி, துயிலுணர்த்துபவர்), நோற்று - (க்ருஷ்ணாநுபவத்துக்கு) நோன்புநோற்று, சுவர்க்கம் புகுகின்ற - சுகத்தை (இடைவிடாமல்) அநுபவிக்கிற, அம்மனாய்- ஸ்வாமிநியானவளே!- (என்று எழுப்பவும் பேசாதே கிடக்க), (பின்னும் அவர்கள்),—வாசல்திறவாதார் -வாசற்கதவைத் திறவாமலிருப்பவர், மாற்றமும் தாராரோ - ஒருபேச்சாகிலும் பேசாரோ? (என்னவும் பேசாமலிருந்ததனால் பின்னும் அவர்கள்).—பண்டு ஒருநாள் - (ராவணன் பிராட்டியைப்பிரித்த) முன்னொருகாலத்தில், கூற்றத்தின்வாய் வீழ்ந்த - யமன்வாயில்விழுந்த, கும்பகரணனும்-கும்பகர்ணனும், உனக்குத் தோற்று - உனக்குத் தோற்றுப்போய், பெரும் துயிலும் - பேருறக்கத்தையும், தானே தந்தானோ - தானே தந்துபோனானோ? நாற்றம் - பரிமளம்வீசாநின்றுள்ள, துழாய் - திருத்துழாய்மாலையால் அலங்க்ருதமான, முடி - திருவபிஷேகத்தையுடையவனாய், நாராயணன் - எங்கும் வ்யாபித்து எல்லார்க்கும் ரக்ஷகனான ஸ்ரீமந்நாராயணன்,நம்மால்போற்ற-(ஆஶ்ரிதரான)நாம்மங்களாசாஸநம் பண்ணும்படி, பறைதரும் - கைங்கர்யமாகிறபுருஷார்த்தத்தைத் தருகின்ற, புண்ணியன் - தார்மிகன், ஆல் - ஆதலால், ஆற்ற அனந்தல் உடையாய் - மிகுந்த சோம்பலுடையவளே! அருங்கலமே . ஹாரத்துக்கு நாயகக்கல்போலே எங்களுக்குப் பூஷணமாயிருப்பவளே! தேற்றம்ஆய்வந்து - தடுமாறாதே தெளிந்துவந்து, திற - (கதவைத்) திறப்பாயாக என்கிறார்கள்.

---

ளாதநனென்று கருத்து. ''புகுகின்ற''என்ற வர்த்தமாநார்த்தத்தைக் கடாக்ஷித்து, க்ருஷ்ணாநுபவமாகிற பலம் கைபுகுந்தவளாக த்ருதீயாவதாரிகை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் அசல் இத்யாதி.)

---

(க) ஒரு போகியாகை - ஏககாலத்தில் பலமாகை,

வ்யா.—(நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்)- வைகின பின்பும் எழுந்திராமையாலே 'அம்மே! அழகிதாக நோற்று ஸுகம் பெறக் கோலினாய்!' என்று ஸ்தோபிக்கிறார்க ளென்றுமாம்; நோற்க வேண்டாதபடி நோன்பின் பலம் கைபுகுந்தவளிறே இவள் என்றுமாம். (நோற்று) - ஸித்தஸாதநை யாகையாலே உபாயாம்ஶத்தில் நிர்ப்பரையா யிருந்தாள். அவனுடைய ரக்ஷகத்வத்தை யுணர்ந்தால் தனக்கு யத்நம் பண்ண ப்ராப்தி யில்லை; தன் ஶேஷத்வத்தை யுணர்ந்தாலும் ப்ராப்தி யில்லையிறே. ["ఏతచ్ఛ్రుత్వా బ్రాహ్మణాస్తు త్వయోక్తే తేషాం రాజన్ సర్వయజ్ఞాస్సమాప్తాః"] "ஏதச்ச்ருத்வா ப்ராஹ்மணாஸ்து த்வயோக்தே தேஷாம்ராஜந் ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தாஃ" (கூஅ) என்றிறே யிருப்பது. எழுப்புகிறவர்களுக்கும் இதுவன்றோ ஸ்வரூபமென்னில்,-ஸித்தோபாய நிஷ்டர்க்கு விளம்ப

---

ப்ரதமாவதாரிகையைத் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வைகின இத்யாதி.) 'வைகினபின்பும்' என்றது - போதோடின பின்பு மென்றபடி. 'ஸ்தோபிக்கிறார்கள்' என்றது - தங்களோடே நோற்கக்கடவோமென்று அவள் சொன்ன வார்த்தையை நிரர்த்தகமாக்குகிறார்க ளென்றபடி. மூன்றாமவதாரிகாநுகுணமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நோற்க இத்யாதி.) த்விதீயாவதாரிகைக்குச் சேர ப்ரதீகக்ரஹணபூர்வகம் பாவம் அருளிச்செய்கிறார் (ஸித்தஸாதநேத்யாதி.) ப்ரதமாவதாரிகைக்குச் சேர்ந்திருந்தபோது, நோன்பு நோற்று அதுக்குப் பலமான ஸ்வர்க்கசப்தவாச்யமான க்ருஷ்ணநுபவத்தைக் கைபுகுரப் பண்ணிக்கொண்டாய் என்று சப்தார்த்தமாய், இப்படியாகாதேபோனாயென்று விபரீதலக்ஷணையாக்கிக்கொள்வது. த்ருதீயாவதாரிகைக்குச் சேர்ந்தபோது, நோற்றுப்பெறவேண்டும் பலமான க்ருஷ்ணநுபவத்தை நிரந்தரமாக அநுபவிக்கிறாயென்று சப்தார்த்தம். த்விதீயாவதாரிகைக்குச் சேர்ந்தபக்ஷத்தில், நோற்றவள் போலே க்ருதக்ருத்யையாய்ப் பலம் கைபுகுந்ததென்றிருக்கிற அம்மனேயென்று சப்தார்த்தம். அவதாரிகாக்ரமேண பாவம் அருளிச்செய்யாமல் த்விதீயாவதாரிகைக்கு அநுகுணமான அர்த்தத்தைக் கடைக்கோடியிலே அருளிச்செய்தது - இவ்வர்த்தத்திலே உபபாதிக்கவேண்டுவது உண்டாகையாலே யென்று திருவுள்ளம். நிர்ப்பரையாயிருக்கைக்கு உபபத்தியையும் ப்ரமாணத்தையும் காட்டுகிறார் (அவனுடைய இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) ["త్వత్తస్సర్వం-ఉపాయో పేయత్వేన-యజ్ఞాస్సమాప్తాః"] "த்வத்தஃ உபாயோபேயத்வேந யஜ்ஞாஸ்ஸமாப்தாஃ" என்றது -ஸமாப்தா ஏவ என்றபடி; இத்தால் - கர்த்தவ்யாம்ஶமில்லை என்றபடி. 'இது' என்றது-யத்நம்பண்ண ப்ராப்தியில்லாமலிருக்கை என்றபடி. 'பதறுகிறார்

ஹேதுவில்லாமையாலே ப்ராப்யத்தில் த்வரையாலே பதறுகிறார்கள். ஸித்தோபாய நிஷ்டர்க்கும் கர்ம ஜ்ஞாந பக்திகளுண்டு; இவர்களுடைய க்ரியாகலாபம் கைங்கர்யத்திலே அந்விதமாயிருக்கும். ஜ்ஞாநம் ஸ்வரூபத்திலே அந்விதம்; பக்தி ப்ராப்யருசியிலே அந்விதம். (சுவர்க்கம் புகுகின்ற) - ஸுகத்தை இடைவிடாதே அநுபவிக்கிற. இவர்களுக்கு க்ருஷ்ணாநுபவமிறே ஸுகம். ["యస్త్వయా సహ స స్వర్గో నిరయో యస్త్వయా వినా"] "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயா விநா" (௯௯) என்று, ஸ்வர்க்கசப்தம்-ஸுகவாசி. (அம்மனாய்) - ரக்ஷகையானவளே! நீ ரக்ஷகையாக, நாங்கள் உனக்குக் குழைச்சரக்கானபடி அழகிதாயிருந்தது. அவள் பேசாதே கிடப்பானென்னென்னில்?—திருவடிவாரத்தில் பிராட்டி ["ప్రహర్షేణావరుద్ధా సా వ్యాజహార న కిఞ్చన"] "ப்ரஹர்ஷேணாவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந" (௧௦௦) என்றிருந்தாற் போலே, ["సంశ్రవే మధురం వాక్యమ్"] "ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம்" (௩௩) என்னும்படியே இவர்கள் பேச்சே அமையுமென்று கிடக்கிறாள்; "தங்களடியேனை யிருக்கிற என்னை அம்மனாய் என்பதே!" என்று கிடக்கிறாளாகவுமாம்.

(மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்) - இவள் வாய் பேசாதே கிடக்கிற இது பொறுக்கமாட்டாமையாலே, "மாற்றமுந்

---

கள்' என்றதுக்கு-உறங்குகிறவளுக்கு அத்யவஸாயம் தலையெடுத்துப் ப்ராப்யருசி தலைமடங்கிக் கிடக்கும்; அங்ஙனன்றியே, எழுப்புகிறவர்களுக்கு ப்ராப்யருசி தலையெடுத்து அத்யவஸாயம் மடங்கி த்வரைப்படுகிறார்களென்று கருத்து. ஆனால், ஸித்தோபாயநிஷ்டர்க்கு ஒன்றும் செய்யவேண்டாவோ வென்னில், அருளிச்செய்கிறார் (ஸித்தோபாயேத்யாதி.) அவதாரிகாத்ரயத்துக்கும் சேர யதாச்ருதத்திலே சப்தார்த்தம் (ஸுகத்தை இத்யாதி.) த்ருதீயாவதாரிகைக்குச்சேர அருளிச்செய்கிறாரென்னவுமாம். குழைச்சரக்கு - சப்ரை யான வஸ்து; அதாவது - ரக்ஷ்யமென்றபடி. 'எழுப்புகிறவர்கள், "மாற்றமும் தாராரோ" என்று சொல்லும்படி இவள் பேசாதிருக்கைக்கு ஹேது என்?' என்னும் ஜிஜ்ஞாஸா ப்ரச்நத்தை அநுவதித்து, இரண்டுவிதமாக அருளிச் செய்கிறார் (அவள் இத்யாதி வாக்ய த்வயத்தாலே.) இத்தால் - பாகவத விஷயத்தில் அநாதரத்தால் இருந்தவளுமன்று, உறக்கமுண்டாயுமன்று என்றதாய்த்து.

"வாய்திறவாய்" என்னாதே, "மாற்றமும்தாராரோ" என்று - க்ஷேபம் தோற்றச்சொல்லக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (இவள் இத்யாதி.)

தாராரோ வாசல்திறவாதார்" என்கிறார்கள். வாசல் செம்மினால் வாயும் செம்மவேணுமோ? ஐஶ்வர்யம் மிக்கால் பந்துக்களை என் என்னலாகாதோ? ["శ్రీధరః స్తుఃపరస్పరమ్"] "ஸௌயயந்த்ரவாஹ வஶ்" (௫௫) என்கிற ந்யாயமும் தவிர்ந்ததோ? உடம்பை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தால், எங்களுக்குப்பேச்சாகிலும்தரலாகாதோ? கண்ணும் செவியும் ஒக்கப் பட்டினிகொள்ள வேணுமோ? ["మధురామధురాలాపా"] "ஊய ாரா ஊய ாராஞாவா" (௯0௧) என்றிறே இவள்பேச்சு இருப்பது.

'நீங்கள் பழியிடுகிறதென்? அவன் இங்கு உண்டோ?' என்ன,–(நாற்றத் துழாய்முடி) - [க] கோயிற்சாந்தை உன்னால் ஒளிக்கப் போமோ? இப்போது உண்டாகவேண்டா, அவன் ஒருகால் அணைத்து விட்டால் அவை அஞ்சாறுகுளிக்குப் பரிமளம் நிற்குமே. 'கட்டுங் காவலுமாயிருக்கிற வாசலிலே புகுரப்போமோ அவனுக்கு?' என்ன;-(நாராயணன்)-அவனுக்கு எங்களைப்போலே கதவு திறக்கப் பார்த்திருக்கவேணுமோ? வ்யாப்திக்குப்ரயோஜநம், வேண்டினவிடத்தே ஸ்புரிக்க வல்லனாகையன்றே? உகவாதாரையும் விடாதவன் உகந்த உன்னை விடுமோ?

(நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியன்) - வெறுமையே பச்சையாக, இடைச்சிகளுக்கும் சென்று ஆஶ்ரயிக்கலாம்படியான தார்மிகன். இவர்களுடைய ஆஶ்ரயணம் உபாயம் அன்று, ருசியாலே. (புண்ணியன்) - ["కృష్ణం ధర్మం సనాతనమ్"] "க்ருஷ்ணம் ஊ ஹும் ஸ

"மாற்றமும்" என்ற சகாரத்துக்கு - வாசல்திறவாததோடு ஸமுச்சயமென்று திருவுள்ளம்பற்றிப் பாவம் அருளிச்செய்கிறார் (வாசல் இத்யாதி.) 'செம்மினால்' என்றது - பந்தித்தா லென்றபடி.

நம்மால் போற்றப்படும்படி கைங்கர்யத்தைத் தரும் புண்ணியனென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வெறுமையே இத்யாதி.) 'தார்மிகன்' என்றது - ["ధర్మం చరతి"] "யாூம் வாதி" என்கிற ஸூத்ரத்தாலே - தர்மாசரணம் பண்ணுமவனென்றாய், பறைதருகையாகிற தர்மம்பண்ணுமவனென்கை. "போற்றப்பறைதரும்" என்று - போற்றுதல் ஹேதுவாகத் தோன்றியிருக்க வெறுமையைச் சொல்லக்கூடுமோ? என்ன, அருளிச்செய்கிறார் (இவர்களுடைய இத்யாதி.) 'ருசியாலே' என்ற அநந்தரம், 'வந்ததித்தனை" என்று சேஷம். ஆச்ரயணம் உபாயமாகாவிட்

[க] கோயிற்சாந்து - சிறந்த கலவைச்சந்தனம்.

நாதநடு” (கoஉ) என்று இவர்களுக்கு உபாயம் அவன்தானிறே; ஸ்நேஹோக்தியாகவுமாம்.

இவனுல் - (பண்டு ஒருநாள்) - முன்பு, உன்னைப்போலே உணராதே படுத்திருண்டுகொண் என்கை. (பண்டு ஒருநாள் கூற்றத்தின் வாய்வீழ்ந்த)-தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே அமிழ்ந்து சாவாரைப்போலே, * ரிபூணும்அபிவத்ஸலரான பெருமாள்பக்கலிலே தப்புச்செய்த. (கும்பகரணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ) - உறக்கத்தில் தலையானவனும் உனக்குத் தோற்றுத் தன்உறக்கத்தையும் தானே தந்து போனானோ? அவனது - துயில்; உன்னது - பெருந்துயில்; அவன், ஒருத்தியையிறே பிரித்தது; நீ ஊராகப் பிரித்து உறங்காநின்றாயே.

---

டால் வேறுஉபாயம் ஏது? என்ன, அதுக்குப் பரிஹாரமாக, “புண்ணியன்” என்றார்களென்று விவக்ஷித்து, ப்ரதீகக்ரஹணபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புண்ணியன் இத்யாதி.)

“கும்பகரணன்”என்ற போதே பூர்வகாலிகத்வம் தோற்றியிருக்க,“பண்டொருநாள்” என்றதுக்கு உபாலம்பம்தோற்றப் பாவம் அருளிச்செய்கிறார் (முன்பு இத்யாதி.) “வீழ்ந்த” என்றது - நசிக்கவென்றாய், அது தானும் தத்க்ருதமாய்த் தோன்றுகையாலே, ‘புண்ணியனுல்’ என்றது - காரணார்த்தமாகத் திருவுள்ளம்பற்றி, த்ருஷ்டாந்தபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தண்ணீர் இத்யாதி.) “கும்பகரணனும்” என்ற சகாரம் ப்ராதாந்யத்திலேயாக்கி, “உனக்கு” என்றதை “தோற்று” என்றதுக்கு முன்துறக்கூட்டி, ஏகாரத்தை “தான்” என்ற பதத்தோடே சேர்த்து, “தோற்றும்” என்ற சகாரத்தை “துயில்” என்றதோடு அந்வயித்து, “பெரும்” என்றதை - பெரிதாம்படி யென்றாக்கி, “கும்பகரணனும் - உனக்கு - தோற்று - பெரிதாம்படி - துயில் - உம் - தானே - தந்தானோ” என்று அந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறக்கத்தில் இத்யாதிவாக்யத்ரயத்தாலே.) “துயிலையும்” என்ற சகாரம் - அநுக்தஸமுச்சயமாய்த் தன்னபராதத்தையும் பெரிதாகத்தந்தானோ வென்று விவக்ஷித்து, பெருமையை உபபாதிக்கிறார் (அவன் ஒருத்தியை இத்யாதி.) இத்தால், “புண்ணியனுல் - கூற்றத்தின் வாய்வீழ்ந்த” என்று - அபராதத்தைப்பண்ணி நசித்தவனென்கையாலே இவ்வர்த்தம் லபித்ததென்று திருவுள்ளம். ராவணன் பிராட்டியைப் பிரித்தவனாயிருக்க, கும்பகர்ணன் பிரித்ததாகச் சொன்னது - அவன் ஸம்வதித்துப் பெருமாளோடே யெதிர்த்து யுத்தத்துக்கு வருகையாலே யென்று கொள்வது. [“ [illegible]”] [“ஜஷாநீம்வஹ்

(ஆற்ற அனந்தலுடையாய்)- இப்படி சொல்லக் கேட்டுப் பெரிய அனந்தலோடே "க்ருஷ்ண க்ருஷ்ண" என்ன; எங்களுக்கு அங்கேபோய் * துயிலெழப் பாடவேணுமோ ? நீ உணரும்படி காண அமையாதோ ? (அருங்கலமே) -- எங்களுக்கெல்லாம் ஶிரோபூஷணமல்லேயோ ? ஹாரத்தைப்பண்ணி அதுக்குக் கல்லழுத்தினாற்போலே, நீ புகுந்து இக்கோஷ்டியை ஸநாதமாக்கா யென்கிறார்கள்; எங்களுக்குப் பெறுதற்கரியவளல்லேயோ நீ யென்னவுமாம்.

இவர்களார்த்தியைக் கண்டு துணுக்கென்று வரப் புக்காள் : (தேற்றமாய் வந்து திற) - இரண்டாம் நிலத்திலே கிடக்கிறவளாகையாலே 'தடுமாறாதே தெரிந்து வந்து திற' என்கிறார்கள். (தேற்றமாய்வந்துதிற) - ஊராகத் திரண்டுகிடக்கிறது, படுக்கையிற் கிடந்தபடியே வாராதே ஸதஸ்யையாய் வந்துதிற. [" ஸாப்ரஸ்த்ரீ "] "ஸாவஷ்டம்பஶ்ரீ" (கOரு) என்னும்படி வாராதேகொள்என்கிறார்கள். (கO)

---

ஸம்நாஹஶ்ய ஶெஷக்ஷிணொஹூஜ:| வதிதொயம்ஸஶா ஸாஶ்வநவிஹெஷிஸூராஸூராஃ" என்கிறபடியே - தானே அவனுகவும் தனக்கு அவன் வலக்கையாகவும் அவலம்பமாகவும் ராவணன் சொல்லுகையாலே, கும்பகரணனே பிரித்ததாகச் சொன்னதாகவுமாம்.

கீழே "பெருந்துயில்" என்றுசொல்லிவைத்து, இங்கே அனந்தலேயிட்டு ஸம்போதிக்கையாலே - அவள் இவர்களிட்டபழிக்கு அஞ்சி, தன்னுணர்த்தி இவர்களுக்குத்தோற்றத் திருநாமஞ்சொன்னுளென்று ஸங்கதியைக் காட்டுகிறார் (இப்படி இத்யாதி.) ஆற்ற - மிகுந்திருக்கிற, அனந்தல்- நித்திரையை, உடையவளே யென்று இதன் உத்தேச்யதைதோற்ற இத்தையிட்டு ஸம்போதித்ததுக்குத் தாத்பர்யத்தை வ்யாவ்ருத்திபூர்வகம் அருளிச்செய்கிறார் (எங்களுக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே.) "கலம்" என்ற விடத்தில் "மனக்கள் மாறாடிவரும்" என்கிற ந்யாயத்தாலே "கலன்" என்றாய், ஆபரண விவக்ஷையாகக் கீழருளிச்செய்து, "கலம்" என்று விவக்ஷித்து, அது பாத்ரமென்றாய், அத்தால் - நல்லபெண்ணே யென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (எங்களுக்குப் பெறுதற்கு இத்யாதி.)

* தேற்றமாய் வரவேணுமென்கைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (இரண்டாம்நிலத்திலே இத்யாதி.) இரண்டாம்நிலம் - மேல்மெத்தை. "ஒருபோகியாக க்ருஷ்ணநுபவம்பண்ணுமவள்" என்ற த்ருதீயாவதாரிகைக்குச் சேரத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஊராகஇத்யாதி.) (கO)

### ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பத்தாம்பாட்டு. (நோற்றுஇத்யாதி.) -இப்பாட்டில், உபாய நிஷ்டரை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(நோற்று) - ஸித்தஸாதந பரிக்ரஹம்பண்ணி. (சுவர்க்கம்) - ஸுகரூபமான ப்ராப்யத்தை. (புகுகின்ற) - அநுபவிக்கிற. (அம்மனாய்) - ஸ்வாமிநியானவளே! (வாசல்திறவாதார் - மாற்றமும் தாராரோ)- த்வதநுபவவிரோதியான வாசலை-அஹங்காரத்தை நீக்கி எங்களை உன்னை யநுபவிப்பியாவிடிலும், நாங்கள் கேட்டு வாழும்படியான ஒருவார்த்தையும் அரிதோ? அவனே எழுந்திருக்கவொட்டாவிடிலும் இருந்தவிடத்தே யிருந்து வார்த்தைசொன்னாலாகாதோ? என்று பாவார்த்தம்.

'இப்போது அவன் இங்குஉண்டோ? ஏன் பழியிடுகிறிகோள்?' என்ன,—(நாற்றத்துழாய்முடி) - இப்போது அவன் இங்கு இல்லாவிடில் பரிமளம் ஏது? என்ன; அவன் ஒருகாலணைக்க ஒன்பதுகுளிக்குப் பரிமளம் நிற்குமேயென்ன; கட்டுங் காவலுமான இடத்தே அவனுக்குப் புகுரப்போமோ? என்ன, - (நாராயணன்)-வேண்டுமிடத்தே ஆவிர்ப்பவிக்கைக்கன்றோ அவனுடைய வ்யாப்தியென்ன; (நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியனால்) - நம்மாலே போற்றப்பட்டவனைக்கொண்டு புருஷார்த்தப்ரதனான நாராயணனாலே.

(பண்டொருநாள் கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ) - முன்பு ஒரு தமோபிபூதமான காலத்திலே ம்ருத்யுவினுடைய வாயிலே விழுந்த தாமஸனான கும்பகர்ணனும், உன்துயிலுக்குத் தான் தோற்று, உனக்கே தன்னுடைய பெருந்துயிலையும் தானே தந்தானோ? இவ்விடத்திலே "கும்பகரணன்" என்கிறது - தமோகுணத்தை. தமோகுணந்தன்னையன்றியிலே இவளுக்குஉண்டான நித்ரையைக் கண்டு இவளுடைய நித்ராஜநகத்வஶக்திக்குத் தான் தோற்றுத் தன்னுடைய நித்ராஜநகத்வஶக்தியையும் தந்தானோ? என்று ரஹஸ்யம். ஸாத்விகனான இவ்வதிகாரிக்கு நித்ரையாவது - ["ప్రాజ్ఞేనాత్మనాసం పరిష్వక్తోబాహ్యంకించనవేద"] "ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்தோ பாஹ்யம் கிஞ்சந வேத" என்கிறபடியே ஸ்வாநுபவதஶையிலே இதரவிஷயங்கள் தோற்றாதிருக்கை.

இப்படி இவர்கள் சொன்னவாறே அவள் எழுந்திருந்து சோம்பல்முறிக்க, (ஆற்ற அனந்தலுடையாய்) -மிகவும் சோம்பலையுடையவளே ! சோம்பலாவது-வ்யாபாராந்தராக்ஷமதை. அதுவ, (அருங்கலமே) - துர்லபமான ஆபரணமே! ''ஆற்றவனந்தலுடையாய், அருங்கலமே'' என்கையாலே - [''[illegible]''] ''கிளிவஹி உயாராணாடி'' என்கிறபடியே சோம்பல்முறிக்கையும் துர்லபமான ஆபரணம்போலே அத்யாகர்ஷகமாயிருக்கிறது என்றுமாம். இவர்களாற்றாமையைக் கண்டு சடக்கென வந்து திறக்கப்புக, 'தேற்றமாய்வந்துதிற' என்கிறார்கள். நாங்கள் புறக்கட்டிலேயிருக்கிறோமாகையாலே இருந்தபடியே வாராமே ஸதஸ்யையாய் வந்து திற என்கிறார்கள். 'தேற்றமாய் வந்துதிற' என்கையாலே - இவ்வதிகாரிக்கும் லோககர்ஹை வாராமல் லௌகிகாநுவர்த்தநம் கார்ய மென்றதாய்த்து. (கய)

அ.—பதிஞெராம்பாட்டு. எல்லாவற்றாலும் அபிஜாதையாயிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள். ஆபிஜாத்யத்தால் க்ருஷ்ணனோடு ஒப்பாள் ஒருத்தி இவள்.

மூ.—கற்றுக்கறவைக்கணங்கள் பலகறந்து
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும்
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே
புற்றரவல்குல் புனமயிலேபோதராய்
சுற்றத்துத்தோழிமாரெல்லாரும்வந்து நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாடச்
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி நீ
எற்றுக்குறங்கும்பொருளேலோரெம்பாவாய்.

---

பதிஞெராம்பாட்டு (கற்று இத்யாதி.) ''கோவலர்தம்பொற்கொடியே, புற்றரவல்குல் புனமயில்,செல்வப்பெண்டாட்டி'' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை (எல்லாவற்றாலும் இத்யாதி.) 'எல்லாவற்றாலும்' என்றது - குலத்தாலும், ரூபத்தாலும், குணத்தாலும் என்றபடி. குலாதிகளால் இவள் ச்லாக்யையாயிருந்தாளேயாகிலும் இவர்கள் அவற்றையிட்டுச் சொல்லுவா னென்னென்னில்? அதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (ஆபிஜாத்யத்தால் இத்யாதி.) க்ருஷ்ணனோடொத்தவளாகையாலே கொண்டாடுகிறார்க ளென்று கருத்து.

பதவுரை.—(குலம் ரூபம் குணம் இவற்றால் ஶ்லாக்யையாயிருப்பாளொருத்தியைப் பார்த்து),—'கன்று - கன்றுகளாயிருக்கிற, பல கறவைக் கணங்கள் - அநேக பசுக்கூட்டங்களை, கறந்து - (முலைக்கடுப்புத் தீரும்படி) கறப்பவர்களாய்,—செற்றார் - (க்ருஷ்ணன்பெருமை பொறாத கம்ஸன் தொடக்கமான) சத்துருக்களுடைய, திறல் அழிய - வலிமை அழியும்படி, சென்று - (அவர்களிருந்த இடங்களிற்) போய், செருச் செய்யும் - போர் செய்யுமவர்களாய், குற்றம் ஒன்று இல்லாத - (படையெதிர்த்துவரப் பார்த்திருத்தல் கையில்ஆயுதமில்லாதாருடன் எதிர்த்தல் முதலிய ஒருவகைக்) குற்றமு மில்லாதவர்களான, கோவலர்தம் - இடையரது (குலத்திற் பிறந்த), பொன் கொடியே - பொற்கொடிபோ லழகிய வடிவை யுடையவளே! புற்று அரவு - புற்றிற் கிடக்கும் பாம்பின் படம்போன்ற, அல்குல் - நிதம்பத்தையுடைய, புனம் மயிலே - காட்டில் (தன்னிஷ்டப்படி திரியும்) மயில்போன்றவளே! போதராய் - புறப்பட்டுவாராய்;' (என்று அழைக்க);—("நாம் புறப்படும்படி எல்லாரும் வந்தார்களோ?" என்ன),—சுற்றத்து - பந்துக்களான, தோழிமார் எல்லாரும் - தோழிகளான நாங்களெல்லோரும், வந்து - திரண்டு வந்து, நின்முற்றம் புகுந்து - உன் திருமுற்றத்திற் புக்கு, முகில்வண்ணன் பேர் பாட - மேகம்போல் வடிவழகையும் ஔதார்யத்தையுமுடையவன் திருநாமத்தைப் பாடச்செய்தேயும், செல்வப்பெண்டாட்டி நீ - க்ருஷ்ணஸம்ஶ்லேஷமாகிற ஸம்பத்தையுடைய நீ, சிற்றாதே பேசாதே - அசையாமலும் பேசாமலும், உறங்கும் - உறங்குகிற, பொருள் - செய்கை, எற்றுக்கு - என்ன ப்ரயோஜநத்துக்காக? (என்று சொல்லி யெழுப்புகிறார்கள்.)

வ்யா.—(கற்றுக்கறவை) - எல்லாம் தலைநாகுகளாயிருக்கை. இதுக்கு ஹேது, நித்யஸூரிகள் பகவத்ஸ்பர்ஶத்தாலே பஞ்சவிம்ஶதிவார்ஷிகராயிருக்குமாபோலே, இப்பசுக்களும் க்ருஷ்ணஸ்பர்ஶத்தாலே கீழ்நோக்கிப் பிராயம்புகுகை. ["ஸ்வாமிதृष்ட்வா ச புநர்யுவைவ"] "ஹவாமிஜ்ஶ்ரூஷாவவாநயுாவெவ" (கoச) என்று - பகவத்ஸ்பர்ஶம் இளகிப் பதிக்கப் பண்ணுமிறே. (கணங்கள்பல) - தனித்தனியே எண்ணிமுடியாமையன்றிக்கே, ஸமூஹங்களும் எண்ணி

---

கன்றுகளான பசுக்களென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, கன்றுகளாயிருக்கை இளமையைப்பற்றவென்று அருளிச்செய்கிறார் (எல்லாம் இத்யாதி.) க்ருஷ்ணஸ்பர்சத்தால் இளமைவருகைக்கு ப்ரமாணபூர்வகம் த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (ஹவாமி இத்யாதி.) ["த்ருஷ்ட்வா ச"] "ஜ்ஶ்ரூஷாவ" என்ற சகாரம் ஸ்பர்சத்தை ஸமுச்சயிக்கிறதென்று திருவுள்ளம்.

முடியாது. [''ரதஸஂக்ஷாத்வாஜிஸமூஹ''] ''ரயகூ⁻ஜுரவாஜிஶாநு'' (கoரு) என்னுமாபோலே, ''பல'' என்னு மித்தனை. ஆத்மாக்களுக்குத் தொகையுண்டானுலிறே பசுக்களுக்குத் தொகையுள்ளது. (கறந்து)- ஈஶ்வரன் ஒருவனுமே ஸர்வாத்மாக்களுக்கும் நியமநாதிகளைப் பண்ணுமாபோலே, இடைச்சாதியில் மெய்ப்பாட்டாலே அடங்கக் கறக்க வல்ல ஸாமர்த்யம். பாலும் நெய்யும் கொண்டு விநியோகமில்லாத படி ஸம்ருத்தமாகையாலே, முலைக்கடுப்புக்கெடக் கறந்து என்றுமாம்.

(செற்றார்) - இவர்களுக்கு ஶத்ருக்களாகிறார்கள் - க்ருஷ்ணனுடைய பெருமை பொறாதவர்கள். (திறலழிய) - ''தேவர்களும் எனக்கெதிரன்று'' என்று இருக்கும் கம்ஸாதிகளுக்குப் புகுரவொண்ணாத மிடுக்கை யுடையவர்கள். (சென்று செருச்செய்யும்) - எதிரிகள் வந்தால் பொருகையன்றிக்கே, இருந்தவிடங்களிலே சென்று பொருகை. [''ஹ்ருதிஸ்தாஶ்ச்சப்ரஹர்த்த்ருஂச''] ''அஹியாதாவ்யஹர்த்தாவ'' (க௩௬) என்று - சக்ரவர்த்தித் திருமகனைப்போலே இவர்கள் வீரம்.

(குற்றமொன்றில்லாத) - எடுத்துவரப் பார்த்திருக்கும் குற்றமில்லை, கையில் ஆயுதம் போகட்டவர்களை யெதிர்க்குங் குற்றமில்லை.

---

எண்ணமுடியாமைக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (ரதேத்யாதி.) [''ராஜாநஶ்சஶதஶோநாம''] ''ராஜாநஶ்ஶதஶோநாஃ'' என்றத்தால்-ரதாதிகள் அர்த்தஸித்தமாயிருக்கவும், [''ரதஸஂக்ஷாத்வாஜிஸமூஹ''] ''ரயகூ⁻ஜுரவாஜிஶாநு'' என்கையாலும், மதுப்பு பூம்நியாகையாலும், அவை தனித்தனியும் ஶதஶஃஉம் அஸங்க்யேயங்களென்று கருத்து. ''கறந்து'' என்றதுக்கு இரண்டுவகையாலே தாத்பர்யம் காட்டுகிறார் (ஈஶ்வரன் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'மெய்ப்பாட்டாலே' என்றது - ஸ்வாபாவிகதையாலே என்றபடி.

ராஜாக்களுக்குப்போலே இடையர்களுக்குச் சத்ருக்களுண்டாகைக்கு ப்ரஸக்தியேதென்ன அருளிச்செய்கிறார் (இவர்களுக்கு இத்யாதி.) திறலழியும் படியிருக்குமவர்களென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, இவர்களுக்கு அப்படிப்பட்ட மிடுக்குண்டோ வென்ன, அருளிச்செய்கிறார் (தேவர்களும் இத்யாதி.)

''குற்றமொன்றில்லாதே - சென்று'' என்று கூட்டி அருளிச்செய்கிறார் (எடுத்து இத்யாதி.) ''குற்றமில்லாதே - செருச்செய்யும்'' என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார் (கையில் இத்யாதி.) ''கோவலர்'' என்றதோடே சேர்த்து மூன்றும் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அழிய இத்

யென்றுமாம்; அழியச்செய்யாநின்றூர்க ளென்று க்ருஷ்ணனுக்கு முறைப்பட்டால் "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னும்படி பிறந்தவர்க ளென்றுமாம்; [" సాధురేవస మన్తవ్యః "] "ஸாதுரேவ ஸமந்தவ்ய:" (கஎ) என்றிறே அவன்படி. (கோவலர்தம் பொற்கொடியே) - [" జనకానాంకులే కీర్తిమాహరిష్యతి మేసుతా "] "ஜநகாநாம்குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே ஸுதா" (கஅ) என்னும்படியே ஊருக்காக ஒருபெண்பிள்ளை. (பொற்கொடி) - தர்ஶநீயமாயிருக்கையும், ["పతిసంయోగసులభంవయః"] "பதிஸம்யோக ஸுலபம் வய:" (க) என்கிறபடியே பர்த்தாவாகிற கொழுகொம்பை யொழிய ஜீவியாமையும். "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால்றிகின்றிலேன் யான்" என்றிறே இருப்பது.

(புற்றரவல்குல்)- தன்னிலத்தில் ஸர்ப்பம்போலே ஒசிவையும் அகலத்தையுமுடைய அல்குலையுடையாய்! இவர்கள் இத்தனை சொல்லுவானென்னென்னில்?-["యాస్త్రియోదృష్టవత్యస్తాః పుంభావంమనసాయయుః"] "யாஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸா யயு:" (கஒகூ) என்னும்படியே பெண்களை ஆண்களாக்கும் அழகிறே; ["పుంసాం దృష్టిచిత్తాపహారిణమ్"] "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (கக) என்று - அவன் ஆண்களைப் பெண்ணுடையுடுக்கப்பண்ணுமாபோலே. (புனமயிலே) - தன்னிலத்தில் மயில். க்ருஷ்ணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளகபாரத்தை யுடையளாகை."பொற்கொடியே"என்கையாலே ஸமுதாயஶோபை

---

யாதி.) அழியச்செய்கையாவது - க்ருஷ்ணஸக்தியாலே ஸ்வேச்சாவிஹாரம் செய்து, மர்யாதைகளை யழிக்கை யென்றபடி. [" అపిచేత్సుదురాచారో భజతేమామనన్యభాక్ । సాధురేవసమన్తవ్యఃసమ్యగ్వ్యవసితోహిసః"] "அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் | ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:" என்ற ஶ்லோகம் கண்டுகொள்வது. "கோவலர்பொற்கொடி" என்னுமல், "தம்" என்று விஶேஷிக்கைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறூர் (ஜநகாநாம் இத்யாதி.)

ஒசிவு - மார்த்தவம். அல்குல் - ஜகநப்ரதேஶம். 'இத்தனை' என்றது - 'புற்றரவு" என்றதை. "புனமயில்" என்றதுக்கு அவயவிஸாத்ருஶ்யம் சொல்லலாயிருக்க அளகபாரத்திலே யொதுக்கினதுக்கு நியாமகம் காட்டுகிறூர் (பொற்கொடி இத்யாதி.) "எற்றுக்குறங்கும்பொருள்"என்று சொல்லும்

யைச் சொல்லிற்று; மேல் விஶேஷணத்வயத்தாலும் - அவயவஶோபையைச் சொல்லுகிறது. (போதராய்) - ["ஶோபயந்தண்டகாரண்யம்"] "ஶோபயந்தண்டகாரண்யம்" (ககo) என்னும்படியே - நாங்கள் நிறக்கும்படி புறப்படாய்.

'நான் புறப்பட எல்லாரும் வந்தாரோ?' என்ன, (சுற்றம் இத்யாதி.) - "சுற்றத்துத்தோழிமார்" என்கிறது - இவ்வூரடங்க இவளுக்கு உறவுமுறை யாகையாலே. (நின்முற்றம் புகுந்து) - ["உத்தரம் தீரமாஸாத்ய"] "உத்தரம் தீரமாஸாத்ய" (அஅ) என்கிறபடியே எங்களுக்கு ப்ராப்யமான முற்றத்திலே புகுந்து. இவர்களுக்கு ப்ராப்யமானபடி என்னென்னில்?—"முற்றம்புகுந்து முறுவல்செய்து நின்றீர்" என்றும், "முற்றத்தூடு புகுந்து நின்முகம் காட்டி" என்றும்-ஶேஷியானவனுக்கும் ப்ராப்யமான முற்றமாகையாலே, ஶேஷபூதைகளான எங்களுக்குச் சொல்லவேணுமோ? புகுந்து கொள்ளப் புகுகிற கார்ய மென்? என்ன,—(முகில் வண்ணன் பேர்பாட) - நீ உகக்கும் அவனழகிலும் ஔதார்யத்திலும் ஈடுபட்டு அவன் திருநாமத்தைப் பாடச்செய்தேயும்.

(சிற்றாதே பேசாதே) - "முகில்வண்ணன்" என்றவாறே, அவ்வடிவை நினைத்துப் பேசாதே கிடந்தாள். (சிற்றாதே) சிற்றுதல் - சிதறுதல். உணர்ந்தமைக்கு அடையாளமான சேஷ்டையைப் பண்ணதே. இவள் சேஷ்டிதமும் வார்த்தையும் தங்கள் கண்ணுக்கும் செவிக்கும் போக்யமாகையாலே இன்னதாகிறார்கள். (செல்வப் பெண்டாட்டி நீ) - உன்னோடு கூடுமது எங்களுக்கு எல்லா ஐஶ்வர்

---

க்ரியையே அமைந்திருக்க, "போதராய்" என்றதுக்கு "பொற்கொடியே" இத்யாதியைக் கடாக்ஷித்து ஹாவம் அருளிச்செய்கிறார் (ஶோபயந் இத்யாதி.) 'நிறக்கும்படி' என்றது - உன்னோட்டைச்சேர்த்தியால் நாங்களெல்லாரும் விளங்கும்படி யென்கை.

"சுற்றத்து" என்று விஶேஷிக்கையாலே-உறவில்லாத தோழிகள் வந்ததில்லை யென்று தோன்றுகையால், பண்ணின ப்ரஶ்நத்துக்கு உத்தரமாகாமையாலே கருத்து அருளிச்செய்கிறார் (சுற்றத்து இத்யாதி.) "நின்" என்றதுக்குத் தாத்பர்யம் (உத்தரம்இத்யாதி.) 'சொல்லவேணுமோ' என்ற அநந்தரம் "என்று இவர்களுக்குக் கருத்தாகையாலே" என்று ஶேஷம்.

"பேசாதே" என்றதையும் கூட்டித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவள்இத்யாதி.) "செல்வமர்ன" என்று கீழ் அருளிச்செய்து, "செல்வ

யமுமான நீ; க்ருஷ்ண குணநுஸந்தாநத்தாலே புஷ்கலையான நீ என்னவுமாம்.

'இங்கே கூடு பூரித்துக்கிடந்ததோ?' என்ன:—இல்லையாகில், (எற்றுக்கு உறங்கும்பொருள்) - எங்கள்பாடே புறப்படாதே உறங்குகைக்கு ஒரு ப்ரயோஜநமுண்டோ? "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவது என்று கொலோ" என்று திரளோடே அநுபவிக்கும் அநுபவத்தை விட்டு, கைவல்யம்போலே கிடக்கிற கார்யமென்? என்னவுமாம். (எற்றுக்கு உறங்கும் பொருள்) - உன்னுடைய உத்தேஶ்யத்தைப் பாராதே, எங்களுடைய ஆற்றாமையைப் பாராதே, க்ருஷ்ணனுடைய நிரதிஶயபோக்யதையைப் பாராதே, எதுக்காகக் கிடக்கிறாய்? (கக)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பதிஞேராம்பாட்டு. (கற்று இத்யாதி.) - இப்பாட்டில், ஈஶ்வரனே உபாயோபேயமென்று அத்யவஸித்திருப்பார்க்கு மிகவும் ஆதரணீய விஷயமான அதிகாரியை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(கற்றுக்கறவை) - ஸஸந்தாநரான ஶிஷ்யர். (கணங்கள் பல) - அவர்களுடைய பலவான ஸமூஹங்களை. (கறந்து) - அவர்களுடைய அபிநிவேஶாநுகுணமாக ஜ்ஞாநப்ரதாநம்பண்ணி.

(செற்றார்திறலழிய) - செற்றாருண்டு - உபாயாந்தரபரரும், உபேயாந்தரபரரும்; அவர்களுடைய திறலுண்டு -ஸ்வார்த்தபரதை, அழிய - நஶிக்கும்படி. (சென்றுசெருச்செய்யும்) - தாங்களே விஜய

முடையவள்" என்று விவக்ஷித்து யோஜநாந்தரம்அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணேத்யாதி.)

நான் புஷ்கலையாயிருக்க, இங்கே க்ருஷ்ணநுபவம் நிறைந்துகிடக்கிறதோ? என்னும் சங்கையை அநுவதிக்கிறார் (இங்கேஇத்யாதி.) கூடு - தாங்யமிருக்கிற க்ருஹ விசேஷம். உறங்கும் பொருள் - உறங்குகையாகிற அர்த்தம், எற்றுக்கு - எந்தப்ரயோஜநத்துக்கு? என்று சப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்கள் இத்யாதி.) ப்ரச்ந ப்ரதிவசநரூபேண கீழ் ஒரு பாவம் அருளிச்செய்து, அப்படி ப்ரஶ்நமின்றியிலே பாவாந்தரம் அருளிச்செய்கிறார் (அடியார்கள் இத்யாதி.) "எற்றுக்கு" என்றதுக்கு அநேககோடி ஸ்மாரகத்வம் திருவுள்ளம்பற்றி மூன்றும் பாவம் அருளிச்செய்கிறார் (உன்னுடைய இத்யாதி.) 'உன்னுடைய உத்தேஶ்யத்தை' என்றது - ததீயரோடு கலக்கையை யென்கை. (கக)

யாத்ரையைப் பண்ணி அவர்களோடே வர்த்திக்கிற. (குற்றமொ ன்றில்லாத) - பூர்வோத்தராகங்களில் ஒன்றுமில்லாத. (கோவலர் தம்) - "அவனே உபாயோபேயம்" என்று அத்யவஸித்திருக்கு மவர்களுக்கு. (பொற்கொடியே) - ஸ்ப்ருஹணீயமான பொற்கொடி போன்ற திருமேனியை யுடையவளே! ஜ்ஞாநவைஶத்யத்தை யுடையவளே! என்றுமாம். (புற்றரவல்குல்) - கீழ், பொற்கொடி யென்று - பக்தியைச் சொல்லுகையாலே, அல்குலென்று - ஸ்வ விஷயத்திலே படிந்த பரமபக்தியைச் சொல்லுகிறது.(புனமயிலே)- அளகமென்று - ஸ்வாபதேசத்தில் வ்யாமோஹத்தைச் சொல்லு கையாலே, வ்யாமோஹந்தான் இதரவிஷய வைராக்ய பூர்வகமாய் ஸ்வவிஷய விரஹாஸஹிஷ்ணுவான ப்ரேமரூபஜ்ஞாநமாகையாலே, "புனமயிலே" என்று - பரமபக்தியையுடையவளே யென்கிறது. (போதராய்) - நீ புறப்பட்டு வரவேணும்.

நான் புறப்பட்டு வருகைக்கு நம்முடையவர்களெல்லாரும் வந் தார்களோவென்ன, (சுற்றத்துத்தோழிமாரெல்லாரும்வந்து)-உனக் குப் பகவதநந்யார்ஹ ஶேஷபூதரான பாகவதரெல்லாரும் வந்து. (நின்முற்றம்புகுந்து) - பரமப்ராப்யமான உன்னுடைய திருமுற்ற த்திலே புகுந்து. (முகில்வண்ணன்பேர்பாட) - பரமோதாரனும் ஶ்ரமஹரமான வடிவையுடையவனுமான அவனுடைய திருநாமத் தை, நீ புறப்பட்டு வருவதி என்று பாட.

(சிற்றாதே பேசாதே) - பரக்க ஒருவ்யாபாரத்தையும் பண்ணா தே, வார்த்தையுஞ் சொல்லாதே. (செல்வப்பெண்டாட்டி) - பகவத் குணங்களை [க]ஒருமடைசெய்து புஜிக்கையாகிற ஸம்பத்தையுடைய நிருபாதிகபாரதந்த்ரியமுடையவளே! (நீ) - இந்த ஸம்பத்து என்றும் மாறாமல் செல்லுகிற நீ. (உறங்கும்பொருள் எற்றுக்கு) - உறங்கு கிறதுக்கு ப்ரயோஜநம் ஏது? எங்களை அகற்றுகையே ப்ரயோஜந மோ? இன்னம் ஸம்ஸாரிகளைச் சேதநராக்குகையே ப்ரயோஜநமோ? சொல்லா யென்கிறார்கள்.

இப்பாட்டில், ஜாத்யுசிதமான தர்மத்தை ஸாதநபுத்யாவன்றிக் கே கைங்கர்யபுத்யா அநுஷ்டித்தால் குற்றமில்லை யென்கிறது, கற் றுக்கறவைக் கணங்கள் பலகறந்து குற்றமொன்றில்லாத வென்கை யாலே. (கக)

[க] ஒருமடைசெய்கை - ஏகமுகமாக்குகை.

அ.—பன்னிரண்டாம்பாட்டு. க்ருஷ்ணனைப் பிரியாதே இளைய பெருமாளைப்போலே யிருப்பா னொருவன் தங்கையாகையாலே ஶ்லாக்யையா யிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்

மூ.—கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர
நனைத்தில்லஞ்சேறாக்கும் நற்செல்வன்தங்காய்
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய்
இனித்தானெழுந்திரா யீதென்னபேருறக்கம்
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—(க்ருஷ்ணனைப்பிரியாமலிருப்பா னொருவனுடைய தங்கையாய் ச்லாக்யையாயிருப்பாளொருத்தியை நோக்கி),—இளம் கன்று எருமை - இளைய கன்றுகளையுடைய எருமைகளானவை, (பால்கறப்பாரில்லாமையால் முலைகடுத்து), கனைத்து - கதறிக்கொண்டு, கன்றுக்கு இரங்கி - (தங்கள்) கன்றுகள்பக்கல் இரக்கமுற்று, நினைத்து - (அவற்றை) நினைத்து, (பாவநாப்ரகர்ஷத்தாலே), முலைவழியே - முலைகளின் வழியாக, பால் நின்று சோர-பால் இடைவிடாமல் பெருக, (அத்தாலே),இல்லம் நனைத்து - அகங்களையெல்லாம் ஈரமாக்கி, சேறு ஆக்கும் - (துகைத்துச்) சேறாகச் செய்கின்ற, நல் செல்வன் - நல்ல ஸம்பத்தையுடையவனுடைய, தங்காய் - ஸோதரியானவளே!—தலை பனி வீழ - (எங்கள்) தலையில் பனிவிழ, நின் வாசல் கடை பற்றி - உன்வாசற்காலில் தண்டியத்தைப் பற்றிக்கொண்டு, (கிடக்கிறோம் என்று சொன்னவிடத்திலும் பேசாதேகிடக்க),—சினத்தினால் - கோபத்தாலே, தென் இலங்கைக் கோமானை -அழகையுடைத்தான இலங்கைக்கு நிர்வாஹகனான ராவணனை, செற்ற - நிரஸித்தவனாய், மனத்துக்கு இனியானை - மநஸ்ஸுக்கு இனியனாயிருக்கும் சக்ரவர்த்தித் திருமகனை, பாடவும் - பாடச்செய்தேயும், நீ வாய் திறவாய் - நீ வாய் திறந்துபேசுகிறிலை ; அனைத்து இல்லத்தாரும் - ஊரிலுள்ளாரெல்லாரும், அறிந்து - துயிலுணர்ந்தபின்பும், ஈது என்ன பேருறக்கம் - இது என்ன பெருந்தூக்கம் ! இனித்தான் - இனியாவது, எழுந்திராய் - எழுந்திருப்பாயாக என்று துயிலுணர்த்துகின்றார்கள்.

---

பன்னிரண்டாம்பாட்டு. (கனைத்து இத்யாதி ) "நற்செல்வன் தங்காய்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகையிடுகிறார் (க்ருஷ்ணனை இத்யாதி.)

வ்யா.—(கனைத்து)-கறப்பாரில்லாமையாலே முலைகடுத்துக் கதறுகை. (இளங்கற்றெருமை)-இளங்கன்றுகையாலே பாடாற்றமாட்டாமை. (கன்றுக்கு இரங்கி) - தன்முலைக்கடுப்புக் கிடக்க, "கன்று என்படுகிறதோ!" என்று இரங்கி. எம்பெருமான் ஆச்ரிதவிஷயத்திலிருக்கும்படிக்கு நிதர்சநமிறே. இத்தால் சொல்லிற்றாய்த்து-அவன் எருமைகள் கறவாவிட்டால் அவை படும் பாட்டை நாங்கள் உன்னாலே படாநின்றோமென்கை. (நினைத்து முலைவழியே இத்யாதி.)-கன்றை நினைத்துப் பாவநாப்ரகர்ஷத்தாலே முலையிலே வாய்வைத்ததாகக்கொண்டு பால்சொரியாநிற்கும். (முலைவழியே)- கைவழி தவிர. (நின்று பால்சோர)-நினைவு மாறாமையாலே, திருமலையில் திருவருவிகள்போலே, பால் மாறாதே சொரிகை. இவன் எருமை கறவாதொழிவானென்னென்னில்?—இளையபெருமாள் க்ஷத்ரியதர்மமான அக்நிகார்யத்துக்கு உறுப்பாமன்றிறே, இவன் எருமைகள் விட்டுக் கறப்பது; அதுவென்னென்னில்?-["న దేవలోకాక్రమణం నామరత్వమహం వృణే"] "நதேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே" (ககக) என்னுமாபோலே, க்ருஷ்ணனைப் பிரிய க்ஷமனல்லாமையாலே, ["పరిత్యక్తా మయా లంకా"] "பரித்யக்தாமயாலங்கா" (உக) என்னும்படியாலே ப்ராப்யவிரோதிகளில் நசையற்றபடியாகவுமாம் (நனைத்து இல்லம் சேறாக்கும்)-பாலின் மிகுதியாலே அகம்வெள்ளமிடும்; அத்தாலே துகையுண்டு சேறாகும்; இத்தால் - சேறாகையாலே புகுரவொண்கிறதில்லை யென்கை. (நற்செல்வன்)- தோற்றி மாயும் ஸம்பத்தன்றிக்கே நிலைநின்ற ஸம்பத்து. அதாகிறது-க்ருஷ்

---

"நல்செல்வன்" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கறப்பார்இத்யாதி.)இளசான கன்றையுடைத்தான எருமையென்று ஸப்தார்த்தம் விவக்ஷித்து, இளங்கன்றையிட்டு விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இளங்கன்று இத்யாதி.) பாடாற்றமாட்டாமை - க்லேசம் பொறுக்கமாட்டாமை. வ்யாக்யாதா ஈடுபடுகிறார் (எம்பெருமான் இத்யாதி.)முலைகடுத்துக் கறக்கையைச்சொல்லுகைக்குப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (இத்தால் இத்யாதி.) 'அவன்' என்றது-நற்செல்வனை.நினைவை விவரியாநின்றுகொண்டு மேலுக்கு ஹேதுவானமையைக் காட்டுகிறார் (பாவநேத்யாதி.)'அதுவென்னென்னில்'என்றது-ஸ்வதர்மமானகறக்கையை விட்டு க்ருஷ்ணனைப் பின்செல்லுகைக்கு ஹேதுவென்னென்னிலென்றபடி. "இல்லம்-நனைத்து-சேறாக்கும்" என்று அந்வயித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாலின் இத்யாதி.)மாயும்-நசிக்கும்.கநித்ரபிடகாதரராய்

ணன் திருவடிகளில் நிரந்தரஸேவை. ["லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:"[ "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:" (உ0)என்கிறபடியே-கைங்கர்ய லக்ஷ்மியிறே இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸம்பத்து. "லக்ஷ்மி ஸம்பந்ந:"என்றது, "ஊரும் நாடு முலகமுந் தன்னைப்போல்" என்கிறபடியே - தன் வைஷ்ணவஸ்ரீயாலே ஜகத்துக்கடைய வைஷ்ணவத்வமுண்டாம்படி யிருக்கை. (தங்காய்) - குணஹாநிக்கு ["ராவணஸ்யாநுஜோ ப்ராதா"] "ராவணஸ்யாநுஜோப்ராதா" (ககஉ) என்னுமாபோலே குணத்துக்குத் தமையனில் தன்னேற்றமுடையளென்கை.

(பனித்தலைவீழ நின்வாசல் கடைபற்றி) - மேல் வர்ஷம் வெள்ளமிட, கீழ் பால் வெள்ளமிட, நடுவு மால் வெள்ளமிட, நின்றநிலையாகையாலே, தெப்பம் பற்றுவாரைப்போலே நின்வாசற்கடையில் தண்டியத்தைப்பற்றிக் கிடக்கிற இந்தத்தர்மஹாநி அறிகிறிலே.

இப்படிச் சொன்னவிடத்திலும் இவர்கள் படும் அலமாப்புக் காண்போமென்று பேசாதே கிடக்க; - (சினத்தினால்) - 'பெண்களைத் தீராமாற்றாக நெஞ்சாரல் பண்ணும் க்ருஷ்ணனை யொழிய, பெண்பிறந்தார்க்குத் தஞ்சமான சக்ரவர்த்தித்திருமகனைச் சொல்லு

---

க்கொண்டு எழுந்தருளுகிற இளையபெருமாளை ["லக்ஷ்மீஸம்பந்ந:"] "லக்ஷ்மீஸம்பந்ந:" என்கையாலே கைங்கர்யமே லக்ஷ்மியென்று விவக்ஷித்து, க்ருஷ்ணஸேவை நற்செல்வமானமையைஉபபாதிக்கிறார்:—["லக்ஷ்மீஸம்பந்ந: ஸ்வர்க்ஷ்யோ:"] "லக்ஷ்மீஸம்பந்ந: ஸஹ்ருஹித:" என்றாய், ஸம்யக்த்வத்தை உபபாதிக்கிறார் (லக்ஷ்மிஸம்பந்ந இத்யாதி.) "நற்செல்வன்" என்றதுக்கு க்ருஷ்ணனிடத்தில் பக்தியாலே கைங்கர்யம்பண்ணுமவனென்று அர்த்தமாகையாலே அவனுக்குத் தங்கையென்று இவளைச் சொல்லுகையாலே புருஷனிற்காட்டில் ஸ்த்ரீக்கு ப்ராவண்யம் பள்ளமடையாகையாலே அவனில் ஏற்றமுடையவளே யென்று விவக்ஷித்து த்ருஷ்டாந்தபூர்வகம் அருளிச்செய்கிறார் (குணஹாநிக்கு இத்யாதி.) குணத்துக்கு - ப்ராவண்யரூபகுணத்துக்கு.

தலையிலே பனி விழுகையாலே நின்வாசல் கடையைப் பற்றி என்று சப்தார்த்தம் விவக்ஷித்து "பால்சோர" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மேல் இத்யாதி.)

'தங்களுக்கு உத்தேச்யமான க்ருஷ்ணனைப் பாடவும்' என்னாதே, சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுவா னென்னென்ன, அருளிச்செய்கிறார் (பெண்களை இத்யாதி.) 'தீராமாற்றாக' என்றது - மாற்றுலே - ப்ரதிக்ரியையாலே தீராதபடியாக என்றபடி. ["ந ப்ரதக்ஷத்யநிக்ஷ ஸ்த்ரீதநீயாநிஷர்ஜயந் "]

வோம் இவள் எழுந்திருக்கைக்காக' என்று ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறார்கள் :—(சினத்தினால்) - தண்ணீர்போலே யிருக்கிற சக்ரவர்த்தித்திருமகனுக்கும் சினமுண்டோ வென்னில்? - ஆஶ்ரித ஶத்ருக்கள் இவர்க்கும் ஶத்ருக்களிறே:["తతో రామో మహాతేజా రావణేన కృతవ్రణమ్। దృష్ట్వా ప్లవగశార్దూలం కోపస్య వశమేయివాన్"] 'ததோ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருதவ்ரணம் । த்ருஷ்ட்வா ப்லவகஶார்தூலம் கோபஸ்ய வஶமேயிவாந்" (ககங). மஹாராஜர்க்குச் சீற்றம் பிறந்தபோது வாலியை யெய்தார்; அவரழுதபோது கூட அழுதாரிறே. ["ద్విషదన్నం న భోక్తవ్యమ్"] "த்விஷதந்நம் ந போக்தவ்யம்" (ககச) என்றிறே இருப்பது. (தென்னிலங்கைக் கோமானை) - ["యద్యధర్మో న బలవాన్ స్యాదయం రాక్షసేశ్వరః। స్యాదయం సురలోకస్య సశక్ర స్యాపి రక్షితా"] "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர꞉ । ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா" (ககரு) என்று திருவடி மதித்த ஐஶ்வர்யத்தையுடையவனை. (செற்ற) - ஓரம்பாலே தலையைத் தள்ளிவிடாதே படையைக் கொன்று, தேரை அழித்து, ஆயுதங்களை முறித்து, "தான் போலும்" இத்யாதி * கோன்போலு மேன்றெழுந்து கிளர்ந்துவந்த மானத்தை யழித்து, நெஞ்சாரல் பண்ணிக் கொன்றபடி.

(மனத்துக்கினியானை) - "வேம்பேயாக வளர்த்தாள்" என்னும்படியே - பெண்களைப் படுகுலையடிக்கும் க்ருஷ்ணனைப்போ

---

"நக்ருத்யஸ்ய த்வஹிம்ஸாவிக்ருத்ய நீயா நிவர்ஜயநு" என்னும் ப்ரமாணப்ரஸித்தியைப்பற்ற சங்காநுவாதம் (தண்ணீர் இத்யாதி.) ஆஶ்ரிதசத்ருக்களிடத்தில் இவர்க்குச் சினமுண்டென்னுமதுக்கு, திருவடியை நலிந்த ராவணனிடத்தில் கோபம்பண்ணினரென்னும் ப்ரமாணத்தைக் காட்டுகிறார் (தத இத்யாதி.) ஆஶ்ரிதவிரோதிகளிடத்தில் கோபமுண்டென்னுமதுக்கு உதாஹரணம் காட்டுகிறார் (மஹாராஜர் இத்யாதி.) "தென்" என்று- அழகாய், ஸ்ப்ருஹணீயமாகையாலே. ஐச்வர்யத்தைக் காட்டுகையால், அத்தை ப்ரமாணபூர்வகம் அருளிச்செய்கிறார் ([యద్యధర్మః] (யத்யதர்ம꞉) இத்யாதி.) "சினத்தினால்" என்று ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் கோபம் விவக்ஷிதமாகையாலே "செற்ற" என்றதுக்கு அத்தைப்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஓரம்பாலே இத்யாதி,)

'படுகுலையடிக்கும்' என்றதுக்கு - "கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்து" இத்யாதிப்படியே பெண்களனைவர்க்கும் ஆசையுண்டாக்கி

லன்றிக்கே, ஏகதாரவ்ரதனு யிருக்கை; பெண்களை ஓடியெறிந்து துடிக்க விட்டுவைத்துப் பின் இரக்கமுமின்றிக்கே யிருக்கும் க்ருஷ்ணனையொழிய. [“సఞ్జాతబాష్పైః పరవీరహన్తా”] “ஸஞ்ஜாதபாஷ்பை: பரவீரஹந்தா” (ககசு) என்று - சத்ருக்களுக்கும் கண்ணநீர் பாயுமவனை யென்றுமாம். (பாடவும் நீ வாய்திறவாய்) - “கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்” என்று நம்மை நலியும் க்ருஷ்ணனுடைய பேரைக் காற்கடைக் கொண்டு, [“ఇతస్సంస్మృత స జీవనం రామ కృష్ణః”] “ஜீதஉவ்ஸிஜ்யதஸஞ்ஜீவநம்ஸாஉவ்யத்தாஞூ” (ககஎ)என்னும்படியே க்ருஷ்ண விரஹத்தாலே கமர்பிளந்த நெஞ்சு பதஞ் செய்யும்படியான சக்ரவர்த்தித்திருமகனைப் பாடச் செய்தேயும். (நீ வாய்திறவாய்) - நீ வாய்திறக்கிறிலை; ப்ரீதிக்குப் போக்குவிட வேண்டாவோ ?

(இனித்தா னெழுந்திராய்) - எங்களாற்றாமை அறிவித்த பின்பும் உறங்கக் கடவையோ ? எழுந்திராய். (ஈதென்ன பேருறக்கம்) - [“భగవత స్స్వాపోఽయమ్”] “ஹமவதஸ்வாபொயநः” (ககஅ) என்று கொண்டு பிறர் ஆர்த்திக்கு த்வரித்து உணருமவனோடே பழகிவைத்து இங்ஙனே உறங்குவதே ! என்கிறார்கள். ஆபந்நர்க்காக உணருமவன்படியு மன்றிக்கே, காலமுணர்த்த உணரும் ஸம்ஸாரிகள் படியு மன்றிக்கே யிருப்பதே உன்னுறக்கம் !

---

ஸம்ஶ்லேஷியாமல் பாதிக்கு மென்றபடி. ஓடியெறிகை -காட்டுவழியே வேடர் மரத்தைத் தள்ளுகையாதல்; பாதிமரத்தை அர்த்தஜீவனுக்கி விடுகையாதல். இத்தால்-க்ருஷ்ணன் தங்களைவசீகரித்து ஸம்ச்லேஷியாமல் துடிக்க விடுவனென்று கருத்து. “பாடவும்” என்ற சகாரம் - ப்ராதாந்யத்திலேயாய் அந்தப்ராதாந்யத்தை வ்யாவ்ருத்திபூர்வகம் அருளிச்செய்கிறார் (கண்ணன் இத்யாதி.)“திறவாய்” என்றது- திறக்கவேணுமென்று அர்த்தமாகில், “பாடவும்”என்றது அந்வயியாமையாலே,வ்யதிரேகமுகமாக ஶப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (நீ வாய்இத்யாதி.) நீங்கள்பாட,நான் அநுபவித்துக்கொண்டிருக்கை ப்ராப்தமாயிருக்க, வாய்திறக்கவேண்டுவானென் என்று அவளுக்குக் கருத்தாக அருளிச்செய்கிறார் (ப்ரீதிக்கு இத்யாதி.)

“ஈது” என்றதாலும், “பேருறக்கம்” என்றதாலும் தோன்றுகிற உபாலம்பத்வயத்தையும் க்ரமேண அருளிச்செய்கிறார் (ஹகவத இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

கஅ

(அனைத்தில்லத்தாரும் அறிந்து) - பெண்களெல்லாரும் வந்து உன்வாசலிலே அழைக்கிறமை ஊராக அறியவேணுமென்றிருந்தாயாகில், எல்லாரு மறிந்தது, இனி எழுந்திராய்; பகவத்விஷயம் ரஹஸ்யமாக அநுபவிக்கு மித்தனை; புறம்பு இதுக்கு ஆளுண்டோ வென்று கிடக்கிறாயாகில், அது எங்கும் ப்ரஸித்தமாய்த் தென்றுமாம். எம்பெருமானார் திருவவதரித்தாற்போலே காணும் இப்பெண்பிள்ளையும். (கஉ)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பன்னிரண்டாம்பாட்டு. (கனைத்து இத்யாதி.) இப்பாட்டில், பாகவதாபிமாந நிஷ்டரை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(கனைத்து) -ஸ்வாசார்யன், தனக்கும் ஸ்வஸந்தாநத்துக்கும் பகவத்குணாநுபவம் பண்ணுவிக்கவில்லையென்று வ்யஸநப்பட்டு. (இளங்கற்றெருமை) - பாலஸந்தாநமுடைய ஶிஷ்யர். (கன்றுக்கிரங்கி) - ஸ்வஸந்தாநத்திலே தயைபண்ணி. (நினைத்து) - ஸ்வாசார்யன் தன்னை அதிஷ்டித்துக்கொண்டு ஸ்வஸந்தாநத்துக்குப் பகவத்குணாநுபவம் பண்ணுவித்தருளுகிறானென்று நினைத்து. (முலைவழியே நின்று பால்சோர) - பாவநாப்ரகர்ஷத்தாலே ஸ்வாசார்யாபிமாநமடியாகப் பகவத்குணங்கள் சுரக்க. (நனைத்து இல்லம் சேறாக்கும்) - ஶ்ரோதாக்களுடைய ஹ்ருதயத்தை ஸாம்ஸாரிக தாபமெல்லாம் ஆறும்படி குளிரப்பண்ணி, குணாநுபவத்தாலே களிக்கும்படி பண்ணுகிற. (நல்செல்வன்) - ஶ்லாக்யமான ஸம்பத்தையுடைய பாகவதனுடைய. (தங்காய்) - ஸோதரியானவளே!

(பனித்தலைவீழ) - பனியானது தலைமேலே சொரிய. அதாவது - * மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுடைய ஸ்ரீ ஸூக்திகளாலே வரும் பகவத்குணாநுபவம். (நின்வாசல் கடை

---

"அறிந்து" என்றது - கடைக்குறைத்தலாயிருந்ததென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பெண்கள் இத்யாதி.) "பெண்கள் அழைக்கிறமையை யறிந்து"என்று அத்யாஹாரம் திருவுள்ளம்பற்றிக் கீழ் ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, "ரஹஸ்யத்தையறிந்து" என்று அத்யாஹரித்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (பகவத்விஷயம் இத்யாதி.) 'இப்பெண்பிள்ளை' என்றது- எழுப்புகிற பெண்பிள்ளையென்றாய், ஆண்டாளென்றபடி. இவள்வாசலிலே யிருந்து அவள் ரஹஸ்யமாக அநுபவிக்க, அத்தை வெளியிட்டாளென்று கருத்து. (கஉ)

பற்றி) - கீழ் ஆசார்யோபதேசமடியாக வரும் பகவத்குணாநுபவ ப்ரவாஹமென்ன, மேலே * மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களால் வரும் குணாநுபவப்ரவாஹமென்ன, நடுவே பாகவதகுணாநுபவப்ரவாஹமென்ன. இப்படி ப்ரவாஹத்ரயத்திலே அகப்பட்டு அலைகிறநாம், உனக்கு ப்ரதிபாதகமான நமஸ்ஸிலே த்வாரவர்த்தியான நகாரமாகிற அவலம்பத்தைப் பற்றி; கீழ்ச்சொன்ன குணாநுபவங்களில் போக்த்ருத்வபுத்தி வாராதபடி தடுக்கிற நகாரத்தைப் பற்றி யென்றபடி. (சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச் செற்ற மனத்துக்கினியானை) - கோபத்தினாலே, யமவஶ்யதா மூலமான ஸம்ஸாரத்துக்கு நிர்வாஹகமான அஹங்காரத்தை நஶிப்பித்து, அதஏவ மனத்துக்கினியனான சக்ரவர்த்தித்திருமகனை. (பாடவும் நீ வாய்திறவாய் இனித்தானெழுந்திராய்) – எங்களாற்றாமை காணவேணுமென்று இருந்தாயாகில் கண்டபின்பும் உறங்குமித்தனையோ? எழுந்திராய். (ஈதென்ன பேருறக்கம்) - காலமுணர்த்த உணரும் ஸம்ஸாரிகள் நித்ரைபோலு மன்றிக்கே, ஆஶ்ரிதர்களார்த்தி யுணர்த்த உணரும் ஈஶ்வரனுடைய உறக்கமும்போலன்றிக்கே, உபயவிலக்ஷணமான இம்மஹாநித்ரை யேது? ஸம்ஸாரிகள் நித்ரை, தமோபிபூதியாலுண்டானதாகையாலே ஸத்த்வோத்தரமான காலத்திலே தீரும்படியாயிருக்கும்; ஈஶ்வரனுடைய நித்ரை, ஜகத்ரக்ஷண சிந்தாரூபமாகையாலே பரரார்த்திகாணத் தீரும்; இவளுடைய நித்ரை, சரமபர்வநிஷ்டருடைய ஆற்றாமை காணத் தீரும்; ஆகையாலே, அதுக்கு அதிகாரிகள் கிடையாமையாலே பேருறக்கமாயிருக்கும். (அனைத்தில்லத்தாருமறிந்து) - நாங்கள் உன்னை யெழுப்புகிறது எல்லாரும் அறியவேணுமென் றிருந்தாயாகில், அது எல்லாரும் அறிந்தார்கள்: எழுந்திரா யென்கிறார்கள். பகவத்விஷயம் ரஹஸ்ய மென்றிருந்தாயாகில் அது எங்கும் ப்ரஸித்தமாய்த்து, எழுந்திரா யென்கிறார்கள்.

கீழ்ப்பாட்டில் "கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்து" என்று ஸ்வவர்ணோசித தர்மாநுஷ்டாநத்தைச்சொல்லி, இப்பாட்டில் சொல்லாமையாலே அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டனுக்கு ஆஜ்ஞா கைங்கர்யஹாநி ஸ்வரூபவிரோதமன் றென்கிறது. இவன் எருமை கறவாமைக்கு இளையபெருமாளை த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்து, உபாயாந்தர த்யாகத்துக்கு ப்ரமாணமாக ["[illegible]"] "நசெ

வஞொகாகூ,ஊண(ூ" என்கிற ஶ்லோகத்தை உதாஹரித்தது ஐஶ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களில் அபேக்ஷையில்லாதவர்க்கு தத்ஸாதநாநுஷ்டாநத்தில் அபேக்ஷை பிறவாது என்னும் அபிப்ரா யத்தாலே. (கஉ)

அ.—பதின்மூன்றும்பாட்டு.—நம் கண் உண்டாகில் தானே வருகிருனென்று கிடக்கிரு ளொருத்தியை எழுப்புகிருர்கள்.

மூ.—புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாவரக்கனைக்
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்ப்
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்றுப்
புள்ளுஞ்சிலம்பினகாண் போதரிக்கண்ணிஞய்
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே
பள்ளிக்கிடத்தியோபாவாய் நீ நன்ஞளால்
கள்ளந்தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய்.

பதவுரை.—("நம் கண்ணழகுண்டாகில் தானேவருகிருன்" என்றிருப் பாளொருத்தியைப் பார்த்து,)—(முந்துற உணர்ந்துவந்து எழுப்புகிறவர் கள்),—'புள்ளின்வாய்கீண்டானை - பகாஸுரனுடைய வாயைப்பிளந்தவனும்' பொல்லா அரக்கனைக் கிள்ளிக்களைந்தானை - சகலவிதமான பொல்லாங்கையுஞ் செய்து திரிந்த ராவணனுடைய பத்துத்தலைகளையும் கிள்ளியெறிந்து போகட்டவனுமான சக்ரவர்த்தித்திருமகனுடைய, கீர்த்திமை - (எதிரிகள் மனங் கலங்கும்படியான) வீரசரிதத்தை, பிள்ளைகளெல்லாரும் - எல்லாப் பெண் பிள்ளைகளும், பாடி - (தங்கள்ப்ரீதிக்குப் போக்குவீடாகப்) பாடிக்கொண்டு, போய்- (அதுவே வழிக்குத்தாரகமாகச்) சென்று, பாவைக்களம் - (க்ருஷ்ண னும் தாங்களும் கூடுகைக்குக்) குறித்த இடத்தில், புக்கார் - புகுந்தார்கள், (என்றுசொல்ல), - ("அவர்கள் போகைக்குப் போதுவிடிந்ததோ?" என்று அவள்வினவ),—'வெள்ளி எழுந்து-சுக்கிரன் உச்சிப்பட்டு, வியாழம் உறங்கி ற்று-ப்ருஹஸ்பதியும் அஸ்தமித்தது; (அன்றியும்), புள்ளும் சிலம்பினகாண் - பக்ஷிகளுங்கூட (இரைதேடுகைக்காகக்) கூவிச்செல்லாநின்றன ; போது அரி கண்ணிஞய்-பூவையும்மானையும்ஒத்தகண்ணழகையுடையவளே! பாவாய்- ம்ருதுஸ்வபாவைபே! நீ—, நல் நாள் - (க்ருஷ்ணனும் நாமும் ஜலக்ரீடை பண்ணி அவன்மடியில் சாயலாங்காலமான) நல்லநாளில், கள்ளம் தவிர்ந்து- (க்ருஷ்ணசேஷ்டிதங்களை நினைத்துத் தனியே கிடக்கையாகிற) கபடத்தை

---

பதின்மூன்றும்பாட்டு. (புள்ளின்வாய் இத்யாதி.) "போதரிக்கண்ணி ஞய்" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை (நம்கண் இத்யாதி.) 'நம் கண்ணுண்டாகில்' என்றது - கண்ணழகு உண்டாகிலென்றபடி.

விட்டு, கலந்து - எங்களோடுசேர்ந்து, குள்ளக்குளிர- வவ்வலிடும்படி, குடைந்து நீராடாதே-அமிழ்ந்து ஸ்நாநஞ்செய்யாமல்,பள்ளிக் கிடத்தியோ (க்ருஷ்ணஸ்பர்சமுடையதொரு) படுக்கையில் கண்வளருகிருயோ? எழுந்திராய் என்று எழுப்புகிருர்கள்.

வ்யா.—(புள்ளின்வாய் கீண்டானை) - "பள்ளத்தில் மேயும்" இத்யாதி; பகாஸுரனைப் பிளந்தபடி. (பொல்லா அரக்கனை) - தாயையும் தமப்பனையும், உடலையும் உயிரையும் பிரித்தாற்போலே பிரித்த நிர்க்ருணன். "சுரிகுழல் கனிவாய்" இத்யாதி; "முன்பொலா விராவணன்" என்னுமித்தனை போக்கி அவன் தண்ணிமைக்கு ஒரு பாசுரமில்லையிறே. அத்தாலேயிறே பிராட்டியும் [ ] "க்ஷுத்ரஸ்த்வம் அஸாவ்ருத்த:" (கசக) என்றது; [ ] "விபீஷணஸ்து தர்மாத்மா" (கஉ0) என்று - நல்ல அரக்கனும் உண்டென்கை. (கிள்ளிக்களைந்தானை) - திருவிளையாடு சூழலிலே நோய்புக்கவிடங்களைக் கிள்ளிப்போகடுமாபோலே, தோஷாம்ஶத்தை வாங்கிப் போகட்டபடி. (கீர்த்திமை) - [ ] "ஶத்ரூணாமபி வீர்யஸ்ய" (கஉக) என்று எதிரிகளுக்கும் நெஞ்சுஉளுக்கும்படியான வீரசரிதத்தை. [ ] "ரஜநீயஸ்ய விக்ரமை:" (கஉக) என்று - உகவாதார்க்கும் விடவொண்ணுத வீரம், உகந்த பெண்களுக்குச் சொல்லவேணுமோ?

---

"புள்ளின்வாய் கீண்டான்" என்றதுக்கு - அஸுரனுகையாலே கீண்டானென்னுமத்தை ப்ரமாணமுகேந தர்சிப்பித்துக்கொண்டு சப்தார்த்தம் அருளிச்செய்கிருர்(பள்ளத்தில் இத்யாதி.) இத்யாதி என்றவநந்தரம் "என்கிறபடியே" என்று சேஷம். [ ] "ராக்ஷஸ்யதிதா ஹார்யா நித்யம்ப்ராணஸமாஹிதா" என்றத்தைப் பற்ற உடலையு முயிரையும் என்றது. திருவினைப் பிரித்தமையைப் பொல்லாங்காக்கி, விசேஷபரமாகக் கீழ் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து ஸாமாந்யமாக ஸகல விதமான பொல்லாங்கையும் விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரத்தை ப்ரமாணபூர்வகம்அருளிச்செய்கிருர் (முன்பொலாஇத்யாதி வாக்யத்வயத்தாலே.) "அரக்கன்" என்ருல் போராதோ? "பொல்லா" என்னவேணுமோ? என்ன - அருளிச்செய்கிருர் [ ] (விபீஷணஸ்து இத்யாதி.) நெஞ்சு உளுக்கும்படி - மநஶ்ஶைதில்யம் பிறக்கும்படி. ஸௌந்தர்யாதிகளைப் பாடவேண்டியிருக்க வீரசரிதத்தைப்பாடுகிறதென்னென்ன, அருளிச்செய்கிருர் [ ] (ரஜநீயஸ்ய இத்யாதி.) ப்ரதிகூலர்

["లోకాంశ్చ లోకానుగతాన్ పశూంశ్చ హిత్వాశ్రితాస్త్వచ్చరణాతపత్రమ్। పరస్పరం త్వద్గుణవాదశీధుపీయూషనిర్యాపితదేహయాత్రాః"] "லோகாம்ஸ்ச லோகாநுகதாநு பஸூம்ஸ்ச ஹித்வாஸ்ரிதா: த்வச்சரணாதபத்ரம்। பரஸ்பரம் த்வத்குணவாதஸீதுபீயூஷநிர்யாபிததேஹயாத்ரா:" ‡ ராவணன் பெருமாள்வீரத்துக்கு இலக்கானுன்; தங்கை அழகிலே கண்கலங்கினுள்; தம்பி ஸீலத்துக்கு இலக்கானுன். (பாடிப்போய்)-இவர்களுக்குப் பாதேயம்இருக்கிறபடி; ["పాథేయం పుణ్డరీకాక్షనామసంకీర్తనామృతమ్"] "பாதேயம் புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம்"(௩௭)என்று வழிக்குத்தாரகம் திருநாமமிறே. "தன்தாள்பாடி" என்னக்கடவதிறே.

(பிள்ளைகள் இத்யாதி) - நாம் சென்று எழுப்பவேண்டும்பாலைகளும் உனக்குமுன்னே உணர்ந்து புறப்பட்டார்கள். (பாவைக்களம் புக்கார்) – க்ருஷ்ணனும் தாங்களும் கழகமிடும் ஸங்கேதஸ்தலம் புக்கார்கள்.

'அவர்கள் போகைக்குப் போதுவிடிந்ததோ?' என்ன,(வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) – வெள்ளி உச்சிப்பட்டது; வியாழம் அஸ்தமித்தது. உங்களுக்கு நக்ஷத்ரமெல்லாம் வெள்ளியும் வியாழமுமாயிறே யிருப்பதென்ன, அதுவேயன்று. (புள்ளும் சிலம்பினகாண்) - புட்கள் உணர்ந்தமாத்ரமேயன்றிக்கே இரைதேடிச் சிலம்பிப்போயிற்றின.

(போதரிக்கண்ணிஞய்) - புஷ்பம்போலேயும் மான்போலேயுமிருந்துள்ள கண். அரியென்று – மான். அன்றிக்கே, பூவிலே

---

வீரத்துக்கு உகக்கக்கூடுமோவென்ன, த்ருஷ்டாந்தம் காட்டிக்கொண்டு உபபாதிக்கிருர் (ராவணன் இத்யாதி.) "பாடி" என்றது, "போய்" என்றதுக்கு ஹேதுவாகத் தோன்றுகையாலே, அத்தை ப்ரமாணபூர்வகம் உபபாதிக்கிருர் (இவர்களுக்கு இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) "தானுகந்தவூரெல்லாம் தன் தாள்பாடிப் பூங்கோவலூர்தொழுதும் போதுநெஞ்சே" என்று பாடுகை வழிக்கு தாரமென்றதிறே என்றபடி.

கழகம் - ஓலக்கம். ஸங்கேதஸ்தலமாவது - வர்ஷார்த்தமாக இந்த்ராணியையும், ஸம்ச்லேஷார்த்தமாக ரதியையும் நோற்கைக்குப் பெண்கள் திரளுமிடம்.

---

‡ இந்த ச்லோகம் சில ஸ்ரீகோஸங்களில் இல்லை.

வண்டு இருந்தாற்போலே யென்றுமாம். "அரி" என்று - வண்டு; அன்றியே, போதை ஹரிக்கிற கண் என்றுமாம் பூவோடே சீறு பாறென்னும் கண் என்னவுமாம் (குள்ளக்குளிர) – ஆதித்யனு தித்து நீர் கொதிப்பதற்குமுன்னே. (குடைந்து நீராடாதே) – ["ஸ்ரீ யா:ஸ்யந்தா:" ] "ஸாயவிஜவமாஹதெ" (௩௯) என்னும்படியே க்ருஷ்ணவிரஹமாற நீராடப்போகாதே. நமக்குச் சால்லுகிற க்ருஷ்ணவிரஹதாபம் ஶமிக்கைக்கும் இனி ஒருகால் க்ருஷ்ண விஶ்லேஷம் பிறவாமைக்காகவும், க்ருஷ்ணகுணங்களிலே அவகாஹித்து அநுபவிக்கப்பெறுதே. (போதரிக்கண்ணினாய்) - உன் கண்ணாலே க்ருஷ்ணனைத் தோற்பித்து, அவன் கண்ணாலே குமிழி நீருண்ணப்பாராதே. * நெடுங்கணிளமான் இவள்; * அனைத்துலகுமுடைய அரவிந்தலோசநன் அவன். இருவர்கண்ணுக்கும் இலக்கானவர்களிறே இவர்கள். உன்னுடைய ஸௌந்தர்யம் எங்கள் பேற்றுக்கு உடலென் றிருந்தோம்; அங்ஙனன்றிக்கே, இழவுக்கு உடலாகநின்றதோ? (பள்ளிக்கிடத்தியோ) - க்ருஷ்ணஸ்பர்ஶமுடையதொரு படுக்கையை மோந்துகொடு கிடக்கிறாயோ? விளைந்து கிடக்க உதிர்நெல் பொறுக்குகிறாயோ?

(பாவாய்நீ) – தனிக்கிடை கிடக்க வல்லளல்லையே நீ. (நன்னாளால்) - க்ருஷ்ணன்கிடாய் பெண்கள்கிடாய் என்கிற நாட்டாரும் இசைந்து அவனும் நாமுமாய் ஜலக்ரீடைபண்ணி அவன் மடியிலே சாயலாம் காலத்தைப் பெற்றுவைத்து, படுக்கையை மோந்துகொடு கிடப்பதே!. (நன்னாளால்)-மேல்வருகிறநாள் ராவணாதிகளைப்போலே பிரிக்கிற நாளிறே. (கள்ளம்தவிர்ந்துகலந்து.)-கள்ளமாவது- தனியே க்ருஷ்ணகுண சேஷ்டிதங்களை நினைத்துக்கிடக்கை. அத்தைத் தவிர்

---

"அரி" என்று - சத்ருவாய், அத்தை அருளிச்செய்கிறார் (பூவோடே இத்யாதி.) ஸ்வாபதேசத்துக்குச்சேர அர்த்தம் அருளிச்செய்கிறார் (நமக்கு இத்யாதி.) இவளைக் கண்ணழகையிட்டுச் சொல்லுகிறது நீராடுகைக்கு உபயுக்தமென்னுமது தோற்றுகைக்காக என்று ப்ரதீகக்ரஹணபூர்வகம் பாவம் அருளிச்செய்கிறார் (உன்கண்ணாலே இத்யாதி.) கண்வளர்ந்திருக்கும் பெண்ணை "பள்ளிக்கிடத்தியோ" என்றதுக்குப் பாவம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணே த்யாதி.)

பாவையாயிருக்குமவளை 'பாவாய்'என்று மீளவும்ஸம்போதிக்கைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தனி இத்யாதி.)

ந்து எங்களோடே கலந்து; எங்களுக்கு உன்னைக்காட்டாதே மறைக்கையாகிற (கஉஉ) * ஆத்மாபஹாரத்தைத் தவிர்ந்து எங்களோடே கல வென்றுமாம். ஶேஷத்வத்தை அபஹரித்தால் ஶேஷியை க்ஷமைகொள்ளலாம்; ஶேஷித்வத்தை அபஹரித்தால் பொறுத்தோமென்பா ரில்லை ; குற்றம் நின்றேபோ மித்தனை.

கலந்து - குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ என்று அந்வயம். (கங)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பதின்மூன்றும்பாட்டு. (புள்இத்யாதி.) இப்பாட்டில் - நமக்கு ஸ்வரூபஜ்ஞாநமுண்டாகில், அவன்தானே வருகிறானென்று நிர்ப்பரரா யிருக்குமவரை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(புள்ளின்வாய்கீண்டானை) - ஸ்வாஶ்ரிதருக்கு ஸ்வாநுபவவிரோதியான காமாதிதோஷ நிவர்த்தகனாய். (பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை)-பொல்லாத அப்ராப்தவிஷயஸக்தமான அஹங்காரத்தை. அஹங்காரத்துக்கு நன்மை தீமைகளாவன - "அஹம், மம" என்றால் ஈஶ்வரனும் ஈஶ்வரவிபூதியும் ஸ்வாபிமாந விஷயமாகத் தோன்றுகை - அஹங்காரத்துக்குநன்மையாவது ; தேஹமும் ஆத்மாவும் ஸ்வதந்த்ரமாகத் தோன்றுகை - தீமையாவது. அநுகூலமான அஹங்காரத்துக்கு அழல்தட்டாதபடி நிரஸித்தவனுடைய. (கீர்த்திமை பாடிப்போய்)-கல்யாண குணங்களை ப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடி அதுவே தாரகமாகப் போய். (பிள்ளைகளெல்லாரும்) - நாம் சென்று எழுப்பவேண்டிய அகில பாகவதரும். (பாவைக்களம் புக்கார்)-அநந்யார்ஹரான ஸ்ரீவைஷ்ணவர்கள் நிரூபகமான ஸங்கேத ஸ்தலத்தை ப்ரவேஶித்தார்கள். அதாவது - காலக்ஷேப கூடம். (வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) - பரிசுத்தமான ஜ்ஞாநம் அபிவ்ருத்தமாய், அஜ்ஞாநம் தலைமடிந்தது. (புள்ளுஞ் சிலம்பினகாண்) - மற்றுமுள்ள பாகவதரும் த்வரித்துக்கொண்டு போந்தார்கள். (போதரிக்கண்ணினாய்) - ஸ்வச்சமாய் ஶ்லாக்யமாய் ஸாரக்ராஹியான ஜ்ஞாநத்தையுடையவரே ! (குள்ளக்குளிர) - அவனைப்பிரிந்திருந்த வ்யஸநமெல்லாம்

---

தன்னை மறைத்தால் வந்த விரோதமென்னென்ன அருளிச்செய்கிறார் (சேஷத்வத்தை இத்யாதி.) (கஉஉ)

நிஶ்ஶேஷமாய்ப்போம்படி. (குடைந்து) - காலக்ஷேபகூடத்திலே ப்ரவேஶித்து. (நீராடாதே) - பகவதநுபவத்தைப் பண்ணுதே. (பள்ளிக்கிடத்தியோ) - தனித்துக் குணநுபவம் பண்ணுகிருயோ? (பாவாய் நீ) - தனித்துக் குணநுபவம் பண்ணவல்லேயோ? (நன்னுளால்) - ஸத்த்வோத்தரமான காலம் நேர்பட்டபடி என்தான்! (கள்ளம்தவிர்ந்து) - உன்னை எங்களுக்குக் காட்டாமலிருக்கிற களவை விட்டு. (கலந்து) – எங்களோடே ஒருநீராகக் கலந்து, எங்கள் ஸத்தையை யுண்டாக்காய். (கரு)

அ.—பதினன்காம்பாட்டு. இவையெல்லாவற்றுக்கும் தானே கடவளாய், எல்லாரையும் தானேயெழுப்பக்கடவதாகச் சொல்லிவைத்து, அது செய்யாதே உறங்குகிருளொருத்தியை எழுப்புகிருர்கள்.

மூ.—உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள்
செங்கழுநீர்வாய்நெகிழ்ந் தாம்பல்வாய்கூம்பினகாண்
செங்கற்பொடிக்கூறை வெண்பற்றவத்தவர்
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான்போகின்ருர்
எங்களைமுன்ன மெழுப்புவான்வாய்பேசும்
நங்காயெழுந்திராய் நாணுதாய்நாவுடையாய்
சங்கொடுசக்கர மேந்துந்தடக்கையன்
பங்கயக்கண்ணனைப் பாடேலோரெம்பாவாய்.

பதவுரை.—(நீராடுகைக்கு எல்லாரையும் தானே யெழுப்புவதாகச் சொல்லிவைத்து உறங்குகிருளொருத்தியை நோக்கி),—(துயிலுணர்ந்து வந்தவர்கள்),—உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள் - உங்களுடைய புழைக்கடைத் தோட்டத்திலிருக்கிற தடாகத்திலுள்ள, செங்கழுநீர் - செங்கழுநீர்மலர்கள், வாய்நெகிழ்ந்து - விகஸித்து, ஆம்பல் - கருநெய்தல்மலர்கள், வாய்கூம்பினகாண் - மொட்டித்தனகாண்; (அன்றியும்), செங்கல் பொடிக் கூறை - காஷாயந்தோய்த்த வஸ்த்ரம் தரித்தவர்களும், வெண்பல்- (தாம்பூலம்தரியாமையால்) வெள்ளிய பற்களையுடையவருமான, தவத்தவர் - ஸாத்விகரான ஸந்ந்யாஸிகள், தங்கள் திருக்கோயில் - தங்கள் திருவாராதந க்ருஹங்களில், சங்கிடுவான் - திருவாராதநம்பண்ணுகைக்காக, போகின்ருர்- (ஸந்த்யாவந்தநம்பண்ணி) வாராநின்ருர்கள்; எங்களை-(* கோழியழைப்பதன்முன்னம் குடைந்து நீராடவிருக்கிற) எங்களை, முன்னம் எழுப்

பதினலாம்பாட்டு. (உங்கள் இத்யாதி.) "நங்காய்" என்றதையும் "எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும்" என்றதையும் கடாக்ஷித்து அவதாரிகை யிடுகிருர் (இவையெல்லாவற்றுக்கும் இத்யாதி.)

புவான் - முன்னமே எழுப்புவதாக, வாய்பேசும் - வாயாற்சொல்லிச் செய்யாதொழிந்த, நங்காய் - பூர்ணையானவளே! நாணுதாய் - ("சொன்னபடி செய்யாதொழிந்தோமே" என்னும்) லஜ்ஜையில்லாதவளே! நாவுடையாய் - பேச்சிலினிமையுடையவளே! சக்கரம் - (வலத்திருக்கையில்) திருவாழியாழ்வானையும், சங்கொடு - (இடத்திருக்கையில்) ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், ஏந்தும் - (பூவேந்தினாற்போலே) தரிக்குமவனும், தட கையன் - நீண்டதிருக்கைகளையுடையவனும், பங்கயம் கண்ணனை - தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவனுமான திருமாலை, பாட - (ப்ரீதிக்குப்போக்குவிட்டுப்) பாடுகைக்கு, எழுந்திராய்- எழுந்திருக்கவேண்டும், என்று எழுப்புகிறார்கள்.

வ்யா.—(உங்கள்புழைக்கடை இத்யாதி.)- செங்கழுநீர்அலர்ந்து ஆம்பல் மொட்டிக்கும்படி போதுவிடிந்தது; உறங்குவதே இன்னம்! என்ன; 'நீங்கள் வயலிலே போனிகளோ?' என்ன; 'புழைக்கடைத்தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் அலர்ந்து ஆம்பல் மொட்டித்தன' என்ன; 'அது பின்னை நீங்கள் வலிய அலர்த்தினிகோள்' என்ன; (உங்கள் புழைக்கடைத்தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின) - எங்களுக்குப் புகுரவொண்ணாதே, * அஸூர்யம்பஶ்யமான உங்கள் புழைக்கடைத்தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் மொட்டித்தன; வெயில் பட்டன்றிக்கே காலபாகத்தாலே யென்கை. இவள் எழுந்திராத இன்னாப்பாலே, "உங்கள்புழைக்கடை" என்று வேறிட்டுச் சொல்லுகிறார்கள்.

'அலரப்புகுகிற வளவிலே கழிய அலர்ந்ததென்று சொல்லுகிறிகோள், வேறு அடையாளம் உண்டோ?' என்ன;- (செங்கற் பொ

---

"புழைக்கடை" என்று விசேஷித்ததுக்கு உக்திப்ரத்யுக்திமுகேந பாவம் அருளிச்செய்கிறார் (செங்கழுநீர் இத்யாதி.) "உங்கள்" என்ற பதப்ரயோகத்துக்கு உக்திப்ரத்யுக்திமுகேந ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (அது பின்னை இத்யாதி.) இவர்களுக்குப்புகுரவொண்ணாத புழைக்கடையில் அலருகையையும் மொட்டிக்கையையும் புறம்புள்ளவற்றைக் கண்டு அநுமித்துச்சொல்லுகிறார்களென்று கருத்து. "தோட்டம்" என்று விசேஷித்ததுக்குப்பலிதார்த்தம் அருளிச்செய்கிறார் (வெயில் இத்யாதி.) இத்தால்-கிரணஸ்பர்சத்தாலொழிய அலருகையும் மொட்டிக்கையும் கூடாதென்று அவள்பண்ணுகிற அந்யதாஸித்தியைப் பரிஹரித்தார்களென்று சொல்லிற்றாய்த்து. இவளுடைய தோட்டமென்று தோற்றவேண்டில் "இந்தப்புழைக்கடை" என்னலாயிருக்க, "உங்கள்" என்று - மமகாரமுண்டானவர்களைப் போலே சொல்லக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் (இவள் இத்யாதி.

டிக்கூறை இத்யாதி.) - அளற்றுப்பொடியிலே புடைவையைப் புரட்டி, ப்ரஹ்மசர்யம்தோற்றப் பல்லைவிளக்கித் தண்டபரிஹாரார்த்தமாகத் தபோவேஷத்தையுடையரான ஸிவத்விஜருங்கூடத் தங்கள் தேவதைகளை ஆராதிக்குங் காலமாய்த்து. "திருக்கோயில்" என்றது, அவர்கள் சொல்லும் பாசுரத்தாலே. "சங்கு" என்று - ஆராதநோபகரணத்துக்கு உபலக்ஷணம்; குச்சியிட வென்றுமாம். இத்தால் - அஸூத்தருங்கூட எழுந்திருக்குங் காலமாய்த்துஎன்கை. ஸந்யாஸிகள் ஸந்த்யாவந்தநம்பண்ணித் தங்களுடைய அகங்களிலே திருவாராதநம்பண்ணுங் காலமாய்த்து என்றுமாம்.

'தமஃப்ரசுராநுஷ்டாநம் ப்ரமாணமோ? ["धर्मज्ञसमयः प्रमाणं वेदाश्च"] "[illegible]"(கஉக).அன்றோ?" என்ன; 'தர்மஜ்ஞையான உன்னுடைய ஸமயமும் ப்ரமாணமன்றோ' என்கிறார்கள்: (எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும்)-'எல்லாரையும் நானேயெழுப்புகிறேனென்றுசொன்னது உன் பக்கல் கண்டிலோமீ!' என்கிறார்கள். (வாய்பேசும்) - உக்திமாத்ரமேயாய், அநுஷ்டாநம் இன்றிக்கே யிருக்கை. க்ருஷ்ணனோடே பழகின உனக்குப் பொய்சொல்லுகை வம்போ? (நங்காய்) - பூர்ணை

---

'தண்டபரிஹாரார்த்தமாக' என்றது - ராஜாக்கள் தண்டம்கொள்வர்; அது வாராமைக்கு என்றபடி. "சங்கிடுவான்" என்றதுக்கு - சங்காலே நீர்விடுகை அர்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் ('சங்குஎன்று' இத்யாதி.) இது எம்பார் நிர்வஹிக்கும்படி. "செங்கல்பொடிக்கூறை" என்று - காஷாயவஸ்த்ரதாரிகளென்றும், "வெண்பல்" என்று - தாம்பூலாதிகளில்லாமையாலே போக்யத்ரவ்யங்களில் விரக்தரென்றும், "தவத்தவர்" என்று - ஸாத்விகரென்றும் சப்தார்த்தம் விவக்ஷித்து, திருமலைநம்பி அருளிச்செய்த யோஜநாந்தரம் அருளிச்செய்கிறார் (ஸந்யாஸிகள் இத்யாதி.)

"நங்காய்" என்றதே அமைந்திருக்க, "எங்களைமுன்னமெழுப்புவான் வாய்பேசும்" என்று விசேஷித்ததுக்கு - அவள் சங்கிக்குமிடத்தில் ஸோபாலம்போத்தரமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தமஃப்ரசுரர் இத்யாதி.) தமஃப்ரசுரர்க்கு அநுஷ்டாநத்தில் ஐதம்பர்யமில்லாமையாலே அவர்களெழுந்திருக்குமது விடிந்தமைக்கு அடையாளமாக மெய்க்கொள்ளப்போகாதென்று சங்கைக்குக் கருத்து. திருமலைநம்பி நிர்வாஹத்தில், விடிவுக்கு அடையாளமாக ஸந்யாஸிகளெழுந்திருந்தார்களென்னச்செய்தேயும் நிருத்தரையாய்க்கிடக்கையாலே வெறுக்கிறாளென்று "எங்களை முன்னம்" இத்யாதிக்கு ஸங்கதி கண்டுகொள்வது. 'வம்

யிறே. எனக்கு உங்களை யொழியச் செல்லாதென்று சொல்லும்படியும், உன் நைரபேக்ஷ்யமும் எல்லாம் கண்டோமிறே. சொலவும் செயலும் சேராதார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ? (எழுந்திராய்) - எங்கள் குறைதீர்க்க எழுந்திராய்.

(நாணாதாய்) - சொல்லிவைத்துச் சொன்னபடி செய்யப்பெற்றிலோ மென்னும் லஜ்ஜையு மின்றிக்கே யிருந்ததீ! நீ யிருந்தவூரில் பூசணியும் காயாதோ? என்கை. (நாவுடையாய்)-'என்னை க்ஷேபித்துக்கொண்டாகிலும் வருகிறதென்'என்ன; ["నాఋగ్వేదవినీతస్య నాయజుర్వేదధారిణః"] "நாருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:" (கஉச) என்றும், ["నూనం వ్యాకరణం కృత్స్నమ్"] "நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம்" (கஉரு) என்றும், ["సంస్కారక్రమసంపన్నామ్"] "ஸம்ஸ்காரக்ரமஸம்பந்நாம்" (ருரு) என்றும் உன்பேச்சிலினிமை கேட்க; இவள் எல்லாம் படுத்தினாலும் விடவொண்ணாத நாவீறுடைமை.

'உங்களுக்குச் செய்யவேண்டுவ தென்?' என்ன, (சங்குஇத்யாதி.)-திருவாழியையுட் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்தி அந்தஸ்பர்

---

போ' என்றது - புதுமையோ? என்றபடி. சப்தார்த்தகதநமுகேந உபாலம்பம்தோற்ற அருளிச்செய்கிறார் (பூர்ணையிறே என்று.) இது உபாலம்பமானபடியை உபபாதிக்கிறார் (எனக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'உன் நைரபேக்ஷ்யமும்' என்றது - உனக்கு எங்களையொழியச் செல்லும்படியிருக்கையும் என்றபடி. 'கண்டோமிறே' என்ற அநந்தரம், "ஆகையாலே" என்று சேஷம். 'பூர்த்தியும் வேணுமோ'என்றது - பூர்த்தியுண்டென்றிருக்க வேணுமோ வென்றபடி. "எழுந்திராய்" என்று - ப்ரார்த்தனை தோன்றியிருக்கையாலே இதுக்குச்சேரக்கூட்டி அர்த்தம்அருளிச்செய்கிறார் (எங்கள் இத்யாதி.) வெறுத்ததெல்லாம் ந்யாயநிஷ்டுரோக்தியாகையாலே இப்படி ப்ரார்த்திக்கத் தட்டில்லை.

நாணில்லாதவளேயென்று சப்தார்த்தமாய் அத்தை ஹேதுபூர்வகம் அருளிச்செய்கிறார் (சொல்லிஇத்யாதி.) நாணையும், பூசணியுடைய சரசரப்பையும் சுணையென்று வ்யவஹரிக்கையாலே, இவள் சுணையற்றவளாகையாலே இவளிருந்தவூரிலும் சுணையற்றமையை ஸித்தவத்கரித்து, அதுல்லாவிட்டால் காய் காயாதென்கிற ப்ரஸித்தியைப்பற்ற ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிறார் (நீயிருந்த இத்யாதி.) இத்தால் - இவளுக்கு லஜ்ஜாசூந்யதையை நிருபகமாகச் சொல்லுகையால் இப்படிசொல்லலாமென்று திருவுள்ளம். (கச)

ஶத்தாலே வளர்ந்த திருக்கைகளை யுடையனுய், ஆழ்வார்களிலே வந்து அலேயெறிகிற கண்களையுடையவனை. "இளவாய்ச்சியர் கண்ணினுள்விடவேசெய்து விழிக்கும்பிரான்" என்று இவர்களைத் தோற்பித்துக்கொள்ளும் கண்ணிறே. "ஆழியொடும்பொன்னார்சார்ங்கமுடைய அடிகளை இன்னரென்றறியேன்" என்று - அநுபவிப்பாரைப் பிச்சேற்றக்கடவ திருவாழியையும், திருமேனிக்குப் பரபாகமான ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும், முற்படத் தன்னை எழுதிக்கொடுத்துப் பின்னை எழுதிக்கொள்ளுகிற திருக்கண்களையு முடையவனை. (பா_)-உன் ப்ரீதிக்குப் போக்குவிட்டு எங்களையும் உஜ்ஜீவிப்பிக்க. க்ருஷ்ணன்கையில் இப்போது ஆழ்வார்களுண்டோ? என்னில்? - எப்போதும் உண்டு; அது பெண்களுக்குத் தோற்றும்; அல்லாதார்க்குத் தோற்ருது. ["உபஸம்ஹர"] "உபஸம்ஹர" (கூடு) என்றதும் உகவாதார்க்குக் கூசியிறே. இவர்களுக்குத் தோற்றத் தட்டிலையே. (கச)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பதினன்காம்பாட்டு. (உங்கள் இத்யாதி.) இப்பாட்டில் பாகவத ஸமுதாயத்துக்கெல்லாம் தாமே கடவராய் இவர்களுக்கெல்லாம் பகவத்ஸம்பந்த கடகர் தாமேயாம்படி ஜ்ஞாந பக்தி வைராக்யங்களாலே பூர்ணரான பாகவதரை எழுப்புகிருர்கள்.

வ்யா.—(உங்கள் புழைக்கடைஇத்யாதி.) ஆகாரத்ரய விஶிஷ்டரான உங்களுடைய விஹாரஸ்தாநமான திருமந்த்ரத்தினுடைய மத்யே வர்த்திக்கிற நமஸ்ஸிலே பாரதந்த்ர்யம் ப்ரகாஶமாய் ஸ்வாதந்த்ர்யம் தலைமடிந்ததுகாண்.

(செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர்) - ராகப்ரயுக்தமான ஶேஷத்வ ஜ்ஞாநமுடைய மந்தஸ்மிதமுடையரான ப்ரபந்நாதிகாரிகள் தங்கள் தங்கள் எம்பெருமான் ஸந்நிதியிலே திருவாராதநம் பண்ணுகைக்குப் போந்தார்கள்.

(எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய் எழுந்திராய்)-எங்களையெல்லாம் நாங்கள்அபேக்ஷிப்பதற்குமுன்னே ஜ்ஞாநிகளாக்கும்படி ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்யும் பூர்த்தியை யுடையவரே! எழுந்திராய். (நாணாதாய்) - சொல்லும் செயலும் ஒத்திராதார்க்கு நாணமுமின்றிக்கே யொழிவதே!. இப்படி என்னை

க்ஷேபித்துக்கொண்டாகிலும் என்பக்கல் ஸாபேக்ஷராய் வருவதே தென்ன; (நாஉடையாய்)-வாங்மாதுர்யமுடையவரே! நீர் அஹ்ருதய மாகச் சொல்லிலும் பேச்சினினிமையைப் பார்த்தால் ஸ்வதஸ்ஸர் வஜ்ஞனன ஈஶ்வரனுக்கும் இது ஸஹ்ருதயம், அவஶ்யம் கர்த் தவ்யம் என்னும்படியா யிருக்கை.

ஜ்ஞாநமுண்டானால் செய்வதென்?என்ன,(சங் கொடு இத்யாதி.)-["ப்ரீத்யா கர்ம ...."] "வாசா ஸ்துதாஹமாயநாதே" என்கிறபடி யே திருவாய்மொழி பாடுகையே ப்ரயோஜநம்; எழுந்திரா யென் கிறார்கள். (கச)

அ.—பதினைந்தாம்பாட்டு. எல்லாருடைய திரட்சியும் காண வேண்டி யிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள்.

மூ.—எல்லேயிளங்கிளியே யின்னமுறங்குதியோ
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்போதர்கின்றேன்
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும்
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக
ஒல்லைநீபோதா யுனக்கென்னவேறுடையை
எல்லாரும்போந்தாரோ போந்தார்போந்தெண்ணிக்கொள்
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை மாயனைப்பாடேலோரெம்பாவாய்.

பதவுரை.—(முன்னம் துயிலுணர்ந்து வந்தவர்கள், எல்லார்திரட்சி யுங் காணவேண்டியிருப்பாளொருத்தியைப் பார்த்து),—'இளம் கிளியே - இளமைதங்கிய கிளிபோன்ற சொற்களையுடையவளே! எல்லே - (உன்பேச்சி னினிமை இருந்தபடி) என்னே! இன்னம் - நாங்கள்வந்து நின்றபின்பும், உறங்குதியோ - தூங்கக்கடவையோ? (என்று எழுப்ப),—'நங்கைமீர் - பூர்ணை களானவர்களே! சில்என்று அழையேன்மின் -சிலுகுசிலுகுஎன்று அழையாதே கொள்ளுங்கள், போதர்கின்றேன் - புறப்பட்டுவருகிறேன், (என்ன),—'உன் கட்டுரைகள் - உன் கட்டிச்சொல்லுஞ் சொற்களைப் பார்த்தால், வல்லை - நீ ஸமர்த்தையாயிருக்கிறாய்; உன்வாய் - உன் வாய் வல்லமையை, பண்டே அறிதும் - முன்னமே அறிவோம், (என்றுசொல்ல),—நீங்களே வல்லீர்கள் - நீங்களே பேசுந்திறமுடையவர்கள்; (அன்றி), நானேதான் ஆயிடுக - நான்தா னே ஆகுக' (என்றுசொல்லி, 'உங்களுக்குச்செய்யவேண்டுவதென்?' என்று வினவ),—'நீ ஒல்லை போதாய் - நீ சடக்கென (ப்புறப்பட்டு எங்கள்திரளில்)

---

பதினஞ்சாம்பாட்டு. (எல்லே இத்யாதி. "எல்லாரும்போந்தாரோ?" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார் (எல்லாருடைய இத்யாதி.)

புகுரவேணும் ; உனக்கு வேறு என்ன உடையை - உனக்கு வேறு என்னப்ரயோஜநத்தை யுடைத்தாயிருக்கிறாய் ?' (என்று தம்ஆற்றாமை தோற்றச் சொல்ல,)—'எல்லாரும் போந்தாரோ-பெண்களெல்லாரும் உணர்ந்து வந்தார்களோ?' (என்று மறுமாற்றமாக வினவ,)— வல் ஆனை கொன்றானை - பலிஷ்டமான குவலயாபீடத்தைக் கொன்றவனாய், மாற்றாரை மாற்று அழிக்க வல்லானை - சத்ருக்களான கம்ஸாதிகளின் ('நம்மை வெல்லவல்லாரில்லை' என்கிற) மதிப்பை அழிக்கைக்கு ஸமர்த்தனாய், மாயனை - பெண்கள் மாயையி லகப்பட்ட ஆஶ்சர்யபூதனானவனை, பாட - பாடுகைக்காக, போந்தார்- (உன்வாசலில்வந்து) கிடந்தார்கள்; போந்து எண்ணிக்கொள் - புறப்பட்டுவந்து எண்ணிக்கொள்ளாய், என்கிறார்கள்.

வ்யா.—(எல்லே இளங்கிளியே) - "சங்கொடு சக்கர மேந்துந் தடக்கையன் பங்கயக்கண்ணானைப் பாட" என்று அசலகத்துப் பெண்பிள்ளையை யெழுப்புகிற பாசுரத்தைக் கேட்டு, இவள் அந்தப் பாசுரத்தைத் தன்மிடற்றிலே யிட்டுப் பாட, எழுப்புகிறவர்கள், அந்தத்வநிவழியே கேட்டுச் சென்று, இவள்பேச்சி லினிமையாலே (எல்லே ! இளங்கிளியே !) என்கிறார்கள். (இளங்கிளியே) - கிளியை வ்யாவர்த்திக்கிறது. கிளி இவள்பேச்சுக்கு ஒப்பா மித்தனை ; பருவத்துக்கு ஒப்பன்றென்கை. (எல்லே) - என்னே ! "எல்லே" என்று – பேச்சிலினிமையாலே ஆஶ்சர்யப்படுகிறார்கள். (இன்னம் உறங்குதியோ) - இவர்களழைக்கிறது தன் அநுஸந்தாநத்துக்கு விக்நமாகையாலே பேசாதே கிடக்க, 'இன்ன முறங்குதியோ' என்கிறார்கள். க்ருஷ்ணவிரஹத்தாலே தளர்ந்து உறக்கமின்றிக்கே உன் கடாக்ஷமே பற்றாசாக நாங்கள் நின்றபின்பும் உறங்குமத்தனையோ? க்ருஷ்ணாநுபவத்துக்கு ஏகாந்தமான காலம் ஸித்தித்திருக்க, உறங்கக்கடவையோ ? என்றுமாம்.

---

உறங்குகிறவளைப் பேச்சிலினிமைகேளாதபோது "கிளியே" என்று ஸம்போதிக்கைக்கு ப்ரஸக்தி யேதென்ன அருளிச்செய்கிறார் (சங்கொடு இத்யாதி.) பேச்சிலினிமையைவிட்டு "கிளியே" என்று ஸம்போதிக்குமிடத்து "இளம்" என்றதுக்கு ப்ரயோஜநமில்லாமையாலே, இளமையுடையளாயும் கிளிபோன்றவளாயுமிருக்குமவளேயென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கிளியைஇத்யாதி.) பேச்சைக்கேட்டு 'கிளி" என்று ஸம்போதித்தவர்கள், "இன்ன முறங்குதியோ" என்னக்கூடுமோ? என்ன; அதுக்குச்சேரத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவர்கள்இத்யாதி.) "இன்னம்" என்றதுக்கு இரண்டுவிதமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

'உத்தேஸ்யம் கைபுகுந்தாலும் உறங்குவாருண்டோ?' என்ன-(சில்லென்று அழையேன்மின்) - தன் அநுஸந்தாநத்துக்கு இவர்களழைக்கிறது விக்நமாகையாலே, சிலுகிடாதே கொள்ளுங்கோளென்கிறாள். 'இவர்கள் வார்த்தை அஸஹ்யமோ?' என்னில்? - திருவாய்மொழி பாடாநின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. (நங்கைமீர் போதர்கின்றேன்)- 'நாங்களும் எங்கள் சொல்லும் பொறுதபடி உன்பூர்த்தி இருந்தபடியென்?' என்ன; சிவிட்கென்னக்கூசி, (நங்கைமீர் போதர்கின்றேன்) - 'நீங்கள் வாய்திறவாதிருக்கவல்லிகோளாகில் நான் புறப்படுகிறேன்' என்ன; -

(வல்லை உன்கட்டுரைகள் பண்டே உன்வாய் அறிதும்) - "நங்கைமீர்" என்று - உறவற்ற சொல்லாலே வெட்டிமை யெல்லாம் சொல்லவல்லையென்னுமிடம் நாங்கள் இன்றாக அறிகிறோமோ? சொல்லிற்றைச் சொல்லி, எங்கள் தலையிலே குற்றமாம்படி வார்த்

---

இவர்களெல்லாரும் தம்வாசலிலே வந்திருக்கையும் க்ருஷ்ணாநுபவத்துக்கு ஏகாந்தம் ஸித்திக்கையும் இவளுக்கு உத்தேச்யமென்று திருவுள்ளம் பற்றி, யோஜநாத்வயத்துக்கும் சேர உக்தார்த்தாநுவாதரூபேண மேலுக்கு ஸங்கதியைக் காட்டுகிறார்(உத்தேஸ்யம்இத்யாதி.) "இன்னமுறங்குதியோ" என்றதுக்கு - "நங்கைமீர்போதர்கின்றேன்" என்று இவ்வளவே சொல்ல வேண்டியிருக்க, மத்யே அநாதரம் தோற்ற "சில்லென்றழையேன்மின்" என்னக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (தன் அநுஸந்தாநத்துக்கு இத்யாதி.) திருவாய்மொழிபாடுகை - திருப்புன்னைக்கீழே. கீழே "சில்லென்றழையேன்மின்" என்று சொல்லிவைத்து, "நங்கைமீர்" என்று பூர்த்தியையிட்டு இவள் ஸம்போதிக்கைக்கு ப்ரஸக்தி அருளிச்செய்கிறார் (நாங்களும் இத்யாதி.) "போதர்கின்றேன்" என்ற அநந்தரம் "என்கிறாள்" என்று சேஷம். நீங்கள் பூர்ணைகளன்றோ? வாய்திறவாதிருந்தால் நானும் எழுந்திருந்து வருகிறேனென்று அநுநயவசநரூபமாகக் கீழுக்குத் தாத்பர்யத்தைச் சொல்லாநின்றுகொண்டு மேலுக்கு அவதாரிகையிடுகிறார் (நீங்கள் இத்யாதி.)

ஸகிகளைக்குறித்து "நங்கைமீர்" என்று பூர்ணதையையிட்டுச் சொல்லுகை உறவற்றசொல்லாகத்திருவுள்ளம்பற்றி, "நங்கைமீர்" இத்யாதி "வாயறிதும்" என்ற அளவுக்கும் தாத்பர்யாந்தரம்அருளிச்செய்கிறார் (நங்கைமீர் இத்யாதி.) வெட்டிமை - நிஷ்டூரம்.உன்னுடைய கட்டுரைகளை-சொற்களைப் பார்த்தால், நீ-, வல்லை - ஸமர்த்தையாகையாலே, உன்வாய் - உன்னுடைய வார்த்தையை, பண்டே அறிதுமென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி "சில்லென்றழையேன்மின்" இத்யாதியை உட்கொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (சொல்லிற்றை இத்யாதி.) 'எங்கள்தலையிலே குற்றமாம்படி' என்றதுக்கு -

தை சொல்லவல்லை யென்னுமிடம் பண்டே யறியோமோ ? என்று மாம்.

(வல்லீர்கள் நீங்களே) - 'இன்னம் உறங்குதியோ என்றும், வல்லையுன்கட்டுரைகள் என்றும் வெட்டிமை உங்களதன்றோ?' என்ன; 'உன்வாசலிலேவந்து எழுப்ப, "சில்லென்றழையேன்மின்" என்றது - உன்னதன்றோ வெட்டிமை?' என்ன; 'அது என்குற்றமன்று, அதுவும் உங்கள் குற்றமே:- நம்முடைய வார்த்தை கேட்க உகக்குமிவள், நம்வார்த்தை அஸஹ்யமாம்படியிறே க்ருஷ்ணகுணங்களிலே அவகாஹித்தது என்று உகக்கவேண்டி யிருக்க, அதிலே தோஷத்தை யேறிட்ட உங்களதன்றோ குற்றம்? அதுகிடக்க; ["[illegible]"] "[illegible]" (கஉசு) என்றன்றோ ஸ்வரூபமிருப்பது; ஆகையாலே, (நானேதான் ஆயிடுக)' - இல்லாத குற்றத்தையும் சிலர் "உண்டு" என்றால், இல்லைசெய்யாதே இசைகையிறே வைஷ்ணவலக்ஷணம். ["[illegible]"] "[illegible]" (சஉஎ) என்று - பிறர் குற்றத்தையும் தன்னுடைய பாபபலம் என்றானிறே ஸ்ரீபரதாழ்வான்.

'உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?' என்ன; - (ஒல்லை நீ போதாய்) - எங்களுக்கு ஒருக்ஷணமும் உன்னையொழியச் செல்லாமையாலே எங்கள் திரளிலே சடக்கெனப் புகுந்துகொடு நில்லாய்.

---

நாங்கள் சிலிட்கொள்றதாய் நீ கூசி அநுபயம்பண்ணி நல்லவார்த்தைசொல்ல ஸமர்த்தை என்று கருத்து.

ஏவகாரம்தவிர "வல்லீர்கள் நீங்கள்" என்றதுக்குப் பாவம் அருளிச்செய்கிறார் (இன்னம் இத்யாதி.) ஏவகாரத்துக்கு -நான் வல்லையன்று என்று அர்த்தஸித்தமாகையாலே, இதுக்கு ப்ரஸக்தியை அருளிச்செய்யாநின்றுகொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உன்வாசலிலே இத்யாதி வாக்யத்வயத்தாலே.) "உங்கள்குற்றமே" என்றத்தை உபபாதிக்கிறார் (நம்முடைய இத்யாதி.) மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அது கிடக்க இத்யாதி.) ஸ்வரூபத்தையுணர்ந்தால் இல்லாத குற்றத்தையும் அங்கீகரிக்கவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இல்லாதஇத்யாதி.) "நானேதானாயிடுக" என்று பிறர்பக்கல் குற்றத்தை இல்லைசெய்து, தன்மேலே யாக்கிக்கொண்டபேர் உண்டோ? என்ன; அருளிச்செய்கிறார் (மத்பாபம் இத்யாதி.)

"ஒல்லை" என்றதின் அர்த்தம் 'சடக்கென' என்றது. இவர்களைப்போலே அவளுக்கும் செல்லாமை யுண்டானாலிறே சடக்கென வரக்கூடுமென்ன; அரு

“சாதுகோட்டியுட் கொள்ளப்படுவாரே” என்று -அவளுக்கும் இத்திரளேயிறே ப்ராப்யம். (உனக்கென்ன வேறுடையை) — பஞ்சலக்ஷங்குடியில்பெண்களுக்குஉள்ளதொழிய, தனியே ஸ்வயம்பாகம் பண்ணுவாரைப்போலே உனக்கு வேறே சிலஉண்டோ? வைஷ்ணவ விஷயத்தைப் பஹிஷ்கரித்துப் பற்றும் பகவத்விஷயத்தோடு தேவதாந்தரத்தோடு வாசியில்லை; “நீ ஒருவர்க்கும் விரோதியல்லை; நீ புக்குத் திருவடிதொழு” என்ற ஆழ்வான்வார்த்தையை நினைப்பது.

(எல்லாரும் போந்தாரோ) - எனக்கு உங்களை யொழிய ஸுகமுண்டோ? உணர அறியாத சிறு பெண்களும் உணர்ந்தால் புறப்பட விருந்தேன்; எல்லாரும் போந்தாரோ? என்ன; (போந்தார்) - க்ருஷ்ண விரஹத்தாலே துவண்ட பெண்களுடைய உன்னைக் காண்கைக்கு உன்வாசலிலே வந்து கிடந்தார்களென்ன; ஆகில், உள்ளே புகுரவிடுங்கோ ளென்ன; - (போந் தெண்ணிக்கொள்) - புறப்பட்டு மெய்க்காட்டுக் கொள். மெய்க்காட்டுக்கொள்ளுகைக்கு ப்ரயோஜநம் தனித்தனியே பார்க்கையும், அநுபவிக்கையும்.

நாமெல்லாரும் கூடினால் செய்வதென்? என்ன,—(வல்லானை கொன்றானை)-குவலயாபீடத்தைக் கொன்று நம் ஜீவநமான தன்னை நோக்கித் தந்தவனை. (மாற்றாரை மாற்றழிக்க வல்லானை)-எதிரிட்ட

---

ளிச்செய்கிறார் (சாதுஇத்யாதி.) இவளுக்குத் தனியே க்ருஷ்ணாநுபவ மில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார்(வைஷ்ணவ இத்யாதி.) ஆழ்வான் வார்த்தையாவது - எம்பெருமானார் ஸம்பந்திகளை “ கோயிலுக்குள்ளே புகுரவொண்ணாது” என்ன; ‘ எம்பெருமானார் ஸம்பந்தமே போரும்” என்று திரும்பிச் சொன்ன வார்த்தை.

“உனக்கு என்ன வேறு உடையை” என்றத்தால் - தன்னிடத்தில் ஸ்வாதந்த்ரியத்தை ஏறிடுகையாலே அஞ்சினமைதோன்றப் பாவம் அருளிச் செய்கிறார் (எனக்கு உங்களை இத்யாதி.) மெய்க்காட்டுக்கொள் - எண்ணிக்கை பிடித்துக்கொள் என்றபடி. ‘அநுபவிக்கையும்’ என்றது - ஸம்ஶ்லேஷித்து அநுபவிக்கையும் என்றபடி.

வலியதாய் - பலிஷ்டமாயிருக்கிற, ஆனை யென்றாய், அத்தைக் கொல்லுகை குணமாம்படி தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (குவலயஇத்யாதி.) “மாற்று” என்று - பொன்னினுடைய வர்ணோத்கர்ஷமாய், இங்கே பலாதிஶயத்தைச் சொல்லுகையாலே, மாற்றாரைப் பலம்போக்கும் மிடுக்கனை யென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றிப் பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (எதிரிட்டஇத்யாதி.) கீழைக் கடாக்ஷித்துப் பாவம் அருளிசசெய்கிறார்

கம்ஸாதிகளை அநாயாஸேந நரசிப்பித்து, ["నసమం యుద్ధమిత్యూచుః"] "நஸமம் யுத்தமித்யூசு:" (கஉ-அ) என்று அஞ்சின பெண்களை வாழ்வித்தவனை. (மாயனை) - தன்கையில் அவர்கள் படுமத்தைத் தான் பெண்கள் கையிலே படுமவனை. (வல்லானை கொன்றானை) - அங்கே குவலயாபீடத்தைக் கொன்றாற் போலே நம்முடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தைப் போக்கினவனை. (மாற்றாரை மாற்றழிக்க வல்லானை) - சாணூர முஷ்டிகாதிகளை நிரஸித்தாற் போலே, நம்மைத் தன்னோடு சேர வொட்டாத இடையருடைய ஸங்கல்பத்தைப் போக்கினவனை. (மாயனை) - எதிரிகளைத் தான் தோற்பிக்குமா போலே நங்கையிலே தோற்ற ஆஶ்சர்யபூதனை. (பாட) - நமக்கு அவன் தோற்குந் தோல்விக்குத் தோற்றுப் பாட. (க௫)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ—பதினஞ்சாம்பாட்டு. (எல்லே யித்யாதி). இப்பாட்டில் பாகவத கோஷ்டியைக் காண ஆசைப்பட்டிருப்பா ரொருவரை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(எல்லே) - அசலகத்துப் பிள்ளையை எழுப்புகிறவர்கள், "சங்கொடு சக்கரம்" இத்யாதியைப் பாட, அப்பாசுரத்தைத் தன் மிடற்றிலே வைத்துப் பாடுகையாலே, அது தானும் இவர்களுக்கு அத்யந்தம் ஆகர்ஷகமா யிருக்கையாலே, அவரைக் கொண்டாடுவதற்கு முன்பு "எல்லே!" என்று - ஆஶ்சர்யப் படுகிறார்கள். (இளங்கிளியே)-கிளி பேச்சுக்கு ஒப்பாமத்தனையல்லது பருவத்துக்கு ஒப்பாமோ? இவ்விடத்தில், பருவமென்பது - அபிநிவேசத்தை; அவற்றுக்கு அபிநிவேச பூர்வகமாக வார்த்தை சொல்லவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லையிறே. (இன்னம் உறங்குதியோ) - நாங்களனைவரும் வந்த பின்பும் உறங்கக் கடவையோ?

---

(தன்கையில் இத்யாதி.) அதாவது - தன் கையில் எதிரிகள் படுபவற்றையெல்லாம் பெண்கள் கையிலே தான் பட்டு, பெண்களுக்குத் தான் தோற்ற தோல்வியாலே அவர்களை வென்றிருக்குமவனென்கை. "வல்லானை" இத்யாதிக்கெல்லாம் தாத்பர்யார்த்தரங்களை அருளிச் செய்கிறார் (அங்கே இத்யாதி.) "வல்லானை" இத்யாதிக்கெல்லாம் சொன்ன இரண்டு பாவத்தையும் திருவுள்ளம்பற்றி, "பாட" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (நமக்கு இத்யாதி.) "பாடப்போந்தார்" என்று அந்வயம் கண்டு கொள்வது.

(சில்லென்று அழையேன்மின்) - இப்படி அவர்களழைக்கை ஸ்வாநுபவவிரோதி யாகையாலே, "சில்லென்றழையேன்மின்" என்கிறார். (நங்கைமீர் போதருகின்றேன்) - 'நாங்களும் நம்பேச்சும் போராதபடி உன் பூர்த்தி என்?' என்ன, 'நம்பாசுரத்தை மிடற்றிலே வைத்துப் பாடுகிற இவ்வநுபவத்துக்கு விரோதம் பண்ணலாகாதே யென்று எழுப்பாதே யிருக்க வேண்டியிருக்க, அது பொறாதே யெழுப்புகிற நீங்களன்றோ பூர்ணைகள்? நீங்கள் வெறுமனே யிருந்தி கோளாகில் நான் புறப்பட்டு வருகிறேன்' என்ன ;

(வல்லை உன்கட்டுரைகள்)-நீர் கட்டுவார்த்தை சொல்ல ஸமர்த்தர். (பண்டே உன் வாயறிதும்) - இவ்வர்த்தம் முன்பே உன் பாசுரங்களாலே அறிவோம். (வல்லீர்கள் நீங்களே) - உங்கள் பாசுரத்தை யநுபவிக்கிற என்னுடைய அநுபவத்துக்கு விரோதத்தைப் பண்ணி, அதுக்குமேலே என்மேலே பழியாம்படி வார்த்தை சொல்ல வல்ல நீங்களன்றோ ஸமர்த்தர்கள்?' என்ன; (நானேதான் ஆயிடுக) - பாகவத சேஷத்வம் ஸ்வரூபமானால் அவர்களிடும் பழியும் தம்மேலேறிட்டுக்கொள்ளுகை ஸ்வரூபமன்றோ; ஆகையாலே, நானே அபராதியாயிடுக.

(ஒல்லை நீ போதாய்) - இப்படி பழியைத் தம்மேலே ஏறிட்டுக் கொண்ட இவரை, சடக்கென இக்கோஷ்டியிலே ப்ரவேசியாய் என்கிறார்கள் (உனக்கென்ன வேறுடையை) - உனக்கென்று ப்ருதக்கான பகவத்குணாநுபவம் என்? நாம் புறப்படுகைக்கு எல்லாரும் போந்தாரோ? என்ன; (போந்தார் போந்தெண்ணிக்கொள்) - எல்லாரும் போந்தார்கள்; நீயும் இக்கோஷ்டியிலே ப்ரவேசித்து மெய்க் காட்டிக்கொள்.

புறப்பட்டுச் செய்யவேண்டியது என்? என்ன,—(வல்லானை இத்யாதி.)-ஸ்வயத்நத்தால் கடக்க அரிதாய் ப்ராயஶ்சித்தவிநாஶ்யமுமின்றிக்கே யிருக்கிற அஹங்கார நிவர்த்தகனாய் மற்றுமுள்ள காம க்ரோதாதிகளுக்கும் நிவாரகனாய் ஆஶ்ரிதபரதந்த்ரனைப்பாட, ஒல்லை நீபோதாய் இத்யந்வயம். (கரு)

---

பதினாறாம்பாட்டு. (நாயகன் இத்யாதி.) முதலஞ்சுபாட்டாலே - பகவதநுபவோபகரணங்களை அருளிச்செய்து, எழுப்புகிற பத்துப்பாட்டிலும் வைத்துக்கொண்டு, முதல்பாட்டில் - பகவதேக ஹோகரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் அநந்ய ப்ரயோஜநராய் இவ்விஷயத்தில் தேஶிகரன்றிக்கே யிருப்

அ.—பதினாறும்பாட்டு. கீழில் பத்துப்பாட்டாலும் - முற்பட வுணர்ந்தவர்கள் உறங்குகிறவர்களை யெழுப்ப, எல்லாருங் கூடி வந்து ஸ்ரீநந்தகோபர்திருமாளிகையிலே சென்று கோயில்காப்பானையும் திருவாசல்காப்பானையும் எழுப்புகிறார்கள். "செய்யாதன செய்யோம்" என்று பண்ணின ப்ரதிஜ்ஞையை அனுஷ்டாநபர்யந்த

---

பாரை அவர்கள்பக்கல் பரிவாலே தேபரிக ராக்ஷகை - தங்களுக்கு க்ருத்யமென்றிருக்கை - ஸ்ரீ வைஷ்ணவத்வலக்ஷணமென்று அவர்கள் ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது; இரண்டாம்பாட்டில் - பகவத்விஷயத்தில் ஜ்ஞாதமான அர்த்தம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால், தங்கள் பரிவாலே, ["போ⁴த⁴யந்த꞉ பரஸ்பரம்"] "வொாயயஷ்வரவஊரஃ" என்கிறபடியே அறிவிக்கை - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; மூன்றாம் பாட்டில்-பகவதநுபவத்தில் ப்ரத்யாஸந்நராய் இருப்பாரைக் குறித்து ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈஸ்வரனைப்பற்றுகையும் - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; நாலாம்பாட்டில்-[தத்³த்³ருஷ்ட்வா ஸத்³ருஶம் ப⁴வேத்] "ததஷஹஊஹஊஹவெஷ" என்று - பூர்வார்த்தநிஷ்டராயிருப்பாரை பகவத்ப்ரேமாதிசயத்தாலே ததீயபோகராயிருப்பார் போகார்த்தமாக ப்ரேரிக்கை - ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; அஞ்சாம்பாட்டில் - ["ஜ்ஞானீ த்வாத்மைவ மே மதம்"] ஜ்ஞாநீசுவாத்மைவமெ மதழ் என்றும், ["அஹம் ஸ ச மம ப்ரிய꞉"] "அஹம்ஸசமமப்ரியஃ" என்றும் அவன் பக்ஷபதித்திருப்பார்திறத்து நித்யஸாபேக்ஷராயிருக்கை-ஸ்வரூபம் என்கிறது; ஆறாம்பாட்டில் - பகவத்ஸம்பந்தம் விச்சேதியாதே போந்த ஆசார்யஸந்தாந ப்ரஸூதர் நமக்குப் பூஜ்யர்; அவர்களடியாக பகவத்ஸமாஸ்ரயணம் பண்ணுகையும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; ஏழாம்பாட்டில் - பகவத் விஸ்லேஷம் அஸஹ்யமாம்படி அவகாஹித்தவர்கள் நமக்கு உத்தேஸ்யராமளவன்றிக்கே, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளும் உத்தேஸ்யரென்றிருக்கை - ஸ்வரூபம் என்கிறது; எட்டாம்பாட்டில் - பகவதநுபவபரிகரமான ஜ்ஞாந வைராக்ய பக்திகளால் பூர்ணராயிருப்பார் திறத்து ததர்த்தமாக ஸ்ரீ வைஷ்ணவர் ஸாபேக்ஷராயிருக்கை - ஸ்வரூபம் என்கிறது; ஒன்பதாம்பாட்டில் - பகவத் விஷயத்தில் மூட்டுகையிலே அதிகரித்த நிர்வாஹகர் முன்னாக பகவதநுபவம் பண்ணுகை - ஸ்வரூபம் என்கிறது; பத்தாம்பாட்டில் - ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸமூஹம் அபிமதமாயிருக்குமவர்களைக் கண்டால் அந்த ஸமூஹமாக, அவர்களையுகக்கை ஸ்வரூபம் என்கிறது" என்று ஆறாயிரப்படியிலே அருளிச்செய்த ஸ்வாபதேஸத்தைக் கண்டு கொள்வது. ஆக, கீழ்ப்பத்துப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் பேடிகாஸங்கதியை அருளிச் செய்கிறார் (கீழ்இத்யாதி.) கோயில்காப்பானாயிருக்கும் திரு

மாக்கவேணுமே. ததீயரை முன்னிட்டுப் பற்றாத அன்று முறை தப்பின சூர்ப்பணகை பட்டது படுமத்தனை. "வல்லபரிசு வருவிப் பரே லதுகாண்டும்" என்னும் பெரியாழ்வார் திருமகளிறே இவள்.

மூ.—நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே! கொடித்தோன்றுந்தோரண
வாசல்காப்பானே! மணிக்கதவந் தாள்திறவாய்
ஆயர்சிறுமியரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்
தூயோமாய்வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதேயம்மா! நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய்.

**பதவுரை.**—(உணர்ந்து திரண்ட எல்லாரும் சென்று வாயில் காப்பானைநோக்கி),—'நாயகனாய்நின்ற - எங்களுக்கு ஸ்வாமியாயிருக்கிற, நந்தகோபனுடைய - ஸ்ரீநந்தகோபருடைய, கோயில்காப்பானே - திருமாளிகையைக் காக்குமவனே! (உள்ளே புகுரவிடவேணும்' என்ன; அவன் கண்ணாலே "போங்கோள்" என்று சைகைகாட்டிநிற்க; இரண்டாம்வாசலளவும்சென்று, அங்கு உள்ள வாயில்காப்பானைப் பார்த்து),—'கொடித்தோன்றும் - துகிற்கொடிகள் விளங்காநிற்பதாய், தோரணம் - தோரணங்கள் கட்டியிருப்பதான, வாசல் - திருவாசலை, காப்பானே - காக்குமவனே! மணிக் கதவம் தாள் - அழகிய கதவின் தாழ்ப்பாளை, திறவாய் - திறந்து எங்களை உள்ளேபுகுர விடவேணும்' (என்ன, 'நீங்கள் வஞ்சகைகளாயிருப்பீர்கள், உங்களைப்புகுரவிடப் பயமாயிராநின்றது' என்ன),—ஆயர் சிறுமியரோமுக்கு - இடையர் வயிற்றிற்பிறந்த சிறுபெண்களான எங்களுக்கு, மாயன் - ஆச்சரியசேஷ்டிதங்களையுடையவனும், மணிவண்ணன்-நீலமணிபோன்ற திருநிறத்தையுடையவனுமான ஸர்வேசுவரன், அறைபறை-சப்தியாநின்றுள்ள பறையை, நென்னலே - நேற்றே, வாய்நேர்ந்தான்-(தருகிறேமென்று) திருவாய்மலர்ந்தருளினான் (என்றுசொல்ல,—'ஆகிலும், நீங்கள் ப்ரயோஜநாந்தரபரைகளன்றோ' என்று அவன் வினவ),—துயில் எழ-தூக்கத்தைவிட்டு அவனெழுந்திருக்கும்

---

வாசல்காப்பானை எழுப்புகிறார்களென்றும் ஓர் அவதாரிகை கண்டுகொள்வது. முன்பு பெண்களிடங்களிலே போய் அவரவரைப் பேரைச்சொல்லி எழுப்பினாற்போலே, இங்கும் நோன்புக்கு வந்து எழுப்புங்கோளென்று சொல்லிப் போந்த க்ருஷ்ணன் பேரைச்சொல்லிக் கூப்பிட வேண்டியிருக்க, இவர்களையழைக்கிற தென்?' என்ன; அருளிச்செய்கிறார் (செய்யாதன இத்யாதி.) 'பெரியாழ்வார் திருமகளிறே இவள்' என்றதுக்கு - ஆண்டாளே இத்தனை கோபிமாராகப் பாவித்திருக்கையாலே இங்ஙன் சொல்லலாமென்று கருத்து

படி, பாடுவான் - திருப்பள்ளியெழுச்சிபாடுகைக்கு, தூயோம் ஆய் வந்தோம் - அநந்யப்ரயோஜநராய் நாங்கள் வந்திருக்கிறோம்; அம்மா - ஸ்வாமீ! முன்னம் முன்னம் - முதல் முதலில், வாயால் - உன்வார்பாலே, மாற்றாதே - மறுக்காதொழியவேணும்; (அன்றியும்), நேசம் நிலை - சேர்ந்திருக்கிற வாசற்படியையுடைய, கதவம் - கதவை, நீ நீக்கு - நீயே திறக்கவேணும்' என்கிறார்கள்.

**வ்யா.**—(நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய கோயில்காப்பானே) - ஸ்ரீநந்தகோபர் திருமாளிகைக்குக் காவலாய் எங்களுக்கு நிர்வாஹகனானவனே! "நாயகன்" என்று - ஸ்ரீநந்தகோபரைச் சொல்லிற்றாகவுமாம். 'இவர்களால்பெறுமவனன்றோ நாயகனாவான், இவனை "நாயகன்" என்கிறது என்?' என்ன; ["పాపిష్ఠః క్షత్రబన్ధుశ్చ పుణ్డరీకశ్చ పుణ్యకృత్ । ఆచార్యవత్తయా ముక్తౌ తస్మాదాచార్యవాన్భవేత్"] வாவிஷ்ணுக்ஷத்ர ப்ரூணஶ்ச பாஞ்சாலீகஶ்ச பாண்ட்யக்ருத:। ஸுவாஸ்வ ஸ்தயா ஜ்ஞைத்தஸ்வாஸ்ஸ வாஸ்வாநுஹவேத:" (ருஉக) என்று-பலஸித்தி ஆசார்யனாலே யாகையாலே, உபகாரகனை "நாயகன்" என்கிறார்கள்; ப்ரதாநசேஷியிற்காட்டில் த்வாரசேஷிகளே எங்களுக்கு சேஷிகளென்கிறார்கள். (நந்தகோபனுடைய கோயில்) - நாங்கள் ஆஶ்ரயிக்கிறவன் பரதந்த்ரன்; தங்களை சேஷிகளாகவைக்க இசைவாரோடே கலந்து பரிமாறவிறே இவன் இங்குவந்து அவதரித்தது. "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ" என்று - பரமபதத்திலும் தான் பரதந்த்ரனாய் அவர்களிட்ட வழக்காயிறேயிருப்பது. (கோயில்காப்பானே) - சிறுபெண்களாகையாலே, அவன் தொழிலையிட்டுச் சொல்லுகிறார்கள். "இன்னது பிடிப்பான்" என்னுமாபோலே; அவனும் உகக்கும்படியாலே சொல்லுகிறார்களாகவு

---

"நாயகனாய் நின்றவனே! நந்தகோபனுடைய கோயில்காப்பானே!" என்று சப்தார்த்தம் விவக்ஷித்து, நாயகனாகைக்கும் கோயில்காப்பானாகைக்கும் ஹேதுவாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸ்ரீநந்தகோபர் இத்யாதி.) இவர்களால் பெறுமவன் என்றது - இப்பெண்களால் பெறப்படுமவனான க்ருஷ்ணன் என்றபடி. ஆசார்யனைப்போலே உபகாரகத்வேந உபசரித்து "நாயகன்" என்றார்களென்று ஒரு பரிஹாரம் அருளிச்செய்து, சேஷித்வத்தைப்பற்றச்சொல்லுகிறார்களென்று பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரதாநேத்யாதி.) ஸ்வாபதேசத்தில், த்வாரசேஷிகள் - ததீயர். நீங்கள், "க்ருஷ்ணன்கோயில்" என்னாதே "நந்தகோபன்கோயில்" என்கிறது என்னென்ன; அருளிச்செய்கிறார்கள் (நாங்கள் இத்யாதி.) பேரையிட்டழையாதே "கோயில்காப்பான்" என்றதுக்கு இரண்டுவிதமாகத் தாத்பர்யம் அருளிச்

மாம். இத்தால் - ஶேஷவ்ருத்தி ப்ரயுக்தமான பேரே இவ்வாத்மாவுக்குப் பேர் என்னுமிடம் தோற்றுகிறது. ["யதோசிதம் ஶேஷ இதீரிதேஜநை:"] "யதோசிதம்ஶேஷ இதீரிதேஜநை:" (கரு௦) என்னக்கடவதிறே.

(கொடித்தோன்றும் தோரணவாசல் காப்பானே) - அவன் கண்ணாலே "போங்கோள்" என்று சொல்ல, திருவாசல் காக்கிறவனை வந்து எழுப்புகிறார்கள். "கோயில் காப்பான்" என்று - அங்குத்தைக்கும் நிர்வாஹகனாய், அவன் தன்னையே கொடித்தோன்றும் தோரணவாசல்காப்பானென்னவுமாம். க்ஷேத்ராத்பதிதன்னை, "கோயில் காப்பான்" என்று, வேறே திருவாசல் காப்பானைச் சொல்லிற்றாகவுமாம். 'ஆர் விக்நம்பண்ணுகிறார்களோ?' என்று பயப்பட்டு எல்லார் கால்களிலும் விழுகிறார்கள். (கொடித்தோன்றும் தோரணவாசல் காப்பானே) - ஆர்த்த ரக்ஷணைத்துக்குக் கொடிகட்டித் தோரணமும் நட்டுவைத்தாற்போலே, பெண்கள் தடுமாற்றம்தீர முகம் தருகைக்கு அன்றோ உன்னை இங்கு வைத்தது?

(மணிக் கதவம் தாள்திறவாய்) - "பொன்னியலும் மாடக் கவாடம் கடந்துபுக்கு" என்னுமாபோலே, புகுவாரைத் தன்னழகாலே காற்கட்டும் கதவினுடைய தாள்திறவாய். திருவாசலுக்குள் புகுவாரைக் காற்கட்டும் இது; அவன் புக்காரைப் புறப்படாதபடி காற்கட்டும் தன்னழகாலே.

"தாள் திறவாய்" என்றவாறே, அவன், 'பயமுள்ள தேஶத்திலே மத்யராத்ரத்திலே வந்து நிற்க அழைக்கிற நீங்கள் ஆர்?' என்ன'

---

செய்கிறார் (சிறுபெண்கள் இத்யாதி.) இரண்டு தாத்பர்யத்துக்கும்சேர ஸ்வாபதேஶத்திலே பலிப்பிக்கிறார் (இத்தால் இத்யாதி.)

அங்குத்தைக்கும் நிர்வாஹகனா யென்றது - வாசலுக்கும் காப்பானே யென்றபடி. 'கோயில் என்றது - திவ்யதேஶவாசியாக விவக்ஷித்து, மூன்றும் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ஷேத்ரேத்யாதி.) திருவாசல் காக்குமவரை அநுமதிகொண்டால் அமையாதோ? இப்படி இவர்களை யழைப்பானென்னை? என்ன,—(ஆரித்யாதி.)

கதவு கால்கட்டுகையை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார் (திருவாசலுக்குள் இத்யாதி.)

"எங்களுக்கு வாய்நேர்ந்தான்" என்ன அமைந்திருக்க, "சிறுமியர்" என்கிறவிடத்தில் - ஸ்த்ரீத்வம் சொல்லுகைக்கும், "ஆயர்" என்று - இடையர் ஸம்பந்தம் சொல்லுகைக்கும், "சிறுமியர்" என்று - பால்யம் சொல்லுகைக்

[“ஹயாநாஃவஷ்ஹாரி”] “ஹயா நாஃவஹாரி” (கசுக) இருந்தவிடத்தில் பயம் என்?’ என்ன ; காலம் த்ரேதாயுகமாய், தமப்பனார் ஸம்பராந்த கனுமாய், பிள்ளைகள்தாங்களும் ஆண்புலிகளாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளாய், ஊரும் திருவயோத்யையாய்ப் பயமற்றிருக் கிறதோ? காலம் கலிக்குத் தோள்தீண்டியான த்வாபராந்தம். தமப் பனார் ஸாது, ஸ்ரீநந்தகோபர் ; இவர்கள் சிறுபிள்ளைகள், அதுக்கு மேலே தீம்பர்கள் ; ஊர் இடைச்சேரி ; கம்ஸன் ஸத்ரு, எழும் பூண்டுகளெல்லாம் அஸுரப்பூண்டுகள்; பயங் கெட்டிருக்கலாமோ? என்ன; ‘பெண்களுக்குப்பயப்படவேணுமோ?’ என்ன, ‘ஸூர்ப்பண கை பெண்ணன்றோ?’ என்ன ; ‘அவள் ராக்ஷஸி, நாங்கள் * ஆயர் சிறுமியர் ; இவனுக்கு என்வருகிறதோ! என்று வயிறுபிடிக்கும் இடையர்க்குப் பிறந்தவர்களன்றோ?’ என்ன ; ‘பூதனைக்குப் பின்பு இடைச்சிகளுக்கன்றோ பயப்படவேண்டுகிறது?’ என்ன; (ஆயர் சிறு மியரோமுக்கு) – க்ரித்ரிமமறியாத சிறுபெண்க ளென்ன ;

‘வார்த்தையிலே அறியலாம், வந்த கார்யத்தைச் சொல்லுங் கோள்’ என்ன ; (அறைபறை) - நோன்புக்குப் பறைவேண்டி வந் தோமென்ன, ‘அதுவாகில் திருப்பள்ளியுணர்ந்தால் விண்ணப்பம் செய்கிறோம், அவ்வளவும் நில்லுங்கோள்’ என்ன; (மாயன் இத்யாதி.)- நீ இன்று அறிவிக்க வேண்டாதபடி நென்னேற்றே சொல்லிப் போந்தான். (மாயன்) - பெண்கள்கோஷ்டியில் தாழ நின்று பரிமா றினபடி. (மணிவண்ணன்) - தாழநில்லாவிடிலும் விடவொண்ணாத வடிவழகு; பூஅலர்ந்தாற்போல வார்த்தைசொல்லுகிறபோதைஓஷ்ட ஸ்புரண மென்னவுமாம் ; [“வாக்மீ ஸ்ரீமாந்”] “வாக்மீ ஸ்ரீமாநு”

---

கும் ப்ரஸ்ந ப்ரதிவசநமுகேந பாவம் அருளிச்செய்கிறார் (தாள்திறவாய் இத்யாதி.)

மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (வார்த்தையிலே இத்யாதி.) அறைதல் - சப்திக்கையாய், அப்படிப்பட்ட பறையென்று சப்தார்த்தம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நோன்புக்குஇத்யாதி.) நீலமணிபோன்ற வடிவுடையவனென்று சப்தார்த்தமாய் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, ‘வாய்நேர்ந்தான்’ என்றதைக் கடாக்ஷித்து, மணி - பத்ம ராகமாய், வண்ணம் - அதரத்தின் வர்ணமாய், தாத்பர்யாந்தரம் அருளிச் செய்கிறார் (பூஇத்யாதி.) ஸ்புரணம் - ப்ரகாசம். வார்த்தை சொல்லும் போதைத் திருவதரத்தில் சிவப்பை “ஸ்ரீமாந்” என்றது என்று திருவுள்ளம் பற்றி ப்ரமாணங் காட்டுகிறார் (வாக்மீ இத்யாதி.) [“புத்திமாந் நீதிமாந் வாக்மீ

(கஈ௨). (நென்னலே) - உன்காலைப் பிடிக்கவேண்டுகிற இன்று போலேயோ, அவன் காலைப் பிடிக்க இருந்த நென்னேற்றும்; ஒரு நாளே! என்கிறார்கள். (வாய்நேர்ந்தான்) - ' ஓலக்கத்திலே ஒரு வார்த்தை சொன்னானாகில் மெய்யாக வேணுமோ? ' என்ன; [''க்ருஷ்ணே!...''] ''க்ருஷ்ணே! நஜைஜோவம்வெள வெசு'' (கஈஈ) என்று ஒருத்திக்குச் சொன்ன வார்த்தை அவள் விஷயத்தில் பழுதாய்த்த தாகிலன்றோ இவ்வார்த்தையும் பழுதாவ தென்ன:—

'சொன்னானே யாகிலும் நீங்கள் ப்ரயோஜநாந்தரபரைக ளன்றோ?' என்ன; (தூயோமாய் வந்தோம்)- ''பறை'' என்று - ஒரு வ்யாஜம், அநந்யப்ரயோஜனைகள் நாங்கள். அதாவது - அவனுக்கு மங்களாஶாஸநம் பண்ணுமதொழியத் தங்களுக்கு ஒன்றின்றிக்கே யிருக்கை. (வந்தோம்) - அவன் செய்வதை நாங்கள் செய்தோ மென்கை. 'நீங்கள் அநந்யப்ரயோஜனைகளென்கைக்கு அடையாளம் என்?' என்ன; (துயிலெழ பாடுவான்) - திருப்பள்ளியெழுச்சி பாட வந்தோம். [''...''] ''ஸஜயா வொயிதஸ்ரீஶாநு ஸுவஸுவுவாநுவ:'' (கஈச) என்று - பிராட்டி உறங்குகிறபடியைக் கண்டு உகந்தாள், இவர்கள் இவனு ணரும்படியைக் காண ஆசைப்படுகிறார்கள்.

'அங்ஙனேயாகில், திறக்கிறேன் நில்லுங்கோள்' என்ன; (வாயால் முன்னமுன் னம் மாற்றாதே) - எங்களை முற்படநிஷேதியாதொழிய வேணும்; நெஞ்சால் நினைத்தா யாகிலும் வாயாலே நிஷேதியா தொழியவேணும். உன் கையதுகிடாய் இவர்களுக்கு; அவன் கைய

[''...''] ''ஸுஜிஶாநுநீதிஶாநுவா ஸ்ரீஶ்ரீ ஶாநுஶத நிவாஹணா:'' என்று வசநசேஷம். ''நென்னல்'' என்ன அமைந் திருக்க, ''நென்னலே'' என்ற ஏகாரத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உன்காலை இத்யாதி.) ''சொன்னான்'' என்னாதே ''வாய்நேர்ந்தான்'' என்ற தாலே ச்லாக்யதை தோன்றுகையாலே அதுக்குப் பாவத்தை அருளிச்செய் கிறார் (ஓலக்கத்திலே இத்யாதி.) ஒருத்திக்கு - த்ரௌபதிக்கு.

பிராட்டியைப்போலே உறங்குகிற போதையில் அழகிலே ஈடுபட்டிருக்க வேண்டியிருக்க, திருப்பள்ளியெழுச்சிபாட வரக்கூடுமோ? என்ன, அருளிச் செய்கிறார் (ஸமயேத்யாதி.)

நெஞ்சிலே நிஷேதிக்கையை நினைத்து நில்லுங்கோளென்றதாகத் திரு வுள்ளம் பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி.) ''முன்ன

திறே வாணள். [ "வத்ஸ தாம்"] 'வயநாத்ய'" (கஉரு) என்றவர் தாமே, [ "ஶ்ஸ்த்ரவ்ருத்த்யா"] "அஷாவிஷ்டாதெய்காவத்"" (கஉகூ) என்ற பின்பிறே அவன் ஸத்தை பெற்றது. (அம்மா) - பச்சையிடுகிறார்கள். 'உள்ளிருக்கிறவனோ நாதன்? நீ யல்லையோ?' என்ன; 'தாளையுருவிக்கதவைத்தள்ளிக்கொடுபுகுருங்கோள்' என்ன,

(நீ நேசநிலைக்கதவம் நீக்கு)-'அது உன்னிலும் பரிவுடைத்தான கதவு; எங்களால் தள்ளப்போகாது: நீயே திறக்கவேணும்' என்கிறார்கள். சேதநாசேதநவிபாகமின்றியே, இவ்வூரிலுள்ளதெல்லாம் அநுகூலமாயிருக்கிறபடி; கம்ஸன்படைவீட்டில் எல்லாம் ப்ரதிகூலமாயிருக்குமா போலே. (நேசநிலைக்கதவம்) - செறிந்திருக்கிற கதவையும் நிலையையும். (நீக்கு) - நீயே வந்து திறக்கவேணும். (கசு)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பதினாறாம்பாட்டு. (நாயகனாய் இத்யாதி.) இப்பாட்டில் - முன்பு உணர்த்தினவர்களும் உணர்ந்தவர்களும் எல்லாரும் கூடிப் பகவதநுபவத்துக்குத் தேஶிகனான ஆசார்யன் திருமாளிகையிலே புக்கு, அங்குக் கோயில்காப்பானையும் திருவாசல்காப்பானையும் எழுப்புகிறார்கள். ஆசார்ய ஸம்பந்த கடகரை முன்னிட்டு ஆசார்யனைத் தொழுகையும் பெரியோர்செயலிறே

வ்யா.—(நாயகனாய்நின்ற) - தன்னுடைய ஶேஷித்வம் ஸித்திக்கைக்காகத் தனக்குப் புறம்பாயிருப்பான் ஒரு ஶேஷியைத் தேடிப் போகவேண்டியிருக்கையன்றிக்கே, தானே ஶேஷித்வகாஷ்டையிலே நிற்கிற. (நந்தகோபனுடைய) - பகவதநுபவ ஜநித ஆநந்த நிர்ப்பரனாய் ஸம்ஸ்ரீதரக்ஷகனான ஆசார்யனுடைய. (கோயில்காப்பானே) - கோயிலுண்டு - அவனுக்கு ப்ரதிபாதகத்வேந இருப்பிடமான திருமந்த்ரம்; அத்தை அநதிகாரிகள் செவிப்படுத்தாதபடி ரக்ஷிக்குமவனே!

(கொடித்தோன்றும் தோரணவாசல் காப்பானே) - இவனுடைய ரக்ஷகத்வம் விளங்காநின்றுள்ள அகாரநமஶ்ஶப்தார்த்தங்

முன்னம்" என்ற வீப்ஸையால் - நோன்புக்கு ப்ரதமம் விக்நவார்த்தை சொல்லாதொழியவேணு மென்னும் இவர்களபிப்ராயத்தை அருளிச்செய்கிறார் (உன் கையது இத்யாதி.)

"நேசம்" என்றதன் அர்த்தம் (அது இத்யாதி.) "நேசம்" என்றதுக்கு-செறிவாக அர்த்தாந்தரம் அருளிச் செய்கிறார் (செறிந்துஇத்யாதி.) (கசு)

களைக் காக்குமவனே! (மணிக்கதவம் தாள்திறவாய்) – ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுகையாலே ஶ்லாக்யமா யிருந்துள்ள ஆத்மஸ்வரூபாநுபவத்தையும், அத்தால் வரும் ஸ்வஸ்வாதந்த்ரிய ப்ரதிபத்தியையும் தவிர்த்தருளாய்.

'பயமுள்ள தேஶத்திலே அர்த்தராத்ரத்திலே வந்து எழுப்புகிறவர்கள் ஆர்?' என்ன; (ஆயர் சிறுமியரோமுக்கு) – "எம்பெருமானே உபாயோபேயம்" என்று அத்யவஸித்திருக்கும் ஜ்ஞாநஜந்மாக்கள் திருவம்ஶத்திலே பிறந்த பகவதநந்யார்ஹ ஶேஷபூதரான பாலர்களான நமக்கு. 'நீங்கள் வந்த கார்யம் ஏது?' என்ன; (அறை பறை) - த்வநிக்கிற வாத்யம் வேண்டிவந்தோமென்ன; - புருஷார்த்தம் வேண்டிவந்தோ மென்ன; 'ஆகில், திருப்பள்ளி யுணர்ந்த அநந்தரம் விண்ணப்பஞ் செய்து தருவிக்கிறேன்' என்ன; (மாயன்மணி வண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்) - ஆஶ்ரிதபரதந்த்ரனாய் ஸுலபனாய் ஶ்ரமஹரமான வடிவையுடைய எம்பெருமான் நென்னேற்றே பறைதருகிறோ மென்று மநஃபூர்வமாகச் சொல்லிவைத்தான். 'ஆகிலும், நீங்கள் ப்ரயோஜநாந்தர பரரன்றோ?' என்ன,—(தூயோமாய் வந்தோம்)- பறையென்றது – வ்யாஜமாத்ரம்; நாங்கள் அநந்ய ப்ரயோஜநராய் வந்தோம். 'அநந்யப்ரயோஜநருக்குக் கர்த்தவ்யம் ஏது?' என்ன,—(துயிலெழ பாடுவான்)- திருப்பள்ளியெழுச்சி பாட வந்தோம்.

'ஆகில் நில்லுங்கோள், திறக்கிறேன்' என்ன; (வாயால் முன்ன முன்னம் மாற்றாதே யம்மா)- வாக்காலே முந்துற முன்னம் எங்களை நிஷேதியாதேகொள். உள்ளிருக்கிறவனே ஸ்வாமி? நீ எங்களுக்கு ஸ்வாமியன்றோ? 'ஆகில், கதவைத் தள்ளிக்கொண்டு புகுருங்கோள்' என்ன,—(நீ நேச நிலைக்கதவம் நீக்கு) - நீ வாவெனிலும், ஸ்நேஹ யுக்தமான நிலையையுடைத்தான கதவைத் திறந்து விடாய்; நீ எம்பெருமானிடத்தில் ப்ரேமாதிஶயத்தாலே அநதிகாரிகளுக்கு அவனை உள்ளபடி காட்டாதாப்போலே ஆத்மஸ்வரூபம், ஸ்வவைலக்ஷண்யத்தாலே, அதிகாரிகளுக்கும் பகவத்விஷயத்தை மறைக்கக்கடவதாயிறே யிருப்பது. (கசு)

அ.—பதினேழாம்பாட்டு. இவர்களைத் திருக்காப்புநீக்கி உள்ளே புகுரவிட, ஸ்ரீநந்தகோபர் தொடக்கமானாரை எழுப்புகிறார்கள். முற்பட க்ருஷ்ணனைப் பெண்கள் களவுகாண்கிறார்களோ வென்று நினைத்துக் காவலாகப் புறக்கட்டிலே கிடக்கிற ஸ்ரீநந்தகோபரை

எழுப்புகிறார்கள் ; அநிருத்தாழ்வானை யகப்படக் களவு காணக்கடவ பெண்கள், அவனழகுக்கும் வாய்த்தலையாய் ["ஸாக்ஷாந்மந்மதமந்மத:"] "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" (கநஎ) என்கிற க்ருஷ்ணனைக் களவு காணச் சொல்லவேணுமோ ?

மூ.—அம்பரமேதண்ணீரே சோறேயறஞ்செய்யும்
எம்பெருமான்நந்தகோபாலாவெழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாங் கொழுந்தே குலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதாயறிவுறாய்
அம்பரமூடறுத் தோங்கியுலகளந்த
உம்பர்கோமானே யுறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வாபலதேவா
உம்பியும்நீயு முறங்கேலோரெம்பாவாய்.

பதவுரை:—(வாயில்காவலர் திருக்காப்புநீக்கி இவர்களை உள்ளே புகுர விட, முதற்கட்டிலே சென்று),—'அம்பரமே தண்ணீரே சோறே - வஸ்த்ரங்கள் குளிர்ந்ததீர்த்தம் அன்னம் இவற்றை (வேண்டுவோர் திருப்திபெறுமளவும்), அறம் செய்யும் - (ஒருபயனைவிரும்பாமல்) தானஞ்செய்கின்ற, எம்பெருமான் - (க்ருஷ்ணனைப்பெற்று) எங்களுக்கு ஸ்வாமியான, நந்தகோபாலா - ஸ்ரீநந்தகோபரே!—எழுந்திராய் - எழுந்திருக்கவேணும்', (என்று எழுப்ப,—(அவர் அநுமதிபண்ணினமை தோற்றக் கிடக்க ; இரண்டாங்கட்டிலே சென்று),—'கொம்பு அனார்க்கு எல்லாம் - வஞ்சிக்கொம்பையொத்த ஸ்த்ரீகளுக்கெல்லாம், கொழுந்தே - முதன்மையாகப்பிறந்தவளாய், குலவிளக்கே - நந்தகுலத்துக்கு மங்களதீபம் போன்றவளாய், எம்பெருமாட்டி - (க்ருஷ்ணனைத்தருகையால்) எங்கள் ஸ்வாமினியான, யசோதாய் - யசோதைப்பிராட்டியே !—அறிவுறாய்-நீ அறிந்து எழுந்திருக்கவேணும்', (என்று ப்ரார்த்திக்க),—(அவளும் ஸம்மதித்தமை தோற்றக் கிடக்க; உள்ளேபுக்கு), 'அம்பரம் ஊடு அறுத்து - ஆகாஶமெல்லாம் இடைவெளியாக்கிக்கொண்டு, ஓங்கி - பரமபதத்தளவும் செல்லவளர்ந்து, உலகு அளந்த - எல்லாலோகங்களையும் அளந்தருளுகையாலே, உம்பர்கோமானே- தேவர்களுக்கு ராஜாவானவனே!—உறங்காது எழுந்திராய்-கண்வளர்ந்தருளாமல் எழுந்திருக்கவேணும்' (என்று ஸ்ரீ க்ருஷ்ணனை எழுப்ப), (அவனெழுந்திருக்கக் காணாமையாலே' "முந்துற நம்பிமூத்தபிரானை யெழுப்பாதே முறைதப்பச் செய்தோம்"

---

பதினேழாம்பாட்டு. (அம்பரமே இத்யாதி.) 'தங்களுக்கு உத்தேஶ்யனை க்ருஷ்ணனை எழுப்பாதே நந்தகோபரை முந்துற எழுப்புவானென்?' என்ன அருளிச்செய்கிறார் (முற்பட இத்யாதி.) 'பெண்கள் ஆண்களைக் களவு காணக் கண்டதுண்டோ?' என்ன ; அருளிச்செய்கிறார் (அநிருத்தேத்யாதி.)

என்று நினைத்து), 'செம் பொன்-செம்பொன்ஞற் செய்த, கழல்-வீரக்கழலை யணிந்த, அடி - திருவடிகளையுடைய, செல்வா பலதேவா - ஸ்ரீமானுன பலபத்ரனே !—உம்பியும் - உனக்குத்தம்பியான க்ருஷ்ணனும், நீயும் - (அவன் சொல்வழியே நடக்கும்) நீயும், உறங்கேல் - உறங்காதெழுந்திருக்கவேணும், (என்று இரக்கிறுர்கள்.)

வ்யா.—(அம்பரமே இத்யாதி.)-புடைவையோடு தண்ணீரோடு சோறோடு வாசியற வேண்டுவார்க்கு வேண்டுவதெல்லாம் புஷ்கலமாகக் கொடுக்கை. ஏவகாரத்தாலே - இதுவோ இவன் கற்றதென்னும்படி கொடுக்கை. (அறஞ்செய்யும்) - பலாபிஸந்திரஹிதமாக ஆந்ருஶம்ஸ்யத்தாலே கொடுக்கை. இத்தால் - நாட்டுக்குத் தாரகாதிகளைக் கொடுக்கிற நீ, எங்கள் தாரகத்தையும் தாராயென்கை. (எம்பெருமான் இத்யாதி.) - எங்களுக்குத் தாரக போஷக போக்யங்களெல்லாமான க்ருஷ்ணனைப் பெற்றுத் தந்த ஸ்வாமீ! எழுந்திராய். ["ಯಿ ಹೈ ಕ್ಷ್ಯ ಲಾಭಾಯ ಸರ್ವಲಾಭಾಯ ಕೇಶವಃ"] "ஸர்வ்ஹைகலாபாய ஸர்வலாபாய கேஶவ:" (சுஹ). *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாப்பேறும் தானேயானவனிறே க்ருஷ்ணன். (எம்பெருமான்)- நாட்டில், பெண்களுக்குத்தாநங்கொடுப்பாரில்லை ;

புஷ்கலமாகக்கொடுக்கைக்கு ஸாலபமான தண்ணீரோடு சேர்த்துச் சொல்லுகையாலே அம்பரம்முதலானவற்றுக்குப் பௌஷ்கல்யம் தோற்றுகிறதென்று திருவுள்ளம்பற்றித்தாத்பர்யம்அருளிச்செய்கிறுர் (புடைவையோடு இத்யாதி.) "அம்பரம்கொடுக்கையே அறஞ்செய்யும், தண்ணீர்கொடுக்கையே அறஞ்செய்யும், சோறிடுகையே அறஞ்செய்யும்" என்று தனித்தனியே அந்வயித்து ஏவகாரத்தாலே-ஓரொன்றேகொடுக்கும்போது கொண்டாடும்படி யிருக்குமென்றுதாத்பர்யம்அருளிச்செய்கிறுர்(ஏவகாரத்தாலே இத்யாதி.) இவற்றைக் கொடுக்கை தர்மமென்னுமது அர்த்தஸித்தமாயிருக்கவும், "அறம்" என்று விஶேஷித்ததுக்கு விஶேஷதர்மமென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (பலாபிஸந்தி இத்யாதி.) பெண்கள் எழுப்பும்போது இவ்விஶேஷண மிடுகைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (இத்தால் இத்யாதி.) தாரகாதிகளெல்லாம் க்ருஷ்ணனென்னுமதுக்கு ஸம்வாதம் காட்டுகிறுர் (ஏகைகேத்யாதி.) ["ಪಿತೃಮಾತೃಸುತಭ್ರಾತೃ ದಾರಮಿತ್ರಾದಯೋಽಪಿ ವಾ"] "பித்ருமாத்ருஸுதப்ராத்ருதாரமித்ராதயோபிவா" என்று பூர்வார்த்தம். க்ருஷ்ணனைப்பெற்றதே தருகையாய் இந்த உபகாரத்தைப்பற்ற ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, பெண்கள் தாநாதிகாரிகளன்றென்று பாராதே, அதிகாரிவிஶேஷத்தைப் பார்த்துத் தருவானுயிருக்கிறபடியைப்பற்ற "எம்பெருமான்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்

தாநங்கொள்ளுகைக்கு அதிகாரிகளல்லாமையாலே. ["వాసుదేవస్య ఛ్యైషి"] "வாஸுதேவஸ்யூஷி" (கஉஅ) என்று இருக்கிற எங்களுக்கு க்ருஷ்ணனைத் தரப்புகுகிற நீ விசேஷித்து எங்களுக்கு நாயகனன்றோ ?

உணர்ந்து, அவன் அநுமதி பண்ணினபடி தோற்றக் கிடக்க, (கொம்பனார் இத்யாதி.) - பிராட்டி முன்னாக அவனை யெழுப்புமா போலே, இவள்முன்னாக ஸ்ரீநந்தகோபரை யெழுப்பாவிட்டதென்னென்னில் ? - பிள்ளைமேல் ஸங்கத்தாலே அணித்தாக உள்கட்டிலே கிடக்கையாலே பிற்பட அவளை எழுப்புகிறார்கள். (கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே) - [" నారీణాము త్తమాస్థూః "] "நாரீணாமுத்தமாவதூ:" (கூ0) என்று - பெண்பிறந்தார்க்கெல்லாம் தலையாகப் பிறந்தவளே! (கொம்பனார்) - கொம்பு - வஞ்சிக்கொம்பு. அனார் - அத்தை அனையவர்கள்; அத்தை ஒத்தவர்கள். (குலவிளக்கே) - இக்குலத்துக்கு மங்களதீபமானவளே! பெண்பிறந்தார்க்கெல்லாம் த்ருஷ்டியான விளக்கே யென்னவுமாம். (கொழுந்தே) - பெண்களுக்கு ஒருகுறை வரில் உன்முகமன்றோ வாடுவது ? (எம்பெருமாட்டி) - க்ருஷ்ணனைப்பெற்றுத்தந்து எங்களுக்கு ஸ்வாமிநியானவளே ! (யசோதாய்) - ஸ்ரீநந்தகோபரைப்போலன்றியே ஸஜாதீயையாகையாலே நோயறியுமவளே! ஹிதகாமரான ஸ்ரீநந்தகோபரெழுந்திருக்கச்செய்தேயும் ப்ரியகாமையா யிருக்கிற நீ கிடக்கக்கடவையோ ? (அறிவுறாய்) - நீ அறிந்தால் எங்களுக்கு ஒருகுறையுண்டோ ? என்கை.

---

கிறார் (நாட்டில் இத்யாதி.)

'பிராட்டி.' என்றது, மேலில்பாட்டில்சொல்லுகிற நப்பின்னைப்பிராட்டியை. 'அத்தை அனையவர்கள்' என்றது - அதுக்கு ஸத்ருசரென்றபடி. நந்தகுலத்துக்குத் தன் வ்ருத்தத்தாலே விளக்கானவளென்று கீழ் அருளிச்செய்து, "கொம்பனார்க்கெல்லாம்" என்றதை இக்கும்கூட்டித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பெண்பிறந்தார்க்கு இத்யாதி.) முன்னே "கொழுந்து" என்றதுக்கு-லக்ஷணயா உத்தமத்வம் அர்த்தமாக ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து-கொழுந்தோடே ஸாத்ருஶ்யமாக விசேஷம் விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (பெண்களுக்கு இத்யாதி.) 'அறியுமவளே' என்றநந்தரம் "ஆகையாலே" என்று சேஷம். "அறிவுறாய்" என்றதை விவக்ஷித்து ப்ரார்த்தனைக்கு ஹேது அருளிச்செய்கிறார் (நீ இத்யாதி.)

அவள் ஸம்வாதத்தாலே உள்ளே புக்கு க்ருஷ்ணனை எழுப்புகிறார்கள்:—(அம்பரமூடறுத்தோங்கி)- ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக ஆகாஶாவகாஶத்தையெல்லாம் அடங்க ஒருப்ரதேஶநியதி யில்லாதபடி ஊடறுத்து விம்ம வளர்ந்து. இத்தால் நிருபாதிக ரக்ஷகனுகையாலே ரக்ஷகத்வமே விளைநீராக வளர்ந்தபடி. (உலகளந்த) - உறங்குகிற ப்ரஜையைத் தழுவிக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே, இருந்ததே குடியாக எல்லார்தலையிலும் ஊறெண்ணெய் வார்த்தாற்போலே திருவடிகளைக் குளிர வைத்தபடி. (உம்பர் கோமானே) - அச்செயலாலே தேவர்களை எழுதிக்கொண்டபடி; நித்யஸூரிகளை யென்னவுமாம். அதாவது - 'நமக்கு ஶிரோபூஷணமான திருவடிகளையிட்டுக் காடும் ஓடையும் அளப்பதே! இது ஒரு வாத்ஸல்யமே!' என்று வாத்ஸல்யத்துக்குத் தோற்கை. (உறங்காது எழுந்திராய்) - ஆண்களுமாய் ப்ரோஜநாந்தரபரராக வேணுமோ முகங் கொடுக்கைக்கு? அநந்யப்ரோஜனைகளுமாய் அபலைகளுமானல் ஆகாதோ? எங்களுக்கு முகங் காட்டும்போது சிறுப்பது பருப்பதாக வேணுமோ? இருந்தபடியே காட்ட அமையாதோ? உன் வாசியறியாதே அந்யபரமான நாட்டுக்கு ஸுலபமான திருவடிகளை, உன்வாசியறியும் எங்களுக்குக் காட்டலாகாதோ? (உறங்காதெழுந்திராய்) - எங்களை உறக்கம் எழுப்பவந்த நீ, உறங்கக்கடவையோ? ['ஜாக்ருஹி ஜாக்ருஹி'] ''ஜாக்ருஹி ஜாக்ருஹி'' (கஙகூ) என்று கேட்டிருந்தபடி அழகிதா யிருந்தது!

---

'ஸம்வாதத்தாலே' என்றது-ஸம்மதியாலே யென்றபடி. விம்மல்-பொருமல்; அதாவது - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே திருமேனிப் பருமையைச் சொல்லுகிறது. ''உலகு'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறங்குகிற இத்யாதி.) ஊறெண்ணெய் - உச்சியெண்ணெய். ''உறங்காதே'' என்று இவ்வளவைச்சொல்ல அமைந்திருக்க, ''எழுந்திராய்'' என்றதுக்கு - எழுந்திருக்கை முகங்காட்டுகைக்கு நிமித்தமென்று விவக்ஷித்து ''அம்பரம்'' இத்யாதியைக் கடாக்ஷித்து பாவம் அருளிச்செய்கிறார் (ஆண்களும் இத்யாதி.) அதில் முதலிரண்டுவாக்யமும் ''அம்பரமூடறுத்து'' என்ற அம்சத்தைப்பற்ற. ''ஓங்கி'' என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார்(எங்களுக்கு இத்யாதி.) ''உலகளந்த'' என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (உன்வாசி இத்யாதி) என்று கண்டுகொள்வது. ''உறங்காது'' என்னுமதுக்கு ஸ்வாபதேஶத்தில் ஹாவம் அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'உறக்கமெழுப்ப' என்றது - ஸம்ஸாரமாகிற உறக்கத்தை எழுப்ப என்றபடி.

இப்படிச் சொல்லவும் எழுந்திராமையாலே, முந்துற நம்பிமூத்த பிரானை எழுப்பாதே முறைகேடாகச் செய்தோமென்று அவனை எழுப்புகிறார்கள் :—(செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா) - பிள்ளை பிறக்கைக்குப் பொற்கால் பொலியப் பிறந்த சீமானே! (உம்பியும் நீயும் உறங்கேல்)- உனக்குப் பவ்யனான தம்பியும், அவனுக்குப் பவ்யனான நீயும் உறங்காதொழியவேணும். [“ సందేశైస్సామమధురైః ప్రేమగర్భైరగర్వితైః। రామేణాశ్వాసితా గోప్యో హరిణాహృతచేతసః’’] ‘ஸந்தேஶைஸ்ஸாமமதுரை: ப்ரேமகர்ப்பைரகர்விதை: | ராமேணாஶ்வாஸிதா கோப்யோ ஹரிணாஹ்ருதசேதஸ:’’ (கச௦) என்று - எங்களையும் அவனையும் பொருந்த விடுமவனல்லையோ நீ? (கஎ)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—பதினேழாம்பாட்டு. (அம்பரம் இத்யாதி.) இப்பாட்டில், கீழ்ப்பாட்டில் எழுப்பின கோயில்காப்பானநுமதியால் திருவாசல் காப்பான் உள்ளே புகுரவிட, முந்துற ஆசார்யனை எழுப்பி, நம்பி மூத்தபிரான் முன்னாக ஈஶ்வரனை எழுப்புகிறார்கள்.

வ்யா.—(அம்பரம் இத்யாதி.) - ஆத்மஸ்வரூபமான ஈஶ்வரமுகவிகாஸத்தையும், தத்வர்த்தகமான போக்த்ருத்வபுத்திநிவ்ருத்தியையும், தத்தேதுவான கைங்கர்யத்தையும், - ஒரொன்றேயோ இவன் கொடுப்பது என்னும்படி தன்னுடைய ஆந்ருஶம்ஸ்யத்தாலே ஸ்வயம்புருஷார்த்தமாகக் கொடாநின்றுள்ள, நமக்கு வகுத்தஶேஷியாய் ஆநந்தநிர்ப்பரனாய் ஆஶ்ரிதரக்ஷகனான ஆசார்யனே! நீ உணரவேணும்.

(கொம்பு இத்யாதி.) - நதீப்ரவாஹங்களுக்கு வளைந்து பிழைக்கும் நீர்வஞ்சிக்கொம்புபோலே, ஸம்ஸாரிகளுடைய அபிமாநத்துக்கு அநுரூபமாகத் தங்களை அமைத்துவைக்கும் பகவந்மந்த்ரங்களுக்கெல்லாம் ஶ்ரேஷ்டமாய் ப்ரபந்நகுலத்துக்குப் ப்ரகாஶகமாய் எங்களுக்கு நிருபாதிகஸ்வாமியாய்த் தன்னை அநுஸந்திப்பார்க்கு

---

செம் - சிவந்ததாய், பொன் - ஸ்ப்ருஹணீயமாய், கழல் - வீரவண்டயமுடைய, அடியையுடையவனென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, இந்நன் விஶேஷித்ததுக்குத் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (பிள்ளை இத்யாதி.) இருவர்க்கும் பரஸ்பரம் பவ்யதை சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (ஸந்தேஶை: இத்யாதி.) (கஎ)

ஆபிஜாத்யாதி ஸகலாதிஶயப்ரதமான திருமந்த்ரமே அறிவுறாய்; திருமந்த்ரம் அறிவுறுகையாவது -ஸ்வார்த்தப்ரகாஶக மாகை.

(அம்பரம்இத்யாதி.)-ஙிரீஶ்வரவாதம்பண்ணுமவர்களுக்கு அவகாஶமறும்படி அபிவ்ருத்தனாய் இவ்விபூதியைத்தன் திருவடிகளின் கீழே சேர்த்துக்கொண்ட நித்யஸூரி நிர்வாஹகனானவனே! ஸம்ஸாரிகளுறக்கம் தீர்க்க அவதரித்த நீ உறங்கா தொழியவேணும்.

இப்படி எழுப்பின இடத்திலும் எழுந்திராமையாலே, அவனை எழுப்புகைக்காக நம்பிமூத்தபிரானை எழுப்புகிறார்கள்:—(செம்பொற் கழலடி) - சிவந்து ஸ்ப்ருஹணீயமான ஸ்வர்ணத்தாலே செய்யப்பட்ட வீரக்கழலையுடைய; ஸ்வஶேஷத்வத்திலே பகவச்சேஷத்வம் அந்தர்க்கதமாம்படி யிருக்கையாலே, திருவடிகள் விருதுபூண்டன வென்றுமாம். (செல்வா பலதேவா) - இப்படி ஸம்பந்நனான பலதேவனே! (உம்பியும் நீயும் உறங்கேல்) - உனக்கு பவ்யனான க்ருஷ்ணனும் அவனுக்கு பவ்யனான நீயும் உறங்காதொழியவேணும்.(கஎ)

அ.—பதினெட்டாம்பாட்டு. இப்படி எழுப்பின இடத்திலும் எழுந்திராமையாலே தங்களுக்குப் புருஷகாரபூதையான நப்பின்னைப்பிராட்டியை எழுப்புகிறார்கள். அவள் புருஷகாரமாக அவனைப் பற்றுவதே பலவ்யாப்தமாவது. இதுதான் காகவிபீஷணாதிகள் பக்கலிலே காணலாம். அவளை அநாதரித்து இவனைப் பற்றின சூர்ப்பணகை அநர்த்தப்பட்டாளிறே. பெருமாளை யொழியப் பிராட்டியைப் பற்றின ராவணனும் அநர்த்தப்பட்டான்; இருவரையும் பற்றினாலிறே ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே வாழலாவது. அபிநிவேஶ ப்ரேரிதைகளாகையாலே மூந்துறவே க்ருஷ்ணன்பக்க

---

பதினெட்டாம்பாட்டு. (உந்துமதகளிற்றன் இத்யாதி,) 'இப்படி எழுப்பினவிடத்திலும்' என்றது - திருவாசல்காக்கும் முதலிகள் தொடக்கமாக நம்பி மூத்தபிரானளவும் புருஷகாரமாகப்பற்றி யெழுப்பினவிடத்திலும் என்றபடி. 'இவளைப் புருஷகாரமாக்குமிடத்தில் அவனைப் பெறலாமோ?' என்ன,-அருளிச்செய்கிறார் (அவள் இத்யாதி.) அவள்புருஷகாரமாகப்பற்றுகை பல வ்யாப்தமென்கையை அந்வயவ்யதிரேகங்களால்உபபாதிக்கிறார்(இது இத்யாதி வாக்யத்வயத்தாலே.) இவளை யொழியப் பெருமாளைப்பற்றுமது அநர்த்தாவஹமென்கைக்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (பெருமாளை இத்யாதி.) இப்படி யிருக்கவும் மூந்துறவே நப்பின்னையைப் புருஷகாரமாக்காதே க்ருஷ்ணன்பக்கல் இழிகைக்குக் காரண மென்னென்ன ;- அருளிச்செய்கிறார் (அபிநிவேஶேத்யாதி.) அபிநிவேஶம் கரைபுரண்டாலும்

விலே மேல்விழுந்தார்கள் இவர்கள். அங்குக் கார்யம் பலியாமையாலே வழியேபோகவேணு மென்று புருஷகாரத்தில் இழிந்தார்கள். ஆஶ்ரயணவேளையிலேயிறே க்ரமம் பார்ப்பது ; போகவேளையிலே க்ரமம் பார்க்கப்போகாதே.

மூ.—உந்துமதகளிற்ற னோடாததோள்வலியன்
நந்தகோபாலன்மருமகளே நப்பின்னாய்
கந்தங்கமழுங்குழலீ கடைதிறவாய்
வந்தெங்குங்கோழியழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண்
பந்தார்விரலி யுன்மைத்துனன்பேர்பாடச்
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை:—(ஸ்ரீநந்தகோபர் முதலானாரை யெழுப்பியும் கதவைத்திறவாமையாலே, துயிலெழுப்புபவர்),—'மதம் உந்து - மதஜலத்தைப் பெருகவிடாநின்றுள்ள, களிற்றன் - யானைபோலப் பலமுடையராய், ஓடாத - (எதிரிகளைக்கண்டு) பின்வாங்கவேண்டாத, தோள் வலியன் - புஜபலத்தையுடையரான, நந்தகோபாலன் - ஸ்ரீநந்தகோபருடைய, மருமகளே - மணாட்டுப்பெண்ணாய், கந்தம் கமழும் குழலீ - பரிமளம் வீசாநின்றுள்ள கூந்தலையுடையளான, நப்பின்னாய் - நப்பின்னைப்பிராட்டியே! கடை திறவாய் - (வாயிலைத்திறவாய்' என்றுஎழுப்ப; "நான் எழுந்திருந்துவருகைக்குப் போது விடிந்ததோ?" என்று அவள் வினவ),—'கோழி- கோழிகள், எங்கும் வந்து அழைத்தன-நாற்புறத்திலும் வந்து சூழ்ந்துகொண்டு கூவாநின்றன; (அன்றியும்), மாதவிப் பந்தல்மேல் - குருக்கத்திக்கொடிகளாகிய பந்தலின்மேல் (தூங்குகின்ற), குயில்கள்- குயில்களானவை, இனம்-கூட்டம் கூட்டமாக,பல்கால்-இடைவிடாமல்,' கூவின- கூவாநின்றன, (என்றுசொல்லி,)—பந்து ஆர் விரலி - பந்துபொருந்திய விரல்களையுடையவளே! உன்-உன்பக்ஷத்தில் நாங்கள் நின்று, மைத்துனன் - அவனும் நீயும் மைத்துனமையாடி ஒருவர்க்கொருவர் இட்டீடுகொள்ளும்போது, பேர் பாட - (அவன்) பேர்களை(ப்பழித்துப்) பாடும்படிக்கீடாக,— சீர் ஆர்-அழகுமிக்கிருந்துள்ள, வளை - வளைகள், ஒலிப்ப - சப்திக்கும்படி, வந்து - நடந்துவந்து, செம் தாமரைக் கையால் - சிவந்த தாமரைமலர்போன்ற கையாலே, மகிழ்ந்து - ஸந்துஷ்டசித்தையாய்க் கொண்டு, திறவாய் - (கதவு) திறக்கவேணும், என்கிறார்கள்.

---

வழிதப்பியிழிகை எங்ஙனே கூடுவதென்ன; அருளிச்செய்கிறார் (ஆஶ்ரயணேத்யாதி.) 'போகவேளை' என்று இவர்கள் நினைவிருக்கையாலே முந்துற இழிந்து, அது பலியாமையால் ஆஶ்ரயணவேளையென்று அறிந்து நப்பின்னையைப் புருஷகாரமாகப் பற்றுகிறார்க ளென்று கருத்து.

வ்யா.—(உந்துமதகளிற்றன்) - மதத்தை உந்தாநின்றுள்ள களிறு. மத்தகஜம்போலே யிருக்கும் பலத்தை யுடையவன். ஆனைகளோடே பொரும்படியான மிடுக்கை யுடையவ னென்கை. (ஓடாத தோள் வலியன்) - ["యుద్ధేచాప్యపలాయనమ్"] 'யுத்தே சாப்யபலாயநம்' (கசக) என்கிறபடியே ப்ரதிபக்ஷத்தைக் கண்டால் பிற்காலியாத தோள்வலியை யுடையவன்; நாட்டில் நடையாடாத தோள்வலியன் என்னவுமாம். இப்போது இவருடைய மிடுக்குச் சொல்லிற்று, தங்களுக்குத் தூரமான இம்மிதுநத்துக்குக் காவலுண்டென்று தங்கள் பயநிவ்ருத்திக்காக. "அங்கோராய்க்குலம்" என்று - கம்ஸன்படைவீடான ஸ்ரீமதுரையை நினைத்து அஞ்சினார்க்கு அஞ்சவேண்டாத ஊரிறே. (தோள்வலியன்)-["నబిభేతికుతశ్చన"] "நபிபேதி குதஶ்சந" (கூகூ) என்று - நம்முடைய அநீதிகளை நினைத்தால் எம்பெருமான் தோள்வலியை நினைத்துப் பயம் கெடு

---

மதத்தை, உந்துகை - தள்ளுகையாய், மதஜலத்தைப் பெருகவிடாநின்றுள்ள கஜம்போலே யிருக்குமவனென்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, மதகளிற்றைத் தள்ளுமவ னென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம் பற்றி, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆனைகளோடே இத்யாதி.) 'மிடுக்கையுடையவ னென்கை'என்றிருக்கையாலே, கீழ்ச்சொன்ன பலத்தை விவரிக்கிறு ரென்னவுமாம். ஓடாதவனாய், தோள்வலியுடையனா யிருக்குமவனென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றிச் சக்ரவர்த்தித்திருமகனை த்ருஷ்டாந்தமாக்கிக்கொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (யுத்தேத்யாதி.) 'பிற்காலியாத' என்றது - பின்வாங்கவேண்டாத என்றபடி. "ஓடாத"என்றத்தைத் * தோள்வலிக்கு விசேஷணமாக்கி, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நாட்டில் நடையாடாத இத்யாதி.) 'நாட்டில் நடையாடாத' என்றது - நாட்டில் ஸஞ்சரியாத என்றபடி. அதாவது - அப்ரதிமமான என்றபடி. இவன் மிடுக்கைப் பற்ற இவனாரும் பயநிவ்ருத்திக்கு உடலென்னுமத்தைக் காட்டுகிறார் (அங்கோராய்க்குலம் இத்யாதி.) இம்மிதுநத்துக்குக் காவலுண்டென்று பயநிவ்ருத்தி யுண்டாகைக்குப் பயப்ரஸக்தி யேதென்ன,—அத்தை ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டாநின்றுகொண்டு நிவ்ருத்திக்குடலானபடியை உபபாதிக்கிறார் (நபிபேதீத்யாதி.) ["ఆనన్దంబ్రహ్మణోవిద్వాన్ నబిభేతికుతశ్చన"] "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதி குதஶ்சந" என்று ஶ்ருதியில், ஆநந்தபதம் - குணவிக்ரஹ விபூதிகளைக் காட்டுமென்று திருவுள்ளம்பற்றி 'எம்பெருமான் தோள்வலியை' என்றது.

மாபோலே, க்ருஷ்ணனுடைய தீம்புகளை நினைத்தால் இவருடைய தோள்வலியை நினைத்துப் பயம் கெடலாயிருக்கை. கம்ஸன் மாளிகைநிழலிற்கீழே க்ருஷ்ணனுக்கு ஒரு தீங்கு வாராத்படி வளர்க்க வல்ல மிடுக்கை யுடையவரிறே (நந்தகோபாலன் மருமகளே) - "ஸ்ரீகும்பர்மகளே"என்னுதே மாமனுரைச் சொல்லிற்று, ["ஸ்நுஷா த³ஶரத²ஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபந:"] 'ஸ்நுஷா த³ஶரத²ஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபிந:' (கசஉ) என்னுமாபோலே, அதிலும் இவளுக்கு இது ப்ரியமாகையாலே. (நப்பின்னாய்)–"திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணன் பிறந்ததுக்குப் பின்பு ஸ்ரீநந்தகோபருக்கு மருமகளல்லாதா ருண்டோ? நமக்கென்?" என்று பேசாதே கிடக்க "நப்பின்னாய்" என்கிறார்கள்.

(கந்தம் கமழும் குழலீ)-பரிமளந்தான் நிறம்பெறுவது இவள் திருக்குழலிலே சேர்ந்தவன்று என்கிறது. * வாசஞ்செய் பூங்குழலாளிறே. ["ஸர்வக³ந்த⁴:"] "ஸர்வக³ந்த⁴:" (கசந) என்கிறவனுக்கும் நாற்றம் கொடுக்கும்படி பரிமளம் மிக்க திருக்குழல். (கடைதிறவாய்)-க்ருஷ்ணனுடைய பரிமளமும் உன்னுடைய பரிமளமுமாகத் தேங்கி நிற்கிற வெள்ளத்தை, கதவைத் திறந்து புறப்படவிட்டு எங்கள் விடாயைத் தீரா யென்கிறார்கள்; கிண்ணகத்தை அணை செய்தாற்போலே அடைத்துக்கொண்டு கிடவாதே வெட்டிவிடாய்.

'மத்யராத்ரியிலே எழுப்புகிறதென்?' என்ன; 'போது விடிந்தது' என்ன; விடிந்ததுக்கு அடையாளமென்' என்ன, - (கோழியழைத்தனகாண்)–கோழி கூவாநின்ற தென்ன; 'ஒருகோழி கூவின

கந்தம்-மந்யம், பரிமளிக்கும் படியான குழலையுடையவ ளென்று சப்தார்த்தமாய், பரிமளிக்கையாவது - அதிசயிக்கையென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பரிமளம் இத்யாதி.) எடுத்தபாசுரத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி.) "கடை" என்று - கோடியாய், கோடியைத் திறவாயென்னும் அர்த்தம் த்வநிக்கையாலே பலித்த தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் இத்யாதி.) "கடை" என்று - தாழ்ப்பாளாய், அத்தாலே - கதவுதிறக்கை வாக்யார்த்தமாகக் கண்டுகொள்வது.

"கோழி" என்று - ஏகவசநமாயிருக்கையாலே, "அழைத்தன" என்ற பஹுவசநம் சேராமையாலே; † ஏகவசநமாக்கி சப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (கோழி இத்யாதி.) "எங்கும்" என்றதுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஒரு கோழி இத்யாதி.) "எங்கும்-கோழி-வந்து-அழைத்தன"என்று

† இந்த அரும்பதவாக்கியம் தமிழ் மரியாதைக்குச் சேராது.

வாறே விடிந்ததாமோ?' என்ன, - (வந்தெங்கும் கோழியழைத்தன காண்). துடைதட்டி எழுப்புவாரைப்போலே ஸர்வதோ திக்கமாகக் கோழி கூவாநின்றன.

உணர்ந்தவையெல்லாம் கூப்பிடும், பின்னையுறங்குமதுதான் சாமக்கோழியென்ன,-(மாதவிப்பந்தல்மேல் இத்யாதி.)-'ஸுகஸ்பர்ஶத்தாலே ["ஜோஷஜநம்ஸ்மரந்"] "நோபஜநம்ஸ்மரந்" (௧௪௪) என்னும்படியான படுக்கையிலே உறங்குகிறவை உணரும்போது விடிய வேண்டாவோ?' என்ன; 'ஒருகுயில் ஒருகால் கூவுங்காட்டில் விடிந்ததோ?' என்ன - (பல்காற் குயில் கூவிற்றுக்காண்) – உன்னுடைய நோக்கும் ஸ்பர்ஶமுமே தாரகமான குயில், விடிந்தும் உன்னைக் காணப் பெறுமையாலே பல்கால் கூவாநின்றது. 'ஒருகுயில் பல்கால் கூவினது ப்ரமாணமோ?' என்ன; உன்னைக் காணப்பெறுமையாலே நாக்கு ஒட்டினமை தோற்ற,(குயில் இனங்கள் கூவினகாண்)-இனமினமாகக் குயில்கள் பலகாலும் கூவினகாண்.

(பந்தார் விரலி)- பந்தும்கையும் பொருந்தியிருக்கிறபடி. 'நாங்கள் சைதந்யத்தை விட்டு அசேதநமாகப் பெற்றிலோமே?' அதுஎன்?'

---

அந்வயம் திருவுள்ளம்பற்றி, "கூப்பிட்டன" என்னாதே, "வந்தழைத்தன" என்றது த்ருஷ்டாந்தம்தோன்றவேண்டி யென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (துடை இத்யாதி.) ஒரு கோழி எங்குமொக்க ஏககாலத்திலே கூவக்கூடாமையால், இங்கு "கோழி" என்றது - ஜாத்யேகவசநம்.

"மாதவிப்பந்தல்மேல்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸுகேத்யாதி.) ["ஜோஷஜநம்ஸ்மரந்நிதம் ஶரீரம்"] "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" என்னும்படி' என்றது - முக்தன் தன் பந்துஜநஸமீபத்தில் வர்த்திக்கும் தான்விட்டஶரீரத்தை ஸ்மரியாதாப்போலே,இங்குக்கிடந்துறங்கும் குயிலும், உன்னையும் நினையாதே உறங்கும் என்றபடி. "இனம்" என்றதுக்கும், "பல்கால்" என்றதுக்கும் அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஒருகுயில் இத்யாதி.) மாதவிப் பந்தல்மேல் கிடக்கும் குயிலாகையாலே இவர்கள் வளர்த்த குயிலென்று தோன்றுகையாலே, அவை இவனைக் காணுமையால் பல்கால் கூவிற்று என்று அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உன்னுடைய இத்யாதி.) "இனங்கள்" என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யத்தை ப்ரஶ்நப்ரதிவசநரூபேண அருளிச்செய்கிறார் (ஒருகுயில் இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) "பல்கால்" என்றத்தால் பலித்தது - நாக்கு ஒட்டினமையென்று கண்டுகொள்வது.

ஆர்தல் – பொருந்துதலாய், சப்தார்த்தம் அருளிச்செய்கிறார் (பந்தும் இத்யாதி.) இவ்விஶேஷணத்துக்குப்பாவத்தை அருளிச்செய்கிறார் (நாங்கள்

என்னில்?—உன்கைக்குள்ளே கிடக்கலாமே! இப்போது பந்தின் ப்ர ஸங்க மென்னென்றால்,—க்ருஷ்ணனோடே பந்தடித்து அவனைத் தோற்பித்து அவனை ஒருகையாலும் பந்தை ஒருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்கை. அவன் இவளுக்குப் போகோபகரணம்; பந்து லீலோபகரணம். ஒருகையில் நாரமாய்த்து; ஒருகையில் நாராயணனாய்த்து. ஒருகையிலே விபூதியாய்த்து; ஒருகையிலே விபூதிமானாய்த்து. இத்தால்-[" ...... "] "அஸ்யா ஈஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (கசரு) என்கிறபடியே உபய ஸம்பந்தத்தால் வந்த புருஷகாரபாவம் தோற்றுகிறது. 'நீங்கள் வந்ததென்?' என்ன; - (உன் மைத்துனன் பேர்பாட) - நீயும் அவனும் மைத்துனமையாடி ஒருவர்க்கொருவர் ஒன்றுக்கு ஒன்பது சொல்லி இட்டீடு கொள்ளும்போது, உன்பக்ஷத்திலே நாங்கள் நின்று அவன் தோல்விக்கு வசைபாட. அவனுக்கு உள்ளதெல்லாம் சொல்லிக்கொடுக்கைக்கும், இருவரும் ஒன்றாய்ச் செல்லுமன்று செல்லவும். பிரிந்தால் தாய்பக்ஷத்திலேயிறே ப்ரஜைகள் நிற்பது.

அவள், 'இங்ஙனேயாகில் திறந்து கொண்டு புகுருங்கோள்' என்ன; - (செந்தாமரைக்கையால் இத்யாதி.) - நீதானே வந்து திறக்கவேணும். செந்தாமரைக்கை - அவனும் ஆசைப்படும் கை. [" ...... "] "அபயம் ஸர்வபூதேப்ய:" (கசரு); ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்துக்கு நீங்கள் அஞ்சவேண்டா வென்னும் கை. அவள் 'அப்படியே செய்கிறோம்' என்று முன்கையில் வளையைக் கடுக்கித் திறக்கப்புக்காள்: - (சீரார்வளையொலிப்ப) - வளைக்குச் சீர்மையாவது - கழலாதிருக்கை. * சங்குதங்கு முன்கை நங்கை

---

இத்யாதி.) நித்ராஸமயத்தில் பந்தைச் சொல்லக்கூடுமோ வென்னும் ஶங்கையை அநுவதிக்கிறார் (இப்போது இத்யாதி.) ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இத்தால் இத்யாதி.) வசை - தோஷம். பிரிந்தபோது அவன் மர்மம் சொல்லவும், கூடியிருக்கும்போது ஒன்றாய்ச் செல்லவும் வந்தோ மென்றபடி.

கதவு திறக்கை கையாலேயா யிருக்க, "செந்தாமரைக்கையால்" என்றவிடத்திலே, "செந்தாமரை" என்ற விஶேஷணத்துக்கும் விஶேஷ்யத்துக்கும் க்ரமேண தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (அவனும் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) [" ...... "] "ஸரணம் ஹிவ:" என்ற அநந்தரம், "என்று" என்று ஶேஷம். இவர்கள் வளையினொலிகேட்க ஆசைப்படுகைக்கு

யிறே. நாங்களும் அந்தத்வநிகேட்டு வாழும்படி. தங்கள் கைகள், "இருகையில் சங்கிவை நில்லா" என்றிறே இருப்பது; "சூடகமே தோள்வளையே" என்று - அவர்க ளிருவரும் கூடிப் பூட்டினுலிறே இவர்களுக்கு உள்ளது. இப்பாட்டு, எம்பெருமானுர் விஶேஷித்து உகந்த பாட்டு. (வந்து திறவாய்) - யந்த்ரத்தாலே திறக்க வொண்ணுது, உன்னுடைய நடையழகு காணும்படி வந்து திற. (மகிழ்ந்து)-'அர்த்திகள் வாசலிலே நிற்க வேறு அநுபவ முண்டோ?' என்று தர்மத்துக்குத் திறக்கையன்றிக்கே, பேறும் உன்னதாக வேணும். (மகிழ்ந்து) - க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தாலே வந்த ஹர்ஷப்ரகர்ஷம் முகத்திலே தோற்றும்படி என்னவுமாம். (கஅ)

ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—பதினெட்டாம்பாட்டு. (உந்துஇத்யாதி.) இப்பாட்டில்ஆசார்யன் முன்னுக நம்பிமூத்தபிரானை முன்னிட்டு எழுப்பின விடத்திலும் எழுந்திராமையாலே அவனை எழுப்புகைக்காகப் புருஷகாரபூதையான நப்பின்னைப்பிராட்டியை எழுப்புகிறுர்கள்.

வ்யா.—(உந்துமத களிற்றன்) - உந்மஸ்தகமான அஹங்காரத்தை வெல்லும் பலத்தையுடையவனுய். (ஓடாத தோள்வலியன்) - ஜகத் விலக்ஷணமான ஜ்ஞாநபலத்தை யுடையவனுய்; "ஞானக்கை" என்னக் கடவதிறே; அஹங்காரத்துக்குப் பிறகாலியாத ஜ்ஞாநபலத்தையுடையவ னென்றுமாம். (நந்தகோபாலன்) - ஆநந்தநிர்ப்பரனுய் ஆஶ்ரிதரக்ஷகனுன ஆசார்யனுடைய. (மருமகளே) - ஆசார்யனுக்கு எம்பெருமான் புத்ரவத் விதேயனுனல், பிராட்டி மருமகளாகக் குறையில்லையிறே. (நப்பின்னுய்)- திருநாமம். (கந்தங்கமழுங் குழலீ)- ["ஸர்வகந்த:"] "ஸர்வகந்த:" என்னுமவனுக்கும் வாஸனையைக் கொடாநிற்கிற பகவத்விஷயவ்யாமோஹத்தை யுடையவரே! இத்தால்-ஸ்வவ்யாமோஹத்தாலே ஈஶ்வரனை வஶீகரித்து, ஆஶ்ரித

ஹேதுவை அருளிச்செய்கிறுர் (தங்கள்இத்யாதி.) ஹேத்வந்தரம் அருளிச்செய்கிறுர் (சூடகம் இத்யாதி.) எம்பெருமானுர் உகக்கையாவது - மாதுகரத்துக்குப் பெரியநம்பி திருமாளிகைக்குத் திருப்பாவை யநுஸந்தாநத்துடனே எழுந்தருள, அப்போது திருக்காப்பைச் சேர்த்திருக்கையாலே அநுஸந்தானத்தைக் கேட்டு அத்துழாய் திருக்காப்பு நீக்கின வளவிலே "இப்பாட்டாகப் பிராட்டியென்று த்யானித்து மோஹித்தார்" என்ற அத்தை நம்பி கேட்டருளி, "உந்துமதகளிறுகாதே" என்று அருளிச்செய்தா ராகையாலே உகந்திருப்ப ரென்றபடி. (கஅ)

ரக்ஷணத்திலே மூட்டி, அவனை எல்லாரும் கொண்டாடும்படி பண்ணுகிறானென்னுமிடம் தோற்றுகிறது. (கடைதிறவாய்) - அவனுடைய பரிமளமும் உன்னுடைய பரிமளமும் காட்டிலெறிந்த நிலாவாகாமே நாங்கள் அநுபவிக்கும்படி, தத்விரோதியான எங்களுடைய அஜ்ஞாநத்தை நீக்காய்.

அஜ்ஞாநம் போகைக்கு ஸத்வோத்தரமான காலமாயிற்றோ வென்ன? -- ஆயிற்றென்ன; 'அதுக்கு அடையாளம் என்?' என்ன; (வந்து எங்கும் கோழியழைத்தனகாண்) - 'ஸத்வோத்தரமான காலமானவாறே ஸர்வதோதிக்கமாக பாகவதர் எழுந்திருந்து பகவத்கைங்கர்யார்த்தமாக ஒருத்தரையொருத்தர் எழுப்பாநின்றார்கள்' என்ன; 'அவர்களை உறங்கவொட்டாமைக்கு நீங்களுண்டே' என்ன; (மாதவிப்பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்) - வேதாந்தங்களிலே வேதாந்தார்த்தங்களை அநுபவியாநிற்கும் நாத்யாமுநர் போலும் பரமபாகவதஸமூஹங்கள் ஸத்வம் தலையெடுத்த பின்பும் உன்னைக் காணாமையாலே நாக்கு ஒட்டினமை தோற்றப் பலகால் கூவாநின்றனகாண்.

இப்படி எழுப்பினவிடத்திலும் எழுந்திராமையாலே ஜாலகரந்த்ரத்தாலே பார்த்து 'பந்தார்விரலி' என்கிறார்கள். 'ஸத்த்வம் தலையெடுக்குந்தனையும் சேதநரைக்கொண்டு லீலாரஸம் அநுபவித்து, ஸத்த்வம் தலையெடுத்தவாறே ஒருகையாலே லீலோபகரணபூதரான சேதநவர்க்கத்தையும், ஒருகையாலே இத்தைக் கொண்டு தன்னை லீலாரஸம் அநுபவிப்பித்த ஈஶ்வரனையும் அணைத்துக்கொண்டு கிடப்பதே! இதென்ன ஐஶ்வர்யம்!' என்கிறார்கள். 'இப்போது எழுந்திருந்துசெய்யவேண்டுவதென்?'என்ன; (உன்மைத்துனன்பேர்பாட)- நீயும் அவனும் பந்தடிக்கையில் உனக்கு அவன் தோற்ற தோல்விக்கு அவன் திருநாமங்களைப் பாட. 'ஆகில், கதவைத்தள்ளி உள்ளே புகுங்கோள்' என்ன; அது கூடாது; (செந்தாமரைக்கையால்) - ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ஸௌகந்த்யங்களாலே தாமரைபோன்ற திருக்கையாலே. இவ்விடத்தில், கையாவது - ஜ்ஞாநம்; "ஞானக்கை தா" என்றாரிறே ஆழ்வார். ஜ்ஞாநத்துக்கு ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ஸௌகந்த்யங்களாவன—இதரவிஷய நிவ்ருத்தி – ஸௌந்தர்யம்; ஸ்வபோக்த்ருத்வநிவ்ருத்தி - ஸௌகுமார்யம்; நிரதிஶய ப்ரேமாத்மகத்வம்-ஸௌகந்த்யம்; இப்படியிருந்துள்ள ஜ்ஞாநத்தாலே (சீரார்வளையொலிப்ப) - நிரந்தர பகவத்ஸம்பந்தத்தாலே பூர்ணங்க

ளாய்ப் பகவத்ஸம்பந்தஸூசகங்களான ரஹஸ்யத்ரயார்த்தங்கள் ப்ரகாஶிக்க. (வந்துதிறவாய்)-நம்முடைய ப்ரயத்நத்தை அபேக்ஷியாமல் நீயே வந்து ஸ்வரூபோபாய புருஷார்த்த விரோதிவிஷயமான தத்தத் அஜ்ஞாநத்தைப் போக்காய். (மகிழ்ந்து) - புருஷார்த்தம் உன்னதாகவேணும். (கஅ)

அ.—பத்தொன்பதாம்பாட்டு. இவள் திறக்கப்புக, 'நம்முடையார்க்கு இவள் திறக்க முற்பட்டாளாகவொண்ணாது'என்றுஇவளைத் திறக்கவொட்டாதே கட்டிக்கொடு கிடக்கிற க்ருஷ்ணனை எழுப்பி, அங்கு மறுமாற்றங்கொள்ளாமையாலே மீளவும் அவனை உணர்த்துகைக்காக அவளை எழுப்புகிறார்கள். இத்தால் - ஆஶ்ரிதர்க்கு மாறி மாறிப் பரிகைக்கு "என்னடியார் அதுசெய்யார்" என்னுமவனும், ["ந கஶ்சிந் நாபராத்யதி"] "நகஶ்சிஞ்நாபராத்யதி" (கநஎ) என்னுமவளும் இருவரும் உண்டென்கை.

மூ.—குத்துவிளக்கெரியக் கோட்டுக்காற்கட்டின்மேல்
மெத்தென்றபஞ்சசயநத்தின்மேலேறிக்
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல்
வைத்துக்கிடந்தமலர்மார்பா வாய்திறவாய்
மைத்தடங்கண்ணினாய் நீயுன்மணாளனை
எத்தனைபோதுந் துயிலெழவொட்டாய்காண்
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய்.

---

பத்தொன்பதாம்பாட்டு.(குத்துவிளக்குஇத்யாதி):"நப்பின்னைகொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா" என்றத்தைக் கடாக்ஷித்து, அவளைக் கட்டிக்கொண்டு கிடக்கிற க்ருஷ்ணனை எழுப்புகிறார்களென்று திருவுள்ளம் பற்றி, கீழ்ப்பாட்டில் நப்பின்னை கதவுதிறக்கைக்கு உத்யோகித்தமை தோற்றியிருக்க, அதுக்கு விரோதமாகக் கட்டிக்கொண்டிருக்கக்கூடுமோ வென்னும் ஶங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு, அவளோட்டைஸம்ஶ்லேஷத்தாலே மயங்கிக் கதவு திறவாமல் உறங்குகையாலேஅதுக்காக நப்பின்னையைஎழுப்புகிறார்களென்று ஸங்கதியிடுகிறார் (இவள் இத்யாதி.) 'நம்முடையார்க்கு' என்றது - இவளைப் புருஷகாரமாகப்பற்றினவர்கள் நம்மையே பற்றினவர்களென்னும் நினைவாலே என்றபடி. 'திறக்கவொட்டாதே' என்றது- 'தானே முற்பட்டுத் திறக்கவேணும்' என்னும் நினைவாலே. 'இத்தால்' என்றது - கீழ்ப்பாட்டில் நப்பின்னை திறக்க உத்யோகித்ததாலும், இப்பாட்டில் தானே திறக்க க்ருஷ்ணன் உத்யோகித்ததாய்ச் சொன்னதாலும் என்றபடி.

**பதவுரை:**—'குத்துவிளக்கு எரிய - நிலைவிளக்குக்கள் நாற்புறமும்எரியா நிற்க, கோடு கால் - யானைத் தந்தத்தாற்செய்தகால்களையுடைய, கட்டில்மேல் கட்டிலின்மேலே, மெத்தென்ற பஞ்ச சயனத்தின்மேல் - மிருதுவாயிருப்பதாய் (அழகு-குளிர்த்தி-மார்த்தவம்-பரிமளம் - வெண்மை யென்னும்) ஐந்துவிதகுணங்களையுடைத்தான திருப்பள்ளியிலே, ஏறி - ஏறியிருந்து, கொத்து அலர் பூ குழல் - கொத்துக்கொத்தாக அலராநின்றுள்ள மலர்களையணிந்த திருக்குழலையுடையளான, நப்பின்னை - நப்பின்னைப்பிராட்டியின், கொங்கை மேல் - ஸ்தநங்களின்மேலே, வைத்துக் கிடந்த - வைத்துக்கொண்டு கண் வளர்ந்தருளுகிறவனாய், மலர் மார்பா - அகன்ற திருமார்பையுடையவனே!—வாய்திறவாய் - வாய்திறந்து ஒருவார்த்தை சொல்லவேணும்' என்ன, (அவன் வாயைத்திறந்து மறுமாற்றம்சொல்லப் புக,—'நம்மையொழியத் தாங்களேயெழுப்புவதே!' என்று கண்ணாற்காட்டிய ஸம்ஜ்ஞையைப்பார்த்து),—'மை - அஞ்சநாலங்க்ருதமாய், தட - அகன்றிருக்கின்ற, கண்ணினாய் - கண்களையுடையளான நப்பின்னைப்பிராட்டியே! பிரிவு-(அவன்) விச்லேஷத்தை, எத்தனையேலும் - க்ஷணகாலமாகிலும், ஆற்றகில்லாய்- ஸஹிக்கமாட்டாய்; நீ—, உன்மணாளனை - உன்னுடைய மணவாளப்பிள்ளையான க்ருஷ்ணனை, எத்தனைபோதும் - ஒருக்ஷணகாலமும், துயில் எழ ஒட்டாய் - தூக்கத்தைவிட்டு எழுந்திருக்கவொட்டுகிறதில்லை; (இப்படிச் செய்வது), தத்துவம் அன்று -உன் ஸ்வரூபத்துக்கும் சேராது; தகவு அன்று உன் ஸ்வபாவத்துக்கும் சேராது' (என்கிறார்கள்).

**வ்யா.**—(குத்துவிளக்கெரிய இத்யாதி.) – 'அர்த்திகள் வாசலிலே நிற்க ஓரநுபவமுண்டோ?' என்கிறார்கள். எங்களைப்போலே ஊராரிசைவும் வேண்டாதே, "கீழ்வானம் வெள்ளென்றது" என்கிற பயமுமின்றிக்கே, "நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்" என்று இருட்டுத்தேடவும் வேண்டாதே, பகலை இரவாக்கிக்கொண்டு விளக்கிலே க்ருஷ்ணன்முகத்தைப் பார்த்துக்கொண்டு படுக்

---

பாட்டுக்கெல்லாம் ந்யாயநிஷ்டூரம்சொல்லுகிறார்களென்று தொகுத்துத் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அர்த்திகள் இத்யாதி.) "நப்பின்னைகொங்கைமேல்" என்னுமளவுக்கும் ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி.) 'ஊராரிசைவும் வேண்டாதே' என்றது - நந்தாதிகளெல்லாருங்கூட இவர்களை நோக்கிக்கொண்டிருக்கும்படி மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலே கண்வளர்ந்தருளுகையாலே அர்த்தஸித்தம். 'பகலை இரவாக்கிக்கொண்டு' என்றது - ராத்ரி செய்யும் க்ருத்யத்தை விடிந்தும் செய்கை; அதாவது - விடிந்தும் விளக்குவைத்துக்கொண்டு ஸம்ச்லேஷித்திருக்கை. நந்தர் மருமகளாகையால் விளக்கு உண்டாயிருக்கை அர்த்தஸித்தமாயிருக்கவும், "குத்துவிளக்கெரிய" என்று இவர்கள் சொன்னதுக்கு விளக்கிலே க்ருஷ்ணன்முகத்தைப் பார்த்துக்கொண்டு, அத்தால் வந்த அழகின்மிகுதியை

கையிலேகிடக்கப்பெறுவதே! இதென்ன ஐஶ்வர்யம்!' என்கிறார்கள். [''ஶதீவராஸஞஜத'] ''அதீவரா௨ஸூ௱ஸு௱ஹெ'' (கசஅ) என்று, இவள் அவனுக்கும் ப்ரகாஶகமான விளக்காயிருக்க ஓர் நிலைவிளக்கு உண்டாவதே! (கோட்டுக்கால் கட்டில்மேல்)-குவலயாபீடத்தின் கொம்பைப் பறித்துக்கொண்டுவந்து செய்த கட்டிலிறே. வீரபத்நியாகையாலே இவளுக்கு இதிலல்லது கண் உறங்காது. எங்களைப்போலே ஸ்ரீப்ருந்தாவநம் தேடிப் போகவேண்டாதே உள்ளகத்துக்குள்ளே கூச்சமறக்கிடக்கப்பெறுவதே! இது என்ன பாக்யம்? (கட்டில்) - மாணிக்கத்தாலே செய்யிலும் ''கட்டில்'' என்று ஜாதிப்பேச்சு. (மெத்தென்ற)-நாங்கள் ஆர்த்தைகளாய் வந்து கிடக்க, படுக்கையின் உள்மானம்புறமானம் கொண்டாடிக்கொண்டு படுக்கைபொருந்துவதே! கண்ணுறங்குவதே!(பஞ்சசயநத்தின்மேலேறி)-பஞ்சவிதமான படுக்கையின்மே லேறி. அதாவது - அழகு, குளிர்த்தி, மார்த்தவம், பரிமளம், தாவள்யம் ஆக இவை: இவர்களுக்கு*மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாயிறே இருப்பது. அஞ்சு உருவிட்டுச்செய்த படுக்கை யென்றுமாம்; பஞ்சாலே செய்த படுக்கை யென்னவுமாம். (மேலேறி) -

அநுபவித்துக்கொண்டிருக்கிறாளிறே யென்று கீழ் ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, அவளே விளக்காயிருக்க இதுவும் வேணுமோ வென்னும் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அதீவ இத்யாதி.) 'உண்டாவதே' என்றது - உண்டாகவேணுமோ வென்றபடி. 'கட்டில்கால் குவலயாபீடத்தின் கொம்பேயாகவேணுமோ?' என்ன; அருளிச்செய்கிறார் (வீரபத்நி இத்யாதி.) ''கட்டில்மேல்'' என்றதால் - ஒருஶயநக்ருஹவிசேஷம் அர்த்தஸித்தமாகையாலே, அதுக்கு வ்யாவர்த்தபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி.) நப்பின்னையும் க்ருஷ்ணனும் கண்வளர்ந்தருளுகைக்கு யானைத் தந்தத்தாலே செய்து ஶ்லாக்யமாயிருந்தத்தை ''திருப்பள்ளிக் கட்டில்'' என்று உபசரித்துச் சொல்ல வேண்டியிருக்க, ''கட்டில்'' என்று சொல்லக் கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (மாணிக்கத்தால் இத்யாதி.) ஆண்டாள் கோபிமாரவஸ்தையை ப்ராபித்து அருளிச்செய்கையாலே, க்ருஷ்ணன் திருப்படுக்கையானாலும் அந்தஜாத்யநுகுணபாஷணம் பண்ணினாரென்று கருத்து.''பஞ்சசயனத்தில்''என்றபோதேமார்த்தவம்அர்த்தஸித்தமாயிருக்க ''மெத்தென்ற'' என்றதுக்கு பாவம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி.) மாநம் - அளவு; ஸ்வபாவ மென்றபடி. இவர்கள் இப்படி விஶேஷித்துச் சொன்னத்தாலே இவர்களார்த்தி தோற்றுகைக்கு உபபத்தி அருளிச் செய்கிறார் (இவர்களுக்கு இத்யாதி.) 'அஞ்சுரு' என்றது -பஞ்சவர்ண மென்றபடி. ''மெத்தென்ற பஞ்சசயநத்தின்மேலே - நப்பின்னைகொங்கைமேல் வைத்துக்கிடந்த'' என்னவே, ஏறியிருக்கை அர்த்தஸித்தமாயிருக்கவும், ''ஏறி''

["పాదేనాధ్యారోహతి"] "பாதேநாத்யாரோஹதி" (கசக) என்று நாங்கள் மிதித்தேறினாலன்றோ நீ படுக்கையிலே ஏறுவதென்கை.

(கொத்தலர் பூங்குழல் நப்பின்னை) - திருக்குழலில் ஸ்பர்ஶத்தாலே கொத்துக் கொத்தாக அலராநின்றுள்ள பூவை யுடைத்தான குழல். காலம் அலர்த்துமா போலே, அவனோட்டை ப்ரணயகலஹத்தாலே அலருகை. * வாசஞ்செய் பூங்குழலாளிறே. (கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா) - கொங்கையைத் தன்மேல் வைத்துக் கிடக்கை; கொங்கைமேல் தன்னை வைத்துக்கிடந்த என்னவுமாம். ["నశాస్త్రం నైవచక్రమః"] "நஶாஸ்த்ரம் நைவசக்ரம:" (கநo) என்றிறே ப்ரணயம் இருப்பது. ["పర్యాయేణప్రసుప్తశ్చ"] "பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச" (கருக) என்றும் உண்டிறே; மலையை அண்டைகொண்டு ஜீவிப்பாரைப் போலே; "மலராள் தனத்துள்ளான்" என்னக்கடவதிறே. (மலர்மார்பா) - திருமுலைத் தடங்களூறுத்துகையாலே அகன்றிருந்துள்ள மார்பு. இவ்விக்ருதியால், ["సదైకరూపరూపాయ"] ஸதைகரூபரூபாய" (கருஉ) என்றதோடு விரோதியாதோ? என்னில், - விரோதியாது: அது ஹேயகுணங்களில்லை யென்கிறது. ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் அவிகாரித்வம் அவத்யமித்தனையிறே. (வாய் திறவாய்) -

என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாதேந இத்யாதி.)

'கொத்தலர்''என்றவிடத்தில்-அலராநின்றுள்ள வென்று வர்த்தமாநமாகத்தோன்றுகையாலே திருக்குழலோட்டைஸ்பர்சமே இதுக்கு ஹேதுவென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (திருக்குழல் இத்யாதி.) தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (காலம் இத்யாதி.) நப்பின்னை கதவுதிறக்கப்புக, க்ருஷ்ணன் "இவள் முற்படலாகாது" என்று கட்டிக்கொண்டு வரும்போதையில் ப்ரணயகலஹத்தாலே அலர்ந்ததென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம் 'கொத்தாக அலரக்கூடுமோ?' என்ன, அருளிச்செய்கிறார் (வாசம் இத்யாதி.) பரிமளத்தையுண்டாக்குகிற குழல், ஶ்ரத்தையையுண்டாக்கு மென்றபடி. 'நப்பின்னைகொங்கையை, அவன் பள்ளிகொள்ளும்போது தன்மேலே வைத்துக்கொள்ள ஸம்மதிக்கும்படி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் (நஶாஸ்த்ரம் இத்யாதி.) இரண்டாம் அர்த்தத்தில் ப்ரமாணபூர்வகம் த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (பர்யாயேண இத்யாதி.) கொங்கைமேலே தன்னை வைக்கைக்கு நிமித்தம் ஆதராதிஶயமென்னுமதுக்கு லௌகிகத்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (மலை இத்யாதி.) "கதவு திறவாய்" என்னாதே, "வாய்திறவாய்" என்ற

உன் கம்பீரமான மிடற்றோசையாலே ஒருவார்த்தை சொல்லாய். [''ఆర్తో వా యది వా దృప్తః''] "ஆர்த்தோவாயதிவாத்ருப்த:'' (ருந) என்ற உனக்கு, உன்னாலல்லது செல்லாதே உன்புறப்பாடு பார்த்திருக்கிற எங்களுக்கு ஒருவார்த்தையும் அரிதோ? அவள் புறப்பட வொட்டா ளாகில் கிடந்தவிடத்தே கிடந்து, [''సాభిమానః''] ''ஸாபிமாந:'' (கருச) என்று ஒரு உக்தி நேருகையும் அரிதோ?

(மைத்தடங்கண்ணினாய்) - இவன் மறுமாற்றம் சொல்லப் புக, 'நம்மையொழியத் தாங்களே எழுப்புவதே!' என்று, கண்ணாலே "வாய்வாய்'' என்று வாயை நெரித்தாள். அழகாலும் பரப்பாலும் கண்ணிலே யகப்பட்டவன் அக்கடலைக் கரைகண்டாலிறே நம்மைப் பார்ப்பது. [''నజీవేయం క్షణమపి''] ''நஜீவேயம் க்ஷணமபி'' (கரு ந)

---

துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உன் இத்யாதி.) "அநங்யா'' என்னும்படி ஏகத்ரவ்யம்போலே யிருக்குமவர்களை யெழுப்பிக் கதவுதிறக் கச்சொல்லுகை ராவணாதிகளோபாதியிறே யென்று நினைத்து, கம்பீரமான த்வநியைக் கேட்க ஆசைப்படுகிறார்களென்று கருத்து. "திறவாய்'' என்றத்தை ப்ரார்த்தநாபரமாக்கி ஒருயோஜனை அருளிச்செய்து, திறவாமல் போனாலென்று வ்யதிரேகபரமாக்கி உபாலம்பம் தோற்றத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆர்த்தோவா இத்யாதி.) [''ఆర్తో వా యది వా దృప్తః। పరేషాం శరణాగతః। అరిః ప్రాణాన్ పరిత్యజ్య రక్షితవ్యః కృతాత్మనా'' ''] "பரேஷாம்ஶரணாகத:| அரி:ப்ராணாந்பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:க்ருதாத்மநா'' என்று - ஶத்ருவிஷயத்தில் ஆர்த்த அநார்த்தவிபாகமற ரக்ஷிக்கும் உனக்கு ஆர்த்தைகளாயிருக்கும்அபலைகள்விஷயத்தில்ஒருவார்த்தையும் துர்லபமாக வேணுமோ? என்று கருத்து. 'அவள் புறப்படவொட்டாளாகில்' என்றது - அவள் போக்யதை உன்னைப்புறப்படவொட்டாதே போய்த்தாகிலென்றபடி. நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனாய் அவள் போக்ய தையிலே குமிழ்நீருண்டிருக்குமவனுக்கு வார்த்தையும் சொல்லக்கூடா தென்று தங்களுக்கு போக்யதை இடைச்சுவராகத் தோற்றிற்றாகிலும்அவள் மார்விலிருந்தே ஆர்த்தைகளான எங்களுக்கும் ஶோகநிவ்ருத்திக்கு ஒரு வார்த்தைமாத்ரம் சொன்னாலாகாதோ? என்று இவ்வாக்யத்துக்குக் கருத்து.

"நப்பின்னாய்'' என்று ஸம்போதிக்கலாயிருக்க, "மைத்தடங்கண்ணினாய்'' என்று சொன்னவர்களுடைய உட்கருத்தை அருளிச்செய்கிறார் (இவன் இத்யாதி.) 'நெரித்தாள்' என்ற அநந்தரம் "ஆகையாலே வாய்திறவாதிருக்க வேணும்'' என்று சேஷம். 'அவள் கண்ணாலே வாய்நெரித்தவாறே அவன் வாய்திறவாதிருக்க வேணுமோ?' என்ன, அருளிச்செய்கிறார் (அழகாலும் இத்யாதி.) 'நம்மைப்பார்ப்பது' என்றது-நம்முடைய க்லேஶத்தைப் பார்த்து

என்னப்பண்ணும் கண்ணிறே. "மையிட்டெழுதோம்" என்றிருக்கிற எங்களையும் மையிடப்பண்ணினலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது? உன்னுடைய கண்ணிலழகும் பெருமையும் எங்கள்பேற்றுக்கு உடலென்றிருந்தோம்; அது இழவுக்கு உடலாவதே!

(நீ) - அவனைப் பெறுகைக்கு அடியான நீ; அவனை விலக்கக் கடவையோ? (உன்மணாளனை) - ["𑌗𑍋𑌪𑍀𑌜𑌨𑌵𑌲𑍍𑌲𑌭𑌃"] "கோபீஜநவல்லபः" (கருசு) என்றும், ["𑌲𑍋𑌕𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑍍"] "லோகபர்த்தாரம்" (கருள) என்றும் சொல்லுகிற பொதுவை யொழிய உனக்கே ஸ்வம்மாய் நீ புருவம் நெறித்தவிடத்திலே கார்யஞ் செய்யும்படி பவ்யனயிருக்கும் இருப்பு எங்களுக்கு உடலென் றிருந்தோம்; அங்ஙனன்றிக்கே இனி உனக்கே சேஷமென் றிருக்கிறே மென்கிறர்கள். (எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்) - ஒருக்ஷணமும் அவனை எழுந்திருக்கவொட்டுகிறதில்லை. புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுவதி.

(எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்) - அது உன்குறையோ? அவனை க்ஷணகாலமும் பிரியமாட்டாத உன்னுடைய பலஹாநியின் குறையன்றோ? "அகலகில்லேனிறையும்" என்று க்ஷண

---

வார்த்தைசொல்வது என்றபடி. ["𑌨 𑌜𑍀𑌵𑍇𑌯𑌮𑍍"] "நஜீவேயம்" என்றதுக்கு, ["𑌵𑌿𑌨𑌾 𑌤𑌾𑌮𑌸𑌿𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑌾𑌮𑍍"] "விநாதாமஸிதேக்ஷணாம்" என்னுமளவும் விவக்ஷிதம். "மைத்தடங் கண்ணினய்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறர் (மைஇத்யாதி.) பூர்வ தாத்பர்யவிவரணம் (உன்னுடைய இத்யாதி.)

"மணாளனை" என்ன அமைந்திருக்க, "உன்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (கோபீஜநேத்யாதி.) "எத்தனை" என்றது - எவ்வளவென்றுய், அல்பகாலமென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (ஒருக்ஷணமும் இத்யாதி.) எழுந்திருக்கவொட்டாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறர்(புணர்ச்சிக்குஇத்யாதி.)ஸம்ஶ்லேஷித்திருக்கும்போதேவிச்சித்ய புநஸ்ஸம்ஶ்லேஷிக்குமதுக்கும் அஞ்சுகையாலே ஒரு க்ஷணமும் எழுந்திருக்க வொட்டா யென்று தாத்பர்யம்.

"பிரியாய்" என்னுதே, "பிரிவாற்றகில்லாய்" என்று - பிரிவை ஸஹிக்கமாட்டா யென்கையாலே, அதுக்குச்சேரத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (அது இத்யாதி.) 'பலஹாநியென்பானென்? உங்களுக்காகவன்றோ நான் இருக்கிறது' என்று அவளுக்குக்கருத்தாக அருளிச்செய்கிறர் (அகலகில்லேன் இத்யாதி.)

கால விஶ்லேஷமும் பொறுக்கமாட்டாமையாலே அவனோட்டை நித்யஸம்யோகம் எங்களுடைய லாபத்துக்கு உடலாகையொழிய விபரீதபலமாவதே!

(தத்துவம் அன்று தகவு)—தத்வம் - ஸத்யம். தகவன்று - தர்மமன்று. எங்களறியாமையில் சொல்லுகிறோமல்லோம்; மெய்யே தர்மமன்று. (தகவு - தத்துவமன்று) - ["పాపానాం వా శుభానాం వా"] "பாபாநாம்வாஶுபாநாம்வா" (ருள) என்னும் உனக்கு ["అహంత్వాసర్వసంశ్రిత"] "ஸுஹ்ருத்வாஶரணம்ஸம்வெ்ரு" (கருஅ) என்ற அவனில் வாசியில்லை யென்றிருக்கிறோம். அதவா, (தத்துவ மன்று) - தத்வம் - ஸ்வரூபம். உன் ஸ்வரூபத்துக்கும் போராது. (தகவன்று) - உன்னுடைய ஸ்வபாவத்துக்கும் போராது. உன்னுடைய புருஷகாரபாவத்துக்கும் போராது; க்ருபைக்கும் போராது. (கசு)

## ஸ்வாபதேஶ வ்யாக்யானம்.

அ.—பத்தொன்பதாம்பாட்டு. (குத்துவிளக்கு இத்யாதி.) இப்பாட்டில்புருஷகாரபூதையான பிராட்டிகதவுதிறக்கப்புக, 'நம்முடையார்க்கு இவள் முற்படுவதே!' என்று அவளை எழுந்திருக்கவொட்டாமல் கட்டிக்கொண்டு கிடக்கிற ஈஶ்வரனை எழுப்பி, அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே மீளவும் அவள்தன்னையே எழுப்புகிறார்கள்.

வ்யா.—(குத்துவிளக்கெரிய) - ஜ்ஞானம் ப்ரஜ்வலிக்க. (கோட்டுக்கால் கட்டில் மேல்) - சதுர்த்தந்தியான குவலயாபீடத்தினுடைய தந்தங்களாலே செய்யப்பட்ட கால்களையுடைய கட்டில்மேல்; இத்தால் - சதுர்விதகர்த்ருத்வ மூலமான அஹங்காரகார்யமான ஶேஷத்வேகர்த்ருத்வம் ஜ்ஞாத்ருத்வேகர்த்ருத்வம் கர்த்ருத்வேகர்த்ருத்வம் போக்த்ருத்வேகர்த்ருத்வ மாகிற கால்களை யுடைத்தாய், அந்த கர்த்ருத்வ விஷயமான தர்ம அர்த்த காம மோக்ஷங்களாகிற பட்டங்களை யுடைத்தாய்த் ததநுஷ்டாநாபிநிவேஶமாகிற கச்சையை உடைத்தாயிருக்கிற கட்டில்மே லென்கிறது. (மெத்தென்ற பஞ்ச சயநத்

'மெய்யே தர்மமன்று' என்றது - தர்மமன்றென்று சொல்லுகிறது ஸத்யமே என்றபடி. தகவு - க்ருபையானது, தத்துவமன்று - ஸ்வாபாவிகமன்றென்று சப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாபாநாம் இத்யாதி.) நிர்க்ருணராகச்சொல்லப்பட்ட பெருமாளுக்கும் க்ருணவதியாகச் சொல்லப்பட்ட உனக்கும் வாசியில்லையென்று கருத்து. ஸ்வரூப ஸ்வபாவங்களை அடைவே விவரிக்கிறார் (உன்னுடைய இத்யாதி.) (கசு)

தின் மேலேறி) - ஶேஷத்வாதி கர்த்ருத்வ ராஹித்யத்தாலே ம்ருது வான அர்த்தபஞ்சகஜ்ஞாநமாகிற படுக்கைமே லேறி.

(கொத்தலர் பூங்குழல் இத்யாதி) - வர்க்கம்வர்க்கமாக விகஸித ஜ்ஞாநரான ஆத்மாக்களாகிற புஷ்பங்களையுடைய பகவத்விஷய ஸ்வவ்யாமோஹமாகிற அளகபாரத்தையுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய போகோபகரணமான பக்தியை ஸ்வவிஷயத்திலே வைத்துக்கொண்டு, அத்தால் விகஸிதஹ்ருதயனானவனே! (வாய் திறவாய்) - நீ வாய்திறந்து ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும் என்றவாறே; அவன் வாய்திறக்கப் புக;

அவளை, 'நீ க்ரமம்தப்பிநடப்பதே!' என்று கண்ணாலே அதட்ட, அவனை எழுப்புகைக்காக மீளவும் அவளை எழுப்புகிறார்கள்:—(மை த்தடங்கண்ணினாய்) - ஶாஸ்த்ரஸத்வமாகிற அஞ்ஜநத்தையுடைத்தா கையாலே விஶ்ருங்கலமான ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமுடையவளே! (நீ)- ஸ்வரூபயாதாத்ம்யதர்ஶிநியான நீ. (உன்மணாளனை) – உனக்கு வல்லபனான க்ருஷ்ணனை. (எத்தனைபோதும் துயிலெழ வொட்டாய் காண்) - அத்யல்பகாலமும் நித்ராப்ரதமான படுக்கையில்நின்றும் எழுந்திருக்கவொட்டுகிறிலை. ஒட்டுதல் - ஸம்மதித்தல்.

ஏனென்னில்,-(எத்தனையேலும் பிரிவாற்றகில்லாய்)-ஸம்ஶ்லேஷார்த்தமான விஶ்லேஷமும் நீ பொறுக்குகிறிலை; அது உன்குற்றமோ? உன் பலஹாநியின் குறை. ஆல் - ஆஶ்சர்யே.

(தத்துவமன்று தகவு) – ஆகிலும், புருஷகாரபூதையான உனக்கு எம்பெருமானை நம்மோடே சேரவொட்டாமல்பண்ணுகை ஸ்வரூப மன்று. (கக)

அ.—இருபதாம்பாட்டு. "அவனுக்கும் எங்களுக்கும் அடியான நீ எங்களை நீராட்டுவுதி" என்று க்ருஷ்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும் கூட எழுப்புகிறார்கள்.

---

இருபதாம்பாட்டு.(முப்பத்துமூவர் இத்யாதி) "உன்மணாளனை-எம்மை நீராட்டு- விமலா துயிலெழாய்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார் (அவனுக்கும்இத்யாதி.) கீழ்ப்பாட்டில் க்ருஷ்ணனையும்

மூ.—முப்பத்துமூவரமரர்க்குமுன்சென்று
கப்பந்தவிர்க்குங்கலியே துயிலெழாய்
செப்பமுடையாய் திறலுடையாய் செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா துயிலெழாய்
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல்
நப்பின்னைநங்காய் திருவே துயிலெழாய்
உக்கமுந்தட்டொளியுந் தந்துன்மணாளனை
இப்போதே யெம்மைநீராட்டேலோரெம்பாவாய்.

**பதவுரை:**—(துயிலுணர்த்துமவர்கள் க்ருஷ்ணனை நோக்கி),—'முப்பத்து மூவர் அமரர்க்கு -முப்பத்துமூன்று வகையான தேவர்களுக்கு, முன் - (துன்பம் வருதற்கு) முன்னே, சென்று - (அவர்கள் நினைத்தவிடத்திற்) சென்று,கப்பம் தவிர்க்கும்-(அவர்கள்) நடுக்கத்தைப் போக்கத்தக்க, கலியே- மிடுக்குடையவனே! (நாங்கள் கண்டு வாழும்படி), துயிலெழாய் - திருப்பள்ளியுணர்ந்து வரவேணும்; செப்பமுடையாய்-ஆச்ரிதரைக்காக்குமவனாய், திறலுடையாய் - (அவர்கள் விரோதிகளை யடக்கும்)வல்லமையுடையனாய், செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா - அவர்கள்விரோதிகளுக்குத் துன்பத்தையே பண்ணுகின்றுள்ள பரிசுத்தனானவனே! துயிலெழாய் - துயிலெழுந்து வரவேணும்,' (என்று எழுப்பவும் உணர்ந்து வாராமையாலே புருஷகாரபூதையான நப்பின்னையின் முகத்தாற் செல்வோமென்று அவளை நோக்கி),— 'செப்பு அன்ன - பொற்கலசத்தையொத்த, மெல் முலை - மிகமெல்லிதான ஸ்தநங்களையும், செவ் வாய் - பவளம்போற்சிவந்த வாயையும், சிறு மருங்குல்- நுண்ணிதான இடையையுமுடையளாகிய, நப்பின்னைநங்காய் - ஸ்த்ரீத்வ பூர்த்தியையுடைய நப்பின்னைப்பிராட்டியே! திருவே- பெரியபிராட்டியாரை யொத்தவளே! துயிலெழாய் - துயிலொழிந்துவந்து, (எங்கள் நோன்புக்குப் பரிகரமான), உக்கமும் தட்டொளியும் - ஆலவட்டத்தையும் கண்ணாடியையும், தந்து - கொடுத்து, உன் மணாளனை -உன்மணவாளனான க்ருஷ்ணனையும், எம்மை - (விரஹத்தால் மெலிந்த சரீரத்தையுடைய) எங்களையும், இப்போதே - இந்தக்ஷணத்திலேயே, நீராட்டு - ஸம்ச்லேஷிக்கும்படி செய்யவேணும்' என்று இரக்கிறார்கள்.

---

நப்பின்னையையும் எழுப்பியிருக்கவும், மீளவும் இப்பாட்டில் இருவரையும் எழுப்புகைக்கு ஸங்கதி எங்ஙனேயென்னில்;-"துயிலெழவொட்டாய்காண், தகவன்று" என்று பெண்களாற்றாமையாலே நம்மைச் சிலகுற்றங்களைச் சொன்னார்களேயாகிலும் திருவுள்ளம் பார்த்து இடம் பெற்ற போதிலே விண்ணப்பம் செய்யவேணும்' என்று நப்பின்னைப் பிராட்டி பேசாதே பள்ளிகொண்டருள, 'இவளைப்பற்றினாலும் கார்யம் செய்யக்கடவ அவன்

வ்யா.—(முப்பத்துமூவர்)-ரக்ஷணத்துக்கு ஸங்க்யாநியதி யுண்டோ? பஞ்சலக்ஷம்குடியில் பெண்களானால் ரக்ஷிக்கலாகாதோ? ஆர்த்தியே கைம்முதலாக ரக்ஷிக்குமவனல்லையோ? (அமரர்க்கு)-எல்லாவளவிலும் சாவாதார்க்கோ உதவலாவது; உன்நோக்குப் பெறாவிடில் சாகும் எங்களுக்கு உதவலாகாதோ ? முகாந்தரத்தாலே ஜீவிப்பார்க்கோ உதவலாவது; உன்முகத்தாலே ஜீவிப்பார்க்கு உதவலாகாதோ ? ப்ரயோஜநாந்தரபரருமாய் மிடுக்கருமானார்க்கோ உதவலாவது; அநந்யப்ரயோஜநைகளுமாய் அபலைகளுமா யிருப்பார்க்கு உதவலாகாதோ ? (முன்சென்று) - நோவு வருவதற்குமுன்னே சென்று. ஏற்கவே ரக்ஷிக்கக்கடவ நீ நோவுபட்டுவந்த எங்களை ரக்ஷிக்க

---

இவள்தன்னையும் திறக்கவொட்டாதே போகப்ரஸக்தனாய்ப் பேசாதே கிடந்தான்'என்றவாறே 'சிவிட்கென்று கிடக்கிறானாகக் கூடும்' என்றுபார்த்து 'நீ முன்பு ஆர்த்தரக்ஷணம்பண்ணி ஆர்ஜித்த குணங்களெல்லாம் இப்போது எழுந்திராமையாலே யிழக்கக்கிடாய் புகுகிறாய்' என்று சொன்னவிடத்திலும் அவன் வாய்திறவாமையாலே, 'நப்பின்னைப் பிராட்டி திறத்தில் ப்ரணய ரோஷத்தாலே சொன்னவையும் இவனுக்கு அஸஹ்யம்போலேயிருந்தது' என்று பார்த்து, இவளுடைய தேஹகுணங்களையும் ஆத்மகுணங்களையும் சொல்லி யேத்தி, 'அவன் தனக்கு உரியனோ? பரதந்த்ரனானவனை நலிகிறதென்?' என்று, 'எங்களுக்கும் அவனுக்கும் கடவையான நீயே எங்களபேக்ஷிதங்களைத் தலைக்கட்டித் தரவேண்டாவோ?' என்று நப்பின்னைப்பிராட்டியை அர்த்திக்கிறார்களென்று ஆறாயிரத்தில் சொன்ன ஸங்கதி இங்கும் கண்டுகொள்வது.

"முப்பத்துமூவர்" என்றதுக்கு - முப்பத்துமுக்கோடி தேவரென்று ஶப்தார்த்தமாய் "அமரர்" என்றபோதே இது அர்த்தஸித்தமாயிருக்கவும் சொன்னதுக்கு உட்கருத்தை அருளிச்செய்கிறார் (ரக்ஷணத்துக்கு இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) அஷ்டவஸுக்கள், ஏகாதஶருத்ரர், த்வாதசாதித்யர், அஶ்விநிகள் என்று முப்பத்துமூவரென்று ஸங்க்யையாகும். [''ந ம்ரியந்தே இத்யமராঃ''] "ந ம்ரியந்தே இத்யமராঃ" என்ற வ்யுத்பத்தியைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எல்லாவளவிலும் இத்யாதி.) அமரபதத்தில் ரூட்யர்த்தமான தேவத்வத்தைத் திருவுள்ளம் பற்றி, [''முகஜீவிநோ தேவாঃ''] "முகஜீவிநோ தேவாঃ" என்ற ப்ரமாண ப்ரஸித்தமான ஸ்வபாவத்தை நினைத்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (முகாந்தரேத்யாதி.) 'அஷ்டவஸுக்களுடைய 'முகத்தாலே' என்றும் சொல்லுவர்கள். தேவர்களுடைய ஸ்வபாவத்தையும், புல்லிங்கத்தையும்பற்ற மூன்றும் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ப்ரயோஜநாந்தர இத்யாதி.) "கப்பம்தவிர்க்கும்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்

லாகாதோ ? (சென்று) - நீ சென்று உதவக்கடவ உனக்கு, உன்வாசலிலேவந்த எங்களுக்கு உதவலாகாதோ ? உன்பக்கலிலே வருகைமிகை என்னுமவ னல்லேயோ ? * எழுது மென்னுமிது மிகையாயன்றோ இருப்பது ? (கப்பம் தவிர்க்கும்) – "கம்பம்" என்கிற இத்தை "கப்பம்" என்று வலித்துச் சொல்லுகிறது; அதாகிறது - நடுக்கம். கம்பம் தவிர்க்கையாவது - ["దేవాస్సర్వే౽భయాన్వితాః"] "தேவா ஹஸம்வரீத்ருஜஸ்ரு" (கடுக) என்று - அஸுர ராக்ஷஸாதிகளாலே குடியிருப்பும் அகப்பட இழந்து க்லேஶித்த அத்தைத் தவிர்க்கை. நாட்டார் நடுக்கத்தைத் தவிர்க்கக்கடவ நீ எங்களை நடுங்கப் பண்ணுதே கொள்ளாய். துகேநிவ்ருத்தியை ஆசைப்பட்ட தேவர்களுக்கோ உதவலாவது; நீ உணரும்படி காண ஆசைப்பட்டார்க்கு உதவலாகாதோ? (கலியே) - மிடுக்கையுடையவனே ! அபலைகளான எங்களுக்கு உன்மிடுக்கையொழிய உண்டோ? அரணிமையையுடையவனே யென்றுமாம். (துயிலெழாய்) - தேவதைகளுக்குக் குடியிருப்பும் ஜீவநமும் போலே எங்களுக்கு நீ உணரும்படி காண்கை.

(செப்பமுடையாய்) - ஆஶ்ரிதர்க்குச் செவ்வையழியாதிருக்குமவனே! எங்களுக்குச் செவ்வையழியாதிருக்கவேண்டாவோ? செப்பம் - ரக்ஷை யென்றுமாம். (திறலுடையாய்) - திறல் - பராபிபவந ஸாமர்த்யம். அநாஶ்ரிதர்க்கன்றிக்கே எங்களுக்கு அணுகவொண்ணுதிருக்கைக்கோ? (செப்பமுடையாய் திறலுடையாய்) - பாண்டவர்களுக்குச் செவ்வியனாய்த் துர்யோதநாதிகளுக்கு அபிபவநீயனானவனே ! திறல் - மிடுக்காகவுமாம்.

---

செய்கிறார் (துகக இத்யாதி.) "கப்பம்தவிர்க்கும்" என்றபோதே அர்த்தஸித்தமாயிருக்கவும், மிடுக்கை மீளவும் சொன்னதுக்குப் பாவம் அருளிச்செய்கிறார் (அபலைகள் இத்யாதி.) 'அரணிமையை' என்றது - கல்மதிளிட்டாற்போலே யிருக்கும் ஆழ்வார்களால் வந்த அரணை யென்றபடி. இப்பாட்டில், "துயிலெழாய்" என்று இருகால் சொல்லுகை ஆதராதிஶயத்தாலே யென்று திருவுள்ளம்பற்றி, அவ்வாதரம் வருகைக்கு நியாமகமாகக் கீழைக் கடாக்ஷித்துப் பாவம் அருளிச்செய்கிறார் (தேவதைகளுக்கு இத்யாதி.)

செப்பம் - ஆர்ஜவம். "கலியே" என்ற பதத்துக்கு மிடுக்குச்சொன்ன பக்ஷத்துக்குச் சேர, செப்பம்-ரக்ஷையென்று கண்டுகொள்வது. "திறலுடையாய்" என்றதுக்கு உட்கருத்தை அருளிச்செய்கிறார்(அநாஶ்ரிதர்க்கு இத்யாதி.) எங்களுக்கு அணுகவொண்ணுதோ வென்று கருத்து. "கலியே" என்றதுக்கு-அரணிமை சொன்னபக்ஷத்திலே அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (திறல் இத்யாதி.)

(செற்றார்க்கு வெப்பம்கொடுக்கும் விமலா)-நீ ஆஶ்ரிதவிரோதிகளுக்குத் துக்கத்தைப்பண்ணும் "செய்குந்தாவரும் தீமை" இத்யாதி, இப்போது அநுகூலர் பக்கத்தி லாய்த்தோ? "விமலா" என்றது - ஸம்பந்தம் ஒத்திருக்க, ஆஶ்ரிதர்க்காகக் கண்ணற்று அழிக்கவல்ல ஶக்தி. (துயிலெழாய்) - அம்பு எய்யவேணுமோ எங்களுக்கு? எழுந்திருந்து நோக்க அமையாதோ?

(செப்பன்ன மென்முலை) - அவன்பக்கல் மறுமாற்றம் பெருமையாலே புருஷகார பூதையான நப்பின்னைப்பிராட்டியை எழுப்புகிறார்கள். மேல் அவன் அகப்படுஞ் சுழிகள் சொல்லுகிறது. நிதி இட்டுவைக்கும் செப்புப்போலே அவன் கிடக்கு மிடம்; "மலராள் தனத்துள்ளான்" என்னக்கடவதிறே. செப்புப்போலே ஸங்கிவேஶமென்னவுமாம். (மென்முலை) - விரஹஸஹமன்றிக்கே யிருக்கை. (செவ்வாய்) - அவனைத் தனக்காக்கிக்கொள்ளும் ஸ்மிதம்; அந்த முலையிலே யிருந்து அநுபவிக்கும் ஜீவநம். (சிறுமருங்குல்) - அதரத்தைப் புஜிக்கும்போது துணுக்கோடே இருக்கவேண்டியிருக்கை. (சிறு மருங்குல்) – மேலுங் கீழுங் கொண்டு "இடையுண்டு" என்று அறியும்படி பயஸ்தாநமாயிருக்கை. (நப்பின்னை நங்காய்) - பூர்ணையானவளே! பூர்த்தியாகிறது - அநுக்த ஸௌந்தர்யஸமுச்சயம். (திருவே) - "ஓசிந்த வொண் மலராள்" என்னுமாபோலே ஸம்ஶ்லேஷத்தாலே வந்த துவட்சி. (துயிலெழாய்) - நீ

---

அசுரர்பக்கல் செய்யும் செப்பம், அநுகூலரான எங்கள்பக்கலிலே யாய்த்தோ வென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நீ இத்யாதி.) கண்ணற்று - நிர்த்தயனாய்.

"செப்பன்ன" என்றது - செப்புக்கு ஸத்ருஶமென்றாய், அதுதான் கார்யத்தாலே யென்னுதல், ஆகாரத்தாலே யென்னுதல். முந்தினத்தை அருளிச்செய்கிறார் (நிதி இத்யாதி.) இரண்டாவது - (செப்புஇத்யாதி.) ஸ்தநங்களுக்குக் காடிந்யம் சொல்லவேண்டியிருக்க, மார்த்தவம் சொல்லக்கூடாமையாலே தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (விரஹேத்யாதி.) அதராம்ருதபரமாகத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அந்த இத்யாதி.) அவனகப்படும் சுழிகளைச் சொல்லும் ப்ரகரணத்துக்குச் சேர, "நங்காய்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பூர்ணை இத்யாதி.) "திரு" என்றதுக்கு - ஸம்போக ஶ்ரீயையுடையவளென்று ஶப்தார்த்தம் உட்கொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஓசிந்த இத்யாதி.)

உணர்ந்து எங்கள் ஸத்தையை உண்டாக்காய். (திருவே துயிலெழாய்) - பிராட்டியைப்போலே, ஆஶ்ரிதைகளான எங்களுக்காக உணரவேண்டாவோ? ஆஶ்ரிதர்க்காகவன்றோ பத்துமாஸம் உறங்காதிருந்தது.

'எழுந்திருந்து உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?'' என்ன; (உக்கமும் இத்யாதி.) உக்கம் - ஆலவட்டம். தட்டொளி - கண்ணாடி; பறையென்றுமாம். (உன் மணாளனை) - உன்புருவம் நெறித்தவிடத்திலே கார்யஞ் செய்யும்படி பவ்யனானவனை. உக்கத்தோபாதி அவனையும் இவள் தரவேணு மென்கை. உன்மணாளனை இப்போதே எம்மை நீராட்டு என்றுமாம். (இப்போதே) - பிற்றைப்போதைக்கு இராத எங்களை. (எம்மை) - ["ஶுஷ்யந்தி ...."] "வஶுஷீரணி'' (கக௰) என்று விரஹம் தின்ற உடம்பைக் காட்டுகிறார்கள்.(எம்மை) - "பேய்ப்பெண்ணே'' என்றும், "நாயகப் பெண்பிள்ளாய்'' என்றும் தங்களில் தாங்கள் சொல்லு மித்தனை; பேற்றில் வந்தால் எல்லாரும் ஒத்திருப்பார்கள் என்றுமாம். (எம்மை) - எங்களையும் அவனையுங்கூட முழுக்கூட்டவேணும் என்றுமாம். (நீராட்டு)-["........"] "ஞாநாஃவிதரூதாஊதி'' (கக௧) என்னுமாபோலே இவர்களுகப்பது இவள் தந்த க்ருஷ்ணனென்று. பெருமாள், பிராட்டியுடைய ஸௌந்தர்யாதிகள் கிடக்க, ஐயர் பண்ணிவைத்த விவாஹ மென்று உகப்பர்; அதுபோலே, க்ருஷ்ணன்பக்கல் ப்ராப்தியும் போக்யதையும் கிடக்க இவள் தந்த க்ருஷ்ணனென்று உகப்பர்கள். (உ௰)

---

"உக்கமும் தட்டொளியும் - உன்மணாளனையும் - தந்து'' என்று அந்வயித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உக்கத்தோபாதி இத்யாதி.) "மணாளனை'' என்ற ஐகாரம் - அவ்யயமாய், "உன்மணாளனுவான் - உக்கமும் தட்டொளியும் தந்து எம்மை நீராட்டும்படி-துயிலெழாய்'' என்று அந்வயமாகக் கருதித் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (உன்மணாளனை இத்யாதி.) இப்பக்ஷத்தில், "நீராட்டு'' என்றவிடத்தில் அகாரம் கடைக்குறைத்தலாகவிருக்கிறதென்று கொள்வது. "மணாளனைத்தந்து' என்ற பக்ஷத்தில் சேரத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களையும் இத்யாதி.) "தந்து - நீராட்டு'' என்று ப்ரார்த்தனை தோற்றுகையாலே இதுக்கு நியாமகம் அருளிச்செய்கிறார் (ஞாநா இத்யாதி.) கீழ்வாக்யவிவரணம் (பெருமாள் இத்யாதி) (உ௰)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபதாம்பாட்டு. (முப்பத்துமூவர் இத்யாதி.) இப்பாட்டில், மீளவும் எம்பெருமானை எழுப்பி, அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே நப்பின்னைப்பிராட்டியை எழுப்பி, வந்த கார்யத்தை அறிவிக்கிறார்கள்.

வ்யா.—(முப்பத்துமூவர்) - அபரிமிதஸங்க்யாகரான. இத்தால் - துர்லபத்வம் சொல்லுகிறது. (அமரர்க்கு) - ஜ்ஞாநஸங்கோசமில்லாதவர்களுக்கு; ["ஸதா பஶ்யந்தி ஸூரய:"] "ஸதா பஶ்யந்தி ஸூரய:" என்னக்கடவதிறே. (முன்சென்று) - அவர்களுக்கு ப்ரக்ருதி ஸம்ஸர்க்கத்தாலே ஜ்ஞாநஸங்கோசம் வருவதற்கு முன்னே, ரக்ஷகனான தான் அவதரித்துநின்று. (கப்பம் தவிர்க்கும்) - அவர்களுக்கு ஜ்ஞாநஸங்கோச நிபந்தநமாய் வரும் பீதியைப் போக்கடிக்கிற. (கலியே) - ஸாமர்த்யத்தை யுடையவனே! (துயிலெழாய்) - நீ நித்ரையில்நின்றும் எழுந்திருக்க வேணும்.

(செப்பமுடையாய்) - ஆஶ்ரிதர் தன்னை அநுபவிக்கும்படி தான் பாங்கா யிருக்கிறவனே! (திறலுடையாய்) - அநாஶ்ரிதர்க்குக் கிட்ட வொண்ணாதவனே! (செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா)-பாகவதவிரோதிகளுக்கு நடுக்கத்தைக்கொடுக்கும் ஶக்தியோக முடையவனே! இத்தால், பயநிவ்ருத்தி மாத்ரமன்றிக்கே, பயஹேது நிவ்ருத்தியும் ரக்ஷககார்ய மென்றதாய்த்து. (துயிலெழாய்) - நித்ராப்ரதமான படுக்கையில்நின்றும் எழுந்திருக்க வேணும்.

அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே அவனை எழுப்புகைக்காக நப்பின்னைப்பிராட்டியை எழுப்புகிறார்கள்:—(செப்பன்ன மென்முலை இத்யாதி.) - விஷயக்ராஹகமாய் விஷயவிரஹாஸஹிஷ்ணுவாயிருக்கிற பகவத்விஷயபக்தியையும் அவனுக்கு மிகவும் போக்யமான பரமபக்தியையும் விஷயாந்தரவைராக்யத்தையுமுடையையாய்,நப்பின்னையென்கிற திருநாமத்தையுமுடையையாய், ப்ராப்யத்வ புருஷகாரத்வோபயுக்தகல்யாணகுணபூர்ணையான பெரிய பிராட்டியே! நீ படுக்கையில்நின்றும் எழுந்திருக்கவேணும்.

"நான் எழுந்திருந்து உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?" என்ன,—(உக்கமும்இத்யாதி.) உக்கம் – ஆலவட்டம். தட்டொளி - கண்ணாடி. ஸ்வாபதேஶத்தில், கைங்கர்யத்தில் அஹங்காரமமகார

நிவ்ருத்தியும் யதாவஸ்திதஸ்வரூபஜ்ஞாநமும் இவ்விரண்டையுங் கொடுத்து உனக்குப் பவ்யனான ஈஸ்வரனை இந்தக்ஷணத்திலே மற்றைக்ஷணத்துக்குப் பிழையாத எங்களை ஸம்ஶ்லேஷிப்பியென்கிறார்கள். உன்மணாளனையும் தந்து நீராட்டு என்கிறார்களாகவுமாம். இந்த யோஜனையில் பிராட்டிக்கு எம்பெருமான் அத்யந்தவிதேயனென்னு மிடம் தோற்றுகிறது. (உ0)

அ.—இருபத்தோராம்பாட்டு. நப்பின்னைப்பிராட்டி, 'போகத்திலே வந்தால் நானும் உங்களிலே ஒருத்தியன்றோ? நாமெல்லாருங் கூடி க்ருஷ்ணனை அர்த்திக்க வாருங்கோள்' என்ன; அவன் குணங்களிலே தோற்றார் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள்.

மூ.—ஏற்றகலங்க ளெதிர்பொங்கிமீதளிப்ப
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள்
ஆற்றப்படைத்தான்மகனேயறிவுறாய்
ஊற்றமுடையாய்பெரியா யுலகினில்
தோற்றமாய்நின்றசுடரே துயிலெழாய்
மாற்றாருனக்குவலிதொலைந் துன்வாசற்கண்
ஆற்றாதுவந்துன்னடிபணியுமாபோலே
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை:—ஏற்ற கலங்கள் - (சுரந்த பாலை) ஏற்ற கலங்களெல்லாம், எதிர் பொங்கி - எதிரேபொங்கி, மீது அளிப்ப - மேலே வழியும்படியாக, மாற்றாதே - இடைவிடாமல், பால் சொரியும்- பாலைச் சொரியாநிற்பனவாய், வள்ளல்-(பெண்களுங்கூட அணையலாம்படி) உதாரமான, பெரும் பசுக்கள்-

---

இருபத்தோராம்பாட்டு. (ஏற்ற இத்யாதி.) கீழ் நப்பின்னைப் பிராட்டியைப் புருஷகாரமாக அத்யவஸித்து எழுப்பினவர்கள் அவளால்கார்யமில்லையென்று தாங்களே க்ருஷ்ணனை எழுப்புகிறது சொல்லக்கூடாமையாலும், நப்பின்னைப்பிராட்டியைப் பற்றுகை பலவ்யாப்தமாயிருக்குமாகையால் அவளால் காரியமில்லையென்கை சேராமையாலும், இனிமேல் நப்பின்னையை மீளவும் எழுப்புகிற ப்ரஸங்க மில்லாமையாலும், நப்பின்னையும் உங்கள் கார்யம்செய்கிறோமென்று அத்யவஸித்ததாகத் திருவுள்ளம்பற்றி, வார்த்தை சொல்லும்போது தானும் இவர்களோடு ஒருத்தியாகவே சொல்லிக் கடிப்பிக்கும் ப்ரகாரம் தோற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (நப்பின்னை இத்யாதி.) 'தோற்றார் தோற்றபடி' என்றது - தோற்றாராய்த் தாங்கள் தோற்றபடியை யென்றபடி. இதுக்கு "மாற்றாருனக்கு வலிதொலைந்துன் வாசற்கணாற்றாதுவந்துன்னடிபணியுமாபோலே" என்றதிலே நோக்கு.

பருத்த பசுக்களை, ஆற்ற படைத்தான் - தொகையின்றிக்கேயுடையரான நந்தகோபர் பெற்ற, மகனே - பிள்ளையானவனே ! அறிவுறாய் - திருப்பள்ளியுணரவேணும்; ஊற்றம் உடையாய் - (வேதத்தால் ப்ரதிபாதிக்க ப்படுகையாகிற) திண்மையை யுடையனாய், பெரியாய் - (அந்தவேதத்தாலும் அறியப் படாமையாகிற) பெருமையையுடையனாய், உலகினில் - லோகத்தில், தோற்றம் ஆய் நின்ற - ஆஶ்ரிதபக்ஷபாதம் விளங்கும்படி நிற்கிற, சுடரே - தேஜோரூபனானவனே ! துயிலெழாய் - துயிலொழிந்து வரவேணும்; மாற்றார் - ஶத்ருக்களானவர்கள், உனக்கு - உன்வலிமையைக்கண்டு, வலி தொலைந்து - (தங்கள்) வலி மாண்டுபோய், உன் வாசல்கண் - உன் வாசலில், ஆற்றாது - (தங்கள் எளிவரவை நினைத்து) ஸஹிக்கமாட்டாமல், உன் அடி - தேவரீர் திருவடிகளில், வந்து பணியும் ஆ போலே - வந்துவிழுமாபோலே, யாம் - தாஸபூதரான நாங்கள், புகழ்ந்து - ஸ்துதித்து, போற்றி - மங்களாஶாஸநம் பண்ணிக்கொண்டு, வந்தோம் - வந்து ஆஶ்ரயித்தோம் (என்கிறார்கள்.)

வ்யா.—(ஏற்றகலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப) -ஏற்ற கலங்களெல்லாம் எதிரே பொங்கி வழியும்படி. கலமிடாதார் தாழ்வே: இட்ட கலங்களெல்லாம் நிறையும்; ஏலாத கலங்கள் நிறையாது ஒழிகிறது பாலின் குறையன்றே. (ஏற்ற கலங்கள்) - பெருமை சிறுமை யில்லை; கடலை மடுக்கிலும் நிறைக்கு மித்தனை. இவையும் க்ருஷ்ணன் படியா யிருக்கை: அர்த்தியாதார் குற்றமத்தனை போக்கி அவன்பக்கல் குறையில்லை, ஸ்வீகாரமே அமையுமிறே அவனுக்கு.

(மாற்றாதே பால்சொரியும்) - முலைக்கடுப்பாலே, கலமிடுவாரில்லை யென்னு அது தவிராது. (வள்ளல்) - சிலர்க்கு உபகரித்ததாக இருக்கையன்றிக்கே தன் கார்யம் செய்ததாக உபகரிக்கை. க்ருஷ்ணனைப்போலே, பெண்ணுக்கும் பதைக்கும் அணைக்கலாம்

"கலங்கள்" என்னவே அமைந்திருக்க, "ஏற்ற" என்றது, பத்தெட்டின்றிக்கே பஹுத்வம்தோற்ற என்று தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (கலம் இத்யாதி.) "குடங்கள்" என்னாதே, "கலங்கள்" என்று ஸாமாந்யமாகப் பாத்ரங்களென்கையாலே, அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பெருமை இத்யாதி.) க்ருஷ்ணன் குணங்களிலே தோற்றார் தோற்றபடி. சொல்லுமிடத்தில் பசுக்கள்படியைச் சொல்லுவானென்னென்ன; அதுக்கு உட்கருத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு ஈடுபடுகிறார் (இவையும் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) 'இவை' என்றது - பசுக்களை. "மீதளிப்ப - பால்சொரியும்" என்னவே பால் ஸம்ருத்திக்குப் போந்திருக்க "மாற்றாதே" என்பானென்னென்ன; அதுக்கு ப்ரயோஜநம் காட்டுகிறார் (முலை இத்யாதி.) "பால் சொரியும்" என்றத்தாலே - ஔதார்யம் தோற்றியிருக்க, "வள்ளல்" என்ற

படி பவ்யமாயிருக்கை யென்றுமாம். (பெரும்பசுக்கள்) - க்ருஷ்ண ஸ்பர்ஶத்தாலே வளருகையாலே ஶ்ரீஶத்ருஞ்ஜயனைப்போலே யிருக்கை.

(ஆற்றப் படைத்தான்) - "கழியாரும்கனசங்கம்கலந்தெங்கும் நிறைந்தேறி - வழியாரமுத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர்." அதாவது - தொகையின்றிக்கே யிருக்கை. (படைத்தான் மகனே)- அவர்க்கு ஆர்ஜித்து வந்தது, இவன் பிறந்து படைத்த ஸம்பத்து. இத்தால் - ["..."] "வ திம்வி ஶ்ரூவஸ" (கஙஉ) என்கிறதிற்காட்டிலும் ஶ்ரீநந்தகோபர் ஸம்பத்துக்கு இட்டுப்பிறந்த ஏற்றம்; பரமபதம்போலேயும் நாராயணத்வம்போலேயும் தான்தோன்றியன்றே இது. (அறிவுறாய்) - ஸர்வஜ்ஞனவனை உணர்த்தவேண்டியிறே உள்ளுச் செல்லுகிறது. கைப்பட்ட பெண்களைச் சரக்கிலேவாங்கிக் கைப்படாதவர்களைக் கைப்படுத்துகைக்காக உண்டான உபாயாங்ய பரதையாலே எழுப்புகிறார்க ளாகவுமாம்.

(ஊற்றமுடையாய்) - த்ருடப்ரமாணஸித்தனுகை. (பெரியாய்)- ["..."] "அவ்ராவஉநஸாவஸஹ" (கூகூ) என்றும்,

---

துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனைப்போலே இத்யாதி.) இத்தால் - தன்னைக் கொடுக்கை யென்றபடி.

ஆற்ற என்பது - மிகுதியாய், கோஸம்ருத்திக்குப் பரசுரமுகேந த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (கழியாரும் இத்யாதி.) குணங்கள் சொல்லும் ப்ரகரணத்தில் பசுஸம்ருத்தியுண்டானவன் பிள்ளையென்றால் அது ஓரேற்றமோ? என்ன (பதிம் இத்யாதி.) இத்தால் - ஸௌசீல்யாதிகள் சொல்லிற்றாய்த்தென்று கருத்து. பிறவாமல்போனால் இந்த ஸம்பத்து இவனுக்கில்லையோ? என்ன; அருளிச்செய்கிறார் (பரமபதம் இத்யாதி.) இது ஸஹஜமன்றே யென்று கருத்து. 'உள்ளுச்செல்லுகிறது' என்றது - அலாபக்லேஶம் என்றபடி. யோகநித்ரை பண்ணுமவனுகையாலே எழுப்பக்கூடுமென்று தாத்பர்யார்த்தம் அருளிச்செய்கிறார் (கைப்பட்ட இத்யாதி.) 'சரக்கிலே வாங்கி' என்றது - வஸ்துக்களிலே சேர்த்து என்றபடி. உபாயாங்யபரதையாகிற யோகநித்ரை க்ருஷ்ணனுக்கு உண்டாகையாலே எழுப்புகிறார்க ளென்று கருத்து.

ஊற்றத்தை - ஊன்றுதலை, உடையாயென்று சப்தார்த்தமாய், ச்ருதியினுடைய வூன்றுதல் அதின்தாத்பர்யமாய், அத்தால் பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (த்ருடேத்யாதி.) பெருமை - இயத்தயா அறியப்போகாமை யென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணமுகேந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அப்ராப்யேத்யாதி.) யதஃ - யாதொருவனிடத்தினின்று, அப்ராப்ய -

["యస్యామతం తస్య మతమ్"] "யஸ்யாமதம் தஸ்ய மதம்" (௧௯௩) என்றும் அந்த ப்ரமாணங்களுக்கும் தன்னுடைய அவதி காணவொண்ணு திருக்கை.

(உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே) - என்றும் ஓலைப் புறத்திலே கேட்டுப்போகையன்றிக்கே எல்லாருங்காணலாம்படி அஜஹத்ஸ்வபாவனுய்க்கொண்டு அவதரித்து * ஸகலமநுஜநயநவிஷயதாங்கதனுனவனே! (சுடரே) - ஸம்ஸாரிகளைப்போலே பிறக்கப் பிறக்கக் கறையேறுகை யன்றிக்கே, சாணையிலிட்ட மாணிக்கம் போலே ஒளிவிடாநிற்கை. ["స ఉ శ్రేయాన్ భవతి జాయమానః"] "ஸஉ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந:" (௧௯௪) என்றும், ["మానుషీం తనుమాశ్రితం పరం భావమజానన్తః"] "மாநுஷீம் தநுமாஶ்ரிதம் பரம் பாவம

ஸ்வரூபதோகுணதஶ்ச அவதியைக் காணும லென்று அர்த்தம்; யஸ்ய - யாதொருவனுக்கு, அமதம் - இவ்வளவென்று அறியப்பட்டதன்று, தஸ்ய மதம் - அவனுக்கு அறியப்பட்டதென்று இந்தஶ்ருதிக்கு அர்த்தம். வேத புருஷனுக்கும் இவ்வளவென்று அறியப்பட்டதல்லாமையாலே இங்கு ப்ரமாணமாகத் தட்டில்லை.

உலகினில் - ஜநங்களுக்குள்ளே, தோற்றமாய் - அவர்கள் கண்ணுக்கு விஷயமாய் நின்றவனே யென்று ஶப்தார்த்தமாய், தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (என்றும் இத்யாதி.) 'அஜஹத்ஸ்வபாவனுய்' என்றது - உலகினில் பிறந்தவன் என்னுதே, "தோற்றமாய்" என்றத்தாலே பலிதமென்று கண்டு கொள்வது. கறை - கர்மவஶ்யதையால் வந்த மாலிந்யம். கறையேறுகைக்கும் ஒளிவிடுகைக்கும் ப்ரமாணங்களைக் காட்டுகிறார் (ஸ உ ஶ்ரேயாந் இத்யாதி.) "உ" என்றத்தை, "ஶ்ரேயாந்" என்றத்தோடு அந்வயித்து, ["శ్రేయానేవ భవతి"] "ஶ்ரேயாநேவ பவதி" என்ருய், கறையேருமையும் சொல்லப்படுகிறதென்று கருத்து. ["మానుషీం తనుమాశ్రితం - అతఏవ పరమ్భావమ్ - పరత్వసౌలభ్యాది కల్యాణగుణజాతమ్, అజానన్తః, మూఢాః, మామవజానన్తి"] "மாநுஷீம் தநுமாஶ்ரிதம் அதஏவ பரம்பாவம் பரத்வஸௌலப்யாதிகல்யாணகுணஜாதம் அஜாநந்த: மூடா: மாமவஜாநந்தி" என்று அந்வயித்து அர்த்தம் கண்டுகொள்வது. "மாம்" என்றபோதே அவதாரத்தில் திருமேனி தோன்றுகையால், ["మానుషీం తనుమాశ్రితమ్"] "மாநுஷீம் தநுமாஶ்ரிதம்" என்கிறது அங்குச்சொல்லுகை வ்யர்த்தமாகையால் இவனவதாரத்தில் அதிமாநுஷ சேஷ்டிதாதிகளாலே பரத்வ ஸௌலப்யாதிகள் ப்ரகாஶிக்கையாலே

ஜாநந்த:" (௧௨௫) என்றும், "நிலைவரம்பில பல பிறப்பா யொளி வரு முழுநலம்" என்றும் சொல்லக்கடவதிறே.

(ஊற்றமுடையாய்) - ஆஸ்ரிதவிஷயத்தில் பண்ணின ப்ரதிஜ்ஞையை மஹாராஜருள்ளிட்டாரும் விடவேணுமென்னிலும் விடாதே முடியநின்று தலைக்கட்டுகை. (பெரியாய்) - அந்தப்ரதிஜ்ஞா ஸம்ரக்ஷணத்தளவன்றியே யிருக்கும் பல மென்றுமாம். (பெரியாய்) - ஆஸ்ரிதவிஷயத்தில் எல்லாஞ் செய்தாலும் ஒன்றுஞ் செய்யப்பெற்றிலோம் என்றிருக்கை யென்றுமாம்; தன்பேறு யிருக்கை யென்றுமாம்; தன்பெருமைக்கு ஈடாக ரக்ஷிக்குமவ னென்றுமாம். (உலகினில் தோற்றமாய்நின்ற) - கீழ்ச்சொன்ன ஆஸ்ரித பக்ஷபாதம் லோகத்திலே ப்ரஸித்தமாம்படியிருக்கை. அதாவது - ஸிஸுபால துர்யோதநாதிகளுக்கும் பாண்டவர்கள்பக்கல் பக்ஷபாதம் தோற்ற இருக்கை. (சுடரே) - லோகத்திலே தோற்றினபின்பு நிறம்பெற்றபடி. (துயிலெழாய்) – இப்போது உணராமையாலே அந்தக் குணமும் மழுங்கவிறே புகுகிறது.

(மாற்றார் இத்யாதி) - ஸத்ருக்களானவர்கள் உன்மிடுக்குக்குத் தோற்றுப் போக்கடியில்லாமலே உன்திருவடிகளிலேவந்து விழுமா

---

["ஜலஸூர்ஜ்ஜகதி"] "தநூஜாஸ்ரிதழ்" என்னத் தட்டில்லாமையாலும், இந்நிலையிலே பரத்வாதிகள் தோற்றுகை உத்கர்ஷமாகையாலும், அத ஏவ பரம்பாவமென்று அந்வயிக்கையே உசிதமென்று திருவுள்ளம்.

தாத்பர்யாந்தரம் சொல்லுகைக்காகப் புந:ப்ரதீகம் க்ரஹித்து அருளிச்செய்கிறார் (ஊற்றமுடையாய் என்று.) தான்பண்ணின ப்ரதிஜ்ஞா நிர்வாஹத்துக்கு வேண்டினபலத்துக்கும் விஞ்சினதான பலத்தையுடையவனே! என்று இழுக்குச் சேர ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (அந்த இத்யாதி.)["ஷஜ்ஜூ ஜாஜ ஜஜ ஜஜஜஜ"] "ஜஜாஜ தாநுஹநாநுஜஹூஹஸிமணஜூாஸ" என்று - விஞ்சினபலத்துக்கு ப்ரமாணம் அநுஸந்தேயம். "பெரியாய்" என்ற இடத்தில், பெருமை - அதிசயமாய் அத்தை மூன்றுவிதமாக அருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதேத்யாதி வாக்யத்ரயத்தாலே.) 'தன்பேறுயிருக்கை' என்றவிடத்தில் ஆஸ்ரிதவிஷயத்தில் செய்ததெல்லாம் "தன்பேறாக" என்று கூட்டுவது. 'கீழ்ச்சொன்ன' என்றது - "ஊற்றமுடையாய், பெரியாய்" என்ற இரண்டு பததாலும் பலித்த பக்ஷபாத மென்றபடி. கீழ்க்குணங்களைச் சொன்னது துயிலெழுகைக்கு ஹேதுவாகவேண்டி அவர்களுடைய ஹார்த்தஸாவத்தை அருளிச்செய்கிறார் (இப்போது இத்யாதி.)

போலே; மாற்றார் தங்கள்வலி மாண்டுவந்து விழுமாபோலே என்றுமாம். "மாற்றார்" என்று, ஶத்ருக்கள். நாராயணனுகையாலே ஸம்பந்தம் எல்லாரோடும் ஒத்திருக்க இவனுக்கு ஶத்ருக்களுண்டோ ? என்னில்,—ஆஶ்ரிதவிரோதிகள் இவனுக்கு ஶத்ருக்கள். இத்தால், அம்புக்குத் தோற்று எதிரிகள் வருமாபோலே உன் குணங்களுக்குத் தோற்று வந்தோ மென்கை. அவர்களுக்கு முடிந்துபிழைக்கலாம்; குணஜிதர்க்கு அதுக்கும் விரகில்லையிறே. ப்ரம்ஹாஸ்த்ரம் விடவேண்டும்படி பிராட்டிபக்கலிலே அபராதத்தைப்பண்ணி, ["ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:"] "ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி:" (கசுகு) என்று - ஓரிடத்திலும் புகலற்று, ["தமேவ ஶரணம் கத:"] "தமேவ ஶரணம் கத:" (கசுசு) என்று பெருமாள்திருவடிகளிலே விழுந்த காகம் போலே யிருக்கை. ["ஸத்யேந லோகாந் ஜயதி"] "ஸத்யேந லோகாந் ஜயதி" (கசுஎ) என்று - அம்பு பட்டாரோபாதி குணஜிதரென்றதிறே.

(போற்றி) - போற்றுகையாவது - திருப்பல்லாண்டு பாடுகை; பெரியாழ்வாரைப்போலே வந்தோம். (யாம் வந்தோம்) - அவர்

---

உன்வலிக்குத் தொலைந்தென்று சப்தார்த்தம் விவக்ஷித்து அர்த்தம் அருளிச்செய்கிறார் (சத்ருக்கள் இத்யாதி.) மாற்றார் உனக்குத் தோற்று, தங்கள் வலியைத் தொலைந்து என்று அத்யாஹாரம் திருவுள்ளம்பற்றி யோஜநாந்தரம் அருளிச்செய்கிறார் (மாற்றார் இத்யாதி.)

அம்புக்குத் தோற்றவர்களுக்கு அம்பு க்லேசத்தைப் பண்ணுகையாலே வந்துவிழவேணும்; குணங்களுக்குத் தோற்றவர்களுக்கு அங்ஙனே வரவேணுமென்கிற நிர்ப்பந்தமென் னென்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (அவர்களுக்கு இத்யாதி;) நசைமுடியவொட்டாமையாலே வாராதிருக்கவொண்ணாதென்று கருத்து. 'அம்புக்குத்தோற்றபேருண்டோ?' என்ன, அருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாஸ்த்ரம்இத்யாதி.)குணஜிதர்க்குஅம்புபட்டாரை த்ருஷ்டாந்தமாகச் சொன்னதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (ஸத்யேநேத்யாதி.) 'அம்புபட்டாரோபாதி' என்றது - ["யந்நாஷாயாயிஶாத்ருவாந்"] "யந்நாஷாயாயிஶாத்ருவாந்" என்றத்தைக் கடாக்ஷித்து. லோகஶப்தம் ஜநவாசியென்று திருவுள்ளம்பற்றி ('குணஜிதர்' என்றது.) 'குணங்கள்' என்றது - ஸத்ய தாநஶௌர்யங்களைச் சொல்லுகிறதென்று கண்டுகொள்வது.

இத்தால் பலிதார்த்தம் அருளிச்செய்கிறார் (பெரியாழ்வார் இத்யாதி.) "யாம்" என்றதுக்கு - பெரியத்வரையுடைய நாங்களென்று விவக்ஷித்து,

தம்மைப்பேணுதே உன்னைப் பேணினாற்போலே நாங்களும் எங்கள் ஸ்வரூபத்தைப் பாராதே ஆற்றுமை இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையாலே வந்தோம். நசை முடியவொட்டாது, ஆற்றுமை இருந்தவிடத்தே இருக்கவொட்டாதிறே. (யாம் வந்தோம்) - ஶத்ருக்கள் துரபிமாநத்தாலே ["...."] "...." (கூஅ) என்று இருக்குமாபோலே, ஸ்வரூபஜ்ஞாநத்தாலே, ["...."] "தத்தஸ்யஸத்ருஶம்" (கூடு) என்று இருக்கும் நாங்கள், ஆற்றுமை இருக்கவொட்டாமையாலே வந்தோம். (புகழ்ந்து) - எங்களைத் தோற்பித்த குணங்களைச் சொல்லி. (உக)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தோராம்பாட்டு. (ஏற்ற இத்யாதி.) இப்பாட்டில் - நப்பின்னைப்பிராட்டி, பேற்றில் வந்தால் நானும் உங்களில் ஒருத்தியன்றோ? நாமெல்லாரும் கூடி க்ருஷ்ணனை எழுப்புவோம், வாருங்கோளென்ன; அவன் குணத்துக்குத் தோற்றார் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள்.

வ்யா.—(ஏற்ற கலங்கள்) - உபதேஶபாத்ரபூதரான ஶிஷ்யர்கள். (எதிர்பொங்கி மீதளிப்ப) - ஆசார்யோபதேஶத்தாலே பரிபூர்ணஜ்ஞாநரான ஶிஷ்யர்களுக்கு, ஆசார்யனுக்கும் யுக்த்யுபதேஶம் பண்ணும்படி ஜ்ஞாநமானது பொங்கி வழியும்படியாக. (மாற்றுதே)- மாறுமல். (பால்சொரியும்) - பால்போலே போக்யமான ஜ்ஞாநத்தை உபதேஶியாநிற்குமவர்களாய். (வள்ளல்) - ஶிஷ்யவிதேயர்களுமாய். (பெரும்பசுக்கள்) - பகவத்குணநுபவத்தாலே பரிபுஷ்டரான ஶிஷ்யர்களை. (ஆற்றப்படைத்தான்மகனே) - அஸங்க்யாதமாக ஆர்ஜித்துப்படைத்த ஆசார்யனுக்குப் புத்ரவத் விதேயனானவனே! (அறிவுறாய்) - நீ ப்ரபோதத்தை அடையவேணும். (ஊற்றமுடையாய்) - த்ருடப்ரமாணஸித்தனே! ஆஶ்ரிதபக்ஷபாதமுடையவனே! (பெரியாய்) - அபரிச்சிந்ந ஸ்வரூபகுண விபூதிகளை யுடையவனே! (உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே) - இந்தலோகத்தில் சக்ஷுர் விஷயமாம்படி அவதரித்தவனாய், சிரகாலமிருந்து தேஜிஷ்டனானவனே! ["...."] 'ஸஉஶ்ரேயாநுஹவதி

தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அவர்தம்மை இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) உபாயாத்யவஸாய நிஷ்டரான நாங்களும் என்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (சத்ருக்கள் இத்யாதி.)

"யாம்-போற்றி-புகழ்ந்து-வந்தோம்" என்று அந்வயம். (உக)

ஜாயஜா ந:'' என்னக் கடவதிறே. ஆஸ்ரித பக்ஷபாதம் லோகத்திலே ப்ரஸித்தமாம்படி நின்று தேஜிஷ்டனானவனே! என்றுமாம். (துயிலெழாய்) - நீ படுக்கையில்நின்றும் எழுந்திருக்கவேணும். ரக்ஷணம் ப்ரஸக்தமாயிருக்க, ரக்ஷணசிந்தை பண்ணக்கடவதோ? என்று தாத்பர்யம்.

'நீங்கள் ரக்ஷ்யபூதராய் வந்திகோளே, நான் எழுந்திருக்கைக்கு' என்ன,-(மாற்றார் இத்யாதி)-லௌகிகஶத்ருக்களுடைய உன்னுடைய மிடுக்குக்குத் தங்கள்வலி மாண்டு உன்திருவாசலிலே பழைய ராஜ்யத்தைக் கொடுத்து, நீபோவென்றாலும் முன்புத்தை எளிவரவை நினைத்துப் பொறுக்கமாட்டாதே உன்திருவடிகளை ஆஶ்ரயிக்குமா போலே, நாங்களும் உன்னுடைய நிருபாதிகஶேஷித்வத்துக்குத் தோற்று, தேஹாத்மாபிமாநத்தையும் ஸ்வஸ்வாதந்த்ரியத்தையும் அந்யஶேஷத்வத்தையும் ஸ்வாதீநகர்த்ருத்வபோக்த்ருத்வங்களையும் பந்துக்கள்பக்கல் ஸ்நேஹத்தையும் உபாயாந்தரோபேயாந்தரங்களையும் விட்டு, இவற்றை நீ கொடுத்தாலும் பழையது:கத்தைநினைத்து வேண்டோம் என்று உன் திருவாசலிலே வந்து நீயே ஸமஸ்தவித ப்ராப்யங்களும் ப்ராபகங்களுமென்று உன்திருவடிகளை ஸ்துதித்து மங்களாஶாஸநம்பண்ணி வந்து ஆஶ்ரயித்தோம். (உக)

அ.—இருபத்திரண்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டில் தங்களுடைய அபிமாநஶூந்யதையைச் சொல்லிற்று; இப்பாட்டில் - அநந்யார்ஹ ஶேஷத்வம் சொல்லுகிறது.

மூ.—அங்கண்மாஞாலத்தரச ரபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம்
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே
செங்கண்சிறுச்சிறிதே யெம்மேல்விழியாவோ
திங்களுமாதித்தியனு மெழுந்தாற்போல்
அங்கணிரண்டுங்கொண் டெங்கள்மேல்நோக்குதியேல்
எங்கள்மேற்சாப மிழிந்தேலோரெம்பாவாய்.

---

இருபத்திரண்டாம்பாட்டு. (அங்கண் இத்யாதி.) "மாற்றாருனக்கு வலிதொலைந்து" என்றத்தையும், "நின்பள்ளிக்கட்டில்கீழே சங்கமிருப்பார் போல்" என்ற இப்பாட்டில் பாசுரத்தையும் கடாக்ஷித்து அவதாரிகையிடுகிறார் (கீழ்ப்பாட்டில் இத்யாதி.)

**பதவுரை:**—அம் கண் - அழகிய இடமுடைத்தாய், மா ஞாலத்து - பெரிதாயிருந்துள்ள பூமியையாண்ட, அரசர் - ராஜாக்களானவர்கள், அபிமான பங்கம்ஆய் வந்து - ("நமக்குமேற்பட்டாரில்லை" என்கிற) அபிமாநத்தை விட்டுவந்து, நின் பள்ளிக்கட்டில்கீழே - தேவரீருடைய ஸிம்ஹாஸநத்தின் கீழே, சங்கம் இருப்பார் போல் - திரள்திரளாக வந்து ஓலக்கமாகவிருக்குமவர்களைப்போலே, வந்து - (கீழ் பட்டவருத்தமெல்லாம் தீரும்படி) வந்து, தலைப்பெய்தோம் - கிட்டப்பெற்றோம்; கிங்கிணிவாய்ச்செய்த - சிறிது மலர்ந்த, தாமரைப்பூப்போலே - தாமரைப்பூவைப்போல், செம் கண்-(வாத்ஸல்யத்தால்) சிவந்த திருக்கண்கள், சிறுச்சிறிது - கொஞ்சம் கொஞ்சமாக, எம்மேல் விழியாவோ - (ஆஶ்ரிதரான) எங்கள்பக்கல் விழிக்கலாகாதோ? திங்களும் - சந்த்ரனும், ஆதித்தியனும்-ஸூர்யனும், எழுந்தாற்போல் - உதித்தாற்போலே, அம் கண் இரண்டும்கொண்டு - அழகிதான இரண்டுகண்களால், எங்கள்மேல் - எங்களுடைய, சாபம் - (அநுபவித்தே கழியவேண்டும்) வ்யஸநம், இழிந்து - கழிந்துவிடும்படி, எங்கள்மேல் - எங்கள் விஷயத்தில், நோக்குதி - கடாக்ஷிப்பாயாக, ஏல்- அசை.

**வ்யா.**—(அங்கண்) - அழகிய இடம். ப்ரஹ்மாவுக்கும் தன் போகோபகரணங்களோடு அநுபவிக்கலாயிருக்கை. பிபீலிகைக்கும் தன் போகோபகரணங்களோடே அநுபவிக்கலாயிருக்கை. (மா ஞாலத்து அரசர்) - மஹாப்ருதிவியில் ராஜாக்கள். "இப்பரப்பெல்லாம் என்னது" என்று அபிமாநம்பண்ணுகை. "யாவையும் யாவருந் தானும் அமைவுடைநாரணன்" என்கிறத்தைப் பௌண்ட்ரக வாஸுதேவனைப்போலே அநுகரிக்கிறபடி. (அபிமானபங்கமாய் வந்து) - அபிமாநஶூந்யராய் வந்து. ராஜ்யங்களையிழந்து எளிவரவுபட்டு வந்து. (நின் பள்ளிக்கட்டிற் கீழே) - அந்தராஜ்யங்களைக் கொடுத்துப் போங்கோளென்றாலும், பழைய எளிவரவை நினைத்து

---

இப்படி "அங்கண்மாஞாலத்து" என்று அரசரை விஶேஷித்ததுக்கு "அபிமாநபங்கமாய்" என்றதைக் கடாக்ஷித்துப் பாவம் அருளிச்செய்கிறார் (இப்பரப்பு இத்யாதி.) ஞாலத்தில் அழகுக்கும் பரப்புக்கும் ஆசைப்பட்டே தங்களதென்று அபிமாநித்தார்களென்று கருத்து. ராஜாக்கள் பூபதிகளென்று ப்ரஸித்தமாயிருக்க, அவர்கள் பூமியைத் தங்களதென்றிருக்கை அபிமாநமாகவேணுமோவென்ன, அருளிச்செய்கிறார்(யாவையும் இத்யாதி.) "நாரணன் என்கிறத்தை" என்றது - *யாவையும் யாவரும் தானாயிருக்கிற நாராயணனாகையை யென்றபடி. "பௌண்ட்ரகவாஸுதேவனைப்போலே அநுகரிக்கிறபடி" என்றது - இம்மாஞாலமெல்லாம் நாங்களே யென்றிருக்கை யென்றபடி. எளிவரவு-தைந்யம். "கீழ்" என்று இவ்வளவைச்சொல்லாமல், "கீழே" என்ற ஏகாரத்தாலே - கீழேதானேயிருப்பார் ராஜ்யத்துக்குப்

அவை வேண்டா என்று, உன்ஸிம்ஹாஸநத்தின்கீழே. (சங்கமிருப்பார்போல்) - திரளவிருந்து அணுகோலக்கமாக இருக்குமவர்களைப்போலே. அவர்கள் போக்கற்றுப் புகுந்தார்கள், இவர்கள் கைங்கர்யத்துக்குப்புகுந்தார்கள். [“సౌమిత్రిరనుగతః”] “ஸௌமித்ரிரநுகத:” (கசுசு) என்று - இளையபெருமாளைப்போலவிவர்களையும் க்ருஷ்ணகுணம் தோற்பித்து, அடிமையிலே மூட்டிற்று. (வந்துதலைப்பெய்தோம்)-கீழ் எல்லாரையுமெழுப்பிப் பட்ட வ்யஸநமெல்லாம் ஸபலமாம்படி வந்து கிட்டப்பெற்றோம். அநாதிகாலம் இந்தஸம்பந்தத்தை இழந்துபோந்தநாங்கள், இன்றுநிர்ஹேதுகமாகக் கிட்டப்பெற்றோம். [“మన్యే ప్రాప్తాస్స్మ తం దేశం భరద్వాజో యమబ్రవీత్”] “மந்யே ப்ராப்தாஸ்ஸ்ம தம் தேஶம் பரத்வாஜோ யமப்ரவீத்” (கஎ0) என்னுமாபோலே, ஒருபடி வந்து கிட்டப்பெறுவதே! என்கை. [“వానరాణాం నరాణాంచ కథమాసీత్సమాగమః। రామసుగ్రీవయోరైక్యం దేవ్యేవం సమజాయత”] “வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத் ஸமாகம:। ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத” (களக) என்று விஸத்ருஶமான இது ஸங்கதமாகப் பெறுவதே!. ஆக, இந்த

---

போகாரென்றுதோற்றுகையாலே அத்தையருளிச்செய்கிறார் (அந்த இத்யாதி.) “அணுகோலக்கமாக” என்றது - அந்தரங்கமான ஓலக்கமாக என்றபடி. இது “பள்ளிக்கட்டில்கீழ்” என்றத்தைக் கடாக்ஷித்து. அரசர்கள் வரும்போது அபிமாநபங்கமாய்ப் போக்கற்றுவந்தார்களித்தனை; இவர்களைப்போலே குணஜிதராய் அலப்யலாபம்தோற்ற “வந்துதலைப்பெய்தோம்” என்னுமவர்களன்றே; ஆகையாலே, அவர்களை இவர்களுக்கு உபமாநமாகச் சொல்லும்படி எங்ஙனே? என்ன, அருளிச்செய்கிறார் (அவர்கள் இத்யாதி.) இவர்களை ஸௌந்தர்யம் அடிமையிலே மூட்டிற்றாகையாலே, வருகையில்மாத்ரம் த்ருஷ்டாந்தம் என்று கருத்து. “வந்தோம்” என்னாதே, “தலைப்பெய்தோம்” என்று அலப்யலாபம்தோற்ற அருளிச்செய்ததுக்கு ஹாவம் அருளிச்செய்கிறார் (கீழ் இத்யாதி.) ஸ்வாபதேஶாநுரோதேந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அநாதி இத்யாதி.) அகடிதமானது கடிக்கப்பெறுவதே! என்று ஈடுபாடு தோற்ற, மூன்றாம்தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வாநராணாம் இத்யாதி.) [“సమాగమః”] “ஸமாகம:” என்ற அநந்தரம், “என்று பிராட்டி கேட்க” என்று ஶேஷம். ஏவம் ஸமஜாயத - அந்த:புரகார்யத்துக்கு அநர்ஹனான நானும் இப்படி இங்குவரும்படி அங்கு ஐக்யம் உண்டாய்த்தென்று திருவடி அநுஸந்தித்தாற்போலே யென்று கண்டுகொள்வது. கீழ்ச்சொன்ன அந்யாபதேஶஸ்வாபதேஶங்களுக்குச் சேரத் தாத்பர்யங்களை

ராஜாக்கள் தந்தாமுடைய அபிமாநங்களைவிட்டும் க்ரமப்ராப்தமான ராஜ்யாதிகளை விட்டும் அம்புக்குத்தோற்று உன்கட்டிற்காலிலே படுகாடுகிடக்குமாபோலே, நாங்களும் எங்களுடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தை விட்டும், வேறு உண்டான போகங்களையும்விட்டும், உன்னுடைய குணஜிதராய்க்கொண்டு வந்தோம். அதவா, அந்த ராஜாக்களைப்போலே, நாங்களும் அநாதிகாலம் பண்ணிப்போந்த தேஹாத்மாபிமாநத்தை விட்டு, தேஹாத்பரனை ஆத்மாவின்பக்கல் ஸ்வாதந்த்ரியத்தையும் விட்டு, அநந்யப்ரயோஜநராய் வந்தோ மென்னுமாம்.

(கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப் பூப்போலே) - ஆதித்யனைக் கண்டால் அலரக்கடவ தாமரைப்பூப்போலே; எங்களாற்றாமைக்கு அலருமவையிறே இவை: அர்த்திகளைக்கண்டால் அலருமவையிறே இந்தத் தாமரைப்பூ. (செங்கண்) - வாத்ஸல்யத்தாலே சிவந்திருக்கை. உபமாநம் நேர் நில்லாமையாலே உபமேயந்தன்னையே சொல்லுகிறதாகவுமாம். (சிறுச்சிறிதே) - ஒருநீர்ச்சாவியிலே வெள்ளமாகாமே ஸாத்மிக்க ஸாத்மிக்க என்கை. ப்ரதமபரிஸ்பந்

---

அருளிச்செய்யாநின்றுகொண்டு நிகமிக்கிறார் (ஆக இத்யாதிவாக்யத்வயத்தாலே.) 'என்றுமாம்' என்ற அநந்தரம், "என்று சொல்லிற்றாய்த்து" என்று ஒருபதம் அத்த்யாஹரித்துக்கொண்டு, "ஆக" என்றத்தை அந்வயித்துக்கொள்வது.

கிங்கிணியினுடைய - சிறுமணியினுடைய, வாய்போலே தன் வாயைச் செய்யாநிற்கும் தாமரையென்று ஶப்தார்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆதித்யனை இத்யாதி.) "எம்மேல்" என்றதன் முந்தின அர்த்தத்துக்குச்சேர ஆற்றாமையே அலருகைக்கு ஹேதுவாக ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, அதன் இரண்டாம் அர்த்தத்துக்குச் சேர அர்த்தித்வம் அலருகைக்கு ஹேதுவென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அர்த்திகளை இத்யாதி.) "தாமரைப்பூப்போலே" என்ற உபமாநத்தால் சிவப்பு அர்த்தஸித்தமாயிருக்கவும், "செங்கண்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வாத்ஸல்யத்தாலே இத்யாதி.) செந்தாமரைப்பூ இவன் கண்ணின் ஸ்வாபாவிகமான சிவப்புக்கு நேர்நிற்கமாட்டாதபடியாலே, அர்த்தஸித்தமன்றென்று விஶேஷிக்கிறாரென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (உபமாநம் இத்யாதி.) "எம்மேல்" என்றதுக்கு ஆர்த்தைகள் என்னும் பக்ஷத்துக்குச் சேர "சிறுச்சிறிதே" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஒருநீர் இத்யாதி.) 'ஒருநீர்ச்சாவியிலே' என்றது - ஒருநீரில்லாமையால் மிகவும் நொந்துபோன பயிரென்றபடி. "எம்

தமே பிடித்துக் காணவேணு மென்றுமாம். (எம்மேல் விழி யாவோ) - கோடையோடின பயிரிலே ஒருபாட்டம் என்னுமா போலே; சாதகம் வர்ஷதாரையை ஆசைப்படுமாபோலே; "விழி யாவோ?" என்று தங்கள் மநோரதம்.

(திங்களும்இத்யாதி.)-ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணமையும், அநுகூலர்க்குத் தண்ணளி மிக்கிருக்கையும்; அஜ்ஞாநாந்தகாரம் போகைக்கும் உன்னைப்பெறுத விடாய் ஆறுகைக்கும் என்றுமாம். ["ప్రసన్నాదిత్యవర్చసమ్"] 'ப்ரஸந்நாதித்யவர்சஸம்' (உ௮) தண்ணளியும் ப்ரதாபமும்கூடியிறே இருப்பது.(அங்கணிரண்டுங்கொண்டு)- சந்த்ரஸூர்யர்கள் கோபப்ரஸாதங்களுக்கு ஒப்பல்லரென்கை. ["చన్ద్రకాన్తాననం రామమతీవ ప్రియదర్శనమ్"] 'சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்சநம்' (௧௧) என்னக்கடவதிறே. (இரண்டுங்கொண்டு) - முழுநோக்குப் பொறுக்குமளவாறனவாறே "இரண்டும்" என்று சொல்லுகிறார்கள். (எங்கள்மேல்) - உன் நோக்குப் பெறாதே உறு வின எங்கள்பக்கல். (நோக்குதியேல்) - தங்கள்தலையால் கிட்டுவ தொன்றன்றே. (எங்கள்மேல் சாபமிழிந்து) - யாதநாஶரீரம்போலே யும், ஶாபோபஹதரைப்போலேயும், விஶ்லேஷவ்யஸநமே படுகிற

---

மேல்" என்றதுக்கு - ஆர்த்தைகளென்று ஶப்தார்த்தம் விவக்ஷித்து அரு ளிச்செய்கிறார் (கோடை இத்யாதி.) "எம்மேல்" என்றதுக்கு - ஆசைப்படு மவரென்று தாத்பர்யாந்தரம்அருளிச்செய்கிறார் (சாதகம் இத்யாதி.) "விழி யாவோ" என்றது - கண்ணுர்ந்துவிழியாதோ என்றபடி.

• த்ருஷ்டாந்தபலத்தால் கோபப்ரஸாதங்களில் அழகு ஸித்தித்திருக்க வும், "அம்" என்று விஶேஷித்ததுக்கு ஹாவம் அருளிச்செய்கிறார் (சந்த்ர ஸூர்யர்கள்இத்யாதி.) உபமாநபலத்தால் ஸித்தியாத அதிஶயத்துக்காக உபமேயத்துக்கு விஶேஷணமிட்டதுமுண்டோ ? என்ன-அருளிச்செய் கிறார் (சந்த்ரகாந்தாநநம் இத்யாதி;) 'சந்த்ராநநம்" என்று சொல்லாமல், "காந்தாநநம்" என்று விஶேஷித்தாற்போலே யென்று கருத்து. ஆர்த்தை களான தங்கள்மேலே ஸாத்மிக்கைக்கு "சிறுச்சிறிதே' என்று சொல்லி வைத்து "இரண்டுங்கொண்டு" என்று சொல்லக்கூடுமோ? என்ன - அருளிச் செய்கிறார் (முழுஇத்யாதி.) 'தங்கள்தலையால்' என்றது - முழுச்சொல் லாய், தங்களாலே யென்றபடி. இத்தால் - "நோக்குதியேல்" என்ற விடத்தில் சொன்ன தௌர்லப்யம் சொல்லிற்றாய்த்து. 'இழிந்து'

எங்கள் துக்கம். அநுபவித்தே விடவேண்டுகையாலே, "சாபம்" என்கிறது. அன்றியே, விஷஹாரியானவன் பார்க்க விஷந் தீருமா போலே, அவன் நோக்காலே ஸம்ஸாரமாகிற விஷந் தீரும்; ஆகையால், அங்கணிரண்டுங் கொண் டெங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல் சாபம் இழியும் என்று அந்வயம். (உஉ)

## ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—இருபத்திரண்டாம்பாட்டு. (அங்கண்இத்யாதி.) கீழ்ப்பாட்டில்-தங்கள் அபிமான ஶூந்யதையைச் சொல்லி, இப்பாட்டில்-தங்கள் அநந்யார்ஹஶேஷத்வத்தைச் சொல்லுகிறார்கள்.

வ்யா.—(அங்கண் இத்யாதி.)-அழகியதான இடங்களையுடைய மஹாப்ருதிவியை "தன்னது" என்று அபிமாநித்திருக்கிற ராஜாக்கள், அந்த அபிமாநமும் போய்வந்து, உன்னுடைய திருப்பள்ளிக் கட்டில்கீழே ஸங்கம் ஸங்கமாக இருப்பாரைப்போலே, நாங்களும் பக்நாபிமாநிகளாய்க்கொண்டு ஒருபடிப்பட வந்து கிட்டப்பெற்றோம்.

(கிங்கிணி இத்யாதி.)-அரைவட்டத்தில் கிண்கிணிபோலே அர்த்த விகஸிதமான தாமரைப்புஷ்பம்போலேயிருக்கிற சிவந்த திருக்கண் மலர்களைப் பொறுக்கப் பொறுக்க, உன்கடாக்ஷம் பெறுதே உறுவிக் கிடக்கிற நம்மேல் விழியாவோ? அதாவது-தேஹாத்மாபிமாநத்தை நீக்கி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வஸ்வாதந்த்ர்யாபிமாநத்தை நீக்கி, அதுக்குஇசைந்தவாறேஶேஷத்வத்தைஅறிவித்து, அதுக்குஇசைந்தவாறே அந்யஶேஷத்வ நிவ்ருத்தியை உண்டாம்படி பண்ணி, அதுக்கு இசைந்தவாறே ஜ்ஞாத்ருத்வப்ரயுக்தமான ஸ்வஸ்மிந்ஸ்வ ஶேஷத்வ நிவ்ருத்தியை உண்டாக்கி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வரக்ஷணேஸ்வாந்வயத்தை நிவர்த்திப்பித்து, அதுக்கு இசைந்தவாறே உபாயாந்தரங்களை விடுவித்து, அதுக்கு இசைந்தவாறே ததேகோபாயனும்படி பண்ணி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வவ்யாபாரத்தில் ஸ்வாதீநகர்த்ருத்வநிவ்ருத்தியைப் பண்ணுவித்து, அதுக்கு

---

என்ற அநந்தரம், "விடும்" என்று அத்யாஹரித்து, அந்வயம் கண்டு கொள்ளக் கடவர்களென்று திருவுள்ளம்பற்றி, அர்த்தாநுகுணமாக ப்ரதீகக்ரஹணம் பண்ணுகிறார் (எங்கள்இத்யாதி.) 'அநுபவித்தேவிடவேண்டுகையாலே' என்றது - அநுபவித்தேவிடவேணு மென்கிறவர்கள் நினைவாலே யென்றபடி. ஸ்வாபதேஶாநுகுணமாகத் தாதபர்யம் அருளிச் செய்கிறார் (அன்றியே இத்யாதி;) "நோக்குதியேல், இழியும்" என்ற பதவாஸனையாலே இவ்வர்த்தம் ஸித்திக்கு மென்று திருவுள்ளம். (உஉ)

இசைந்தவாறே பாரதந்த்ர்யப்ரதிபத்தியைப் பிறப்பித்து, அதுக்கு இசைந்தவாறே ஸமஸ்த கல்யாணகுணபரிபூர்ணனுன தன்னை அநுபவிப்பித்து, அநுபவஜநிதப்ரீதிகாரித கைங்கர்யத்தை உண்டாக்கி, அக்கைங்கர்யத்தில் ஸ்வபோக்த்ருத்வ புத்தியைத் தவிர்ப்பிக்கை. 'முழுநோக்குப் பெறு மள வானவாறே' என்றது - இவ்வளவான பாகம் பிறந்தவாறே என்றபடி. இப்படியல்லது தேஹாத்மாபிமாநிக்குப் பரமபக்தியை யுண்டாக்கிலும் உண்டாகாதிறே.

(அங்கண் இத்யாதி.)-சந்த்ரஸூர்யர்க ளிருவரும் உச்சிப்பட்டாற்போலே யிருக்கிற அழகிய திருக்கண்களிரண்டுங்கொண்டு, இவ்வளவான பாகம் பிறந்த எங்களைக் கடாக்ஷித்தாயாகில்; அதாவது-பரமபக்தியை உண்டாக்குகை. அத்தால், (எங்கள்மேல் சாபமிழிந்து)-மேல் அவஶ்யாநுபாவ்யமாயிருக்கிற விஶ்லேஷவ்யஸநம் தீரும்; ஆகையால், உக்தரீத்யா கடாக்ஷிக்கவேணு மென்று கருத்து. "திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்" என்றது, அவன்கடாக்ஷம் ஸுகரூபமாயும் அஜ்ஞாந நிவர்த்தகமாயு மிருக்கையாலே. (௨௨)

அ. — இருபத்துமூன்றும்பாட்டு. [" [illegible] "] "[illegible]" (௧௭௨) என்று-ஸாபராதரைப்போலே ஸாந்த்வநம் பண்ணுமவனுகையாலே, பெண்களை ஸாந்த்வநம் பண்ணியருளினுன் ; அவ்வளவிலே, நாங்கள் வந்த காரியத்தைக் கேட்டருளவேணு மென்கிறுர்கள்.

மூ.—மாரிமலைமுழைஞ்சில்மன்னிக்கிடந்துறங்கும்
சீரியசிங்கமறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர்பொங்கவெப்பாடும்பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்துமுழங்கிப்புறப்பட்டுப்
போதருமாபோலேநீபூவைப்பூவண்ணு வுன்
கோயில்நின்றிங்ஙனேபோந்தருளிக் கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து யாம்வந்த
காரியமாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

---

இருபத்துமூன்றும்பாட்டு. (மாரிஇத்யாதி.) கீழ்ப்பாட்டில் "அங்கணிரண்டுங்கொண்டெங்கள்மேல் நோக்குதியேல்" என்று கடாக்ஷத்தை ப்ரார்த்தித்தவாறே, அவன் ஆபிமுக்யம்பண்ணுவிடில் "யாம்வந்தகாரியமாராய்ந்தருள்" என்னக்கூடாமையால், ஆபிமுக்யம்பண்ணினது அர்த்தஸித்தமென்று திரு

பதவுரை:—மாரி- மழைக்காலத்தில், மலை முழைஞ்சில் - பர்வதகுஹை களிலே, (பேடையும் தானும் ஒன்று என்னலாம்படி), மன்னிக்கிடந்து - பொருந்திப் படுக்கையிற்கிடந்து, உறங்கும் - தூங்காநிற்பதாய்,-சீரிய - வீரத் தன்மையாகிற சீர்மையையுடைத்தான, சிங்கம்-ஸிம்ஹமானது, அறிவுற்று- உணர்ந்துகொண்டும், (எதிரிகள்பக்கல் சீற்றத்தாலே), தீவிழித்து - நெருப் புப்பொறிகள் சிதறும்படி (கண்களை) விழித்துக்கொண்டும், வேரி மயிர் பொங்க - உளைமயிர் சிலும்பும்படி, எப்பாடும் பேர்ந்து - நாலுபக்கத்திலும் புடைபெயர்ந்தும், உதறி - உடம்பை உதறிக்கொண்டும், மூரி நிமிர்ந்து - பெருமை தோன்ற (உடல்) நிமிர்ந்துகொண்டும், முழங்கி - பெரிய சப்தஞ் செய்து கொண்டும், புறப்பட்டு - (குகையினின்றும்) புறப்பட்டு, போதருமாபோலே - வருவதுபோலே, பூவைப்பூவண்ணா - காயாம்பூப்போன்ற திருநிறத்தையுடையவனே! நீ—, உன் கோயில் நின்று - உன்னுடைய கோயில்நின்றும், இங்ஙனே போந்தருளி - இந்த மணிமண்டபத்துக்கு எழுந்தருளி, கோப்பு உடைய - பலவகை வேலைப்பாடுகள்பொருந்தி யிருத் தலையுடைய, சீரிய - (நினைத்தகாரியம் தலைக்கட்டிக்கொடுக்கையாகிற) சீர்மையையுடைத்தான, சிங்காசனத்து - ஸிம்ஹாஸநத்தில், இருந்து-எழுந்

---

வுள்ளம்பற்றி, ஸத்ருஷ்டாந்தமாக அத்தை அருளிச்செய்துகொண்டு, ஸங்கதி யிடுகிறார் (வசஸேத்யாதி.) ஸ்ரீவிபீஷணாழ்வான் "ராவணனாலே அவமாநிதனானேன்" என்று சொல்லிக்கொண்டு ஶரணம்புக்கவாறே, பெருமாள் ["వచసా సాన్త్వయిత్వైనం లోచనాభ్యాం పిబన్నివ। ఆఖ్యాహి మమతత్త్వేన రాక్షసానాం బలాబలమ్"] "வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ। ஆக்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று லங்கையில் அவர்பட்ட எளிவரவையும், ["వధ్యతామ్, వధ్యతామ్"] "வத்யதாம், வத்யதாம்" என்றாற்போலே, இங்கு முதலிகள் பண்ணின சிலுகையும் நினைத்து, இதெல்லாம் தம்மாலே வந்ததாகத் திருவுள்ளம்பற்றி, மதுரபாஷணங்களாலே ஸந்தோஷிப்பித்தாற்போலே, பெண்களும், பனியும் குளிரும் பாராமல் குணவித்தராய்க்கொண்டு அவ்வவக்ருஹங்களிலேபோய் எழுப்புகையும் அவர்கள் பள்ளிகொள்ளுகையும், அப்படியிருக்கவும் எல்லாரையும் கூட்டிக்கொண்டு திருவாசல்காக்கும் முதலிகள் தொடக்கமானாரை எழுப்புகையும், நப்பின்னையையும் தன்னையும் பலபடி எழுப்புகையும், இவையாகிற எளிவரவெல்லாம் நாம் முற்பாடராய் எழுந்திருந்து செய்யாமையாலே வந்ததன்றோ? ஆகையால், நம்மதன்றோ குற்றம் என்று நினைத்து, சிலமதுரபாஷணம்பண்ண, பெண்களும் வந்த காரியத்தைக் கேட்டருளவேணுமென்கிறார்களென்று கருத்து. ஸாந்த்வநம் - நல்ல வார்த்தை. ["సామసాన్త్వే ఉపసమే"] "ஸாமஸாந்த்வே உபஸமே" என்றதிறே.

தருளியிருந்து, யாம் வந்த காரியம் - (அநந்யப்ரயோஜநைகளான) நாங்கள் வந்த கார்யத்தை, ஆராய்ந்து அருள்-விசாரித்து க்ருபைசெய்தருளவேணும் என்று துயிலுணர்த்தினவர்கள் இரக்கிறார்கள்.

வ்யா.—(மாரி மலை முழைஞ்சில்) - வர்ஷாகாலம் ராஜாக்கள் படைவீடுவிட்டுப் புறப்படாதாற்போலே, ஸிம்ஹமும் வர்ஷாகாலம் முழைஞ்சு விட்டுப் புறப்படாது; பெருமாள் வர்ஷாகாலம் மால்யவானிலே எழுந்தருளி யிருந்தாற்போலே. விஶ்லேஷித்தார் கூடுங் காலமுமாய், கூடியிருந்தார் போகரஸம் அநுபவிக்குங் காலமுமாயிருக்க, நாங்கள் உன்வாசலிலேநின்று துவளக்கடவோமோ? என்கை. (மன்னிக்கிடந்து) - மிடுக்காலே ஒருவர்க்கும் அஞ்சவேண்டாமையாலே குவடுபோலே பொருந்தி வீசுவில்லிட்டு எழுப்பினாலும் எழுப்பப்போகாதிருக்கை. (மன்னிக் கிடந்து உறங்கும்) - தன்பேடையோடே ஏகவஸ்து வென்னலாம்படி பொருந்திக்கிடக்கிற என்றுமாம். இங்கு "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பா" என்று நப்பின்னைப்பிராட்டிக்கு ஓராபரண மென்னலாம் படியிறே முலையோடே பொருந்திக்கிடக்கிறபடி. (உறங்கும்) - ஸம்ஸாரிகளுறக்கம்போலே தமோபிபூதியாலன்றே இவனுறக்கம். வ்யதிரேகத்தில் ஆற்றுதார் வருமளவும்: ஆகையால், அவ்வுறக்கத்துக்கு ஸ்மாரகமா யிருக்கை. (சீரியசிங்கம்) - உறக்கத்திலும் க்ஷாத்ரம்ருக

---

"மலைமுழைஞ்சில்" இத்யாதி அமைந்திருக்க, "மாரி" என்று விசேஷித்ததுக்கு பாவம் அருளிச்செய்கிறார் (வர்ஷாகாலம்இத்யாதி.) மலைமுழைஞ்சு - பர்வதகுஹை. த்ருஷ்டாந்தாந்தரம் (பெருமாள் இத்யாதி.) இத்தாலே ப்ராக்ருதத்திலே சொல்லிற்றாய்த்தென்னென்ன; அருளிச்செய்கிறார் (விஶ்லேஷித்தார் இத்யாதி.) மாரிகாலம்போலே மார்கழித் திங்களும் விஶ்லேஷித்தார் கூடவும் ஸம்ஶ்லேஷித்தார் ரஸிக்கவும் யோக்யமான காலமா யிருக்க, நீ எங்கள்காரியம் ஆராய்ந்து ஸம்ச்லேஷிக்கவேண்டாவோ வென்று கருத்து. குவடுபோலே - சிகரம்போலே. வீசுவில்லிட்டு - தனித்தடிபோட்டு. க்ருஷ்ணன் நப்பின்னையோடே கூடியிருக்கை சொல்லுகையால் இவ்வர்த்தத்துக்கு தார்ஷ்டாந்திகாநுகுண்யமுண்டென்கிறார் (இங்கு இத்யாதி.) "மலர்மார்பா" என்றது - மலர்மார்பனன்றோ என்றபடி. "மன்னிக்கிடக்கும் சீரிய சிங்கம்" என்ன அமைந்திருக்க, "உறங்கும்" என்றது, க்ருஷ்ணனுடைய யோகநித்ராஸ்மாரகமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகள் இத்யாதி.) ஸாக்ஷாத் பண்ணுநிற்கச்செய்தேயும், ["ஸுப்தஃ"] "வாஜ்ஞவ:" என்றுசொல்லும் படி வீரஸ்ரீயோடே யிருக்கும்படிக்கு ஸ்மாரகம் "சீரிய" என்றது என்று

ங்கள் மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயையுடைத்தாயிருக்கை. ["ஸம யாஜ்ஃதத்ஸ்ரீஸ:"] "ஸஜயாவொயிதஸ்ரீகாநு" (கஙச) என்னும்படிக்கு ஸ்மாரகமா யிருக்கை.

(அறிவுற்று) - பூஅலர்ந்தாற்போலே காலம் உணர்த்த உணருகை. ஸம்ஸாரிகள் காலம் உணர்த்த உணருவர்கள்; இவன் ஆஶ்ரிதர் ஆர்த்தி யுணர்த்த உணரும். (தீவிழித்து) - ப்ரதம கடாக்ஷஸந்நிபாதத்திலே பேடைக்கும் அருகு நிற்கவொண்ணாதிருக்கை. ஐஶ்வரமான தேஜஸ்ஸாலுமுன் ஒருவர்க்கும் நிற்கவொண்ணாதிருக்கை. (வேரிமயிர் பொங்க) - வேரி - பரிமளம். ஜாத்யுசிதமான கந்தம். உளைமயிர், பொங்க - சிலும்ப. ["ஸர்வகந்த:"] "ஸஶ்ரு மநூ:" (கசரு) - என்னும்படிக்கு ஸ்மாரகமா யிருக்கை. (எப்பாடும் பேர்ந்துதறி) - ஒருகாரியப்பாடு இல்லாமையாலே நாலுபாடும் பேருகிறபடி. (உதறி) - அவயவங்களைத் தனித்தனியே உதறினபடி. (மூரிநிமிர்ந்து) - உடலொன்றாக நிமிர்ந்தபடி. (முழங்கி) - ஸ்வவ்யதிரிக்த ம்ருகங்கள் முழுக்காயாக அவிந்து கிடக்கும்படி. பெண்காள் வந்திகோளோ வென்கை.

---

அதன்தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறக்கத்திலும் இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

"சிங்கமறிந்து" என்னாதே, "உற்று" என்கையாலே, இதன் தௌர்ல்லப்யம் தோன்றுகையால், அதுக்குக் காலமொழிய வேறு காரணாந்தரமில்லையென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (பூஅலர்ந்தாற்போலே இத்யாதி.) ஸிம்ஹம் காலமுணர்த்த உணர்ந்ததாகில் க்ருஷ்ணன் பெண்களாலே உணர்த்தப்பட்டிருக்கையாலே த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திக வைரூப்யமுண்டே; இது கூடும்படி எங்ஙனே என்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகள் இத்யாதி) காலஸ்தானத்தில் இவனுக்கு ஆர்த்தியாகையாலே காரணாந்தரமில்லாமை ஒக்குமாகையாலே சேருமென்று கருத்து. புண்டரீகாக்ஷனை க்ருஷ்ணனுக்குத் தீவிழிக்கக் கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஐஶ்வரமான இத்யாதி.) ஐஶ்வரமான தேஜஸ்ஸென்றது - விரோதிநிரஸநம் பண்ணும்போது நியமனத்தால் வந்த நிக்ரஹ ஸாமர்த்யம் என்றபடி. உளைமயிர் - பிடரிமயிர். சிலும்ப- நெறிக்க. 'ஒருகாரியப்பாடில்லாமையாலே' என்றது - வேறொருகாரியத்துக்காக யத்நம்பண்ண வேண்டாதபடியாலே யென்கை. நாலுபாடு - நாலுபார்ஶ்வமும். இத்தால் - பதறாமல் மெள்ள வெழுந்திருந்து என்றபடி. "முழுக்காயாக" என்றது - காய் முழுமனாக என்றபடி. "முழங்கி" என்றத்தால், தார்ஷ்டாந்திகத்தில் பலித்த அர்த்தத்தை அருளிச்செய்கிறார் (பெண்காள் இத்யாதி.)

மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதருமாபோலே நீபோதர வேணும்; 'ஸிம்ஹமோ நமக்கு த்ருஷ்டாந்தம்?' என்ன,—(நீபூவைப் பூவண்ணா)- காம்பீர்யத்துக்கு த்ருஷ்டாந்தமாக ஒன்றைச் சொன்னோமித்தனை; வடிவழகையும் நிறத்தையும் உன்னைப்போலே பண்ணப் போமோ? பூவைப்பூவின் நிறம் உனக்கு த்ருஷ்டாந்தமானவன்றிறே ஸிம்ஹம் உனக்கு த்ருஷ்டாந்தமாவ தென்னவுமாம்.

(உன்கோயில்நின்று இங்ஙனே போந்தருளி)-["பர்வதாதிவ நிஷ்க்ராந்த: ஸிம்ஹோ கிரிகுஹாஶய:"] "பர்வதாதிவ நிஷ்க்ராந்த: ஸிம்ஹோ கிரிகுஹாஶய:" (கா ரு) என்று-பிராட்டி மங்களாஶாஸநம்பண்ண ஸுமந்த்ரனோடே புறப்பட்டாற்போலே காணவேணும். (போந்தருளி) – சதுர்க்கதியிறே;—நடையிலே, ரிஷபத்தினுடைய வீறும், மத்தகஜத்தினுடைய மதிப்பும், புலியினுடைய சிவிட்கும், ஸிம்ஹத்தினுடைய பராபிபவநஸாமர்த்யமும் தோற்றியிருக்கை. நமக்கு இவையெல்லாம் நம்பெருமாள் நடையழகிலே காணலாம். (இங்ங

---

மூன்று, "பூவைப்பூவண்ணா" என்று வர்ணவிஶேஷத்தையிட்டுஸம்போதிக்கைக்கு ப்ரயோஜநமில்லாமையால், மத்யே ஸம்போதிக்கைக்கு ஶங்காஸமாதாநம் ப்ரயோஜநமாகச் சொல்லிக்கொள்ளலா மென்று திருவுள்ளம் பற்றி, அப்போது கீழே வாக்யஸமாப்தி தோன்றவேண்டுகையாலே "போதர வேணும்" என்று அத்யாஹரித்து வாக்யத்தைப் பூர்ணமாக்கிக்கொண்டு மேலுக்கு அவதாரிகை யிடுகிறார் (மூரிஇத்யாதி வாக்யத்வயத்தாலே.) "நீ" என்ற பதத்தைப்பற்ற 'வடிவழகையும்' என்றது. "பூவைப்பூவண்ணா" என்றது - த்ருஷ்டாந்தார்த்தமென்று விவக்ஷித்து, உன்னுடைய நிறத்துக்கு ஸத்ருஶமாகாதிருக்கிறத்தைச் சொன்னவோபாதி, உன்காம்பீர்யத்துக்கும் ஸத்ருஶமாகாதத்தைச் சொன்னோ மென்னும் அபிப்ராயத்தாலே சொன்னார்களென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (பூவைப்பூஇத்யாதி.) பூவைப்பூ - அதஸீகுஸுமம்.

"போதரவேணும்" என்று ப்ரார்த்தித்து,மீளவும் "போந்தருளி"என்று அநுவதிக்கையால் தோன்றுகிற ஆதரத்தை த்ருஷ்டாந்தமுகேந வெளியிடுகிறார் (பர்வதாதித்யாதி.) வீறு-கர்வம். மதிப்பு- பஹுமாநம். சிவிட்கு-கோபம். பராபிபவநஸாமர்த்யம் - தேஜஸ்ஸு. "இங்ஙனே" என்றதுக்கு - இத் திருமண்டபத்திலே யென்று அர்த்தம் விவக்ஷித்து, "சீரியசிங்காசனம்" என்றபோதே அர்த்தஸித்தமாயிருக்கவும் சொல்லுகைக்கு ப்ரயோஜநம்

னே போந்தருளி) - படுக்கையில் வார்த்தையாய்ப் போகாமே, தனி மண்டபத்தில் வார்த்தையாகவேணும்.

(கோப்புடைய) - சராசரங்களை யடையத் தொழிலாக வகுப்புண்டிருக்கை. உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை என்னவுமாம். தர்மஜ்ஞாநாதிகளாலும், அதர்மஅஜ்ஞாநாதிகளாலும் கோப்புடைய ஸிம்ஹாஸந மென்றுமாம். (சீரிய சிங்காசனம்) - இந்த ஸிம்ஹாஸநத்திலே யிருந்து நினைப்பிட்டது என்றால் அறுதியாயிருக்கை. கடற்கரையில் வார்த்தை யென்னுமாபோலேயும், தேர்த்தட்டில் வார்த்தை யென்னுமாபோலேயும், பெண்களும் க்ருஷ்ணனுமேயா யிருந்து சொல்லிலும் அமோகமாயிருக்கை. அணுவாகிலும் க்ருஷ்ணனோடொத்த வரிசையைக் கொடுக்கவற்றான ஸிம்ஹாஸந மென்றுமாம். (இருந்து) - நடையழகுபோலே இருப்பில் வேண்டற்பாட்டையும் காணவேணு மென்கை. "கண்ணிணை குளிரப் புதுமலராகத்தைப்பருக - இருந்திடாய்" என்னுமாபோலே, உன்னைக் காண விடாய்த்த கண்களின் விடாய் கெட்டு அநுபவிக்கலாம்படி இருந்து.

(யாம் வந்தகாரியம் ஆராய்ந்தருள்) - அநந்யப்ரயோஜனைகளான நாங்கள் வந்த காரியம் ஆராய்ந்தருளவேணும். ["ஃபஸ்ஸெஸ்வஸ்ஸுீதஃ"] "உபவேஶ்யோபவிஷ்டஃ" (எச) என்று ஸ்ரீதண்டகாரண்

---

அருளிச்செய்கிறார்(படுக்கைஇத்யாதி.)போககாலத்தில் உல்லாஸவிஶேஷத்தாற் சொல்லும் வார்த்தையை மந்த்ரிகள் கைக்கொள்ளாராகையாலே, ஓலக்கவார்த்தையே கார்யகரமென்று கருத்து. 'தனிமண்டபம்' என்றது - அத்விதீயமானமண்டபமென்றாய், பெரிய திருமண்டபத்தைச்சொல்லுகிறது.

"கோப்பு" என்று - விசித்ரஸந்நிவேஶவிஶேஷமாய், அத்தை மூன்று வகையாக விவரித்தருளுகிறார் (சராசரேத்யாதி.) முந்தினது - லீலாவிபூதிமாத்ரபரமென்று கருத்து. 'தர்மஜ்ஞாநாதிகளாலும்' என்ற ஆதிஶப்தம் - வைராக்யைஶ்வர்யங்களைச் சொல்லுகிறது. 'அதர்மாஜ்ஞாநாதிகளாலும்' என்ற ஆதிஶப்தம் - அவைராக்ய அநைஶ்வர்யங்களைச் சொல்லுகிறது. இவைகளாகிறஎட்டுத்திருக்கால்களானஸந்நிவேஶத்தை யுடைத்தாயிருக்கை. அறுதியாயிருக்கை - பழுதுபோகாமலிருக்கை. அமோகமா யிருக்கையை த்ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிறார் (கடற்கரை இத்யாதி.) 'கடற்கரையில் வார்த்தை' என்றது - அபயப்ரதாநச்லோகம். 'அணுவாகிலும்' என்றது - அல்பபுருஷனாகிலு மென்றபடி.

"யாம்வந்தகாரிய மாராய்ந்தருள்" என்றதுக்கு அவதாரிகையில் சொன்ன அர்த்தத்தைப் பின்னையும் ஒருத்ருஷ்டாந்தத்தைச்சொல்லிக்கொண்டு விஸ

யத்தில் ரிஷிகளுடைய துக்கநிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப் பெற்றிலோமென்று வெறுத்தாற்போலே, ‘பெண்கள் நோவுபடப் பார்த்திருந்தோ மாகாதே’ என்று வெறுத்து, அவர்களை அழைத்து ‘உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?’ என்ன ; ‘இங்ஙனே சொல்லவொண்ணாது, பேரோலக்கமாக இருந்து கேட்டருள வேணும்’ என்கிறார்கள். ‘ நப்பின்னைப்பிராட்டி பரிக்ரஹமா யிருக்க “சங்கமிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்” என்று அநந்யகதிகளாகச் சொல்லுவதே !’ என்று பொறுத்திலன். அழகர் கிடாம்பியாச்சானை அருள்பாடிட்டு “ஒன்று சொல்லிக்காண்” என்ன ;—[“అపరాధసహస్రభాజనమ్”] “அபராதஸஹஸ்ரபாஜநம்” (கஎச) என்று தொடங்கி, [“అగతిం”] “அகதிம்” (கஎச) என்ன ; ‘நம்மிராமாநுசனையுடையையா யிருந்துவைத்து, “அகதிம்” என்னப் பெறாய் ! ’ என்று அருளிச்செய்தார். ஆகையாலே, இருப்பில் வேண்டற்பாட்டையும் காணவேணும். வந்த காரியத்தை * சிற்றஞ்சிறுகாலைக்கு வைக்கிறார், இப்போது சொல்லாதே. அதுக்கு அடியென் ? என்னில்,— அவஸரத்திலே சொல்ல வேணுமென்று நினைத்து: அதாவது - [“సఖీభిస్సహ...స్సార్థం...”] “ஸஹிஸ்நுஸஹிவெஸாரு ஃஸிஸஸாயாஹிதொடியா” (கஎரு) என்று - அவர்களுடைய ஆர்த்தியையும் காட்டித் திருவடிகளிலே சென்று விழ இரங்குவர்காணென்று நினைத்து வந்த ஸ்ரீபரதாழ்வானுக்கும், [“అభితప్తాంపద...మమ్”] “அபிதஃவாவ

---

தரிக்கிறார்(உபஸ்தேயைரித்யாதி.)‘இங்ஙனே சொல்லவொண்ணாது’ என்றது- ஏகாந்தமாகச்சொல்லவொண்ணாது என்றபடி.‘‘பெண்கள் நோவுபடப்பார்த்திருந்தோமாகாதே’’ என்று இவன் தன்னை வெறுத்துக்கொள்ளுகைக்கு, ஹேது ஏதென்ன,—அருளிச்செய்கிறார் (நப்பின்னை இத்யாதி.) அநந்யகதியென்னப் பொறாமைக்கு ஸம்வாதம்காட்டுகிறார் (அழகர் இத்யாதி.) ‘‘இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய சீரிய சிங்காசனத்திருந்து யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்’’ என்றதுக்குப் பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (ஆகையாலே இத்யாதி.) ‘ஆகையாலே’ என்றது - காண ஆசைப்பட்டிருக்கையாலே என்றபடி. ‘வேண்டற் பாட்டையும்’ என்ற சகாரத்தால் - நடையினழகைச்சொல்லுகிறது. ‘காணவேணும்’ என்ற அநந்தரம் ‘‘என்கிறார்கள்’’ என்று ஶேஷம். இன்னகாரியம் என்று விசேஷித்துச்சொல்லாமல் ஸாமாந்யமாகச் சொன்னதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (வந்தகாரியத்தை இத்யாதி.) இவன் விஷயத்தில் அவஸரம் பார்க்கவேணுமோ ? என்ன, அருளிச்செய்

கொவஃழ்” (களசு) என்று அவன் நினைத்து வந்ததுக்கு அங்கு அவஸரமில்லாமையாலே அநபிபவநீயரானர்; ஆகையாலே அவஸரத்திலே சொல்லக்கடவோமென்றிருந்தார்கள். (ஆராய்ந்தருள்) - 'நீங்கள் என் பட்டிகோள்! என் செய்திகோள்!' என்கை. அதாவது - பெண்களை எழுப்புவது, வாசல்காப்பானை எழுப்புவது, ஸ்ரீநந்தகோபருள்ளிட்டாரை எழுப்புவது, நம்மை எழுப்புவதாய், போர வ்யஸநப்பட்டிகோளாகாதே! என்கை. * எதிர்சூழல்புக்குத் திரியுமவனுக்கு, இவையெல்லாம் தன்குறையாகத் தோற்றுமிறே.

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்துமூன்றும்பாட்டு. (மாரி இத்யாதி.) இப்பாட்டில், ["வசஸாஸாந்த்வயித்வைநம்"] "வசஸாஸாந்த்வயித்வைநம்" என்கிறபடியே 'பெண்காள்! என் செய்திகோள்! என் பட்டிகோள்!' 'பெண்களை எழுப்புவது, கோயில்காப்பான் முதலானாரை எழுப்புவது, நப்பின்னைப்பிராட்டியை எழுப்புவது, நம்மை எழுப்புவதாக பஹுஶ்ரமப்பட்டிகோளே, உங்களுக்கு நான் செய்யவேண்டுவது என்?' என்ன; 'பேரோலக்கமாய் ஸிம்ஹாஸநத்திலேயிருந்து கேட்டருளவேணும்' என்கிறார்கள்.

வ்யா.—(மாரிஇத்யாதி.)- வர்ஷா காலத்தில் பர்வதகுஹையிலே பர்வதஶிகரமென்னலாம்படி, தன் பேடையோடே ஏகத்ரவ்யமென்னலாம்படி கிடந்து உறங்கும் அத்தஶைதன்னிலும் க்ஷுத்ரம்ருகங்கள் முழுக்காயாயவியலாம்படி பராபிபவநஸாமர்த்யத்தையுடைய ஸிம்ஹமானது, காலமுணர்த்த உணர்ந்து, ப்ரதமகடாக்ஷத்திலே தன் பேடைக்கும் அணுகவொண்ணாதபடி க்ரூரமாக விழித்து, ஜாத்யுசிதகந்தம் மயிர்க்கால்தோறும் அபிவ்ருத்தமாக நாலுபார்ஶ்வத்திலும் துல்யமாக எழுந்திருந்து, அவயவங்களைத் தனித்தனியே உதிர்த்து, முன்னும் பின்னும் ஏகரீதியாய் நீண்ட முதுகு உயரும்படி நிமிர்ந்து, கர்ஜித்து, குஹையில் நின்றும் வெளிப்பட்டு வருமாபோலே, நீயும் தமஃப்ரசுரமானகாலத்திலே வேதாந்தங்களில் அதில் ஏகதேஶமென்னலாம்படி கிடந்து; பிராட்டியோடே ஏகவஸ்து என்னலாம்படி கிடந்து என்னவுமாம். யோகநித்ரை

---

கிறார் (அதாவது இத்யாதி.) ஆகையாலே-அநவஸரத்தில்வார்த்தை கார்யகரமல்லாமையாலே. 'அவஸரத்தே' என்றது-ஓலக்கத்தே வந்தபோது என்றபடி. இப்படி வினவுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (எதிர்சூழல் இத்யாதி.) (உங)

பண்ணுகிற்கிறவளவிலும் தமோவித்வம்ஸநஶக்தியையுடைய நீ, [''ꠥꠣꠤ''] ''காலேஶம்ஸதி'' என்கிறபடியே காலமுணர்த்த உணர்ந்து பிராட்டிக்கும் அணுகவொண்ணுதபடி தீயதாகக் கடாக்ஷித்து, [''ꠥꠣꠤ''] ''ஸர்வ கந்த:'' என்கிற தன்னுடைய கந்தம் திருமேனியில்மயிர்க்கால்வழியே எங்கும்பரிமளிக்கும்படி ஜகத்ஸ்ருஷ்டியிலே உத்யோகித்து, தன்னோடு அவிபக்தநாமரூபங்களாய் ஸ்வாவயவங்களான சேதநாசேதநங்களை விபக்தநாமரூபங்களாம்படி பண்ணி, இப்படி ஸ்வாவயவவிஶிஷ்டனுன தான் தண்டாகாரமாய் நீண்டு, பிண்டாகாரமாய் நிமிர்ந்து, மஹாஸம்ப்ரமத்துடனே மஹதாதிரூபேண ப்ரக்ருதியில்நின்றும் வேறுபட்டு வருமாபோலே, பூவைப் பூவண்ணு ! நீ. (உன்கோயில்நின்று இத்யாதி.)-உன்னுடைய திவ்யாந்த:புரத்தினின்றும் திவ்யாஸ்த்தாநமண்டபத்துக்கு எழுந்தருளி. (கோப்புடைய இத்யாதி.) - ஏழுலகுந்தொழிலாக வகுப்புண்டதாய், நினைப்பிட்ட கார்யம் தலைக்கட்டும்படியான சீர்மையையுடைய ஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருந்து, உனக்கு அநந்யார்ஹஶேஷபூதரான நாங்கள் வந்த கார்யத்தை விசாரித்து அருளவேணும்.

ஸஞ்சரணயோக்யமல்லாத ராத்ரி காலத்திலே அரண்மனையில் திவ்யாந்த:புரத்தில் நப்பின்னைப்பிராட்டியோடே ஏகதத்வமென்னலாம்படி படுக்கையிலே சாய்ந்து உறங்கும் அவ்விருப்பிலேதானே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயை யுடையனுய், காலமுணர்த்த உணர்ந்திருந்து அருகிருந்த நப்பின்னைப்பிராட்டிக்கும் அணுகவொண்ணுதபடி க்ரூரமாகத் திருக்கண்களை விழித்துத் திருமேனிகந்தம் மயிர்க்கால்வழியே பரிமளிக்க, நாலுபாடும் ஒக்க எழுந்திருந்து அவயவங்களைத் தனித்தனியே உதறி, நீண்டு நிமிர்ந்து ஸிம்ஹநாதத்தைப் பண்ணி, பூவைப்பூவண்ணு ! நீ இத்யாதி யாகவுமாம். (உங)

அ.—இருபத்துநாலாம்பாட்டு. தாங்கள் அபேக்ஷித்தபடியே செய்தருளக் கண்டு, வந்த கார்யத்தை மறந்து அத்திருப்பள்ளியறை

---

இருபத்துநாலாம்பாட்டு. (அன்று இத்யாதி.) சீரியசிங்காசனத்து இருந்தபின்பு குற்றேவல்செய்கை யாகிற அந்தரங்கவ்ருத்தி கண்டருளவேணுமென்றுசொல்லவேண்டியிருக்க, ''உன்சேவகமேயேத்திப் பறைகொள்ளுகைக்காக யாம்வந்தோம்'' என்று மங்களாஶாஸநமாகிற கார்யாந்தரத்தை இப்போது சொல்லுகை சேருமோவென்னும் ஶங்கையிலே, ஸிம்ஹாஸநத்

யில்நின்றும் திவ்யஸிம்ஹாஸநத்தளவும் நடக்கிறபோதை நடையழகுக்குத் திருப்பல்லாண்டுபாடுகிறார்கள். காணுமளவுமிறே "அதுவேணும் இதுவேணும்" என்பது; கண்டால் அவனுக்குப் பரியுமித்தனையிறே.

மூ.—அன்றிவ்வுலகமளந்தா யடிபோற்றி
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய் திறல்போற்றி
பொன்றச்சகடமுதைத்தாய் புகழ்போற்றி
கன்றுகுணிலாவெறிந்தாய் கழல்போற்றி
குன்றுகுடையாவெடுத்தாய் குணம்போற்றி
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி
என்றென்றுன்சேவகமே யேத்திப்பறைகொள்வான்
இன்றுயாம்வந்தோ மிரங்கேலோரெம்பாவாய்.

பதவுரை:—அன்று - (தன்விபூதியை மஹாபலி அபஹரிக்கத்தேவர்கள் நோவுபட்ட) அன்று, இவ்வுலகம் - இந்தலோகத்தை, (மஹாபலிபக்கல் இரந்து நீரேற்று), அளந்தாய் - இரண்டடியாலே அளந்துகொண்டவனே! அடிபோற்றி - உன் திருவடிகளுக்கு மங்களமுண்டாகக்கடவது; அங்கு சென்று - பிராட்டியைப்பிரித்த பையலான ராவணனிருந்த இடத்திற் போய், தென் - அழகிய கோட்டையையும் அரணையுமுடைத்தான, இலங்கை - லங்கையிலுள்ள ராக்ஷஸரையெல்லாம், செற்றாய் - நிரஸித்தவனே! திறல் போற்றி - உன் திருத்தோள்வலிக்கு மங்களமுண்டாகக்கடவது; சகடம் - ஶகடாஸுரனை, பொன்ற - கட்டுக்குலைந்து உருமாய்ந்துபோம்படி, உதைத்தாய் - உதைத்து முடித்தவனே! புகழ்போற்றி - உன்புகழுக்கு மங்களமுண்டாகக்கடவது; கன்று - கன்றின்வடிவுகொண்டுவந்த வத்ஸாஸுரனை, குணிலா - எறிகருவியாகக்கொண்டு, (விளாவின்வடிவாய்நின்ற கபித்தாஸுரன்மேலே), எறிந்தாய் - எறிந்து இருவரையும் முடித்துப்போகட்டவனே! கழல்போற்றி - (மடக்கின) உன் திருவடிகளுக்கு மங்களமுண்டாகக் கடவது; (இந்த்ரன் பசிக்கோபத்தால் கல்மழைபெய்வித்தவன்று இடையர்க்கும் பசுக்களுக்கும் ஒருநோவுவாராமே), குன்று - கோவர்த்தனமென்னும் மலையை, குடை

---

தில் வந்தபின்பு சொல்லத்தக்க கார்யத்தை மறந்து இவனழகிலே ஈடுபட்டு, இதுவே தங்களுக்குக் கார்யமென்று தோற்றிச் சொல்லுகிறார்களென்று அவதாரிகை அருளிச்செய்கிறார் (தாங்கள் இத்யாதி.) தங்கள் ப்ரயோஜநத்தை மறந்து திருப்பல்லாண்டு பாடக்கூடுமோவென்ன,—அருளிச்செய்கிறார் (காணுமளவும் இத்யாதி.) க்ருஷ்ணனை அநுபவிக்கிறவர்கள் த்ரிவிக்ரமாபதாநத்தைச் சொல்லுவானென்னென்ன; தங்களார்த்திக்கு உதவினது இந்த்ரனுடைய ஆர்த்திக்கு உதவினாற்போலே இருக்கிறதென்றத்தைப் பற்றவாதல், வஸ்த்வைக்யத்தாலேயாதல்.

யா எடுத்தாய் - குடையாக எடுத்து ரக்ஷித்தவனே ! குணம்போற்றி - உன் தண்ணளிக்கு மங்களமுண்டாகக் கடவது; பகை வென்று கெடுக்கும் - விரோதிகளை வேரோடேயழிக்குமதான, நின்கையில் வேல் - உனது திருக்கையிலுள்ள வேலுக்கு, போற்றி - மங்களமுண்டாகக்கடவது; என்று என்று - இந்தப்படியாக, உன்சேவகம் ஏத்தி - உனது வீரசரிதத்தையே ஸ்துதித்து, பறைகொள்வான் - உன்னை யநுபவிக்கைக்காக, யாம் - (பந்துக்களால் நெடுங்காலம் நலிவுபட்ட) நாங்கள், இன்று - பந்துக்களுடையவும் ஊராருடையவும் இசைவுபிறந்த இன்று, வந்தோம் - (எங்களாற்றாமையாலே) வந்தோம்; இரங்கு - க்ருபைசெய்தருளவேணும் என்கிறார்கள்.

வ்யா.—(அன்றிவ்வுலக மளந்தா யடிபோற்றி)- தன் விபூதியை மஹாபலி அபஹரிக்க நோவுபட்டிருக்கிற அன்று; தன்னைப்பிரிந்து நாங்கள் ஆர்த்தியாலே நோவுபட்ட இன்று: ஜகத்தை மஹாபலியினுடைய அபிமாநத்தினின்றும் மீட்ட அன்று; எங்களுடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தினின்றும் மீட்ட இன்று: நாட்டுக்கெல்லாம் தன் திருவடிகளை தூளிதாநம் பண்ணின அன்று; அழகையும் ஶீலத்தையும் எங்களுக்கு தூளிதாநம் பண்ணின இன்று. இதிறே ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் ஸ்ரீ வாமநனுக்கும் ஸாம்யம். (இவ்வுலகமளந்தாய்) - பிராட்டிமார் பூத்தொடுமோபோலே கூசிப்பிடிக்கும் திருவடிகளைக்கொண்டு காடுமேடையும் அகப்பட அளப்பதே! என்கை. அன்று எல்லை நடந்து மஹாபலிபக்கல் நின்றும் பூமியை மீட்டுக்கொண்டாற்போலே, நடையழகைக்காட்டி விஶ்லேஷத்தினின்றும் மீட்டுக்கொண்டா யென்கை. (அடிபோற்றி) -

---

"இவ்வுலகமளந்தாய்" என்ற நிர்த்தேஶத்தாலே தானே பூதகாலம் தோன்றியிருக்க, "அன்று" என்றதுக்குப் பாவம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, "அன்று" என்ற பதம் இன்று என்றத்தையும் காட்டுகையாலே இவை யிரண்டுக்கும் உண்டான ஆகாரத்தை மூன்றுவகையாகக் காட்டுகிறார் (தன் விபூதி இத்யாதி வாக்யஷட்கத்தாலே.) 'தூளிதாநம்' என்றது- தூளிபர்யந்ததாநமென்றாய், பஹுவாக ஜநங்களுக்கு வஸ்துக்களைக் கொடுக்கும்போது அதில் உதிர்ந்த ரேணுக்களையுங்கூட உதறிக்கொடுக்கைஎன்றபடி. க்ருஷ்ணன் ஸிம்ஹாஸநத்தேற வெழுந்தருளும்போது த்ரிவிக்ரமாபதாநத்தைச் சொல்லுகைக்கு நிமித்தம் அருளிச்செய்கிறார் (இதிறேஇத்யாதி.) "இ" என்றதுக்குப் பரிவுதோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிராட்டிமார் இத்யாதி.) "அன்றிவ்வுலகமளந்தாய்" என்ற ஸமுதாயத்துக்கு ஹார்த்தாபிப்ராயத்தை அருளிச்செய்கிறார் (அன்றுஎல்லைநடந்து இத்யாதி.) 'விஶ்லேஷத்தில்நின்றும் மீட்டுக்கொண்டாய்' என்றது -உபலக்ஷணமாய், ஸ்த்ரீத்வாபிமாநத்தினின்று மீட்டுக்கொண்டாயென்று கண்டுகொள்

தாங்கள் சொல்லுமளவிற் புறப்பட்டு ஸுகுமாரமான திருவடிகளைக் கொண்டு உலாவியருளினபடி, திருவுலகளந் தருளின ஆயாஸம் போருமென்று மங்களாஶாஸநம் பண்ணுகிறார்கள். திருவுலகளந் தருளுகிறபோது இரண்டடியிறே இட்டது; இப்போது எங்களுக்காகப் பத்தெட்டடி யிடுவதே! திருவுலகளந்தருளின அன்று, இந்த்ரன் ப்ரயோஜநத்தைக் கொண்டு போனான், மஹாபலி ஔதார்யம்பெற்றுப்போனான், தாங்கள் அன்று உதவப்பெறாத இழவுதீரத் திருப்பல்லாண்டுபாடுகிறார்களென்றுமாம்.(அடிபோற்றி). "உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்னு மவர்களிறே.

(சென்றுஇத்யாதி.) - அழகுக்கு இலக்காகாதாரை அம்புக்கு இலக்காக்கினபடி. (சென்றங்கு)-புலிகிடந்த தூற்றிலே செல்லுமா

வது. உலகளக்கை யென்கிற வ்யாஜத்தாலே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்தருளுகையாகிற தூளிதாநம் பண்ணினாற்போலே எங்களுக்கும் நடையழகைத் தூளிதாநம்பண்ணினாயென்று ப்ரீத்யநுஸந்தாநமாகவும் தாத்பர்யம் கண்டுகொள்வது. இத்தால், "அன்று" என்றதுக்குச் சொன்ன தாத்பர்யத்ரயாநுகுணமாக ஸமுதாயத்துக்குப் பாவம் சொல்லிற்றாய்த்து. ஸிம்ஹாஸநத்துக்கு எழுந்தருளுகிறபோது ஆயாஸப்ரஸக்தியின்றிக்கே யிருக்க, "அடிபோற்றி" என்பானேன்னென்ன; அருளிச்செய்கிறார் (தாங்கள் இத்யாதி.) 'ஆயாஸம்போரும்' என்றது - ஆயாஸத்துக்குத் துல்யமென்றபடி. மஹாப்ருதிவியை யளக்கையும், இங்கு நாலடியிடுகையும் துல்யமாக ஆயாஸத்தை யுண்டாக்குமோவென்னும் சங்கையிலே, அதிற்காட்டில் ஆதிக்யமே செல்லுமென்று கோபிமார்க்குக் கருத்தாகக் கீழ்ச்சொன்னத்தை த்ருடீகரிக்கிறார் (திருவுலகளந்தருளுகிற இத்யாதி.) கீழே க்ருஷ்ணனுக்கும் வாமநனுக்கு முள்ள ஸாம்யத்தாலே க்ருஷ்ணனுக்கு மங்களாஶாஸநம்பண்ணினார்களாகவொருதாத்பர்யம் அருளிச்செய்து, க்ருஷ்ணனுக்கும் ஸ்ரீவாமநனுக்குமுள்ள தார்மைக்யத்தாலேதானே அவ்வபதாநத்துக்கு மங்களாசாஸநம்பண்ணுகிறார்களென்று தாத்பர்யாந்தரம்அருளிச்செய்கிறார்(திருவுலகளந்தருளினவன்று இத்யாதி.) பத்தெட்டடியிட்ட மாத்ரத்திலேதானே காடுமோடையுமளந்த அபதாநத்திலும் விஞ்சின ஆயாஸம் என்னக்கூடுமோ வென்ன; இவர்கள்செவ்வியைக்கண்டு அஞ்சும்படியானப்ரேமத்தாலேசொல்லுகிறார்களென்னுமத்தை த்ருஷ்டாந்தமுகேந அருளிச்செய்கிறார் (உன்செவ்வடி இத்யாதி.)

தன்னழகைக்காட்டி மஹாபலியை வஶீகரித்துச்செய்த அபதாநத்துக்கு மங்களாஶாஸநம் பண்ணினவாறே அழகுக்கு இலக்காகாதார்விஷயத்தில் செய்த அபதாநம் தோற்றிற்றென்று ஸங்கதியைக் காட்டுகிறார் (அழகுக்கு இத்யாதி.) "தென்னிலங்கைசெற்றாய்" என்றபோதே அங்குச் செல்லுகை ஸித்தமாயிருக்க, "அங்குச்சென்று" என்றதுக்குத் துஷ்கரதை தோற்றத்

போலே பிராட்டியைப்பிரித்த பையலிருந்த விடத்தே செல்லுவதே! (சென்று) - வழிப்போக்கிலே கர கபந்த விராதாதிகளை அழியச் செய்தபடி யென்றுமாம். (அங்கு) - நின்றவிடத்தே நின்று பூவலர்ந் தாற்போலே அநாயாஸேந அளந்தவளவன்றிக்கே, "கானகம்படி யுலாவியுலாவி" என்னுமாபோலே, கொடியகாட்டிலே அந்தத் திருவடிகளைக் கொண்டு நடப்பதே! என்கை. "எவ்வாறு நடந்தனை" என்று வயிறுபிடிக்கை இவர்களுக்குக் குடிப்பிறப்பு. (தென்னிலங்கை) - அழகியதான கோட்டையையும் அரணையு முடைத்தாய், குளவிக்கூடுகொண்டாற்போலே ஹிம்ஸகர் சேர்ந்த தேசம். (செற்றாய்)-ஆஶ்ரிதவிரோதிகள் தனக்கு ஶத்ருக்களென்கை. (திறல் போற்றி) - மதிளுக்கு மதிளிடுமாபோலே மிடுக்குக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்னுமவர்களாகையாலே, குடிப்பிறப்பாலே வந்தது. "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதும்" என்னுமவர்களிறே.

(பொன்ற இத்யாதி.) - ராவணனைப்போலே விரோதி யென்று இருக்கவொண்ணாத அபாயம். (பொன்ற) - மாரீசனைப்போலே குற்றுயிராக்கி மேல் அநர்த்தம்விளைக்க வையாதே, முடிக்கப்பெற்ற

தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புலி இத்யாதி.) அங்கு-லங்கையிலே, சென்று-கிட்டியென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்து, அங்குச்சென்று - லங்கையை உத்தேஶித்து நடந்து என்று சப்தார்த்தமாய், அழித்துக்கொண்டுசென்று என்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (வழி இத்யாதி.) 'அங்கு' என்றது - புத்திஸ்தவாசியாய், தண்டகாரண்யத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நின்றவிடத்தே இத்யாதி.) ["[illegible]"] "[illegible]" என்று பரிவரான மஹாராஜர் பயம் தீரக் காட்டும்படியான மிடுக்குக்கு மங்களாஶாஸநம் பண்ணுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (மல்லாண்ட இத்யாதி.) அதீதகாலாபதாநத்துக்குப் போற்றுகிறதென்னென்ன ; அருளிச்செய்கிறார் (இலங்கை இத்யாதி.)

தென்னிலங்கை செற்றாற்போலே ஒருசகடத்தை யுதைத்தது துஷ்கரமோ? இதுக்கு மங்களாஶாஸநம்பண்ணுகை யென்? என்ன:—அருளிச்செய்கிறார் (ராவணன் இத்யாதி.) "பொன்ற" என்றதுக்கு நஶிக்கவென்று சப்தார்த்தமாய், அத்தை வ்யாவர்த்ய பூர்வகமாக அருளிச்செய்கிறார் (மாரீசனை இத்யாதி.) குற்றுயிர் - குறுகின உயிர்; அல்பப்ராணனென்றபடி.

படி (புகழ்போற்றி)- தாயுங்கூட உதவாத தசையிலே அநாயாஸேந திருவடிகளாலே ஶகடாஸுரனை யழித்த புகழ். (போற்றி) - ராமாவதாரத்திற்காட்டில் மங்களாஶாஸநம் பண்ணவேண்டி யிருக்கை. ராமாவதாரத்துக்கு, பிதா ஶம்பராந்தகன்; ஊர் திருவயோத்யை; புரோஹிதர் மந்த்ரவாதிகளான வஸிஷ்டாதிகள்; பிள்ளைகள் * ஆண் திறல்மீளிமொய்ம்பிலரக்கன் குலத்தைத் தடிந்தவர்கள்;[“ఇక్ష్వాకవః”] ‚‚ஜ்ஞாஜ:” (௧௭௭) என்னும்படி தாங்கள் குணவான்கள்: இங்கு, மாதாபிதாக்கள் ஸாது இடையர்; ஊர் இடைச்சேரி; கம்ஸாதிகள் எதிரிகள்; ஸ்ரீ ப்ருந்தாவநத்தில் முளைத்தெழும் பூண்டுகளடைய ராக்ஷஸர்கள்; தமையன் ஒருக்ஷணம் தப்பில், பாம்பின்வாயிலே விழும் தீம்பன்; பூதநாதிகளாலே பிறந்த அபாயங்களுக்கு ஓர் அவதியில்லை; ஆனபின்பு, இனி மங்களாஶாஸநமொழியக் காவலில்லை.

(கன்று இத்யாதி.) - ஶத்ருவையிட்டு ஶத்ருவை யெறிந்தால் ஸங்கேதித்து வந்து இருவருமொக்க மேல்விழுந்தார்களாகில் என் செய்யக்கடவோம்! என்று வயிறுபிடிக்கிறார்கள். (௧) குஞ்சித்த திருவடிகளுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். (கன்றுகுணிலா)- கன்றை எறிதடியாக. குணில் - எறிதடி.

ராமாவதார அபதாநத்துக்கு ஒருகால் மங்களாசாஸநம் பண்ணி, இது தொடங்கி மேலெல்லாம் க்ருஷ்ணாவதாரவ்ருத்தாந்தங்களைச் சொல்லிப் போற்றுகைக்கு நிமித்தத்தைப் பலபடியாக உபபாதிக்கிறார் (ராமாவதாரத்தில் இத்யாதி.) [“ఏకదా తు వినా రామం కృష్ణో బృన్దావనం యయౌ”] ‚‚ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ” என்றுதொடங்கி, [“ అధిరుహ్యపతత్తస్మిన్ హ్రదే స్థిత్వా నిలాశనః ”] ‘‚அதிருஹ்யாபதத் தஸ்மிந் ஹ்ரதே ஸ்தித்வா நிராஶந:” என்ற ப்ரமாணத்தைக் கடாக்ஷித்து, காளியன்மடுவிலே விழுகையே பாம்பின் வாயிலே புகுருகையென்று அருளிச்செய்கிறார் (தமையன் இத்யாதி.)

கன்றையெறிந்தால் இதுக்கு “போற்றி” என்னவேணுமோ? என்ன; அருளிச்செய்கிறார் (சத்ருவைஇத்யாதி.) வத்ஸாஸுரனும் கபித்தாஸுரனும் சத்ருக்களென்று கருத்து. “எறிந்தாய் கரம்போற்றி” என்னவேண்டியிருக்க, கழலுக்கு ப்ரஸக்தி யேதென்ன; அருளிச்செய்கிறார் (குஞ்சித்த இத்யாதி.) இரண்டும் ப்ரஸக்தங்களாகிலும் அடிவிடாதவர்களாகையாலே கழலைப்போற்றினார்களென்று கருத்து.

(௧) குஞ்சித்த-மடித்த.

(குன்று இத்யாதி.) - இதுக்கு முன்பு இந்த்ரனுக்காகச் செய்த செயல். இப்போது அவன் தான் பகையானபடி. மலையைக் குடையாக எடுத்துப் பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்த ஆபத்தைப் போக்கினபடி. அநுகூலன் ப்ரதிகூலித்தால், செய்யலாவதில்லையிறே. (குணம்போற்றி) - பசி க்ராஹத்தாலே கையோயுந்தனையும் வர்ஷிக்க, மலையெடுத்துக்கொண்டு நின்ற ஆந்ருஶம்ஸ்யகுணத்திற்கு மங்களாஶாஸநம் பண்ணுகிறார்கள்.

(வென்று பகைகெடுக்கும் இத்யாதி.)-இவன்பக்கல் பரிவாலே, இவன்மிடுக்கைக் கண்டு கண்ணெச்சிற் படுவர் என்று பயப்பட்டு, அத்தை விட்டு, 'இவ்வேலன்றோ இவ்வ்யாபாரமெல்லாம் பண்ணிற்று' என்கிறார்கள். "மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன்" என்றிறே இவர்கள்படி. சக்ரவர்த்தி விற்பிடிக்கப் பெருமாளும் விற்பிடித்தாற் போலே, "கூர்வேல்கொடுந்தொழிலன்" என்னுமவர் மகனுகையாலே, வேலே ஆயுதம். (வென்று பகைகெடுக்கும்) - ஆஶ்ரிதவிரோதிகளான ப்ரதிபக்ஷத்தை அறச்செய்து மாய்க்கை. (நின்கையில்வேல்போற்றி) - வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்க, அதுக்குமேலே வேலைப்பிடிப்பதே! என்று வேல் பிடித்த கைக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். "வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்று - ஆயுதங்களுக்கு மங்களாஶாஸநம் பண்ணினாரிறே தமப்பனார். "மதேஜலே ஸேதுபந்தம், தமப்பனாருக்கும் மகளுக்கும் பணி" என்று சீயர் அருளிச் செய்வர்.

---

"அன்றிவ்வுலகமளந்தாய்" என்று தொடங்கி இவ்வளவும் - ஆஶ்ரித விரோதிகளை வென்ற ப்ரகாரங்களைச் சொல்லி மங்களாசாஸநம் பண்ணி, அவற்றைக் காட்டிலும் ஆஶ்ரிதனுன அவன் பகைத்துவருகையாலே இவ்வபதாநத்துக்கு மிகவும் பரியவேணுமென்று தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அநுகூலன்இத்யாதி.) ஒருகால் தமோகுணத்தால் ப்ரதிகூலித்தாலும் பொறுக்கவேணுமென்று கருத்து.

இவ்வளவும் சொன்ன அபதாநங்களால் மிடுக்குத் தோற்றுகையால் அத்தை நினைத்துக் கண்ணெச்சில் வாராமைக்காக, 'இவ்வபதாநங்கள் இவன் மிடுக்காலல்ல, வேலாலே' என்று அந்யத்ர ஆரோபித்து, அதுவும் இவனதாகையாலே அதுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்களென்கிறார் (இவன் பக்கல் இத்யாதி.) "பகையை - வென்று - கெடுக்கும்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி, வெல்லுகைக்கும் கெடுக்கைக்கும் அர்த்தம் அருளிச் செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி.)

(என்றென்று) - இதுதானே ப்ரயோஜநமென்கை. [“ஜெஹி ஜெ஭ஹாஶிதெ”] “ஜெஹி ஜெ஭ஹாஶிதெ” (௧௭அ) என்னுமவர்களன்றே. ஸம்ஸாரிகள் புறம்பும் கொள்ளுவர்கள், இவன்பக்கலிலும் கொள்ளுவர்கள்; இவர்கள் புறம்பும் கொள்ளார்கள், இவன்பக்கலிலும் கொள்ளார்கள். “ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னு மாளுஞ்செய்வன்” என்று - அவனுக்கும் தான் கொடுத்து, “ஆந்தனையுங் கைகாட்டி” என்று புறம்பும் தானே கொடுக்குமென்கை. (உன் சேவகமேயேத்திப்பறைகொள்வான்) - உன்னுடைய வீரசரிதமே ஏத்தி உன்னை அநுபவிக்கைக்காக. “உன்னுடைய விக்கிரமமொன்றொழியாமலெல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி எழுதிக்கொண்டேன்” என்னுமவர்களிறே.

(இன்று) - இசைவுபிறந்த இன்று என்னுதல்; நீ உறங்க நாங்கள் உறங்காத இன்று என்னுதல். நென்னேற்று வந்தோமோ? ஊராக இசைந்த இன்று என்றுமாம். (யாம்) - பந்துக்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள். (வந்தோம்) - வ்ருத்தைகள் உறங்க, நாங்கள் ஆற்றாமையாலே வந்தோம்; எங்களிழவுகளெல்லாம் உன்னாலே தீரும். (யாம் வந்தோம்) – எங்கள்வரவு உனக்குப் புண்ணாயிருக்க, நாங்கள் ஆற்றாமையாலே வந்தோம். (இரங்கு) - எல்லாம்பட்டாலும் அவன் இரங்கினாலல்லது கார்யகரமாகாமை. அத்தலைக்கு இரங்குகை, ஸ்வரூபம்; ‘அவனுக்கு என்வருகிறதோ!’ என்றிருக்கை - இத்தலைக்கு ஸ்வரூபம். தாங்கள் பண்ணின மங்களாஶாஸநம் ஸாதநமன்று என்று இருக்கிறார்கள். (உச)

---

“என்றுஎன்று” என்றவீப்ஸையாலே-இதுவே இவர்களுக்கு யாவதாத்மபாவியென்று தோன்றுகையாலே, இதுக்குப் பலாந்தரமில்லை யென்று தோன்றுகையால் பலித்த அர்த்தத்தை அருளிச்செய்கிறார் (இதுதானே இத்யாதி.) “பறைகொள்வான்” என்றதுக்கு ஸ்வாபதேஶாநுகுணமாக ஶப்தார்த்தம் ‘உன்னையநுபவிக்கைக்காக’ என்றது.

ஸ்வாபதேஶத்திலே அருளிச்செய்கிறார் (இசைவுபிறந்த இத்யாதி.) ‘நென்னேற்று வந்தோமோ’ என்றது - கோபவ்ருத்தர் ஸம்மதியாத நேற்று வந்தோமோ? என்றபடி. “யாம்” என்றதுக்கு நாலு தாத்பர்யம் - நிலவறைகளிலே நலிவுபட்ட நாங்கள் என்றும், வ்ருத்தைகளைப்போலே யன்றிக்கே ஆற்றாமைமிகுந்த நாங்கள் என்றும், விச்லேஷதுக்கம் தீருகைக்கு உன் கைபார்த்திருந்த நாங்கள் என்றும், உன்னைப் புண்படுத்தும்படி வரவையுடைய நாங்கள் என்றும்; இவற்றை அடைவே அருளிச்செய்கிறார் (பந்துக்களாலே இத்யாதி.) (உச)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்துநான்காம்பாட்டு. (அன்று இத்யாதி.) இப்பாட்டில் - இவர்கள் ப்ரார்த்தித்தபடியே அவன் திருப்பள்ளியறையில் நின்றும் திவ்யாஸ்தாநமண்டபத்துக்கு எழுந்தருள, அந்நடையழகிலே ஈடுபட்டு வந்த கார்யத்தை மறந்து மங்களாஶாஸநம் பண்ணுகிறார்கள்.

வ்யா.—(அன்று இத்யாதி.) - ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமான அஹங்காரம் ஜகத்தை ஆக்ரமித்த அன்று, அஹங்கார க்ரஸ்தமான இந்த லோகத்தை அஹங்காரத்திநின்றும் மீட்டுத் தன் திருவடிகளாலே அளந்து தனக்காக்கிக் கொண்டவனே! உன் திருவடிகளுக்கு மங்களாஶாஸநம். (சென்று அங்கு இத்யாதி)- இந்தலோகத்தை அஹங்காரத்தினின்றும் மீட்டவளவன்றிக்கே, அந்த அஹங்காரத்துக்குப் பிறப்பிடமான இடத்தே சென்று தர்ஶநீயமான ப்ரக்ருதி ஸம்பந்த நிர்வாஹகமான அஹங்காரத்தை அழித்தவனே! உன்னுடைய பராபிபவநஸாமர்த்யத்துக்குப் பல்லாண்டு. (பொன்றச் சகடம் இத்யாதி.) - காமக்ரோதங்களை ஸ்வரூபேண நசிக்கும்படி உன் திருவடிகளாலே உதைத்தவனே! உன்னுடைய யஶஸ்ஸுக்குப் பல்லாண்டு. (கன்று குணில் இத்யாதி.) - லோபத்தை எறிதடியாக எறிந்து நஶிப்பித்தவனே! உன்னுடைய குஞ்சிதமான திருவடிகளுக்குப் பல்லாண்டு. இவ்வளவில் ப்ரதிகூலர்விஷயத்தில் செய்யும் அம்ஶத்தைச் சொல்லிற்று; இனி அநுகூலர் ப்ரதிகூலித்தால் செய்யும் அம்ஶத்தைச் சொல்லுகிறது:—(குன்று இத்யாதி.)- இந்த்ரன் ஶிலாவர்ஷம் வர்ஷித்தபோது பர்வதத்தைக் குடையாகக் கொண்டு கோகோபரக்ஷணம் பண்ணினாற்போலே, அஜ்ஞாநகார்யமான அஹங்காரம் இவ்வதிகாரிக்கு விஷயப்ராவண்யத்தை உண்டாக்குவதற்கு ப்ரதிக்ரியையாக வைதிகமாய்க் கைங்கர்யரூபமான விஷயப்ராவண்யத்தை உண்டாக்கி, ஸ்வப்ரபந்நஜந ரக்ஷகனும்படியைச் சொல்லுகிறது. ஆக, இப்படி ஆஶ்ரிதரக்ஷகனானவனே! உன்னுடைய ஶீல குணத்துக்குப் பல்லாண்டு. (வென்று பகைகெடுக்கும் இத்யாதி) - அஹங்காரத்தை ஜயித்து தத்விஷயவைமுக்யத்தை மாற்றும் நின் திருக்கையில் திருவாழியாழ்வானுக்குப் பல்லாண்டு. (என்று என்று இத்யாதி.) - இப்படிப் பல்லாண்டு பாடுகையே யாத்ரையாய், உன்

னுடைய வீரசரிதத்தையேத்திப் புருஷார்த்தத்தை லபிக்கைக்காக ஸத்வம் தலையெடுத்த இன்று உன்கை பார்த்திருக்கும் நாங்கள் வந்தோம்; நீ க்ருபை செய்தருளவேணும். "ஏத்திப் பறைகொள்வான்" என்கிற இடத்தில், ஏத்துகைக்கு அநந்தரம் புருஷார்த்த லாபமாகையாலும், ஏத்தாதபோது புருஷார்த்தலாபம் இல்லாமையாலும் ஏத்துகையே புருஷார்த்த மென்கிறது. "இரங்கு" என்று-க்ருபையே ஸாதந மென்கையாலே, "வந்தோம்" என்று - ருசிகார்யத்தைச் சொல்லுகிறது. (உச)

அ.—இருபத்தைந்தாம்பாட்டு. 'உங்களுக்கு வேண்டுவதுஎன்?' என்ன,—ஏதேனும் ப்ரதிபந்தகம் உண்டேயாகிலும் நீயேபோக்கி எங்கள் துக்கமெல்லாம் கெட விஷயீகரிக்கவேணு மென்கிறார்கள்.

மூ.—ஒருத்திமகனாய்ப்பிறந்தோரிரவில்
ஒருத்திமகனாயொளித்துவளரத்
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்
நெருப்பென்னநின்ற நெடுமாலே யுன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில்
திருத்தக்கசெல்வமுஞ் சேவகமும்யாம்பாடி
வருத்தமுந்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை:—ஒருத்தி-ஒப்பற்ற தேவகிப்பிராட்டிக்கு, மகனாய் - பிள்ளையாக, பிறந்து - திருவவதரித்து, ஓரிரவில் - அந்த இரவிலேதானே, ("எல்லாம் தெய்வநங்கை யசோதைபெற்றாள்" என்கிறபடியே கண்ணனுடைய பாலசேஷ்டிதங்களையெல்லாம் அநுபவிக்கையாலே), ஒருத்தி - அத்விதீயையான யசோதைப்பிராட்டிக்கு, மகன் ஆய் - திருமகனாக, (கம்ஸனுடைய

இருபத்தைந்தாம்பாட்டு. (ஒருத்தி இத்யாதி.) "கஞ்சன் வயிற்றில் நெருப்பென்னநின்ற" என்றத்தையும், "வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து" என்றத்தையும் கடாக்ஷித்து, "மாரிமலை முழைஞ்சில்" என்கிறபாட்டோடே ஸங்கதி தோன்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (உங்களுக்கு இத்யாதி.) 'உங்களுக்குவேண்டுவதென்னென்ன' என்றது -"யாம்வந்தகாரிய மாராய்ந்தருள்" என்று தாங்கள் ப்ரார்த்தித்ததை மறந்து மங்களாசாஸநத்திலே மூண்டு இதுக்காக வந்தோ மென்றார்க ளென்று ஸர்வஜ்ஞனவன் நினைத்திருக்கையாலே, நீங்கள் வந்த காரிய மென்னென்று கேட்டானென்கை. 'உண்டேயாகிலும்' என்றது - பகவத்விஷயத்தி லிழியவே ப்ரதிபந்தகங்களெல்லாம் "தீயினில் தூசாகும்" என்றிருக்குமவர்களாகையாலே என்று கருத்து.

விஷத்ருஷ்டியில் அகப்படாமல்), ஒளித்து வளர-ஒளித்துக்கொண்டு வளரா நிற்கையில் (தன்னையறியாமல் இவன் வளர்ந்தருளுகிறபடியைக் கேட்டு)' தான்- (பின்னால் படப்புகுகிறது) அறியாத தான், தரிக்கிலான் ஆகி - ஸஹியாதவனாய், ("எவ்வகையாலாவது இவனைக் கொல்லக்கடவோம்" என்று), தீங்கு நினைந்த - பொல்லாங்கை நினைத்திருக்க, கஞ்சன் கருத்தை - கம்ஸனுடைய எண்ணத்தை, பிழைப்பித்து- வ்யர்த்தமாம்படிபண்ணி, வயிற்றில்- (அவன்) வயிற்றிலே, நெருப்பு என்ன நின்ற - நெருப்புப்போல் அழலும்படியாக நின்றவனாய், நெடுமாலே - ஆச்ரிதர்பக்கல் பெரும்பித்தனானவனே! உன்னை அருத்தித்து - உன்பக்கல் புருஷார்த்தத்தை இரந்து, வந்தோம் - வந்து ஆச்ரயித்தோம்; பறை தருதி ஆகில் - (எங்களுக்கு) உத்தேச்யத்தைச்செய்வாயானால், திருத்தக்க செல்வமும் - பிராட்டி ஆசைப்படத்தக்க உனது ஸம்பத்தையும், சேவகமும் - (அத்தைக் காத்தூட்டவல்ல) வீர்யத்தையும், யாம் பாடி - (உன் பேர்சொல்லப்பெறாத) நாங்கள் உகப்புடன்பாடி, வருத்தமும் தீர்ந்து - உன்னைப் பிரிந்துபடும் வ்யஸநமும் நீங்கி, மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து. இருப்போம் என்கிறார்கள்.

வ்யா.—(ஒருத்தி) - ["అన్యాప్రవిష్టాశాస్త్రాజనానాంసర్వాత్మా"] "அந்த:ப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம்ஸர்வாத்மா" (கஎக) என்கிறபடியே ஸர்வலோகங்களுக்கும் நியாமகனானவனையுங்கூட நியமிக்குமவளாகையாலே நாட்டில் தனக்கு ஒப்பற்றிருக்குமவள். (ஒருத்தி மகனாய்) - ["భూతానాంయోऽవ్యయపితా"] "பூதாநாம்யோऽவ்யய: பிதா" (கஅ0) என்று ஸர்வலோகங்களுக்கும் பிதாவானவன் ஒருத்திமகனாவதே! சக்ரவர்த்தி தபஸ்ஸுபண்ணி மாணிக்கம்போலே நாலுபிள்ளைகளைப் பெற்றாற்போலே, நால்வருங்கூடித் தபஸ்ஸுபண்ணி ஒருமகனைப் பெற்றபடி. (மகனாய்ப்பிறந்து) - பிறந்தபோதே சொல்லிற்றுச் செய்கை. சக்ரவர்த்திதிருமகன் பக்வனான பின்பு பித்ருவசந பரிபாலநம் பண்ணினான்; இவன் பிறந்தபோ

---

அத்விதீயையானவளென்று விவக்ஷித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி.) 'நியமிக்குமவளாகையாலே' என்றது - ["ఉపసంహరసర్వాత్మన్"] "உபஸம்ஹர ஸர்வாத்மந்" என்று நியமிக்கையைப் பற்ற. "ஒருத்திக்குப்பிறந்து" என்னலாயிருக்க, "மகனாய்" என்றத்தாலே - மகனாகத்தக்கவனல்லாதவன் மகனானென்று தோன்றுகையால் வந்த ஏற்பாட்டைக்காட்டுகிறார்(பூதாநாம்இத்யாதி.)எல்லார்க்கும்பிதாவானவன்மகனானைக்குஹேதுவென்என்ன அருளிச்செய்கிறார்(சக்ரவர்த்திஇத்யாதி) "மகனாய்" என்றதுக்கு-மகன்செய்யும் கார்யம்செய்துகொண்டு பிறந்தானென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிறந்தபோதேஇத்யாதி வாக்யத்ரயத்

தே, [“உபஸம்ஹர ஸர்வாத்மந்”] “உபஸம்ஹர ஸர்வாத்மந்” (௬௫) என்றுசொல்ல ஆழ்வார்களையும் தோள்களையும் மறைத்தானிறே. (பிறந்து) - கர்மவஶ்யர் படுவதெல்லாம் க்ருபாவஶ்யனாய்க்கொண்டு பட்டபடி. (பிறந்து) - ஆவிர்ப்பவிக்கலாகாதோ? பத்து மாஸம் வயிற்றிலே யிருப்பார்களாகில், பன்னிரண்டு மாஸம் வயிற்றிலே யிருந்து பிறக்கவேணுமோ? *பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட விறே. [“தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா”] “தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்பூதம்மஹாத்மநா” (௭௧) என்று - ‘பிறந்தானென்கை அவத்யம்’ என்று பரிஹரித்தான் ரிஷி; அது தான் அவத்யமென்று பிறந்தான் என்கிறார்கள். நம்முடைய கர்மம் நம்மோடே.. அவனை ஸஜாதீயனாக்கும்; அவனுடைய க்ருபை நம்மை அவனோடே ஸஜாதீயமாக்கும்; [“பரமம்ஸாம்யமுபைதி”] “பரமம்ஸாம்யமுபைதி” (௧௮௧) என்னக் கடவதிறே. அவன் பிறவி நமக்கென்று கோல, நம்பிறவி அவன் மாதாபிதாக்கள்

---

தாலே.) “அவதரித்து” என்னாதே, “பிறந்து” என்றதுக்கு உட்கருத்தை அருளிச் செய்கிறார் (கர்மவஶ்யர் இத்யாதி.) “மகனாய்” என்றத்தாலே பிறப்பு அர்த்தஸித்தமாயிருக்கவும், “பிறந்து” என்று விஶேஷித்தது, லோகத்தார் பிறவியிலும் வ்யாவ்ருத்தமென்று தோற்றவென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆவிர்ப்பவிக்கல் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) ரிஷி [“ஆவிர்பூதம்”] “ஆவிர்பூதம்” என்று சொல்லியிருக்க, இவர்கள் “பிறந்து” என்னக்கூடுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (தேவகீ இத்யாதி வாக்யத்வயத்தாலே.) ‘அது தான் அவத்யம்’ என்றது - ஸௌஶீல்யாதிகளுக்கு அது பூர்த்திகர மல்லாமையாலே யென்று கருத்து. பிறப்புக்குக் கர்மம் அடியாகையாலே அதில்லாதவனுக்குப் பிறப்புச் சொல்லக்கூடுமோ வென்னும் ஶங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு ஸௌஶீல்யம் தோற்றும்படியை உபபாதிக்கிறார் (நம்முடைய இத்யாதி.) நம்முடைய கர்மத்தாலே நாம் ஸம்ஸரிக்கையாலே நம்மை யெடுக்கைக்காக அவன் ஸஜாதீயனாய் வந்து பிறந்து புரையறக் கலக்கையாலே ஸௌஶீல்யம் விளங்குமென்று கருத்து. இதுக்கு த்ருஷ்டாந்தம் அருளிச் செய்கிறார் (அவனுடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே.) ‘நம்மோடு ஸஜாதீயனாய்ப் பிறந்தானாகில் அத்தாலே அவனெடுக்கும்படி எங்ஙனே?’ என்ன [“ஜநகரூவ”] ‘ஜநகரூவ” இத்யாதி வசநத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் (அவன்பிறவி இத்யாதி.) “நமக்கென்றுகோல” என்றது - நமக்காக வந்தா

காலில் விலங்குபட்டது படும். நம் பிறவி - நம்மையும் அவனையும் அகற்றுகைக்கு உடலாயிருக்கும்; அவன் பிறவி இருவரும் அனுகுகைக்கு உடலாயிருக்கும்.

(ஓரிரவில்)-அவ்விரவிலே யசோதைப்பிராட்டிக்கும் பிள்ளையாக வேண்டுகையாலே திருவாய்ப்பாடியிலே புக்கு. நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாப்போலே, கம்ஸாதிகள் தன்மை ஸூதிகாக்ருஹத்திலே ஓரிராத் தங்க வொட்டிற்றில்லை யென்கை. (ஓரிரவு) - அவ்விரவை யொக்கும் இரவு முன்பும் இல்லை, பின்பும் இல்லை. (ஓரிரவில்)-காலக்ருதபரிணாமமில்லாத தேசத்தில் வஸ்து காலாதீநமான தேசத்திலே பிறப்பதே! அவர்கள் தங்களோபாதியும் பெற்றில னென்கை. (ஒருத்திமகனாய்)-ஒருத்தி "இவனை மகனாகப் பெறவேணும்" என்று ஆச்ரயிக்க, அவளுக்கு அவதாரரஸத்தைக் கொடுத்து, இவளுக்கு லீலாரஸத்தை அநுபவிப்பித்தபடி. ஓரவதாரத்திலே யாதவ ஸஜாதீயனுமாய் கோபஜாதீயனு மானபடி. ["అంశావతారో బ్రహ్మర్షే యోఽయం యదుకులోద్భవః"] "அம்சாவதாரோ ப்ரஹ்மர்ஷே யோயம்யதுகுலோத்பவ:" (க௲உ) என்ற ரிஷி

---

னென்று அறியவென்றபடி. உக்தார்த்தத்தை வைதர்ம்ய த்ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறார் (நம்பிறவி இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

ஓரிரவிலே - ஒருத்திமகனாய்ப் பிறந்து ஆய்ப்பாடியிலேபுக்கு, ஒருத்தி மகனாய் என்று அந்வயாத்யாஹாரங்களைத் திருவுள்ளம்பற்றி, அவ்விரவில் தானே அங்குப்போகைக்கு ஹேதுவைக்காட்டாநின்றுகொண்டு, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்விரவிலே இத்யாதி.) 'பிள்ளையாகவேண்டுகையாலே' என்றது - அவ்விரவில்தானே பிள்ளையாகவேண்டும்படி தபஸ்ஸைப்பண்ணுகையாலே என்றபடி. திருவாய்ப்பாடியில் புகுகைக்கு யசோதாதிகளுடைய பாக்யத்தை ஹேதுவாகக் கீழ் அருளிச்செய்து, கம்ஸாதிகளுடைய தௌர்ப்பாக்யம் ஹேதுவென்று அருளிச்செய்கிறார் (நாய் இத்யாதி.) "ஓர்" என்றதுக்கு - ஏகத்வஸங்க்யாபரமாகக் கீழ் அருளிச்செய்து, அத்விதீயத்வ விவக்ஷயா அவதாரஹேதுவாகையாலே அதிச்லாக்யமென்றும், பிறந்தவிடத்திலிருக்கவொட்டாதபடியாலே அதிக்ரூரமானதென்றும், இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்விரவை இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) இப்போது, "ஓர்" என்றதுக்கு க்ரமேண அந்வயமென்று கண்டு கொள்வது. 'இரண்டுதாய்மார்க்கு ஒருவன் பிள்ளையாம்படி எங்ஙனே சேருவது?' என்ன; அருளிச்செய்கிறார் (ஒருத்தி இத்யாதி.) பிள்ளையாகையால் வந்த ரஸம் இருவர்க்கும்துல்யம் ஆகையாலே பிள்ளையாகைக்குத் தட்டில்லை யென்று கரு

தானே, ["గోపాలోయాదవంవంశంమగ్నమభ్యుద్ధరిష్యతి"] ‘‘கோபா லோயாதவம்வம்ஶம்மக்நமப்யுத்தரிஷ்யதி’’ (௧௮௩) என்றுணிறே. (மகனாய்) - பிறப்பில் புரையில்லாதாப்போலே இவள்மகனானவிடத்திலும் புரையற்றிருக்கை. (ஒளித்து வளர) - கம்ஸனுடைய விஷத்ருஷ்டி படாமே வளர்ந்தபடி. நாட்டார் செய்வன செய்யப்பெறாதே கள்ளர்பட்டது படுவதே! திருவவதரித்திருக்கச் செய்தே அந்தர்யாமிபட்டது படுவதே! உள்ளே யிருக்கச்செய்தேயும் இவனில்லை என்று எழுத்திடுமவன், முகங்காண ஸம்மதிக்குமோ வென்கை. அந்தர்யாமியாய் மறையநிற்கிறது - பிச்சேறின ப்ரஜை தாய் முன்னேநிற்கில் தாயைக் கொல்லும் ;— அவள் பேரநிற்கில் தன்னை முடித்துக் கொள்ளும் ;—அதுக்காக முகந்தோற்றாதேநின்று, இரண்டுதலையையும் நோக்கும் மாதாவைப் போலே ; இசைந்து ‘அம்மே!’ என்றால் ஏன் என்கைக்குக் கிட்டவிருக்கிறபடி யென்றுமாம். பேர்சொல்லாதே "ஒருத்தி" என்றது - ‘‘அத்தத்தின் பத்தாநாள்’’ என்றவர்மகளாகையாலே பயத்தாலே யொளிக்கிறாள் ; அபிசரிக்கிலும் அதுவோ இதுவோ என்னு ஸந்தேஹிக்கைக்காக.

(தரிக்கிலானாகி) - ‘க்ருஷ்ணன் வளராநின்றான்’ என்று கேட்டபின்பு அவன் தரிக்கமாட்டிற்றிலன். ஈஶ்வரஸத்தையையும்

---

த்து. ஒளித்து வளருகைக்கு ஹேது அருளிச்செய்கிறார் (கம்ஸன் இத்யாதி.) இவன் அவதரிக்குமிடத்தில் விஷத்ருஷ்டி ப்ரஸக்தமாய் ஒளிக்க வேண்டிற்றே யென்று கோபிமாருடைய ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (நாட்டார் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) ‘‘ஒளித்துவளர’’ என்றதுக்கு ஸ்வாபதேசம் அருளிச்செய்கிறார் (உள்ளே இத்யாதி வாக்யத்வயத்தாலே.) கீழே "ஒருத்தி" என்றதுக்கு அஸத்ருசையென்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, நாமக்ரஹணம்பண்ணாதே, "ஒருத்தி" என்று ஸாமாந்ய சப்தம் ப்ரயோகிக்கிறார்களென்று அதுக்கு ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பேர்சொல்லாதே இத்யாதி.) தேவகி மகனென்றும் யசோதைமகனென்றும் சொல்லுமிடத்தில், இவனுடைய ஏற்றமெல்லாம் அறிந்து உகவாதார் ஏதேனும் தீங்கு நினைப்பரென்னும் ப்ரேமாதிசயத்தாலே அஞ்சி மறைத்து அநாதரம் தோற்றச் சொன்னார்களென்று கருத்து.

‘திருவாய்ப்பாடியிலே ஒளித்துவளர, இவன் தெரியாதிருக்கை எங்ஙனே?’ என்ன, அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் இத்யாதி.) ஸ்வாபதேசத்திலே தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஈஶ்வரஸத்தை இத்யாதி.) உள் ளூரு

பொருத ஆஶ்ரயமிறே. (தான் தீங்குநினைந்த) - பயத்தாலே பரிந்து மங்களாஶாஸநம் பண்ணும் விஷயத்திலே தீங்கு நினைத்தது, துஷ்ப்ரக்ருதியாகையாலே. (தான்) - உத்தரக்ஷணத்திலே படப்புகுகிற பாடறியாத தான். (தீங்கு நினைந்த) - தங்கள் வாயாலே சொல்லமாட்டாமையாலே "தீங்கு" என்கிறார்கள். அதாவது - பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும், வில்விழவுக்கு என்று அழைத்தும் நலியத் தேடினபடி. (கருத்தைப் பிழைப்பித்து) - பூதனை முதலானார் நலிவுகளைப் பண்ணப்புக அத்தைத் தப்பித் தன்னை நமக்குத் தந்தபடி; அவன் நினைவை அவன்தன்னோடே போம்படிபண்ணி யென்றுமாம். (கஞ்சன் இத்யாதி.) - கம்ஸன் அநாதிகாலம் ஸஞ்சிதமான பாபமித்தனையும் கண்ட காட்சியிலே அநுபவித்து அறும்படி நின்றவன். ஆஶ்ரிதர் வயிற்றில் நெருப்பைக் கம்ஸன் வயிற்றில் கொளுத்தினவனென்கை. அதாவது - பயாக்நி கொளுத்துகை. (நெடுமாலே) - இதெல்லாம் படவேண்டிற்று, ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தாலே யென்கை. அப்போது ஸ்ரீவஸுதேவர்பக்கலிலும் ஸ்ரீதேவகியார்பக்கலிலும் திருவுள்ளம் மண்டினபடி யென்றுமாம்.

(உன்னை) - அர்த்தித்வத்தில் நிரபேக்ஷனான உன்னை; ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் இரப்பாளனாய் இவ்வளவும் வந்தது ஆர் அபேக்ஷித்து? (நெடுமாலே உன்னை அருத்தித்து வந்தோம்) - பண்டே வ்யாமுக்தனான உன்னை அர்த்திக்கையாலே பிச்சின்மேலே

---

தயத்தில்அந்தர்யாமியிருக்கிறானென்றால், [‘‘அஜ்ஞோ ஜந்து’’] ‘‘[illegible]’’ என்றிருக்குமவன் ஸஹியானென்று தாத்பர்யம். ‘‘தான்’’ என்றதுக்கு - துஷ்ப்ரக்ருதியென்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (உத்தரேத்யாதி.) கருத்தை - மநஸ்ஸை, பிழைப்பித்து - பிழையாக்கி - பொய்யாக்கி யென்று சப்தார்த்தமாய், இரண்டுவிதமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பூதனை இத்யாதி வாக்யத்வயத்தாலே.) ‘அவன் நினைவை அவனோடே போக்கினபடி’ என்றது - அவன்நினைவு அவனிடத்தில் பலத்தைக்கொடுக்கும்படி தான் ஸங்கல்பித்து என்றபடி.

அர்த்தித்வ நிரபேக்ஷனாகையை உபபாதிக்கிறார் (ஸ்ரீ வைகுண்டேத்யாதி.) ‘‘நெடுமாலே வந்தோம்’’ என்று சொல்லவே, இவர்களாசை ஸித்தமாயிருக்கவும் ‘‘அருத்தித்து’’ என்று சொன்னது - பேராசையாக வந்தோமென்று

பிச்சேற்ற வந்தோம். அர்த்தித்வத்தினளவு எங்கள் வடிவைப் பார்க்க அமையும்.

(பறை தருதியாகில்) - எங்களுக்கு உத்தேஶ்யம் செய்குதியாகில். "ஆகில்" என்றது - நம்முடைய அர்த்தித்வாதிகள் அப்ரயோஜகம் ; அவன் நினைவாலே பலமென்கை. உன்னழகாலே பிழைப்பியாதே செய்தருளப் பார்ப்பாயாகில் என்னவுமாம்.

(திருத்தக்கசெல்வமும்)-["యస్యసాజనకాత్మజా-అప్రమేయంహి తత్తేజః"] "யஸ்ய ஸா ஜநகாத்மஜா-அப்ரமேயம் ஹி தத்தேஜஃ"(கஅச) என்று ஶ்ரிய:பதித்வத்தால் வந்த ஸம்பத்தையும்;பிராட்டி ஆசைப்படும் ஸம்பத்தென்னவுமாம். (சேவகமும்)-அத்தைக் காத்தூட்ட வல்ல வீர்யம். (யாம்பாடி)-உன் பேர் சொல்லப்பெறுத நாங்கள் உகப்போடே அத்தைச்சொல்லி. (வருத்தமும் தீர்ந்து)-உன்னைப்பிரிந்து படும் து:கமும் தீர்ந்து. பிரிந்தார்படும்பாடறிய உன்னை நீ பிரிந்தறியாயே? (மகிழ்ந்து) - கைவல்யம்போலே து:கநிவ்ருத்தி மாத்ரமேயன்று, ப்ரீதிக்குப் போக்குவிடும்படி யாகவேணும். (உரு)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தைந்தாம் பாட்டு. (ஒருத்தி மகனாய் இத்யாதி.) இப்பாட்டில், கீழ்ப்பாட்டில் "ஏத்திப் பறைகொள்வான், இன்று யாம் வந்தோம் இரங்கு" என்று இவர்கள் அபேக்ஷிக்கையாலே, 'உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?' என்ன,—நெடுமாலே! நீ புருஷார்த்தத்தைக் கொடுத்தாயாகில்,நாமும் உன்னையும்உன்குணங்களையும் ப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடி, பட்ட வ்யஸநமெல்லாம் தீர்ந்து மகிழக்கடவோ மென்கிறார்கள்.

---

விவக்ஷித்து, ஆசையினுடைய பெருமை எவ்வளவு என்னும் ஶங்கையை அருளிச்செய்கிறார் (அர்த்தித்வத்தில் இத்யாதி.)

திருவாலே தக்க செல்வத்தை யென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிறார்(யஸ்யேத்யாதி.)'தத்தேஜஃ' என்றது-ஸமஸ்தமாய், தஸ்யதேஜ: என்று கொள்வது. திருவுக்குத் தக்க செல்வம் என்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிராட்டி இத்யாதி.) 'காத்தூட்ட' என்றது - ரக்ஷித்து அநுபவிப்பிக்க என்றபடி.

"வருத்தமும்" என்ற சகாரத்தால் - மிகவும் துஸ்ஸஹதை தோற்றுகையால்,அதின்படியெங்ஙனே யென்னும் ப்ரஶ்நத்திலே, அது சொல்லத்தரமன்று,அநுபவித்தே அறியவேணும்; அது உன்னால் அறியப்போகாதென்று உத்தரம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (பிரிந்தார் இத்யாதி.) (உரு)

வ்யா.—(ஒருத்தி இத்யாதி.) – அஷ்டாக்ஷரீ ப்ரதிபாத்யனாய்க் குணவிக்ரஹ விபூதிவிஶிஷ்டனாய் அவதரித்து. (ஓரிரவு இத்யாதி.)- லௌகிகர் அறியாத அத்விதீயகாலத்திலே வாஸுதேவ த்வாதஶா க்ஷரீ ப்ரதிபாத்யனாய். (ஒளித்து வளர) -குணவிக்ரஹவிபூதிகளாலே ஸங்குசித்து ஸ்வரூபமாத்ரேண வளராநிற்க.

(தரிக்கிலானாகி) - ஸ்வரூபமாத்ரேண ஈஶ்வரஸத்தையையும் பொறாதவனாய்.(தானித்யாதி.)-அநவரதம்மங்களாஶாஸநம்பண்ணக் கடவ விஷயத்திலே அவனால் ஒரு உபத்ரவமுண்டாய்ப் பொல்லாமையை நினைக்கையன்றிக்கே தானே த்வேஷத்தை நினைந்த அபிப்ராயத்தை வ்யர்த்தமாக்கி அஹங்காரத்தினுடைய வயிற்றிலே நெருப்பைக் கொளுத்தினாற்போலே ஜ்வலித்து, அவனருகே நின்ற ஸ்வஶேஷபூத சேதநவிஷயவ்யாமோஹாதிஶயத்தை யுடையவனே! (உன்னை அருத்தித்து வந்தோம்) - உன்னை அபேக்ஷித்து வந்தோம்.

(பறை தருதியாகில்) - நீ புருஷார்த்தத்தைக் கொடுப்புதியாகில். (திருத்தக்க செல்வமும் சேவகமும்) - பெரிய பிராட்டியாருக்குத் தகுதியான ஸ்வரூபரூபகுணவிக்ரஹ விபூதி விஶிஷ்டனாயிருக்கிற செல்வத்தையும், வீரசரிதத்தையும். (யாம்பாடி) - அதுவே தாரகமான நாம் பாடி.(வருத்தம் இத்யாதி.) - உன்னைப் பிரிந்து பட்ட வ்யஸநமெல்லாம் நிஶ்ஶேஷமாகத் தீர்ந்து ஆநந்திக்கக் கடவோம். (உரு)

அ.—இருபத்தாறும்பாட்டு. 'உங்களுக்கு அபேக்ஷிதம் என்?' என்ன ; நோன்புக்குவேண்டும் உபகரணங்களையும் அபேக்ஷிக்கிறார்கள். 'க்ருஷ்ணஸம்ஶ்லேஷரஸோத்ஸுகரான இவர்கள் இவற்றை அபேக்ஷிக்கைக்கு அடி யென்?' என்னில்;— அந்த ஸம்ஶ்லேஷத்துக்கு ஏகாந்தமான நோன்பை ப்ரஸ்தாவிக்கையாலும், க்ருஷ்ணன் முகத்தை வெளியிலே காண்கைக்கு ஹேதுவாகையாலும், அவனு

இருபத்தாறும்பாட்டு. (மாலே இத்யாதி.) கீழ்ப்பாட்டில் - உங்களுக்கு வேண்டுவதென்னென்று அவன் கேட்க,அதுக்கு, "பறைதருதியாகில்" என்று தங்களுக்கு உத்தேச்யத்தைச் சொல்லியிருக்கவும்; அவன், மூலமுதலானவற்றிலே ஸக்தனாகையாலே மறந்து மீளவும்கேட்கிறானென்று திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார் (உங்களுக்குஇத்யாதி.) 'ப்ரஸ்தாவிக்கையாலும்' என்றது- கோபவ்ருத்தர் "நீங்கள் நோன்பு நோலுங்கள்" என்று அநுமதி பண்ணி யிடுகையாலும் என்றபடி.'வெளியிலே காண்கைக்கு ஹேது

டைய திருநாமங்களை வாயாரச் சொல்லுகைக்கு ஹேதுவாகை யாலும், இடையர்பக்கல் உபகார ஸ்ம்ருதியாலும் நோன்புக்கு அங் கங்களை வேண்டிக்கொள்ளுகிருர்கள்.

மூ.—மாலேமணிவண்ணு மார்கழிநீராடுவான்
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன
பாலன்னவண்ணத்துன்பாஞ்சசன்னியமே
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே
கோலவிளக்கே கொடியேவிதானமே
ஆலினிலையா யருளேலோரெம்பாவாய்.

பதவுரை.—மாலே - (ஆஸ்ரீத விஷயத்தில்) வ்யாமோஹத்தை யுடைய வனே! மணிவண்ணு - நீல ரத்நம்போன்றவடிவையுடையவனே! மேலையார் செய்வனகள் - பெரியோர்களால் அநுஷ்டிக்கப்பட்டவற்றுட் சேர்ந்த மார்கழி நீர் - மார்கழி நீராட்டத்தை, ஆடுவான் - செய்யும்பொருட்டு, வேண்டுவன - வேண்டியவைகளை, கேட்டியேல் - கேட்பாயாகில், ஞாலத்தை எல்லாம் நடுங்க - பூமியெல்லாம் நடுங்கும்படி, முரல்வன - சப்திப்பனவாய், பால் அன்ன வண்ணம் - பால்போன்ற நிறத்தையுடையனவாய், உன் பாஞ்ச சன்னியம் போல்வன - உன்னுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யொத்தனவான, சங்கங்கள் - சங்கங்களும், போய்ப்பாடு உடையன - மிக்கபெருமை யுடைய, சாலப் பெரும்பறை - மிகவும் பெரிதாயிருந்துள்ள வாத்யங்களும், பல்லாண்டு இசைப்பார் - பல்லாண்டு பாடுவார்களும், கோலம் விளக்கு - மங்களதீபங்களும், கொடி - த்வஜங்களும், விதானம் - மேற்கட்டிகளுமாம்; (ஆகிய இவற்றை), ஆலினிலையாய் - (பிரளயத்தில்) ஆலிலையிற் பள்ளி கொள்பவனே! அருள் - க்ருபை செய்தருளவேணும் என்கிருர்கள்.

வ்யா.—(மாலே) - முன்பு "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று அபரிச்சேத்யமான மேன்மையையும் நினைத்திருந்

வாகையாலும்' என்றது - நிலவறையிலே கிடந்த தங்களை நோன்புக்காக க்ருஷ்ணனோடே சேரவிடுகையாலும் என்று கருத்து.

ப்ராப்ய ப்ராபகங்களை நிஷ்கர்ஷிக்கும்போது, "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று - நாராயணத்வத்தைப் புரஸ்கரித்திருக்கையால் அபேக்ஷித்த விடத்திலும், "நாராயணு! மணிவண்ணு" என்னவேண்டியிருக்க "மாலே" என்று வ்யாமோஹகுணத்தையிட்டு ஸம்போதிக்கிறது எங்ஙனே கூடும்? என்ன, அருளிச்செய்கிருர் (முன்பு இத்யாதி.) 'மேன்மையையும்' என்ற

தார்கள்; இப்போது - இத்தலைக்கு வாத்ஸல்யமே ஸ்வரூபம் என்று நிலையிட்டார்கள். ["ஶரணாகதவத்ஸல:"] "ஶரணாகதவத்ஸல:" (கஅரு) என்று - ஸ்ரீராமாயணத்துக்கு உள்ளீடான ப்ரதாநகுணத்தைப் பிராட்டி நிலையிட்டாள்; மஹாபாரதத்துக்கு உள்ளீடான வ்யாமோஹ குணத்தை "மாலே" என்கிற ஸம்போதநத்தாலே இவர்கள் நிலையிட்டார்கள். இவர்கள் பேச்சுக்கேட்டபின்பு பண்டையிலும் பெரும்பித்தனானபடி. (மணிவண்ணு) - அபரிச்சேத்யனுயிருக்கச்செய்தேயும் முன்தானையிலே முடிந்து ஆளலாம்படியிருக்கை. கீழ்ச்சொன்ன வ்யாமோஹம் வடிவிலே நிழலிடுகை. இந்நீர்மையின்றிக்கே காதகனானலும் விடவொண்ணாத வடிவழகு. பெண்கள் பிச்சுக்கு நிதாநமான வடிவென்னவுமாம். "மாலாய்ப்பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்னக்கடவதிறே.

'நீங்கள் வந்தது என்?' என்ன;—வந்தகாரியத்தைச் சொல்லுகிருர்கள்; (மார்கழிநீராடுவான்) - மார்கழி நீராடுகைக்கு உபகரணங்

சகாரத்தாலே - "கார்மேனிச் செங்கண்" என்று- வாத்ஸல்யத்தையும் நினைத்தார்களென்கை. இவர்கள் "யாம் வந்தகாரியம்ஆராய்ந்தருள்" என்று சொன்ன போதே திருமுகத்தில் அலர்த்தியையும், வாவென்றவாறே ஸிம்ஹாஸநத்தேற வருகையும் கண்டு, வ்யாமோஹமே இவனுக்குஸ்வரூபமென்று நிஶ்சயித்தார்களென்று கருத்து. இவனுக்கு வாத்ஸல்யமே நிரூபகமென்னுமதுக்கு த்ருஷ்டாந்த பூர்வகம் ப்ரமாணம் காட்டுகிருர் (ஶரணாகதேத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'மஹாபாரதத்துக்கு உள்ளீடான' என்றது - அதுக்கு உபநிஷத்தான ஸ்ரீகீதையில் சரமத்தில், "மாம்"என்றதுக்குத்தாத்பர்யமான என்றபடி.இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யங்களாகிற குணவிஶேஷங்கள் நேராகப் ப்ரகாசிக்கிறதென்னக்கடவதிறே. இப்போது மாலாகைக்கு ஹேது ஏது?என்ன; அருளிச்செய்கிருர் (இவர்கள் இத்யாதி.) 'பேச்சு' என்றது-"யாம்வந்தகாரியமாராய்ந்தருள்" என்ற பேச்சு என்றபடி. 'மாலுடையவன்' என்னுதே "மாலே" என்று அத்தையேநிரூபகமாகச் சொல்லுகையாலே பெரும்பித்தனென்றது. "மாலே" என்றதுக்கு- ஸர்வாதிகனுயென்று அர்த்தாந்தரம் திருவுள்ளம்பற்றி,மணியினுடைய வண்ணம்போலேயிருக்கும் வண்ணத்தை - ஸ்வபாவத்தையுடையவனேயென்று ஶப்தார்த்தமாய், அதிஸௌலப்ய ஸ்வபாவத்தை விவக்ஷித்து அருளிச்செய்கிருர்(அபரிச்சேத்யனுய் இத்யாதி.) "மால்" என்றதன் முந்தின அர்த்தத்தையே திருவுள்ளம்பற்றி, நைர்மல்யத்தையும் அழகையும் விவக்ஷித்து இரண்டாம்தாத்பர்யம் அருளிச்செய்கிருர். (கீழ்ச் சொன்ன இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'அழகுவிடவொண்ணுமைக்குஹேதுவோ?' என்ன;அருளிச்செய்கிருர் (பெண்கள் இத்யாதி.)

கள் வேண்டி வந்தோம். ஆஸ்திக்யாதிரேகத்தாலே அங்கி கைப்பட்டிருக்கச் செய்தேயும், அங்கத்தை விடாதொழிகிறார்கள். 'மார்கழி நீராட்டமாவது என்?' என்ன;—இது ப்ரஸித்தமன்றோ வென்ன ; ["ஸ்வர்க்காமோயஜேத"] "ஸ்வர்க்காமோயஜேத" (க௬௬) என்னுமாபோலவும், ["நிதிஷ்யாஸிதவ்ய:"] "நிதிஷ்யாஸிதவ்ய:" (க௭௭) என்னுமாபோலவும் ப்ரஸித்தமாயிருந்ததோ ? என்ன, (மேலையார் செய்வனகள்) - அவை போலும் அல்லகாண் இது ; ப்ரஸித்ததமங்காண் இது ; ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும், ["தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச"] "தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச" (கஉகூ) என்றும், ["யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:"] "யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:" (க௮௮) என்றும் ஶிஷ்டாசாரமேயிறே ப்ரஸித்தப்ரமாணம். 'ஆகில் வேண்டுவது சொல்லுங்கோள்' என்ன; (வேண்டுவன கேட்டியேல்)-

"மார்கழிநீராட்டம்" என்கிற நோன்புநோற்கைக்கு வேண்டும் உபகரணங்களை இவர்கள் அபேக்ஷித்திலர்களாகிலும் வ்ருஷ்டிரூபமான பலம்வரத்தட்டில்லை; க்ருஷ்ணன் ஸர்வஶக்தனாகையாலே இவர்களுக்கு உபகாரகரான கோபவ்ருத்தர் அபேக்ஷித்த வர்ஷத்தை வர்ஷிப்பிக்கக்கடவனன்றோ என்னும் ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ஆஸ்திக்யேத்யாதி.) அதாவது - நோன்பாகிற அங்கிஸ்தாநீயனை க்ருஷ்ணன் தங்களுக்குச் சொல்லிற்றுச் செய்கிறவனேயாகிலும், நோன்புக்குவேண்டும் அங்கங்களையும் விடாதொழிகிறது - வேறே சில அதிகாரிகளுக்கு; அங்ஙனன்றிக்கே, தங்களைப்போலே நோன்பையே அநுஷ்டித்தார்களாகில் வ்ருஷ்டிரூபபலம் ஸித்தியாமல் போம்; அப்படியன்றிக்கே அவர்களுக்கும் பலம் ஸித்திக்கவேணுமென்னும் ஆஸ்திக்யாதிஶயத்தாலே யென்கை. கோபவ்ருத்தரெல்லாரும் கூடி, "வர்ஷார்த்தமாகப் பெண்கள் நோன்பு நோற்கக்கடவர்கள், க்ருஷ்ணன் அதுக்கு நிர்வாஹகனாகக்கடவன்" என்று க்ருஷ்ணனையும் பார்த்துச் சொல்லி யிருக்கவும் அறியாதவனைப்போலே இங்கே ஏதென்று ப்ரஶ்நம்பண்ணுகை, வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகையே பரம ப்ரயோஜநமாகையாலே யென்று திருவுள்ளம்பற்றி, ப்ரஶ்நோத்தர பரம்பரையைக் காட்டுகிறார் (மார்கழி இத்யாதி.) தர்மஜ்ஞஸமயத்தை வேதாதிகளுக்கு முன்துறவெடுக்கையாலும், ["தத்ரதேவஸமீபேஜநா:"] "தத்ரதேவஸமீபேஜநா:" என்று - ஶிஷ்டாசாரமே கர்த்தவ்யமென்று தோற்றுகையாலும், அதுவே அதிஶயிதப்ரமாணமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார். (ஶ்ருதிஸ்ம்ருதீத்யாதி.)

ப்ரஸ்நம் பண்ணுகிறவனைக் குறித்து எங்கள் வார்த்தையைக் காது கொண்டு கேட்டாயாகி லென்னக்கூடுமோ ? என்ன ; அருளிச்செய்கிறார்

'கேட்புதியாகில்' என்கிறது, அந்யபரதையாலே; 'அந்யபரதையென்?' என்னில்?—பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே இவர்கள் முலையிலும் இடையிலும் கண்ணிலும் முகத்திலும் துவண்டு ஆனைக்குப்பு ஆடுவாரைப்போலே யிருக்கையாலே தட்டியெழுப்புகிறார்கள். இத்தால் - ஸ்வாபதேஶத்தில், ஜ்ஞாந பக்தி வைராக்யங்களைச் சொல்லுகிறது. இவையிறே ஓரதிகாரிக்கு அழகாகிறது. காண்கைக்கு ஹேதுவாகையாலே, "கண்" என்று - ஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது; போகோபகரணமாகையாலே, "முலை" என்று - பக்தியைச் சொல்லுகிறது; கார்ஶ்யத்தாலே, "இடை" என்று - வைராக்யத்தைச் சொல்லுகிறது. 'கார்ஶ்யத்தாலே வைராக்யம் தோற்றுமோ?' என்னில்,—கார்ஶ்யத்தாலே- †விரக்தியைச் சொல்லிற்றாய், அத்தால் - விஷயாந்தரஸ்பர்ஶ ராஹித்யத்தைச் சொல்லுகிறது. ["మధురామధురాలాపాః"] "மதுராமதுராலாபா:" (௧௮௯) என்கிறபடியே. 'உங்கள் வடிவு கண்ணுக்குப்போக்யமானவோபாதி, உங்கள் வார்த்தை செவிக்குப் போக்யமன்றோ? சொல்லுங்கோள்' என்ன; சொல்லுகிறார்கள் :—(ஞாலத்தை இத்யாதி.)- ["సఘోషోధార్తరాష్ట్రాణాం హృదయానివ్యదారయత్"] "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" (௫௧) என்னுமளவன்றியே, ஜகத்தெல்லாம் வாழும்படி த்வநிக்கைக்கு இடமுடைத்

---

(கேட்புதியாகில் இத்யாதி.) ஆனைக்குப்பு - சதுரங்கம். ["మధురాలాపాః"] "மதுராலாபா:" என்கிறபடியே சொல்லப்பட்ட மதுரமான தங்கள் ஆலாபத்தாலேஎழுப்புகிறார்களென்று அந்வயித்து அர்த்தம்கண்டுகொள்வது.

"ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன, போய்ப்பாடுடையன" என்று அந்வயித்து, "ஞாலத்தையெல்லாம்" என்றவிடத்தில் அத்தும் ஐகாரமும் அவ்யயமாய், "ஞாலம்" என்று - ப்ரதிகூலரைச் சொல்லுகிறதாய், ப்ரதிகூலரெல்லாரும் நடுங்கும்படி த்வநிக்க இடமுடைத்தாயென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்ய பூர்வகம் பலித்த தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸகோஷ இத்யாதி.) ப்ரதிகூலர் நடுங்கும்போது அநுகூலமான ஜகத்தெல்லாம் வாழுகை அர்த்தஸித்தமென்று கருத்து. அன்றிக்கே, "ஞாலம்" என்றது - அநுகூலர்பரமாய், "நடுங்க" என்றது-இவற்றின் த்வநி செவிவழியே புகுந்து அம்ருதரஸம் போலே குளிர்ந்து வவ்வலிடப்பண்ணுகை யென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறாரென்னவுமாம். சங்குகளை

---

† 'நிராதாரதையை' என்று பாடாந்தரம்.

தானவை. * பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியிறே தாரகம். அப்படியே நாடெல்லாம் இந்த த்வநி கேட்டு வாழவேணும். இவர்கள் தாங்களும் * வலம்புரிபோல் நின்று அதிரவேணுமென்றிறே சொல்லிற்று. (பாலன்ன) - பாலைத் திரட்டினாற்போலே யிருக்கை. இப்படியிருப்பன பலசங்கு வேணும். (போய்ப்பாடு) - பேரிடமாயிருக்கை. இடமுண்டாகிலிறே த்வநி முழங்கியிருப்பது. புகழ் என்றுமாம்; ருக்மிணிப்பிராட்டி போல்வாருக்கு உதவினானென்கிற புகழ்.

பின்னையோவென்ன,—(சாலப்பெரும்பறையே)-ஒரு மன்றிலே த்வநிக்கையன்றியே எங்குமொக்க த்வநிப்பதொரு பறைவேணும். [" ...... "] " யயள தரு வ்ணாஷெ நஹெரீணா ஆுஉஹாவூலெ நஃ" (௧௯௦) என்னுமாபோலே. பின்னையோ வென்ன ; - (பல்லாண் டிசைப்பாரே) - திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு போருவார் வேணும். பின்னையோ வென்ன ;—(கோல விளக்கே)-அழகிய விளக்கு. அதாகிறது- மங்களதீபம். (கொடி) - திருக்கொடி யாடவேணும். (விதாநம்) - மேல்கட்டி வேணும்.

என்று இவற்றை அபேக்ஷிக்க ;—'சங்கும் பல கிடையாது, ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கொள்ளுங்கோள்' என்றான் ; தன்னைப்

---

இங்ஙனே விசேஷித்ததுக்கு உட்கருத்தைத் த்ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறார் (பூங்கொள் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) நாடெல்லாம் வாழவேணுமென்னுமிவர்கள் பரஸம்ருத்திபரதைக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (இவர்கள் இத்யாதி.) "போய்ப்பாடு" என்றதுக்கு - இடமுடைத்தாகையைக் கீழ் ஒரு அர்த்தமாக அருளிச்செய்து, அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (புகழென்றுமாம் இத்யாதி.)

"சாலப் பெரும்பறை" என்றதுக்கு - மிகவும் பெரிதான வாத்யமென்று சப்தார்த்தமாய், அத்தால் பலிதத்தை வ்யாவர்த்ய பூர்வகம் அருளிச்செய்கிறார் (ஒரு மன்றிலே இத்யாதி.) மன்று - பொதுச்சாவடி. ஸ்ரீபாஞ்சராத்ரக்ரியாபாதே ஷோடஶாத்யாயே [" ...... "] "ஜா உவ ஷுஹுிதுள தரு ஹெரீ தாவஉந் தது ரு" இதி ஸ்திதம்வசநம் அத்ர அநுஸந்தேயம்.

"ஆலினிலையாய்" என்று ஸம்போதித்ததுக்கு ப்ரஸக்திமுகேந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (என்றுஇவற்றை அபேக்ஷிக்க இத்யாதி.) "ஆலினிலையாய்" என்று - வடபெருங்கோயிலுடையானைக்குறித்து இவர்கள் அபே

போலே யிருப்பார் சிலருண்டாகிலிறே புறம்பு ஸ்ரீபாஞ்சஜந்யம் போலே யிருக்கும் சங்கு உண்டாவது. * பறைக்குப் பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்கக் குடக்கூத்தாடினபோது, திருவரையிற்கட்டின பறையையும், திருப்பல்லாண்டு பாடுகைக்குப் பெரியாழ்வாரையும், விளக்குக்கு நப்பின்னைப் பிராட்டியையும், கொடிக்குப் பெரியதிருவடியையும், மேல்கட்டிக்கு அத்தவாளத்தையும் கொள்ளுங்கோ ளென்றான். 'விதாநத்துக்குத் திருவவதரித்த அன்று பணத்தையிட்டுக் கவித்துக்கொண்டு போந்த திருவநந்தாழ்வானைக் கொடாதொழிவானென்?' என்னில் ;—எல்லாரையும் போகச்சொன்னாலும் தன்னையொழிய ஓரடியிடமாட்டாதவனாகையாலே, அத்தவாளத்தைக் கொடுத்தான் ; *பெருமானரையில் பீதகவண்ணவாடை கொண்டிறே வாட்டந்தணியச் சொல்லிற்று. 'ஓரொன்று போராது, இப்படியிருப்பனபலவேணும்' என்ன;–'இல்லாதத்தைத் தேடப்போமோ?' என்ன; - 'உனக்கு அரியது உண்டோ?' என்ன;—'எனக்கு எளியதா யிருந்ததோ?' என்ன;—(ஆலினிலையாய்) - சிறியதொருவடிவைக்கொண்டு ஸர்வலோகத்தையும் சிறு வயிற்றிலேவைத்துப் பவனுமிருப்பதொருஆலந்தளிரிலே கண்வளர்ந்த உனக்கு முடியாதது உண்டோ? லோகத்தில் இல்லாததும் எங்களுக்காக உண்டாக்கவல்லை யென்று கருத்து. (அருள்) - வேண்டா

---

க்ஷித்தபோது க்ருஷ்ணாவதாரத்தில் பறையைக்கொள்ளுங்களென்றும், நப்பின்னையைக் கொள்ளுங்களென்றும் சொன்னது, நாய்ச்சியாருடைய பாவநாப்ரகர்ஷத்தாலே அதீதகாலத்திலுள்ளதும் வர்த்தமாநகாலத்தோடு ஒத்துத் தோற்றுகையாலே சேரு மென்று கண்டுகொள்வது. 'ஓரடியிடமாட்டாதவன்' என்றது - அவதாரத்திலுமுட்பட,["నచసీతా త్వయాహీనా నచాహమపి రాఘవ"] "நசஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ" என்றும், ["అహం సర్వం కరిష్యామి జాగ్రతస్స్వపతశ్చతే"] "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதஶ்சதே" என்றும் சொல்லுகையாலே-ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் தன்னைப் பிரியமாட்டாதவனென்கை. அத்யந்தம் இஷ்டமாகையாலே கொடுத்தானென்று பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (பெருமான் இத்யாதி.) "சங்கங்கள்" என்று பஹுவசநமிருக்கையாலே, "பறை" இத்யாத்யேகவசநம் ஸமஷ்டிவாசக என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (ஓரொன்று இத்யாதி. (உ௬)

தொழியில், செய்யலாவதில்லை, ஶக்தியில்லாமையில்லை; இத்தலையில் பேற்றுக்கு எல்லாம் ஹேது அவன்ப்ரஸாத மென்கை.

"மாலே மணிவண்ணா" என்கிற இத்தால் - ["మాం"] "ஶரணம்" (கசுக) என்கிற இடத்தில் ஸௌலப்யத்தைச் சொல்லிற்று; 'ஆலினிலையாய்" என்கிறவிஶேஷணத்தால்- ["ఏకం"] "வ்ரஜ" (கசுக) என்கிற இடத்தில் ஸஹாயாந்தரநிரபேக்ஷமான உபாயவேஷத்தைச் சொல்லிற்று; இப்பாட்டிற் சொல்லுகிறது - ["నిరఞ్జనః పరమం సామ్యముపైతి"] "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" (கசுஉ) என்கிற ஶ்ருத்யர்த்தம். (உசு)

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தாறும்பாட்டு. (மாலே இத்யாதி.) இப்பாட்டில், பகவத்ஸம்ஶ்லேஷத்துக்கு வேண்டும் உபகரணங்களை வேண்டிக் கொள்ளுகிறார்கள்.

வ்யா.—(மாலே மணிவண்ணா)-ஸர்வாதிகனாய் ஸர்வஸுலபனானவனே யென்னுதல்; ஆஶ்ரிதவ்யாமோஹமே ஸ்வரூபமாய் அதிமநோஹரமான விக்ரஹத்தை யுடையவனே யென்னுதல். இப்படி ஸம்போதித்தவாறே,'நீங்கள் வந்த கார்யம் என்?' என்ன,—(மார்கழி நீராடுவான்) - மார்கழி மாஸத்தில் நோன்புக்கு அங்கமாகக் குளிக்கை. இந்நோன்புதானே காம்யார்த்திகளுக்கு ஸாதநமாயும், நிஷ்காமருக்கு நித்யமாயும், ப்ரபந்நாதிகாரிகளுக்குப் பகவத்கைங்கர்யமாயும் இருக்கும். ஆகையாலே, ப்ரபந்நாதிகாரிகளுக்குச் சொல்லுகிற கர்மத்யாகம் - ஶாஸ்த்ரோக்தமான ஆகாரத்தாலே அநுஷ்டியா தொழிகை யொழியக் கேவலம் அநநுஷ்டாநரூபத்யாக மன்றென்றதாய்த்து.

'அதில் ப்ரமாண மென்?' என்ன;-(மேலையார் செய்வனகள்)-ப்ரமாணங்களில் தலையான ஶிஷ்டாசார மென்ன;

'அதுக்கு வேண்டுவ தென்?' என்ன;—'பராக்கில்லாமல் கேட்டாயாகில் சொல்லுகிறோம்' என்ன; 'ஆகில் இதுவும் உங்கள் பேச்சன்றோ? கேட்கிறேன், சொல்லுங்கோள்'என்ன;சொல்லுகிறார்கள்:-(ஞாலமித்யாதியால்.) - பூமிப்பரப்பிலுள்ள அஹங்காரி சேதநரடைய நடுங்கும்படி த்வநிக்குமதாய், அதுக்குத் தக்க குடைகையை யுடைத்தாய் அதிபோக்யமாய் அதிபரிஶுத்தமாய் உன் திருக்கையில்

ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே யிருக்கிற பலசங்கங்கள் வேணும். இத்தால் -அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநம் வேணு மென்கிறது. ஶங்கத்வநி ஓங்காரமென்று ஜகத்திலே ப்ரஸித்தமா யிருக்கையாலே ஓங்காரார்த்தம்அநந்யார்ஹஶேஷத்வ மாகையாலே,லக்ஷணயா ஶேஷத்வ ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது.

(சாலப் பெரும்பறையே) - மிகவும் த்வநிக்கிற மத்யத்திலே யிருக்கிற பறையென்கையாலே-பகவதநந்யார்ஹஶேஷத்வ விரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தையும், ஶேஷத்வஸிஹ்நமான கைங்கர்யத்தில் ஸ்வாதீநகர்த்ருத்வ போக்த்ருத்வங்களையும் நிவர்த்திப்பிக்குமதாய், மத்யேயிருக்கிற நமஶ்ஶப்தார்த்தமான பாரதந்த்ர்யஜ்ஞாநமும் வேணுமென்னுமிடம் சொல்லுகிறது.(பல்லாண்டிசைப்பாரே)- ஸத்ஸஹவாஸம் வேணும்.

(கோல விளக்கே) – பகவ தநந்யார்ஹஶேஷத்வத்தை அவனுக்கு அத்யந்தம்மநோஹரமாக்குகிற பாகவதஶேஷத்வஜ்ஞாநமும் வேணும். (கொடியே) - கீழ்ச்சொன்ன ஶேஷத்வ லக்ஷணமான கைங்கர்யமும் வேணும். (விதாநமே) - அக்கைங்கர்யத்தில் போக்த்ருத்வ நிவ்ருத்தியும் வேணு மென்ன;

'இல்லாதத்தை யுண்டாக்கலாமோ?' என்ன,-(ஆலினிலையாய்) - முன்பு இல்லாதத்தை யுண்டாக்கினவனல்லையோ? (அருள்)-க்ருபையுண்டாகில் செய்யத்தட்டில்லை. (உ௬)

அ.—இருபத்தேழாம்பாட்டு. நோற்றால், அவன்பக்கல் பெறக்கடவ பேறு சொல்லுகிறார்கள்.

மூ.—கூடாரைவெல்லுஞ்சீர்க்கோவிந்தா வுன்றன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம்
நாடுபுகழும்பரிசினால்நன்றாகச்
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம்
ஆடையுடுப்போ மதன்பின்னேபாற்சோறு
மூடநெய்பெய்து முழங்கைவழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய்.

---

இருபத்தேழாம்பாட்டு, (கூடாரை இத்யாதி.) எம்பெருமானோட்டை ஸம்ஶ்லேஷத்துக்காகத் தங்களுக்கு வேண்டும் பூஷணாதிகளெல்லாம் உத்தேஶ்யமாகத்தோற்றுமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (நோற்றால் இத்யாதி.) நோற்றால் - நோன்பென்று வ்யாஜித்தால்.

**பதவுரை.**—கூடாரை - தன்னை ஆஸ்ரயியாதவர்களை, வெல்லும் - ஜயிக்கும், சீர் - குணத்தையுடைய, கோவிந்தா - கோவிந்தனென்னும் திருநாமத்தையுடையவனே! உன்தன்னை-(கோபீஜநவல்லபனான) உன்னை, பாடி-(ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்) பாடி, பறைகொண்டு- (ப்ராப்யத்தைப்) பெற்று, யாம் பெறு - நாங்கள் பெறும்படியான, சம்மானம்—,—நாடு புகழும் பரிசினால் - நாட்டார் புகழும்படிக்கு ஈடாக,—சூடகம் - (கையிலணியும் ஆபரணமான) முன்கைச்சரியும், தோள்வளை - தோளுக்கிடும் ஆபரணமான பாஹுவலயமும், தோடு - (காதுக்கிடும் ஆபரணமான) தோடும், செவிப்பூ-கர்ணப்பூவும், பாடகம் - (காலுக்கிடும் ஆபரணமான) பாடகமும், என்று அனைய - என்றாற்போலே சொல்லப்பட்ட, பல் கலனும் - பலவகையான ஆபரணங்களும், (நீயும் நப்பின்னைப்பிராட்டியுமாக இருந்து பூட்ட), யாம் - நாங்கள், நன்றாக அணிவோம்- நன்றாகத் தரிப்போம்; ஆடை உடுப்போம்-திருப்பரியட்டங்களை (நீ உடுத்த) உடுப்போம்; அதன்பின்னே - அதற்குப் பின்பு, பால் சோறுமூட-பாற்சோறானது மூடும்படி, நெய் பெய்து- நெய் பரிமாறி, முழங்கை வழி வார - முழங்கையால் வழியும்படியாக,. (பிரிந்துபட்ட வ்யஸநமெல்லாம் தீரும்படி), கூடியிருந்து - (நீயும் நாங்களுமாகக்) கூடியிருந்து, குளிர்ந்து - ஸுகித்து இருப்போம் என்ற இதுவே என்கிறார்கள்.

**வ்யா.**—(கூடாரை வெல்லும்)-ஆந்தனையும் பார்த்தால், [“ந நமேயம்”] “நநமெயழ்” (சகூஅ) என்பாரை வெல்லுமித்தனை. அவர்களை வெல்லுமாபோலே, கூடினார்க்குத் தான் தோற்குமித்தனை. (சீர்) - எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. [“ஸ சாபமாதாய ஸமர்த்தவீர:”] “வவாமுவாவஸுஉவொவீர:” (சகூகூ) என்று - விற்பிடித்தபடியைக் காட்டி விரோதிகளைத் தோற்பிக்கும்; அநுகூலரை அழகாலும் நீர்மையாலும் தோற்பிக்கும்; ஸர்வஜ்ஞரை “எத்திறம்!” என்னப் பண்ணும் குணமிறே. அம்புவாய் மருந்தூட்

---

கூடாரைவெல்லுமதான, சீரை- கல்யாணகுணத்தை யுடையவனென்னு மப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆந்தனையும் இத்யாதி.) “கூடாரைவெல்லும்” என்னுமதத்தால்- கூடுமவர்க்குத் தோற்குமென்று பலித்த தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அவர்களை இத்யாதி.) ‘தோற்குமித்தனை’ என்றது - ஶீலாதிகுணங்களாலே அநுகூலரை வென்று தான் தோற்றிருக்கு மென்றபடி. கூடாதாரை ஶௌர்யாதிகளாலும்; கூடினாரை ஶீலாதிகளாலும் வெல்லும் ப்ரகாரத்தை ப்ரதீக க்ரஹணபூர்வகம் உபபாதிக்கிறார் (எல்லாரையும் இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.) ‘அம்பாலே தோற்பிக்கையும் குணத்தாலே தோற்பிக்கையும் துல்யமாமோ?’ என்ன; அருளிச்செய்கிறார் (அம்புவாய் இத்யாதி.) தாஹார்த்தனானவன் தீர்த்தபானம் பண்ணும்போது ஸாத்மிக்க ஸாத்மிக்கப் பானம் பண்ணுதே ஆர்த்தி

டித்தீர்க்கலாம்; நீர் சொன்னாற்போலே இதுக்குப் பரிஹாரமில்லை. (கோவிந்தா) - கூடுவோமல்லோமென்னும் அபிஸந்தியில்லாதமாத்ரத்திலே ரக்ஷித்தபடி.

(உன்தன்னைப்பாடி)-"ஹிரண்யாய நம:" என்கை தவிர்ந்து, வகுத்த உன்னுடைய பேரை ஸ்வயம்ப்ரயோஜநமாகச் சொல்லப் பெறுவதே! என்கை. கோபீஜந வல்லபனான உன்னைப் பாடுகைகையே எங்களுக்கு ப்ரயோஜநம் போரு மென்னவுமாம். (பறைகொண்டு)-ப்ராப்யத்திலே ப்ராபக வ்யவஹாரம். ஊருக்கு "பறை" என்கிறது; தங்களுக்கு ப்ராப்யம். (யாம்பெறு சம்மானம்) - தோளில் மாலையை வாங்கி யிடுகை இவர்க்குப் பெறும்பேறென்கை. ["ஹஂஸ ஸ்கந்தாவஸக்தாம்"] "வ திவஸூ நி தாவஸீ தா" (௧௪௯) என்று-"பெருமாள் தோளில் மாலையை வாங்கி யிட்டார்" என்று ஆழ்வான் பணிக்கும்; பட்டரும் பணிக்கும். அநாதிகாலம் எல்லாராலும் பட்ட பரிபவம் மறக்கும்படி கொண்டாடுகை.

(நாடு இத்யாதி) - ஒருவன் கொடுக்கும்படியே! சிலர் பெறும்படியே! என்று நாட்டார் கொண்டாடவேணும். (நன்றாக)-

---

யாலே அதிகமாகப் பாரம்பண்ண அத்தாலே பாரதைவந்தால் அதுக்கும், ஈஶ்வரனுடைய தாரகமான குணங்களை அபிநிவேஶத்தாலே யநுபவிக்கையால் வந்த ஈடுபாட்டுக்கும் பரிஹாரமில்லை யென்று கருத்து. * கோபதத்தாலே ஹிதாஹிதஜ்ஞாநமில்லாமை தோற்றுகையால் அதுக்குத்தாத்பர்யம்அருளிச் செய்கிறார் (கூடுவோமல்லோம் இத்யாதி.)

"உன் தன்னை" என்ற விடத்தில், "தன்னை" என்றத்தாலே தேர்ந்தின தானான தன்மை வகுத்தஶேஷியாகை யென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஹிரண்யாயேத்யாதி.) "கோவிந்தா" என்ற பதத்தைக் கடாக்ஷித்து, "உன் தன்னை" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கோபீஜநேத்யாதி.) ப்ராப்யத்திலே - தங்களுக்கு உத்தேஶ்யமான கைங்கர்யத்திலே. 'ப்ராபக வ்யவஹாரம்' என்றது-நோன்புக்கு அங்கமாகையால் ப்ராபகவாசகமான "பறை" என்கிற ஶப்தப்ரயோகமென்கை. இதுக்கு மேற்படத் தங்களுக்குப் பேறில்லாமையால் திருத்தோள்மாலை யிடுகையே ஸந்மாநமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தோளில் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'சம்மானம்' என்றது - கொண்டாடுகையாய், அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (அநாதீத்யாதி.)

நாடுபுகழும் பரிசினால் - நாட்டார் கொண்டாடும் ப்ரகாரத்தாலே யென்று ஶப்தார்த்தமாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஒருவன் இத்

["ప్రదేహిసుభగే హారం యస్యతుష్టాzసి భామిని"] "ப்ரதெஹிஸுபகெ ஹாரஂயஸ்ய துஷ்டாzஸிபாமிநி" (கககூ) என்று - இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பெருமாளும் பிராட்டியும் கூட விருந்து திருவடிக்குப் பூட்டினாற்போலே பூணவேணும். ["తం స్వలఙ్కారేణాలఙ్కుర్వన్తి"] "தஂஸ்வலஂகாரெணாலஂகுர்வந்தி" (கககூ) என்று சிலரை யிட்டு ஒப்பிக்கை யன்றிக்கே, தானும் பிராட்டியும் கூட இருந்து ஒப்பித்த தன்னேற்றம். ஆப ரணத்தைப் பூண்டு அவன் வரவு பார்த்திராதொழிகை என்றுமாம்.

(சூடகமே) - ப்ரதமத்திலே ஸ்பர்சிக்கும் கைக்கிடும் ஆபரணம். பரமப்ரணயியாகையாலேதன் தலையிலேவைத்துக்கொள்ளும் கை. "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்று, இவர்களுக்கு அவன் சொல்லுமாபோலே சொல்லி, மார்பிலும் தலையிலும் வைத்துக்கொள்ளும் கைக்கு இடும் சூடகம். (தோள்வளை)- அந்தஸ்பர்சத்தாலே அணைக்கவேண்டும் தோளுக்கு இடும் ஆபரணம். (தோடே) - "பொற்றோடு பெய்து" என்று - பண்டே தோடிட்டாலும் அவனிட்டாற்போலே இராதிறே. (செவிப்பூவே) - ["ప్రియావతంస"] "ப்ரியாவதஂஸ" (கக ) இத்யாதியிற் சொல்லுகிறபடியே அணைத்த திருக்கையிலே உறுத்தும் ஆபரணங்கள்போலன்றிக்கே, அணைத்த அநந்தரம் ஆக்ராணத்துக்கு விஷயமான இடம். (பாடகம்) - அணைத்தால் தோற்றுப் பிடிக்குங்காலுக்கு இடும் ஆபரணம். (என்று அனையபல்கலன்)-பருப்பருத்தன சிலசொன்னோமித்தனை; நீ அறியுமவையெல்லா மென்கை. * பலபலவே யாபரணமிறே. (யாம் அணிவோம்) - வ்யதிரேகத்தில் "மலரிட்டு நாமுடியோம்" என்கிற

---

யாதி.) நன்மையாவது - க்ருஷ்ணனும் நப்பின்னையும் கூடஇருந்து பூட்டுகையென்று விவக்ஷித்து, த்ருஷ்டாந்தபூர்வகம் விவரிக்கிறார் (ப்ரதேஹீத்யாதி.) நன்மையாவது - க்ருஷ்ணன் ஸந்நிதியிலே தானே பூண்டிருக்கையென்று விவக்ஷித்து வ்யாவர்த்யபூர்வகம் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆபரணத்தை. இத்யாதி.)

"சூடகம்" என்றது - முன்கைச்சரியாய், அத்தைத் தரிக்கவேணுமென்றதுக்கு ஹேது அருளிச்செய்கிறார்(அடிச்சியோம்இத்யாதி.)'அணைத்த திருக்கையிலே' என்றது - அணைத்து உபகாரமாகக்கொடுத்த திருக்கையிலேயென்றபடி. "பல்கலனும் தரவேணும்"என்ன வேண்டியிருக்க, "அணிவோம்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வ்யதிரேகத்தில்

வர்கள் "பூண்போம்" என்கிறார்கள். அவனுக்கு இவர்களநுமதியைப் பண்ணுகையே அமையுமென்கை.

(ஆடை யுடுப்போம்) - 'பண்டு உடார்களோ?' என்னில்;— அவனுடுத்து உடாதது உடையன்றென்றிறே இருப்பது. அவன் திருப்பரியட்டம் இவர்களரையிலே யாம்படி கூறை மாறவேணுமென்றுமாம். நோன்பை முடிக்கையாலே நல்ல பரியட்டம் உடுக்கவென்றுமாம். "உடுத்துக் களைந்த" என்னுமவர்களிறே இவர்கள். ஸ்வேதகந்தயுக்தமாய் அவனுடுத்து முசிந்த ஆடை என்னவுமாம். (அதன் பின்னே இத்யாதி.) - அதுக்குமேலே பால்சோறு மூடும்படியாக நெய் பெய்து. இத்தால் - பகவத்ஸம்பந்த முள்ள திருவாய்ப்பாடியில் ஸம்ருத்தியெல்லாம் ப்ரியமா யிருக்கிறபடி. (முழங்கை வழிவார) - நம்பி திருவழுதி வளநாடு தாஸர் "நெய் படாதோ?" என்ன; "க்ருஷ்ணஸந்நிதியாலே த்ருப்தைகளா யிருக்கிறவர்களுக்குச் சோறுவாயில் தொங்கிலன்றோ நெய் வாயில் தொங்குவது?" என்று பட்டர் அருளிச்செய்தார். வ்யதிரேகத்தில் "நெய்யுண்ணோம் பாலுண்ணோம்" என்று சொன்னவர்கள் இன்று ஆசைப்படுகிறார்கள். (கூடியிருந்து) - பிரிந்துபட்ட க்லேசம் தீரக் கூடித் தொட்டுக்கொண்டிருக்கையே ப்ரயோஜநம்; புஜிக்கை ப்ரயோஜநமன்று. (குளிர்ந்து) - பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் குளிரும்படி. "நம்பெருமாள் திருநாள்" என்று ஒருபேரையிட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களைத் திரட்டிக்காணுமாபோலே, ["அஹமந்நம் - அஹமந்நாத:"] "அஹமந்நம் - அஹமந்நாத:" (௧௧-அ) என்று ஒருவர்க்கொருவர் போக்யமிறே. ["ஸர்வ ... ।

---

இத்யாதி வாக்யத்வயத்தாலே.) அநுமதியைப் பண்ணுகையே அமையும் அவன் கொடுக்கைக்கென்று கருத்து.

'என்னுமவர்களிறே' என்றஅநந்தரம் "ஆகையாலே" என்று சேஷம். 'நெய்படாதோ வென்ன' என்றது - முழங்கையில் தானே வழிகையித்தனை போக்கி, வாயில் புகாதோவென்ன வென்றபடி. க்ருஷ்ணனோடே கூடியிருக்கையே ப்ரயோஜந மென்னு மதுக்கு, இவர்களோடே கூடுகை அவனுக்கு ஸ்வயம்ப்ரயோஜநமானாற்போலே இவர்களுக்கும் அவனோடு கூடுகை பரம ப்ரயோஜநமென்னும் அர்த்தத்தை த்ருஷ்டாந்தமுகேந அருளிச்செய்கிறார் (நம்பெருமாள் இத்யாதி.) இவ்வர்த்தத்துக்கு ஸம்வாதம் அருளிச்செய்கிறார் (அஹமந்நம் இத்யாதி.) 'அஹமந்நம்' என்றது - ப்ரஹ்மத்துக்குத் தான் போக்ய மென்றபடி. அஹம்அந்நாத - நான் ப்ரஹ்மமாகிற போக்யத்தைப் புஜிக்கிறவனென்று முக்தனுடைய அநுஸந்தாநம் இருக்கிறபடி. இப்பாட்டில் க்ருஷ்ணனோடே கூறை சோறு முதலான இஷ்டங்களைப்புஜிக்கையைச்

[ ] "லொரஜ்ஞதெ ஸஹாநுகாராநுஸஹ - ஸூஹ்மணாவிபஸ்சிதா" (கககக) என்கிற ஶ்ருத்யர்த்தம் இப்பாட்டிற் சொல்லுகிறது. (உஎ)

---

சொல்லுகையாலே இதுக்கு ஸம்வாதம் அருளிச்செய்கிறார் (ஸோஶ்நுதேத் யாதி.) 'காமாந்' என்றது - இஷ்டங்களை யென்றபடி.

'கூடாரை' இத்யாதி, பாடிப்பறைகொண்டு யாம் சம்மானம்பெறக்கடவோம்; நாடுபுகழும் இத்யாதி, யாம் அணிவோம்; ஆடையுடுப்போம்; அதன்பின்னே நெய் சோறுமூடப் பெய்து முழங்கைவழிவாரப் பாற்சோறு உண்ணக்கடவோம்; இப்படி உன்னோடு கூடியிருக்கக் கடவோமென்று அந்வயம். "சூடகம்" இத்யாதியில் ஏகாரம் ஸமுச்சயம். (உஎ)

### ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தேழாம்பாட்டு. (கூடாரை இத்யாதி.) இப்பாட்டில், நோற்றால், அவன்பக்கல் பெறுமவற்றைச் சொல்லுகிறார்கள்.

வ்யா.—(கூடாரை வெல்லுஞ் சீர்) - காரணகளேபரப்ரதாநம் முதலாக ஸாங்கஶாஸ்த்ர ப்ரதாநம் பண்ணின இடத்திலும் [ ] "நநமெயம்" என்றிருப்பாரைத் தன்னுடைய ஶௌர்யாதி குணங்களாலும் ஶீலாதிகுணங்களாலும் வெல்லுமித்தனை. விற்பிடியைக் காட்டி ராவணனை ஜயித்தான்; இது ப்ரதம யுத்தத்திலே [ ] "ஒஹ்ாநுஜாநாமி" என்று இவனும் அதுக்கு எதிர்பூர்த்துப் போனவன், தோலாமை இல்லையிறே. ஆனால், மறுபடியும் யுத்தமுண்டானபடி யெங்ஙனே யென்னில்?- பெருமாளுடைய நிரதியஶௌர்யத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக மறுபடியும் யுத்தம்பண்ணினானித்தனை. [ ] "ஶத்ரோ: ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" [ ] "ஸ்விக்ரமை: ரஞ்ஜநீயஸ்ய" என்னக்கடவதிறே என்று நம்முடைய ஆசார்யர் அருளிச்செய்வர். தன்னுடையவடிவழகைக்காட்டிக் கோபிமார்களைஜயித்தான்; ஸ்வரூப ரூப குண விபூதிகளாலே ஸர்வஸ்மாத்பரனான தன்னுடைய வைலக்ஷண்யத்தைக் காட்டி ஆழ்வார்களை ஜயித்தான்; இவை யொன்றிலும் ஈடுபடாத நம்போல்வாரை, ஆழ்வார் ஸம்பந்தத்தை வ்யாஜீகரித்து ஜயிக்குமித்தனை. (கோவிந்தா) - ஸர்வஸுலபனானவனே! (உன்தன்னைப் பாடி) - ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸுலபனான உன்னை த்வதநுபவ ஜநித ப்ரீதிக்குப் போக்கு

வீடாகப் பாடி. (பறை கொண்டு)-புருஷார்த்தத்தை லபித்து. (யாம் பெறுசம்மானம் நாடு புகழும் பரிசினால் நன்றாக)-நாடு ஸ்வாபிப்ராய மாகக் கொண்டாடும் ப்ரகாரத்தாலே உன்பக்கல் கைபார்த்திருக் கும் நாங்கள் லபிக்கிற பஹுமாநம். உன் பக்கல் நன்றாக யாம் பெறு சம்மாந மென்றுமாம். (சூடகமே) - காப்பே. (தோள் வளையே) - திருவிலச்சினையே. (தோடே) - திருமந்த்ரமே. (செ விப்பூவே) - த்வயமே. (பாடகமே) - சரமஶ்லோகமே. இவை ஸ்வ ரூபஜ்ஞனாய் முமுக்ஷுவான அதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதங்களாய் பகவத்ஸம்பந்தத்யோதகங்களா யிருப்பன. இதில் தோடு, மண்ட லாகாரமாய் மந்த்ரஶேஷவிவரணியான ப்ரணவாகாரத்துக்கு த்யோதகமா யிருக்கையாலே - திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. (செவிப்பூ) - ஸ்வயம் போகரூபமாகையாலே, போகப்ரதாநமான த்வயத்தைச் சொல்லுகிறது. (பாடகம்) - பாடகம் பத்தரூபமா கையாலே, உபாயாந்தரநிவ்ருத்திபரமான சரமஶ்லோகத்தைச் சொல்லுகிறது. இம்மூன்று ரஹஸ்யத்தாலும் - ஜ்ஞாநபக்திவைராக் யங்களைச் சொல்லுகிறது. அது எங்ஙனே யென்னில்,—திருமந்த் ரம் - ஆத்மஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநபரமாகையாலும், த்வயம் - உத்தரகண்டத்திற் சொல்லுகிற கைங்கர்யத்துக்குப் பூர்வபாவியான பக்தி ப்ரதாநமாகையாலும், சரம ஶ்லோகம் - த்யாஜ்யாம்ஶத்தில் வைராக்ய ப்ரதாந மாகையாலும், ஜ்ஞாந பக்தி வைராக்யங்களைச் சொல்லுகிறது. (என்று அனைய)-என்று சொல்லப்படுகிற. (பல்கல னும்) - ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் மூன்றும். ஒரொன்றே விஷய பேதத்தாலே அநேகமா யிருக்குமிறே; ஆகையாலே, ‘பல்கல னும்' என்கிறார்கள். (யாம் அணிவோம்) - உன்னோடே கூடாத அன்று இவையொன்றும் வேண்டாத நாம், இன்று அணியக்கட வோம். பகவத்ஸம்பந்தமின்றியிலே ஜ்ஞாநபக்திவைராக்யங்களுண் டானாலும் அபாயமேயிறே பலிப்பது. பௌத்தனுக்கும் ஜ்ஞாநபக்தி வைராக்யங்க ளுண்டிறே.

(ஆடையுடுப்போம்) - ஶேஷத்வஜ்ஞாநமாகிற வஸ்த்ரத்தை யுடுப்போம். (அதன் பின்னே) - அதுக்குமேலே. (பாற்சோறு) - கைங்கர்யமானது. (மூடநெய்பெய்து) - மறையும்படி பாரதந்த்ர் யத்தை வெளியிட்டு. (கூடியிருந்து குளிர்ந்து)-போக்தாவான உன் னோடு போக்யரான நாம் ஸம்பந்தித்திருந்து விஶ்லேஷவ்யஸநமெல் லாந் தீரப்பெற்றோம். இதுவன்றோ நாம் உன்பக்கல் பெறும் ஸம்மாநம்.

(உஎ)

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. முதற்பாட்டில்“நாராயணனே நமக்கே பறை தருவான்” என்று ஸங்க்ரஹேண சொன்ன ப்ராப்ய ப்ராபகங்களை, இந்த இரண்டு பாட்டாலே விவரிக்கிறது. அதில், இப்பாட்டிலே, ‘நாட்டார் இசைகைக்காக “நோன்பு” என்று ஒரு வ்யாஜத்தையிட்டுப் புகுந்தோமித்தனை; எங்களுக்கு உத்தேஶ்யம் அதுவன்று, உன் திருவடிகளில் கைங்கர்யமே’ என்று தங்களுக்கு உத்தேஶ்யமான புருஷார்த்த ஸித்திக்கு, தங்கள் ஆகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு, ‘நீயே உபாயமாகவேணும்’ என்று அபேக்ஷித்து, இதுக்கு க்ஷாமணம் பண்ணிக்கொண்டு ப்ராப்ய ப்ரார்த்தநம் பண்ணித் தலைக்கட்டுகிறது. மேலிற்பாட்டிலே - ப்ராப்ய ப்ரார்த்தநம் பண்ணாநின்றதாகில், இங்குப் பண்ணுகிற தென்னென்னில்? - ப்ராபகம் ப்ராப்யஸாபேக்ஷம் ஆகையாலே சொல்லுகிறார்கள்.

மூ.—கறவைகள்பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம்
அறிவொன்றுமில்லாதவாய்க்குலத்து உன்றன்னைப்
பிறவிபெறுந்தனைப்புண்ணியம்நாமுடையோம்
குறைவொன்றுமில்லாதகோவிந்தா வுன்றன்னோ

---

இருபத்தெட்டாம் பாட்டு. (கறவைகள் இத்யாதி.) முதல் பாட்டில் “நாராயணனே” என்றத்தால் - ப்ராபகத்தையும், “பறை” என்றத்தால் - ப்ராப்யத்தையும் சொல்லியிருக்க, “இறைவா நீ தாராய்” என்று இப்பாட்டில் சொல்லுமளவில் பௌநருக்த்யமும், ‘இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்’ என்று - மேற்பாட்டிலே பறையைநிஷேதிக்கையால் அந்தப்பறை ப்ராப்யமென்று சொல்லுமளவில் விரோதமும் ப்ரஸங்கிக்குமென்னும் ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (முதற்பாட்டில் இத்யாதி.) “நாராயணனே நமக்கே பறை தருவான்” என்றது- அபராதமாய், அதுக்கு க்ஷாமணத்தையும் தங்களாகிஞ்சந்யம் முதலான உபயுக்தார்த்தத்தையும் இப்பாட்டில் சொல்லுகையால் இது விவரணமாய்த்து; மேலில் பாட்டில் அந்யாபதேஶமான அர்த்தத்தை நிஷேதித்து, “பறை” என்றதி னுட்கருத்தான அர்த்தத்தை விவரிக்கையால், அதுவும் விவரணமென்று கருத்து. விவரணரூபத்வத்தை உபபாதிக்கிறார் (அதில் இத்யாதி.) “இற்றைப் பறைகொள்வானன்றுகாண்” இத்யாதியைக் கடாக்ஷித்து, இப்பாட்டில் “பறை” என்றதி னர்த்தத்தை உபாயசேஷமாக அருளிச்செய்கிறார் (நாட்டார் இத்யாதி.) ப்ராபகம் ப்ராப்யஸாபேக்ஷமாகையாவது - “இறைவா நீ தாராய்” என்று இவர்கள் ப்ராபகத்தைக் குறித்து அர்த்திக்கும்போது “எத்தைத்தர” என்று கர்மாகாங்க்ஷையுண்டாயிருக்கை.

றுறவேல்நமக்கிங்கொழிக்கவொழியா
தறியாதபிள்ளைகளோமன்பினா லுன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே
இறைவாநீதாராய்பறை யேலோரெம்பாவாய்.

**பதவுரை:**—(புல்லுள்ள இடந்தேடி மேய்க்கைக்காக), கறவைகள் பின் சென்று-பசுக்களின்பின்னே போய், கானம் சேர்ந்து - காட்டிலே பொருந்தி வர்த்தித்து, உண்போம் - ஶரீரபோஷணமேபண்ணித் திரிந்தவர்களாய், ஒன்றும் அறிவு இல்லாத-சற்றேனும் அறிவில்லாத, ஆய்க்குலத்து - இடைக்குலத்திற்பிறந்த, நாம் - நாங்கள், உன் தன்னை- உன்னை, பிறவி பெறுந்தனை- ஸஜாதீயனாகப் பெறத்தக்க, புண்ணியம் - புண்யத்தை, உடையோம் - உடையவர்களாயிராநின்றோம்; குறைவொன்றும் இல்லாத - ஒருவகைக் குறையும் இல்லாதவனாய், கோவிந்தா - கோவிந்தனென்னும் பேரையுடையனாய், இறைவா - ஸர்வ ஸ்வாமியானவனே ! உன் தன்னோடு உறவு - உன்னோடு (எங்களுக்கு உண்டான) ஸம்பந்தம், இங்கு - இங்கே, நமக்கு ஒழிக்க ஒழியாது - உன்னாலும் எங்களாலும் ஒழிக்கக்கூடாது ; அறியாத - (உலக வழக்கம் ஒன்றும்) அறியாத, பிள்ளைகளோம் - பாலைகளான நாங்கள், அன்பினால் - (உன்பக்க லுண்டான) அன்பாலே, உன்தன்னை - உன்னை, சிறுபேர் அழைத்தனவும் - (நாராயணன் என்ற) சிறிய பேராலே அழைத்ததைக்குறித்து, சீறியருளாது - கோபித்தருளாமல், நீ - (விலக்காமை பார்த்திருக்கும்) நீ, பறை தாராய் - (எங்கள்) அபேக்ஷிதத்தைத் தந்தருள வேணும் என்கிறார்கள்.

வ்யா.—(கறவைகள்)- [“జ్ఞానేనహీనాః పశుభిస్సమానాః”] ‘ஜ்ஞாநேந ஹீநா: பஶுபிஸ்ஸமாநா:’’ (உ.00) என்று - அறிவு கேட்டுக்கு நிதர்ஶநமான பசுக்கள். (பின் சென்று) - நாங்கள் தேவரைப் பெறுகைக்கு குருகுலவாஸம்பண்ணினபடி. இவற்றை அநுவர்த்தித்தோமித்தனை; எங்களைப் பார்த்தால், பசுக்கள், வஸிஷ்டாதிகளுக்கு ஸத்ருஶமாகப் போரும். [“కృతానుకారానివ గోభిరార్జవే”] “க்ருதா

ஆகிஞ்சந்யத்தைச் சொல்லவேண்டித் தங்கள் நிகர்ஷத்தைச் சொல்லும்போது கறவைகளைப் பின்செல்லுகை நிகர்ஷமென்று தோற்றும்படி ஸம்வாத பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஜ்ஞாநேந இத்யாதி.) “சென்று” என்று சொல்ல அமைந்திருக்க “பின்” என்றத்தால் - ஆசார்யாநுவர்த்தநம்போலே இதுவேயொழிய வேறொன்றுமில்லையென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி.) ஜ்ஞாநஹீநர்க்கு நிதர்சநமாகை ப்ரஸித்தமேயாகிலும் பசுக்கள் மநுஷ்யரில் ஜ்ஞாநாதிகயம் தோற்றும்படி உங்களுக்கு குருஸ்தாநமாகத் தோற்றிச் சொல்லுகை யெங்ஙனே யென்ன, அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி வாக்யத்வயத்தாலே.)

நாகாரா நிவஹொஹிராஜவெ" (உ௦க) என்று-பசுக்கள் அசுக் காட்டும் ஆர்ஜவம். (கானம் சேர்ந்து) - தந்தாமுடைய வ்ருத்தி களாலே ஒருநன்மைக்கு உடலாம் மநுஷ்யர் திரியும் நாட்டிலே வர்த்தித்திலோம்;புல்லுள்ளகாட்டிலே வர்த்தித்தோமித்தனை. இருப் பாலே நன்மையை விளைக்கும் தேஶத்திலே வர்த்தித்திலோம்; காட்டிலே வர்த்தித்தோ மென்றுமாம். (சேர்ந்து) - ஊரில் கால் பொருந்தாதபடியிறே காட்டிலே பொருந்தினபடி. (உண்போம்)- வைஶ்யருக்கு கோரக்ஷணம் தர்மமாகில் தததுரூபமாகக் காட்டி லே வர்த்திக்கையும் வாநப்ரஸ்தாஶ்ரமிகளோபாதி தர்மஹேது வாகிறதென்ன; காட்டில் வர்த்தித்தாலும் வீதராகராய் வாநப்ரஸ் தாஶ்ரமிகளோபாதி ஶரீரத்தை ஒறுத்து அவ்வருகே ஒருபலத்துக் காக வர்த்தித்தோமல்லோம்; கேவலம் ஶரீரபோஷணபரராய் வர்த்தித்தோமித்தனை. இத்தால் - வ்ருத்தியில் குறைசொல்லிற்று. இதிறே உன்னைப் பெறுகைக்கு நாங்கள் அநுஷ்டித்த கர்மயோக மென்கிறார்கள்.

(அறிவொன்றும் இல்லாத)-இப்போதில்லையாகில் விடுங்கோள்: விதுராதிகளைப்போலே ஜந்மாந்தர ஸுக்ருதத்தாலே பிறந்த ஜ்ஞா நந்தானுண்டோவென்னில்? அதுவுமில்லை. (ஒன்றும்) - பகவத்ஜ்ஞா நத்துக்கு அடியான ஆத்மஜ்ஞாநமுமில்லை; தத்ஸாத்யமான பக்தியு மில்லை யென்கை. பக்தியில்லை யென்கிறது, - ["ஃ ...''] "ஹக்திஶ்சஜ்ஞாநவிஶெஷஃ" (உ௦உ) என்று - பக்தியாவது ஜ்ஞாந விஶேஷ மாகையாலே. இவர்களலமாப்பு பக்தியன்றோ வென்

---

அசுக்காட்டுகை - அநுகரிக்கை; அதாவது - நாப்புக்காட்டுகை. 'ஆர்ஜவம்' என்றது - இடையருடைய வ்யாபார மென்றபடி. 'தர்ம ஹேது' என்றது- தேவதா ப்ரஸாதஹேது வென்றபடி. ஒறுத்து - க்லேசப்படுத்தி. "கா னம் சேர்ந்துண்போம்'' என்றத்தால் - ஆகிஞ்சந்யம் பலித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (இதிறே இத்யாதி.)

"கறவைகள் பின்சென்று'' இத்யாதியாலே-ஜ்ஞாநஹீநதை சொல்லியிரு க்கவும், "அறிவொன்றுமில்லா'' என்ன ப்ரஸக்தியுண்டோ வென்னும் சங்கை யிலே அருளிச்செய்கிறார் (விதுராதிகளைப்போலே இத்யாதி.) இந்தஜந்மத்தி லே ஸம்பாதித்த ஜ்ஞாநம் இல்லாவிட்டாலும் ஜந்மாந்தரார்ஜித ஜ்ஞாநம் உண்டாகலாமே,அதுவுமில்லையென்று கருத்து."ஒன்றும்'' என்கைக்கு அநேக முண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (பகவத்ஜ்ஞாநம் இத்யாதி வாக்ய த்வயத்தாலே.) - 'பக்தியன்றோ' என்றது-பக்திகார்யமன்றோ வென்றபடி.

னில் ? - அது ஸ்வரூபமாகையாலே உபாயமாக நினையார்கள். ஆக, இத்தால் - கர்ம ஜ்ஞாந பக்திகளில்லை யென்கை. ["ಅಹಮಸ್ಮ್ಯಪರಾಧಾನಾಮಾಲಯಃ"] "அஹமஸ்ம்யபராதாநாமாலய:" (உ0ந) "நோற்ற நோன்பிலேன்" இத்யாதி, "குளித்து மூன்று" ["ನಧರ್ಮನಿಷ್ಠೋಽಸ್ಮಿ"] "நதர்மநிஷ்டோஸ்மி" (உ0ச) இத்யாதி, இவையன்றோ அறிவுடையார் வார்த்தை; அவர்களோடு ஒத்திருந்திகோ ளென்ன; (ஆய்க்குலம்) - அறிவுண்டென்று ஶங்கிக்கவொண்ணாத குலம். கீழ்ச் சொன்ன உபாயஹாநிதோஷமாகாதே குணமாம்படியான ஜந்மம். எங்கள் ஜந்மத்தைக் கண்டுவைத்து அறிவுண்டு என்று சொல்லுகிற நீ அறிவுகேடனித்தனை.

'ஆனால் விடுமத்தனையோ?' என்ன; - (உன்தன்னை இத்யாதி.)- பேற்றுக்கு உடலான புண்யமில்லாதார் இழக்கு மத்தனையன்றோ வென்ன; அங்ஙன் சொல்லலாமோ எங்களை? புண்யத்துக்குச் சோறிட்டு வளர்க்கிறவர்களன்றோ? (உன்தன்னை) - ["ಕೃಷ್ಣಂ ಧರ್ಮಂ ಸನಾತನಮ್"] "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" இறே. (க0உ) ["ಉಪಾಯೋಪೇಯಭಾವೇನ ತಮೇವ ಶರಣಂ ವ್ರಜೇತ್"] "உபாயோபேயபாவேந தமேவ ஶரணம் வ்ரஜேத்" (உ0ரு) என்னும்படியான உன்னை. (பிறவி பெறுந்தனை) -

மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அஹமஸ்மி இத்யாதி.) தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்ன இத்யாதி.) பூர்வதாத்பர்யவிவரணம் (எங்கள் இத்யாதி.) இத்தால் - நாங்கள் சொன்னது ஸ்வாபாவிகம்; ["ಅಹಮಸ್ಮಿ"] "அஹமஸ்மி" இத்யாதியால் பெரியோர்கள் சொன்னது நைச்யாநுஸந்தாநமாத்ர மென்றபடி.

'ஆனால்' என்றது - தர்மார்ஜ்ஜநாதிக ளில்லாமே ஸ்வாபாவிகமானா லென்றபடி. விடுமத்தனை - ப்ராப்யத்தி லாசை விடுமத்தனை. "ஆனால்" இத்யாதியை விவரிக்கிறார் (பேற்றுக்கு இத்யாதி.) பேற்றுக்கடியான ஸாதநம் ஒன்றுமில்லாதார் ப்ராப்யத்தை இழக்கு மித்தனையன்றோ வென்றபடி. இந்த ப்ரஶ்நத்துக்கு உத்தரமாம்படி ப்ரதீகத்துக்கு பாவம் அருளிச்செய்கிறார் (அங்ஙன் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) 'புண்யத்துக்கு' என்றது - ஸித்ததர்மமான உனக்குஎன்றபடி. "சோறு" என்று - இங்கு ரக்ஷ்யாபேக்ஷையைச் சொல்லுகிறது. அதாவது - ரக்ஷ்யனான சேதநனுடைய அபேக்ஷையில்லாதபோது தன் ரக்ஷகத்வஸ்வரூபஹாநி வருமென்று அவன் ரக்ஷகனுடைய அபேக்ஷையைப் பார்த்து அது பெற்றபோது த்ருப்தனாகையாலே தாரகமென்கை. இது ஸ்வாபாவிகார்த்தம். உனக்கு நாங்கள் புண்யத்துக்குச் சோறிட்டுவளர்க்க, எங்களை இங்ஙன் சொல்லலாமோ? என்னும் சாட்வர்த்தம் கண்டுகொள்வது. "தன்னை" என்றத்தால் தோற்றும் தானான தன்மை ஸநாதநதர்மத்வமாய், இதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (உபாயோபேயேத்யாதி.)

நாட்டார் ஆஶ்ரயணீய ரிருந்தவிடத்தே போய் ஆஶ்ரயிப்பர்கள்; அவர்களைப்போலேயோ நாங்கள்? ஆஶ்ரயணீயனான நீதான் நாங்களிருந்தவிடத்தே எங்களோடே ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும்படியன்றோ எங்களுடைய ஏற்றம்? (புண்ணியம் நாமுடையோம்)- [“కృష్ణంధర్మంసనాతనమ్”] “க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்” (க௦உ) [“పుణ్యానామపిపుణ్యోసౌ”] “புண்யாநாமபி புண்யோஸௌ” (உ௦௬) [“రామోవిగ్రహవాన్ధర్మః”] “ராமோ விக்ரஹவாந் தர்ம:” (உ௦எ) என்கிற புண்யத்தைப் பற்றினவர்களன்றோ? (நாமுடையோம்)- ஸித்தஸாதநத்தைப் பற்றினவர்களிலுங் காட்டில் இருந்தவிடத்தே சென்று ஆஶ்ரயிக்கவேண்டாதபடியான ஏற்றத்தையுடையவர்கள் நாங்கள். நினைத்தபடி விநியோகங் கொள்ளலாம்படி கைப்புகுந்த உன்னை யுடையோமன்றோ?

“அறிவொன்றுமில்லை” என்பது “புண்ணியம்நாமுடையோம்” என்பதாய்க் கொண்டு வ்யாஹதபாஷணம் பண்ணுகின்றிகோளீ யென்ன; கண்டிலையோ! இதுதானேயன்றே அறிவுகேடு; ஆனால் விடுமத்தனை யன்றோ வென்ன; (குறைவொன்று மில்லாத கோவிந்தா) -

---

உன் தன்னைப் பிறவி பிறப்பிக்கத்தக்க புண்ணியத்தை நாமுடையோமென்று ஶப்தார்த்தமாய், இப்படி புண்யத்தை விஶேஷித்ததுக்குப்பாவம் அருளிச்செய்கிறார் (நாட்டார் இத்யாதி.) ‘எங்களுடைய ஏற்றம்’ என்றது- எங்கள்பக்கல் உனக்கு உண்டான வாத்ஸல்ய மென்றபடி. “புண்ணியம்” என்றது - அலௌகிக ஶ்ரேயஸ்ஸாதநமென்று சொல்லப்பட்டதாய், க்ருஷ்ணனைத் தவிர வேறேயொன்றென்று தோன்றுமைக்காக ஸம்வாதபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணம் இத்யாதி.) இது வேறென்றாகில் கர்மாதிகளொன்றுமில்லை யென்றத்தோடு சேராதென்று கருத்து. “நாம்” என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸித்தேத்யாதி.) இங்கு, ஸித்தஸாதநத்தைப்பற்றினவர்களென்றது - ஸ்வகதஸ்வீகாரநிஷ்டரை. “உடையோம்” என்று அவன் இவர்கள்ஸ்வம்மாகத் தோன்றுகையை விவரிக்கிறார் (நினைத்தபடி இத்யாதி.)

‘வ்யாஹதபாஷணம்’ என்றதுக்குக் கருத்து - கர்மஜ்ஞாநாதிகளில்லையென்று சொல்லிவைத்து, ஸித்தோபாயமாகிற புண்ணியம் நாமுடையோமென்று சொல்லுகை. கைம்முதலில்லாவிடில் அது கார்யகரமல்லாமையாலே புண்ணியமல்லாமையால் விருத்தமென்று வ்யாஹதபாஷணம் பண்ணினிகோளென்ற க்ருஷ்ணனைக்குறித்துத் தாத்விகார்த்தத்தை நெஞ்சில் வைத்துக்கொண்டு வ்யாஹதபாஷணத்துக்கு அடியான அறிவுகேட்டைத் தங்கள்மேலே ஆரோபித்துக்கொள்ளுகிறார்களென்று அருளிச்செய்கிறார்

எங்களுக்குக் குற்றம்சொன்னோ மித்தனைபோக்கி உன்னுடைய பூர்த்திக்குக் குற்றஞ் சொன்னோமோ? ஸர்வநிரபேக்ஷ னென்கை. எங்களுடைய அறிவொன்றுமில்லாமைக்குப் போராதோ உன்னுடைய குறைவொன்றுமில்லாமை? எங்கள் குறையாலே எங்களுக்கு இழக்கவேண்டுவது-உன்னுடைய பூர்த்தியால் ஏதேனும் குறையுண்டாகிலன்றோ? என்கிறார்கள். இப்பள்ளத்துக்கு அம்மேடு நிரப்பப் போராதோ? இப்பாதாளத்துக்கு அப்பர்வதம் நேர் என்கை. எங்கள்பக்கல் ஜ்ஞாநவ்ருத்தாதிகள் ஏதேனுமுண்டோ நாங்களிழக்கைக்கு? என்று கருத்து. இத்தால் - உபாயநைரபேக்ஷ்யம் சொல்லிற்று. (கோவிந்தா)-நீங்கள் என்னைப் பூர்ணனாகப் பேசினபடியாலே வேண்டியிருந்தோமாகில் செய்தல், இல்லையாகில் தவிர்தலன்றோ? என்ன, 'நிரபேக்ஷமான பரமபதத்திலே வந்தோமோ? எங்களையொழியச் செல்லாமையாலே வந்து அவதரித்து எங்களுக்குக் கையாளாயிருக்கிற இடத்தேயன்றோ நாங்கள் அபேக்ஷிக்கிறது? இத்தால் - ஸௌலப்யம் சொல்லுகிறது.

---

(கண்டிலையோ இத்யாதி.) இவர்களுட்கருத்தை அறியாமல் நீங்கள் அறிவுகேடரானால் ப்ராப்யத்திலாசையை விடுங்கோளென்னும் க்ருஷ்ணாபிப்ராயத்தை அருளிச்செய்கிறார் (ஆனால் இத்யாதி.) தான் கார்யம் செய்யும்போது ஸஹாயஸாபேக்ஷனும்படி ஜ்ஞாநஶக்த்யாதிகளில் குறையில்லாதவனென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, இத்தால் – உபாயாந்தர நைரபேக்ஷ்யம் பலிக்கையால் வ்யாஹத மென்னும் ஶங்கை பரிஹ்ருதமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களுக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே.) நாங்கள் எங்கள்பக்கல் அறிவொன்று மில்லாமையையும் சொல்லி உன்தன்னை ஸஹாய ஸாபேக்ஷமான புண்ணியமென்று சொல்லிலன்றோ இரண்டு வார்த்தையும் வ்யாஹதமாவது; நீதானேயன்றோ உங்கள்பக்கல் கைம்முதலில்லாமையாலே ஸித்தோபாயம் கார்யகரமன்றென்று புண்யமாகாமையால் வ்யாஹதமென்று யித்தனை; நாங்களானால் ஸர்வநிரபேக்ஷனென்றே சொன்னோமாகையாலே வ்யாஹதமன்றென்று கருத்து. நான் பூர்ணனாய் எத்தனையேனும் நிரபேக்ஷனேயாகிலும் என்பக்கல் நின்று பேற்றுக்கு இழவில்லாமையை எத்தால் அத்யவஸித்திகோளென்ன; அருளிச்செய்கிறார் (எங்களுடைய இத்யாதி வாக்யத்ரயத்தாலே.) பூர்த்தியில் குறையில்லாதாப்போலே தங்கள்பக்கல் அறிவில்லாமையிலும் குறையில்லை யென்கிறார்கள் (எங்கள் இத்யாதி.) "கோவிந்தா" என்றதுக்கு சங்காபரிஹாரமுகேந தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார். (நீங்கள் இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே.)

‘குறைவாளர்க்கு நிறைவாளர் கொடுக்கக்கடவர்களென்று ஒன்று உண்டாகிலன்றோ என்பூர்த்தியும் உங்கள்அபூர்த்தியும் சொல்லுவது?’ என்ன, அதுவோ? (உன் தன்னோடு உறவு) – ‘நீ எங்களுக்கு உறவன்றோ? எங்கள் கார்யம் செய்யவேண்டாவோ?’ என்ன,—‘அதுகொண்டோ; ஆனால், ஒரு குடநீரோடே போகிறது’ என்ன,—(உன் தன்னோடு உறவேல் நமக்கு இங்குஒழிக்க ஒழியாது) - உன்னோடு உண்டான ஸம்பந்தம் உன்னாலும் விடவொண்ணாது, எங்களாலும் விடவொண்ணாது; இருவருங்கூட க்ருதஸங்கேதரானாலும் விடவொண்ணாது. ‘இப்படிச் சொல்லுகிறது என்ன உரப்பு?’ என்ன; “நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே! நீ யென்னை யன்றியிலை” என்ற ப்ரமாணத்தைக் கொண்டென்ன; அவர்கள் உங்களைப்பெற்றவர்களன்றோ வென்ன; ஆனால், நீ எங்கள் கையில் தந்த மூலப்ரமாணத்தில் முதலெழுத்தைப் பார்த்துக்கொள்ளா யென்கிறார்கள்: அதாவது -“நாராயணனே நமக்கே பறைதருவான்” என்று அடியிலே சொன்னோமென்றபடி. நீ ஸர்வப்ரகார பரிபூர்ணனாகையாலே நாங்கள் நித்யஸாந்நித்யஸாபேக்ஷரா யிருக்கிற உறவென்றுமாம். தயாபூர்ணனான உன்னோடு தயநீயதயா பூர்ணைகளான எங்களுக்கு உண்டான உறவென்றுமாம்.

(அறியாத இத்யாதி.) - கீழ்த் தாங்கள் நெருக்கின அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்கள். (அறியாத) - அநவதாநத்தாலே வந்த அஜ்ஞாநம். (பிள்ளைகள்) - பால்யத்தாலே வந்த அஜ்ஞாநம். (அன்பு)-

---

நான் ஸௌலப்யத்தால் உங்களுக்குக் கையாளாயிருந்தேனே யாகிலும் பூர்த்தியையும் அபூர்த்தியையுமிட்டு என்னுடனே வழக்குப்பேச நிமித்தமே தென்னும் சங்கையை அநுவதிக்கிறார் (குறைவாளர்க்கு இத்யாதி.) “ஒழிக்க ஒழியாது” என்றதுக்கு ப்ரஸக்தியைக் காட்டாநின்றுகொண்டு ப்ரஶ்நப்ரதிவசநரூபேண தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அதுகொண்டோ இத்யாதி.) ‘உறவு’ என்று ஸாமாந்யேந சொன்னத்தை, விசேஷித்து ப்ரமாணமுகேந நிர்த்தரிக்கைக்காக ப்ரஶ்நத்தைக் கிளப்புகிறார் (இப்படி இத்யாதி.) அப்ருதக்ஸித்த ப்ரகாரப்ரகாரிபாவத்தைத் திருவுள்ளம்பற்றிப்ரமாண முகேந உத்தரம் காட்டுகிறார் (நானுன்னை இத்யாதி.) ‘நீ எங்கள்கையில் தந்த’என்றது - ஆசார்யரூபனாய்த் தந்த வென்றபடி. ரக்ஷ்யரக்ஷகபாவ ஸம்பந்தாந்தரத்தையிட்டுத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (தயேத்யாதி.)

‘நெருக்கின அதுக்கு’ என்றதுக்கு - “உறவேல்நமக்கிங் கொழிக்கவொழியாது” என்று அவிநாபூதஸம்பந்தம் சொல்லுகையால் அதுக்கு வாசகமான திருநாமம் ஸ்ம்ருதமாய், அத்தாலே பரத்வத்தைச் சொன்னதுக்கு என்று

ப்ரேமத்தாலே வந்த அஜ்ஞாநம். இந்த ஹேதுக்களால் வந்த அறியாத்தனம் பொறுக்கவேணும். [''ஸர்வம் ப்ரஸாதாத் க்ஷமயேந வாஹ'']
'ஜயாவு ஸாஜாதுணயெநவாஷி'' (உ௦அ) என்னக்கடவதிறே.
ப்ரேமாந்தரைக் குற்றங்கொள்ளுகையாவது - ஒருபடுக்கையிலேயிருந்து கால்தாக்கிற்று கைதாக்கிற்று என்கையிறே. (உன்தன்னை இத்யாதி.)-கோவிந்தாபிஷேகம் பண்ணின பின்பு முதல்திருநாமஞ் சொல்லுகை குற்றமிறே. ''நாராயணன்'' என்றூர்கள் கீழ்; நீர்மை ஸம்பாதிக்கப் போந்தவிடத்தே மேன்மைசொல்லுகை குற்றமிறே.

(இறைவா) - தன்கைகால் தப்புச்செய்ததென்று பொடியவிரகு உண்டோ? உடைமையை யிழக்கை உடையவ னிழவன்றோ? (இறைவா) - ''பிழைப்பராகிலும் தம்மடியார் சொற்பொறுப்பது பெரியோர் கடனன்றே.'' ஐயர் தடுக்கின்கீழே யிருந்து கேட்டறியாயே? நீ இறைவனுகைக்கும் சிறுகைக்கும் என்னசேர்த்தி யுண்டு? (நீதாராய் பறை) - விலக்காமை பார்த்திருக்கும் நீ எங்களபேக்ஷிதம் செய்யாய். (உஅ)

### ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. (கறவைகள் இத்யாதி.) முதற்பாட்டில் - ஸங்க்ரஹேண சொன்ன ப்ராப்யப்ராபகங்களிரண்டையும் மேலிரண்டுபாட்டாலே விவரிப்பதாக, இப்பாட்டில் ப்ராபக ஸ்வரூபத்தை விவரிக்கிறூர்கள்.

வ்யா.—(கறவைகள் இத்யாதி.)-ஜ்ஞாநஹீநரான ஸம்ஸாரிகளை அநுவர்த்தித்து ஸம்ஸாரத்தை ப்ராப்யமாகப்பற்றி தேஹபோஷணை கபரராயிருந்தோம்; இதிறே உன்னை நாங்கள் பற்றுகைக்கு அநுஷ்

---

கருத்து. 'அறியாத்தனம்' என்றது - அத்தால்வந்த சிறுபேரழைக்கையைச் சொல்லுகிறது.

''இறைவா'' என்றதுக்கு இரண்டு அர்த்தம் - ஸ்வாமியென்றும், பெரியோ னென்றும்; முந்தினது - (தன்கை இத்யாதி வாக்யத்வயம்,) இரண்டாவது- (பிழைப்பர் இத்யாதி வாக்யத்ரயம்.) பிழை - தப்பு. 'ஐயர்தடுக்கு' என்றது - பள்ளிக்கூடத்தில் வாத்யாரிருக்கும் தடுக்கு என்றபடி. இத்தால் - பெரியோர்கள் ஸஹவாஸமில்லையோ வென்று கருத்து. இவ்வர்த்தத்வயத்துக்கும் சேரப் பலித்த தாத்பர்யம் அருளிச்செய்கிறூர் (நீ இறைவனுகைக்கும் இத்யாதி.) ''கோவிந்தா'' என்ற பதத்தைக் கடாக்ஷித்து ''நீ'' என்றதுக்கு ஹாவம் அருளிச்செய்கிறூர் (விலக்காமை இத்யாதி.) இத்தால் - அத்வேஷமே வ்யாஜமாக ரக்ஷிக்கும் நீ எங்களாபிமுக்யத்தை வ்யாஜமாக்கிக்கொண்டு தரவேணுமென்று கருத்து. (உஅ)

டித்த கர்மயோகம். (அறிவொன்றுமில்லாத) - ஜ்ஞாநமும் ஜ்ஞாந விசேஷமான பக்தியோகமும்இல்லாத.(ஆய்க்குலம்)-உபாயாந்தரங் களில்லாமையால் தோஷமாகாத குலத்திலே பிறந்தவர்கள் நாங்கள். இத்தால் - ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களாலுண்டான நிகர்ஷம் சொல்லு கிறது. ஆகில், புருஷார்த்தத்தை இழக்குமித்தனையன்றோ வென்ன; புண்யமில்லாதாரன்றோ இழப்பதென்ன; உங்கள்புண்யம்ஏதென்ன,- (உன்தன்னை இத்யாதி.)- எங்கள்குலத்திலே அவதரித்த உன்னையே புண்ணியமாக அநந்யஸாதநரான யாம் உடையோம். (குறைவொ ன்றுமில்லாத)-எங்கள் அபூர்த்தி ஆராயும்படியாயோ உன்னுடைய பூர்த்தியிருப்பது? ஸர்வநிரபேக்ஷனன்றோ நீ யென்று கருத்து. (கற வைகள் இத்யாதி.)-இவ்வளவும் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் உபாயத்தினுடைய நைரபேக்ஷ்யத்தையும் சொன்னார்களாய்த்து. குறைவாளர்க்கு நிறைவாளர் குறை தீர்க்க வேணுமென்கிற நிர்ப்பந்த மென் னென்ன; அதுவோ? (கோவிந்தா உன்தன்னோடுஉறவு)- எங்கள்குலத்தில் பிறந்த அஶரண்ய ஶரண்ய னான உன்தன்னோடு அநந்யஶரணரான எங்களுக்கு உண்டான ஸ்வஸ்வாமிபாவஸம்பந்த நிர்ப்பந்த மென்ன ; அதுவோ ஒருகுட நீரோடே போகிறதென்ன, (உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழி யாது)-உன்னோடு நமக்கு உண்டான உறவை ஆராய்ந்துபார்த்தால், ஸோபாதிக மன்றிக்கே, நம்மிருவருடையவும் ஸ்வரூபமாயிருக் கையாலே அதுதானும் நித்யமாகையாலே ஸர்வ க்தியான உன்னா லும் போக்கவொண்ணாது, ப்ராக்ருதரான நம்மாலும் போக்க வொண்ணாது, க்ருதஸங்கேதிகளான இருவராலும் போக்க வொண்ணாது, * இருள்தரு மாஞாலமான இத்தேசத்தாலும் போக்கவொண்ணாது. ஸம்பந்தஜ்ஞாநரூபமாகையாலே இதுக்கு விஸ்ம்ருதி இங்கே வரக்கூடாதோ வென்ன : “ பிறந்தபின் மறந் திலேன் ” என்கையாலே வரக்கூடாது ; ஆனாலும், ‘யதோபாஸந மன்றோ பலம் ? நீங்கள் நம்மைச் சிறுபேரிட்டழைத்திகோளே, உங்கள் சிறுமை தீரும்படி எங்ஙனே? ’ என்ன,—(அறியாத இத்யாதி.)—அறியாமையாலும் பால்யத்தாலும் ப்ரேமத்தாலும் உன்னைச் சிறுபேராலே யழைத்தோமே யாகிலும் ஸர்வஜ்ஞனாய் ஸர்வஸ்மாத்பரனாய் ப்ரேமபரவஶனான நீ சீறியருளா தொழிய வேணும். (இறைவா-சீறியருளாதே)-சீறினால் வரும்அநர்த்தம்உன்ன தன்றோ ? ஆகையால், (நீதாராய்) - அத்தலையில் குறையன்றியிலே

யொழிய அமையுமிறே. பேற்றுக்கு அத்வேஷமேயிறே இத் தலைக்கு வேண்டுவது; பேற்றின்கநத்துக்குக் கீழ் விளைந்ததெல்லாம் அத்வேஷமாத்ரமாயிருக்குமிறே. (இறைவா) - * வானோரிறையை நினைத்தன்று, * ஆய்க்குலமாய்வந்து தோன்றின நம்மிறை. (உ௮)

அ.—இருபத்தொன்பதாம் பாட்டு. கீழ்ப்பாட்டிலே - உபாய ஸ்வரூபத்தைச்சொல்லி, தங்கள்உத்தேஶ்யம் கைங்கர்ய மென்று ப்ர பந்ததாத்பர்யத்தைச் சொல்லி முடிக்கிறார்கள் - இதில்; ப்ராப்யருசி யையும், ப்ராப்யந்தான் இன்னதென்னு மிடத்தையும், அத்தை அவ னே தரவேணுமென்னு மிடத்தையும் தங்கள் ப்ராப்யத்வரையையும் அறிவிக்கிறார்கள். திருவாய்மொழியில் * எம்மாவீட்டிலே - ப்ராப் யத்தை நிஷ்கர்ஷித்து, அதில் சரமதஶையான அர்த்தத்தை * நெடு மாற்கடிமையிலே அநுபவித்து முடித்தது; இதில் - மூன்றுற சரம தஶையான * நெடுமாற்கடிமையில் அர்த்தத்தை அநுபவித்து, அது நிலைநிற்கைக்காகவும் அத்தைக் காத்தூட்டுகைக்காகவும் *எம்மாவீட்டில் அர்த்தத்தோடே தலைக்கட்டுகிறது.

மூ.—சிற்றஞ் † சிறுகாலேவந் துன்னைச்சேவித்துன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணுங்குலத்திற்பிறந்து நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகா

---

இருபத்தொன்பதாம்பாட்டு. (சிற்றஞ்சிறுகாலே இத்யாதி.) "உனக்கே நாமாட்செய்வோம்" என்றத்தைக்கடாக்ஷித்து வ்ருத்தவர்த்திஷ்யமாண கதந முகேந கீழ்ப்பாட்டோடேஸங்கதியிடுகிறார்(கீழ்இத்யாதி.)ச்ரோதாக்களுக்கும் புத்திஸௌகர்யார்த்தமாக ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார் (ப்ராப்யேத் யாதி.) "போற்றும்பொருள்கேளாய்" என்றத்தைப்பற்ற, 'ப்ராப்யருசியையும்' என்றது. "எற்றைக்கும்" இத்யாதியைக் கணிசித்து அருளிச்செய்கிறார் (ப்ராப்யந்தான் இத்யாதி.) 'அவனே தரவேணும்' என்றது - "குற்றேவலெங்க ளைக் கொள்ளாமற்போகாது"என்றத்தைக் கடாக்ஷித்து. 'ப்ராப்யத்வரையை யும்' என்றது - "சிற்றம்சிறுகாலேவந்து" என்றத்தை அவலம்பித்து. தாங் கள் காலமேவருகை த்வரையன்றிக்கே கூடாதிறே யென்று கருத்து. ஆண் டாள் சரமபர்வத்திலே உற்றிருக்கையாலே இவள்ப்ரபந்தத்துக்கும் ஆழ்வார் ப்ரபந்தத்துக்குமுள்ள வாசியை அருளிச்செய்கிறார் (திருவாய்மொழியில் இத்யாதி.) 'காத்தூட்டுகைக்காகவும்' என்றது - பரிபாலித்து மேன்மேலும் ரஸிப்பிக்கைக்காகவு மென்றபடி.

---

† சிறுகாலை என்றும் பாடமுண்டு.

சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணுங் குலத்திற்பிறந்துநீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது
இற்றைப்பறைகொள்வானன்றுகாண்கோவிந்தா
எற்றைக்குமேழேழ்பிறவிக்கு முன்றன்னோ
டுற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம்
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.

பதவுரை.—சிற்றம் சிறுகாலே - அத்யந்தம் ப்ராதஃகாலத்திலே, வந்து - (தேவரீர் வர இருக்கக்கடவ நாங்கள்) வந்து, உன்னைச் சேவித்து - தேவரீரை ஸேவித்து, உன் - தேவரீருடைய, பொன் தாமரை அடி - அழகிய தாமரை மலர்போன்ற திருவடிகளை, போற்றும் பொருள் - மங்களாசாஸநம்பண்ணுகைக்கு ப்ரயோஜநத்தை, கேளாய் - கேட்டருளவேணும்:—பெற்றம் மேய்த்து - பசுக்களை (வயிறுநிற) மேய்த்து, உண்ணும் - பின்பு தாங்களுண்கிற, குலத்தில் - இடைக்குலத்தில், பிறந்து - திருவவதரித்து, நீ - தேவரீர், குற்றேவல் - அந்தரங்ககைங்கர்யங்களை, எங்களை - (தேவரீரையொழிய ரக்ஷகரில்லாத) எங்களால், கொள்ளாமல் - திருவுள்ளம்பற்றியருளாமலிருத்தல், போகாது - தகாது; (நாங்கள் தேவரீரைக்கிட்டினது),—கோவிந்தா - பசுக்களை ரக்ஷித்தவரே! இன்று - இன்றைக்கு, பறைகொள்வான் அன்று காண் - ஒரு ப்ரயோஜநங்கொண்டு அகலுகைக்கு அன்றுகாண் (என்ன,) - (ஆனால், உங்கள் கருத்து என்? என்ன), - எற்றைக்கும் - காலமுள்ளதனையும், ஏழேழ் பிறவிக்கும் - (தேவரீருடைய) எவ்வவதாரங்களிலும், உன் தன்னோடு - தேவரீரோடே, உற்றோமே ஆவோம் - அநந்யார்ஹைகளா யிருக்கவேண்டும்; உனக்கே - தேவரீருக்கே, நாம் ஆள்செய்வோம் - நாங்கள் அடிமைசெய்யவேண்டும்; நம் - எங்களுடைய, மற்றைக் காமங்கள் - மற்ற அபிப்ராயங்களை, மாற்று - தவிர்த்தருளவேண்டும் என்கிறார்கள்.

வ்யா.—(சிற்றஞ் சிறுகாலே) - சிறுபெண்கள் எழுந்திருக்கவொண்ணாத குளிர்போதிலே. ["ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயேதாத்மநோ ஹிதம்"] "ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயேதாத்மநோ ஹிதம்" (உ௦௧) என்று ஸத்வம் தலையெடுத்த காலத்திலே. அநாத்யஜ்ஞாநாந்தகாரம் நீங்கி பகவத்விஷயம் வெளிச்செறித்த காலத்தி லென்றுமாம். "நாரணனைக் கண்டேன்-பகற்கண்டேன்" என்னக் கடவதிறே. "சிற்றஞ் சிறுகாலே" என்று ஜாதிப்பேச்சு; "வெட்ட விடியாலே" என்னுமாபோலே. (வந்து) - சேதநர்க்கு பகவல்லாபம்

---

"சிறுகாலே" என்றது - ப்ராதஃகாலத்திலே யென்றும், "சிற்றம்" என்றத்தாலே - அத்யந்தம் ப்ராதஃகாலமென்றும்; பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (சிறுபெண்கள் இத்யாதி.) ஸ்வாபதேசத்திலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ராஹ்மே இத்யாதி.) இத்தை விவரிக்கிறார் (அநாதி இத்யாதி.) இதுக்கு ஸம்வாதம் அருளிச்செய்கிறார் (நாரணனை இத்யாதி.) 'காலத்திலே' என்னவேண்டியிருக்க, "காலே" என்றதுக்கு த்ருஷ்டாந்தமூர்

அவன் வரவாலேயாயிருக்க, "வந்து" என்றது - ஆதராதிசயத்தாலே. இதுதான் அங்குத்தைக்கு மிகையாயிறே யிருப்பது. எங்ஙனேயென்னில்? —["[Grantha text]"] "[Grantha text]" (௭௫) என்று- நீ இருந்த இடத்தே வந்து. ராகம் க்ரமப்ராப்தி ஸஹியாதிறே. (உன்னைச் சேவித்து)-பலம்வேண்டாதேஸாதநகாலத்திலேரஸிக்கும் உன்னைச் சேவித்து. ["[Grantha text]"] "[Grantha text]" (௨௧௦) என்றும், "பலமுந்துசீர்" என்றுமிறே இருப்பது. அதுக்குமேலே ஓரஞ்சலியையும் உண்டறுக்கமாட்டாத உன்னைச் சேவித்து; *எழுதும் என்னும்இது மிகையான உன்னைச் சேவித்து. ஸேவ்யரான நாங்கள் ஸேவகராம்படி அத்தலை இத்தலையாவதே! ["[Grantha text]"] "[Grantha text]" (௨௧௧) என்னக்கடவதிறே.

(உன் பொற்றாமரை யடியே) - மஹார்க்கமுமாய், போக்யமுமாய், ப்ராப்தமுமாயிருந்த திருவடிகளிலே. "அடியே"என்கிற அவதாரணத்துக்குக் கருத்து –["[Grantha text]"] "[Grantha text]"

---

வகம் நியாமகம் அருளிச்செய்கிறார்(சிற்றமித்யாதி.) 'ஆதராதிசயத்தாலே' என்றது – திருவேங்கட யாத்ராதிகளைப் போலே ப்ராப்யமாகையாலே வந்த ஆதராதிசயத்தாலே யென்றபடி. பகவல்லாபம் அவன் வரவாலேயாயிருக்கை எங்ஙனே யென்ன; அருளிச்செய்கிறார் (இதுதான் இத்யாதி.) 'இருந்த விடத்தே வந்து' என்ற அநந்தரம் "என்கை" என்று சேஷம். "உன்னை" என்றதுக்கு அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (அதுக்குமேலே இத்யாதி.) அதுக்குமேலே யென்றது-தாங்கள் வந்ததுக்குமேலே என்றபடி. அஞ்சலியைஉண்டறுக்க மாட்டாமையை ஸம்வாதபூர்வகம் விவரிக்கிறார்(எழுதும் இத்யாதி.)இவ்வாக்யத்துக்கு "தொழுதுமாமலர்நீர் சுடர்தூபங்கொண்டு எழுதும்" என்ற இடத்தில், "தொழுதும்" என்றதிலே நோக்கு. "சேவித்து உன் பொற்றாமரை" என்று - தாங்கள்ஸேவிக்கை அவஶ்யமாகச் சொல்லுகைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸேவ்யரான இத்யாதி.)

"உன்னைச்சேவித்துப் பொற்றாமரையடி" என்ன அமைந்திருக்க, "உன்" என்றதன் பலிதார்த்தம் 'ப்ராப்தமுமாயிருந்த' என்றது. ஸர்வப்ரகாரத்தாலும், பெருமாள், "யௌவராஜ்யத்தை யடையும்" என்று இளையபெருமாளைக் குறித்து அருளிச்செய்தாலும் அதுக்கு ஆளாகாதாப் போலே யென்று அருளிச்செய்கிறார் (ஸர்வாத்மநா இத்யாதி.) யோகம் - அலப்யலாபமான

ஸஸ ஏதிருவெதியொமழு" (உகஉ) என்னுமாபோலே வேறொருப்ரயோஜநத்துக்குஆளாகாதிருக்கை.(போற்றும்)—போற்றுகையாவது - ஸ்வாமிக்கு மங்களாஶாஸநம்பண்ணுகை. (பொருள்கேளாய்) - முன்பே இருக்கிறவனை "கேளாய்" என்பானென் னென்னில்? - இவர்களுடைய ஸ்தநாத்யவயவங்களிலே அந்யபரனாயிருக்கையாலே உன்பராக்கைவிட்டு நாங்கள் சொல்லுகிற வார்த்தையைக்கேளா யென்கிறார்கள்.

அவனும், இவர்கள் பேச்சன்றோ?என்று கேட்டான்; - (பெற்றம் மேய்த்து இத்யாதி.) - என்றும் சாஸ்த்ரத்திலே கேட்டுப்போகக்கடவ நீ பசுக்கள் மேய்த்து உண்ணக்கடவதான இடைச்சாதியிலே வந்து பிறந்து எங்களை அடிமைகொள்ளாதொழிய வொண்ணாது. (பெற்றம் மேய்த்துண்ணுங் குலம்) - ரக்ஷ்யமான பசுக்கள் வயிறு நிறைந்தாலல்லது தாங்களுண்ணாத குலம். உன் பிறப்பாலும் எங்கள்கார்யம் தலைக்கட்டவேணு மென்று கருத்து.

(குற்றேவல்) - அந்தரங்க வ்ருத்தி; அன்றிக்கே, உசிதமான அடிமை யென்றுமாம். (எங்களை) - பசுக்களுக்கு வேறு ரக்ஷகருண்டானாலும் உன்னை யொழிய ரக்ஷகரில்லாத எங்களை. (கொள்ளாமற் போகாது) - உனக்கு விஹிதம். ஶப்தாதி விஷயங்களே தாரகமாயிருக்கிற எங்களை, உன் வடிவழகைக் காட்டி, "உண்ணுஞ் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன் எம்பெருமான்" என்னும்படி பண்ணி, ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யம் தாராதே போகை உனக்குப் போருமோ வென்கை. "உண்டிட்டாயினியுண்டொழியாய்" என்கிறார்கள்.

இவர்கள் சொன்ன ஸமநந்தரத்திலே, நீங்கள் நோன்புக்கு அங்கமானவற்றைக் கொண்டுபோமித்தனை யல்லது, வேறு நீங்கள்

---

யௌவராஜ்யத்தை யென்றபடி. ["[illegible]"] "ஸுஹ்ருஹொயொமஹ்ர்த க்ஷேமம் தத்வரக்ஷணழு" என்று ப்ரஸித்தம்.

"எங்களை" என்றதுக்கு அர்த்தாந்தரம் காட்டாநின்றுகொண்டு, "கொள்ளாமல் போகாது" என்றத்தை விவரிக்கிறார் (ஶப்தாதி இத்யாதி.) போருமோ - தகுமோ?

"பறைகொள்வா னன்றுகாண்" என்றதுக்கு ப்ரஸக்தி அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி.) "காண்" என்று சொல்லுகையால் தோன்றுகிற

அடிமையென்று சொல்லுகிறவையெல்லாம் என்னென்று பறையைக் கொடுக்கப் புக,—(இற்றைப் பறைகொள்வானன்று காண்) - இன்று ஒருப்ரயோஜநங் கொண்டுபோக வந்தோமல்லோங்காண் நாங்கள்; யதாஶ்ருதக்ராஹியா யிருந்தாய் நீ. (கோவிந்தா) - பாவ ஜ்ஞாநமில்லாத ஜந்மமிறே. அபிதாவ்ருத்தியைப் போக்கி, தாத்பர்ய வ்ருத்தி யறியாத ஜந்மமிறே.

'ஆனால், நீங்கள் சொல்லுகிறது என்?' என்ன,- (எற்றைக்கும் இத்யாதி.)-["నకాలస్తత్ర వై ప్రభుః"] "நகாலஸ்தத்ர வை ப்ரபு:" (௨௧௩)என்கிறதிருநாட்டிலேயிருக்கவுமாம்; ஆஶ்ரிதஸஜாதீயனாய்க் கொண்டு ஸம்ஸாரத்திலே பிறக்கவுமாம்; அதில்ஒருநிர்ப்பந்தமில்லை. காட்டிலும் படைவீட்டிலும் ஒக்க இளையபெருமாள் அடிமை செய்தாற்போலே யாகவேணும். ["దేవత్వే దేవదేహేయం మనుష్యత్వే చ మానుషీ"] "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" (௨௧௪) என்னக்கடவதிறே.

(உன்தன்னோடுற்றோமே யாவோம்)-நீ ஸ்வாமியாகவும் நாங்கள் ஸ்வம்மாகவும், இஸ்ஸம்பந்தம் என்றும் ஸித்திக்கு மித்தனையே எங்களுக்கு வேண்டுவது என்கிறார்கள். ["భర్తా నాథో గతిశ్చైవ"] "ஹந்தா நாதஸ்ய நீரவஸ:" (௨௧௫) என்னக்கடவதிறே. ஒருறவைக்குறித்து அதுவாகவேணு மென்னு தொழிந்தது- எல்லா வுறவுறப்பட அருளிச்செய்கிறார். (யதேத்யாதி.) ["ఘోషాయ్యక్షవిఘోషిణః"] "கோஷாய்யக்ஷவிகோஷிண:" என்ற நிகண்டுவைப்பற்ற இடையனுக்குப்பேராய், அத்தால் பலிதத்தை அருளிச்செய்கிறார் (பாவஜ்ஞாநம் இத்யாதி.) 'அபிதா வ்ருத்தி' என்று - பதஶக்தியைச் சொல்லுகிறது.

'நீங்கள் சொல்லுகிறது என்னென்ன' என்றது - எப்படிப்பட்ட குற்றேவ லென்றபடி. எற்றைக்கும்-என்றைக்கும், ஏழேழு பிறவிக்கும் - உன்னுடைய எவ்வவதாரத்துக்கு மென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, பலிதார்த்தம் அருளிச்செய்கிறார் (நகாலேத்யாதி.) 'அதில் ஒருநிர்ப்பந்த மில்லை' என்றது - நீ தேவனும்போது நாங்களும் அப்படியேயாய், மநுஷ்யனும் போது நாங்களும் மநுஷ்யராக என்றபடி. இப்படி ஆனபேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (தேவத்வேத்யாதி.)

"உற்றோம்" என்றதுக்கு ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தமாகக் கீழருளிச்செய்து, உறவுமுறையாக அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (ஒருறவை இத்யாதி.)

வும் நீயேயாகவேணு மென்கைக்காக. [“మాతా పితా భ్రాతా నివాసశ్శరణం సుహృత్”] “மாதாபிதாப்ராதா நிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்” (சஎ) [“కృష్ణాశ్రయాః కృష్ణబలాః కృష్ణనాథాశ్చ పాండవాః”] “க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:”(உகசு)“சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும்” என்னக்கடவதிறே.

‘மற்றும் வேண்டுவது என்?’ என்ன ;—(உனக்கே நாம்ஆட்செய்வோம்)-ஸம்பந்தம் ஒத்திருக்கச்செய்தே, ஸ்ரீபரதாழ்வானைப் போலே விஶ்லேஷித்திருக்கை யன்றியே, இளையபெருமாளைப் போலே அடிமை செய்யவேணும். “உனக்கே” என்கிற அவதாரணத்துக்குக் கருத்து - நீ உகந்த அடிமைசெய்வோம்; உனக்கும் எங்களுக்குமா யிருக்கிற இருப்பைத்தவிர்ந்து. “தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே” என்னுமாபோலே நீ உகந்த அடிமையாகவேணும். அஹங்கார கர்ப்பமான அடிமை புருஷார்த்தமாகாது.

(மற்றை நம் காமங்கள் மாற்று)- நாங்கள் “எங்களுக்கு”என்றிருக்கு மதுவும், நீயும் “இவர்களுக்கு” என்றிருக்கு மதுவும், இவை இரண்டும் - விரோதியாகையாலே அத்தைத் தவிர்த்துத் தரவேணும் என்கிறார்கள். (உகூ)

ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்.

அ.—இருபத்தொன்பதாம்பாட்டு. (சிற்றம்இத்யாதி.) இப்பாட்டில், உபேயஸ்வரூபத்தை விவரிக்கிறார்கள்.

வ்யா.—(சிற்றம்இத்யாதி) - ஸத்வோத்தரமான காலத்திலே ஆற்றாமையாலே வந்து, வருகை மிகை என்று இருக்கும் உன்னைச் சேவித்து. (உன் பொற்றாமரை இத்யாதி.) - ப்ராப்தமாய் ஸ்ப்ருஹணீயமாய் ஸௌகந்த்யஸௌகுமார்யலாவண்யங்களாலே பரமபோக்யமான உன் திருவடிகளையே மங்களாஶாஸநம் பண்ணுகைக்கு

---

“உனக்கே” என்றவிடத்தில் ஏவகாரார்த்தம்அருளிச்செய்கிறார் (ஸம்பந்தம் இத்யாதி.)

“மற்றைநங்காமங்கள்” என்றது-மற்றை எங்களுடைய புருஷார்த்தங்களென்றாய் அதுதானும் நீ எங்களுக்கென்று நினைத்திருக்கும் எங்கள் கார்யமென்றாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி.) ‘நாங்கள் எங்களுக்கென்று இருக்குமதுவும்’ என்றது - த்ருஷ்டாந்தார்த்தம்.

ப்ரயோஜநத்தைக் கேளாய். (பெற்றம் இத்யாதி.) - ஸ்வரக்ஷ்யரக்ஷணம்பண்ணித் தான் ஜீவிக்கிற குலத்தில் பிறந்த நீ. ரக்ஷகனான நீ ரக்ஷ்யரான எங்களைக் கைங்கர்யம் கொள்ளாமலிருக்க வொண்ணாது; ரக்ஷணரூபகார்ய மில்லாதபோது ரக்ஷ்யரக்ஷகபாவம் ஜீவியாதிறே. இப்படி அபேக்ஷிக்க, "கைங்கர்யமாவது என்? நீங்கள் முதலில் சொன்னபடியே, பறையைக் கொள்ளுங்கோள்" என்று பறையைக்கொடுக்க; (இற்றைப்பறைகொள்வானன்றுகாண் கோவிந்தா)- இந்தப்பறையைக் கொள்ளுகிற பேர்களன்று நாங்கள், நீ தாத்பர்ய க்ராஹியன்றியே யதாஶ்ருதக்ராஹியாயிருந்தாய். 'ஆனால், உங்களுக்கு அத்தால் ஏது?' என்ன; (எற்றைக்கும் இத்யாதி.) - ஸர்வதேஶஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும் உன்னோடே ஏகத்ர்மியென்னலாம்படி ஸம்பந்தித்திருக்கக்கடவோம். (உனக்கே இத்யாதி.) - ஸம்பந்தித் திருந்து எங்கள் ரஸத்துக்கு உறுப்பாகையுமன்றிக்கே, உனக்கும் எங்களுக்கும் பிறக்கும் ரஸத்துக்கு உறுப்பாகையுமன்றிக்கே, உன்னுடைய ரஸத்துக்கே உறுப்பாக அநந்யார்ஹஶேஷபூதரான நாம், தாஸவ்ருத்தியைப் பண்ணக்கடவோம். (மற்றைஇத்யாதி.) - இதுக்குப் புறம்பான நம்முடைய அபிமாநக்ரஸ்தமான ப்ரயோஜநங்களைப் போக்கு.

கீழ்-"பறை" என்று மறைத்துச்சொன்ன அர்த்தத்தை, இப்பாட்டில், அவனுக்கு உகப்புக்காகப் புகராகப்பண்ணும் அடிமையென்று விஶதீகரித்துச் சொல்லுகிறார்கள். "பெற்றம்மேய்த்துண்ணும் குலம்" என்று-ஜ்ஞாநஜந்மத்தைச் சொல்லுகிறது; ஜ்ஞாதாக்கள் ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநராய்ப் பராநர்த்தம் பொறுக்கமாட்டாதே பிறருஜ்ஜீவிக்கும்படி ஹிதப்ரவர்த்தநம் பண்ணுகையைப் பற்ற. "பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்" என்றவர்கள் தாங்களே "குற்றேவல் எங்களைக் கொள்ளாமற்போகாது" என்று- கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கையாலே கைங்கர்யந்தானும் மங்களாஶாஸநரூபமானபடியாலே மங்களாஶாஸநத்துக்குப்பலமாக அவன் கொடுக்கவேண்டியதும் இவர்கள் கொள்ளவேண்டியதும் மங்களாசாஸநமே என்றதாய்த்து.

"சிற்றம் சிறுகாலே - போற்றும்பொருள் கேளாய்" என்கையாலே - ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கித் தேஹாநுபந்திகளான த்ருஷ்ட பலங்களை அடியோங்கள் அபேக்ஷித்தாலும் ஹிதபரனான நீ கேள்விகொள்ளவும் கடவையல்லை, கொடுக்கக்கடவையுமல்லை என்றதாய்த்து. (உ௯)

அ.—நிகமத்தில், இப்ப்ரபந்தம் கற்றார், பிராட்டியாலும் எம்பெருமானாலும் ஸர்வகாலமும் விஷயீகரிக்கப்படுவர்கள் என்கிறார்கள். கற்றாருக்கு அநுஷ்டித்தாரோபாதியும் அநுகரித்தாரோபாதியும் பலம் ஸித்திக்கு மென்கை. "கன்றிழந்த தலைநாகு தோற்கன்றுக்கும் இரங்குமாபோலே இப்பாசுரங் கொண்டு புக நமக்கும் பலிக்கும்" என்று பட்டர் அருளிச்செய்வர்.

மூ.—வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனைத்
திங்கட்டிருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி
அங்கப்பறைகொண்டவாற்றை யணிபுதுவைப்
பைங்கமலத்தண்டெரியற் பட்டர்பிரான்கோதைசொன்ன
சங்கத்தமிழ்மாலை முப்பதுந்தப்பாமே
இங்கிப்பரிசுரைப்பா ரீரிரண்டுமால்வரைத்தோள்
செங்கட்டிருமுகத்துச் செல்வத்திருமாலால்
எங்குந்திருவருள்பெற் றின்புறுவரெம்பாவாய்.

**பதவுரை.**—வங்கம்கடல்-கப்பல்களையுடைய திருப்பாற்கடலை, கடைந்த-கடைந்து தேவர்களுக்கு அம்ருதம்தந்தருளின, மாதவனை - ஸ்ரீயஃபதியும், கேசவனை - ப்ரஹ்மாவுக்கும் ருத்ரனுக்கும் தலைவனுயாக இருப்பவனை, திங்கள் - பூர்ண சந்திரனைபொத்த, திருமுகத்து - அழகிய முகத்தையுடையராய், சே இழையார் - செவ்விதான ஆபரணங்களையுடையராகிய கோபஸ்த்ரீகள், சென்று இறைஞ்சி - சென்று மங்களாஶாஸனம்பண்ணி, அங்கு - திருவாய்ப்பாடியில், பறைகொண்ட - நாட்டுக்குப்பறையென்றொரு வ்யாஜத்தையிட்டு அடிமையைக் கைக்கொண்ட, ஆற்றை-அந்தப்ரகாரத்தை,—அணி புதுவை-அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்தவராய், தண்பை கமலம்-குளிர்ந்திருந்துள்ள புதிய தாமரைமலர்களாலாகிய, தெரியல்-மாலையையுடையராய், பட்டர்பிரான்-ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரது, கோதை-திருமகளாரான ஆண்டாள், சொன்ன - அருளிச்செய்ததாய், சங்கம் - (கோபஸ்த்ரீகள்) திரள்திரளாகக்கூடி அநுபவித்த ப்ரபந்தமாய், தமிழ் மாலை -

---

முப்பதாம்பாட்டு. (வங்கக்கடல் இத்யாதி.) "திருமாலா லெங்கும் திருவருள்பெற்றின்புறுவர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார் (நிகமத்தில் இத்யாதி.) திருவருள் பெற்றின்புறுகையை த்ருஷ்டாந்தபூர்வகம் விவரிக்கிறார் (கற்றார் இத்யாதி.) "சேயிழையார் சென்றிறைஞ்சி" என்றத்தைப் பற்ற 'அநுஷ்டித்தார்' என்றது. "கோதை சொன்ன" என்றத்தைப் பற்ற 'அநுகரித்தார்' என்றது. அநுஷ்டித்தார்க்கும் அநுகரித்தார்க்கு முள்ள பலம் இத்தைச் சொன்ன மாத்ரத்திலே ஸித்திக்குமோவென்ன, அருளிச்செய்கிறார் (கன்றிழந்த இத்யாதி.)

தமிழ்ப்பாமாலையான, முப்பதும் - முப்பதுபாசுரங்களையும், தப்பாமே - தப்பாமல், இங்கு இப்பரிசு உரைப்பார் - இந்த ஸம்ஸாரத்திலே இப்பாசுரமாத்திரத்தைச் சொல்லுமவர்கள்,—மால் வரை-பெரியமலையையொத்துத் திண்ணிதாயிருக்கும், ஈரிரண்டு தோள் - நான்கு திருத்தோள்களையும், செங்கண் - (ஆஸ்ரிதர்பக்கல் வாத்ஸல்யத்தால்) சிவந்த திருக்கண்களையும், திருமுகத்து - அழகிய திருமுகமண்டலத்தையுமுடையனாய், செல்வம் (நித்ய விபூதியும் லீலாவிபூதியு மாகிற) ஐஶ்வர்யத்தையுமுடையனாய், திருமாலால் - ஸ்ரீயபதியான நாராயணனாலே, எங்கும் - த்ருஷ்ட அத்ருஷ்டங்களி[illegible]டிலும், திரு அருள்பெற்று-ஒப்பற்ற க்ருபையைப் பெற்று, இன்புறுவர் - ப்ரஹ்மானந்தயுக்தரா யிருக்கப்பெறுவர்கள். வங்கம் என்பதற்கு - [illegible]கள் என்று பொருள்கொள்ளினுமாம்.

ஆண்டாள்திருவடிகளே சரணம்.

வ்யா.—(வங்கக்கடல்)-கடல் கடையாநிற்க,மரக்கலம் அலையாதபடி கடைந்த நொய்ப்பம். கடைந்தபோது சுழன்று வருகையாலே கடலடைய மரக்கலமாய் நின்றபடி யென்றுமாம். ப்ரயோஜநாந்தரபரருக்கும் உடம்பு நோவக் கடல்கடைந்து அபேக்ஷிதஸம்விதானம் பண்ணும் ஶீலவா னென்கை. க்ருஷ்ணனையாகில் விபாடிற்று, க்ஷீராப்திமதநம் பண்ணினவனைச் சொல்லுகை பின்னைச் சேருமோ என்னில்?—"விண்ணவரமுதுண வமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே" என்று - தேவகார்யமென்று வ்யாஜத்தை யிட்டுப் பெரியபிராட்டியாகிற பெண்ணமுதத்தைப் பெறுகைக்காகக் கடல்கடைந்தபடி. ஊரார் கார்யத்தை வ்யாஜமாக்கிப் பெண்களைப்பெறுகைக்காக நோன்பிலே அந்வயிப்பித்த க்ருஷ்ணனுடைய ஸ்வபாவத்தோடு ஸத்ருஶமாயிருக்கையாலே சொல்லுகிறார்கள். (மாதவனை)-ஆஶ்ரயணீயமுமாய் போக்யமுமாயிருக்கும் தத்வம் லக்ஷ்மீஸநாதமா யிருக்கு மென்கை. ஆஶ்ரயித்தார் குற்றத்தைப் பொறுப்பித்து அபேக்ஷிதங்களைச் செய்விப்பார் அருகே உண்டென்கை. (கடல்கடைந்த மாதவனை) - கடல்கடைந்து பிராட்டியை லபித்தவனை. (கேசவனை) - விரோதிநிரஸநஸ்வபாவனை. ஸ்த்ரீத்வப்ரயுக்தமாக ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்யஶேஷத்வத்தையும் போக்கினவனை. "(மாதவனைக் கேசவனை) - "அலைகடல் கடைந்து அத

"கடல்கடைந்த" என்னுமல், "வங்கக்கடல்" என்று விஶேஷித்ததுக்கு இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கடல் இத்யாதி வாக்யத்வயத்தாலே.) நொய்ப்பம் - ஸாமர்த்யம். திருப்பாற்கடலுக்கு வங்கஸம்பந்தம் சொல்லுகிறது - இந்தக்கடலோட்டை ஸாம்யத்தைப் பற்ற. ["[illegible]"] "[illegible]" என்

னுட் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே, விண்ணவரமுதுண வமுதில் வரும்பெண்ணமுதுண்ட வெம்பெருமானே" என்கிறபடியே - தான் ஸாக்ஷாத் அம்ருதத்தையுண்டு ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக் கொடுத்தான்" என்று பட்டர் அருளிச்செய்வர்.

(திங்கள் திருமுகம்)-க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தாலே குளிர்ந்து மலர்ந்த முகம். "கதிர்மதியம்போல் முகத்தான்" என்று அநபிமத நியத்வமும்உண்டு - அங்கு; அநுகூலர்க்கேயான முகமாகையாலே "திங்கள் திருமுகம்" என்கிறார்கள்-இங்கு; இவனை அநுபவிப்பார் முகமும் இப்படியேயிறே யிருப்பது. *மதிமுக மடந்தையரிறே. (சேயிழையார்) - "சூடகமே" இத்யாதியில் தாங்கள் அபேக்ஷித்தபடியே அவனும் அவளும் கூட இருந்து பூட்டின ஆபரணத்தை யுடையவர்கள். க்ருஷ்ண விஷயீகாரயோக்யதையாகிற ஆபரணத்தை யுடையவர்கள். க்ருஷ்ண விஷயீகாரத்தால் பிறந்த புகராலே ஒருபடி ஆபரணம் பூண்டாற்போலே யிருக்கிறவர்கள். (சென்று) - இவ்வொப்பனையோடே வரப் பார்த்திருக்கு மளவல்லாத த்வரையைச் சொல்லுகிறது. (இறைஞ்சி) - "அன்றிவ்வுலக மளந்தா யடிபோற்றி" என்கிறபடியே அவனுக்கு மங்களாஶாஸநம்பண்ணி.

(அங்கு)- திருவாய்ப்பாடியிலே. (அப்பறைகொண்ட வாற்றை)- நாட்டுக்கு "பறை" என்று ஒரு வ்யாஜத்தையிட்டு அடிமைகொண்ட படியை.

(அணிபுதுவை) - ஸம்ஸாரத்துக்கு நாயகக்கல்லான ஸ்ரீவில்லிபுத்தூர். (பைங்கமலத்தண் தெரியல்)-ப்ராஹ்மணர்க்குத் தாமரைத்

---

றத்தைப்பற்ற "கேசவன்" என்றதுக்கு அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (அலைகடல் இத்யாதி.)

"திரு" என்று = விகாஸத்தாலுண்டான காந்தியைச் சொல்லுகிறதாய் அருளிச்செய்கிறார் (மலர்ந்த என்று.) "சே" என்று - அழகாய், "இழை" என்று - ஆபரணமாய், "சூடகம்" இத்யாதியில் சொன்ன ஆபரணங்களாதல், க்ருஷ்ணவிஷயீகாரயாகிற ஆபரணமாதல், அதனால் வந்த புகராதல் என்று மூன்றுவிதமாக அருளிச்செய்கிறார் (சூடகம் இத்யாதி.) 'ஒருபடி' என்றது - முத்துப்படி, பவளப்படி யென்றாற்போலே ஒரு ஆபரணங்கொண்டபடி.

பை - பசுமையாய், கமலம் - கமலத்தினுடைய, தண் - குளிர்ந்த, தெரியல் - மாலையென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, பெரியாழ்வார்க்கு அத்தை நிரூபகமாகச் சொன்னதுக்குப் பாவம் அருளிச்செய்கிறார் (ப்ராஹ்மணர்க்கு இத்யாதி.)

தாராகையாலே சொல்லுகிறது. (பட்டர்பிரான் கோதைசொன்ன) - ஆண்டாள் அநுகார ப்ரகாரத்தாலே அநுபவித்துச் சொன்ன. [“[illegible]”] “ஸஹோவாச வ்யாஸ꞉ பாராஶர்ய꞉” (உ௭) என்று - பராஶரபுத்ரனென்று ஆப்திக்குச் சொன்னாற்போலே, பெரியாழ்வார்மகளாகையாலே சொன்ன அர்த்தத்தில் அர்த்தவாத மில்லை.

(சங்கத் தமிழ்மாலை) “குழாங்களாய்” என்னுமாபோலே திரள் திரளாக அநுபவிக்கவேண்டும் ப்ரபந்தம். பஞ்சலக்ஷம் குடியிற் பெண்கள் திரள்திரளாக அநுபவிந்த ப்ரபந்தமிறே. (தமிழ்மாலை) - பிராட்டி ஆண்டாளானாற்போலே, உபநிஷத்து தமிழானபடி. (மாலை) - பாவநமான அளவன்றிக்கே போக்யமுமா யிருக்கையும், தலையாலே சுமக்கவேண்டியிருக்கையும். (முப்பதும் தப்பாமே) - இதில் ஒரு பாட்டும் குறையாமே. விலையில்லாத ரத்நங்களாலே செய்த ஏகாவலியிலே ஒருரத்நம் குறைந்தாலும் * நெடும்பாழா யிருக்குமிறே ; அப்படியே ஒருபாட்டுக் குறையிலும் பேரிழவா யிருக்கு மென்கை.

(இங்கு) - பிற்பட்ட காலத்திலே என்னுதல் ; ஸம்ஸாரத்திலே என்னுதல். (இப்பரிசுஉரைப்பார்) - இப்பாசுரமாத்ரத்தைச்சொல்லுவார். திருவாய்ப்பாடியிற் பெண்கள் தாங்கள் க்ருஷ்ணநுபவம் பண்ணிப் பெற்றார்கள் ; ஆண்டாள் அநுகாரத்தாலே பெற்றாள். ஆகையாலே, இப்ப்ரபந்தம்கற்றார்க்கும் இந்தப்பலம் கிடைக்கும்.

---

மாலை - புஷ்பமாலிகையாய், அத்தாலே - இப்ப்ரபந்தத்தைச் சொல்லுகைக்கு அநுக்தும் இதுக்குமுண்டான ஸாத்ருஶ்யத்தைக் காட்டுகிறார் (பாவநமான இத்யாதி.) தலையாலே சுமக்கவேண்டியிருக்கையாவது - ஶிரஸ்ஸாலே அநுஸந்திக்கவேண்டியிருக்கை. இப்படி ஶிரஸ்ஸாலே அநுஸந்திக்கும்போது பிறர்கொண்டாடும்படியிருக்கை ஶிரோபூஷணமாயிருக்கை யென்றபடி. ‘ஏகாவலி’ என்றது - ஒற்றைவடமான ரத்நமாலிகை.

இப்பரிசு - இந்த ப்ரகாரமான பாசுரத்தையென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (இப்பாசுரம் இத்யாதி.) இப்படி விசேஷித்ததுக்கு பாவம் அருளிச்செய்கிறார். (திருவாய்ப்பாடியில் இத்யாதி.) “இந்தப்பலம்” என்றது - இன்புறுகையைச் சொல்லுகிறது.

---

* ‘நெடும்பாடாய்’ என்றும் பாடம்உண்டு.

(ஈரிரண்டு மால்வரைத்தோள்) - இவர்களளவு பாராதே பண்டு பாடினவர்கள் சொல்வழியாலே அநுஸந்திக்கையாலே தோள்கள் பணைக்கும்; உகவாதார்க்குத் தோள்கள் இரண்டாய்த் தோற்றும்; இவர்களுக்குத் தோள்கள் நாலாய்த் தோற்றுமிறே. (செங்கண் திருமுகத்து) - அலப்யலாபத்தாலே சிவந்த கண்கள். (செல்வத் திருமாலால்)-உபயவிபூதியுக்தனான ச்ரியபதியாலே. இப்பாட்டில்-உபக்ரமத்திலே பிராட்டி ஸம்பந்தம் சொல்லி, முடிவிலும் சொல்லுகையாலே, த்வயத்திற் சொன்னபடியிலே இங்கும் சொல்லிற்றென்கை.

(எங்கும் திருவருள்பெற்று)- த்ருஷ்ட அத்ருஷ்டங்களிரண்டிலும் பிராட்டியும் தானும் ஸந்நிஹிதமாம்படி ப்ரஸாதத்தைப் பெற்று. (இன்புறுவர்) - பகவத்ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆநந்தம் பெறுவர். "விடிவோரை எழுந்திருந்து முப்பதுபாட்டையும் அநுஸந்தித்தல், மாட்டிற்றிலனாகில் 'சிற்றஞ்சிறுகாலே' என்கிற பாட்டை அநுஸந்தித்தல். அதுவும் மாட்டிற்றிலனாகில் நாம் இருந்த இருப்பை நினைப்பது" என்று பட்டர் அருளிச்செய்வர். (௩௰)

---

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

ஈரிரண்டு - நாலாய், மால் - பெருத்த மலைபோலே யிருக்கிற தோள்களென்று சப்தார்த்தமாய், அதுக்கு "இப்படிசுரைப்பார்" என்றத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி.) இவர்கள் - கற்றார், பண்டு பாடினவர்கள் - கோபிமார். இவர்களுக்கு - கோபிமார்க்கு. 'உபக்ரமத்திலே' என்றது - "மாதவன்" என்றத்தைப்பற்ற.

த்ருஷ்ட அத்ருஷ்டங்கள்-இஹலோகபரலோகங்கள். [[illegible]] "ஶ்ருத்வா ஸ்மரணம் ஹரேர் ஸ்வாத்யாயம் ஶ்ரவணம் ஸதா" என்கிறபடியே ப்ரஹ்மைக்யாநுஸந்தானம் அவஶ்யம் கர்த்தவ்யமாகையாலே அந்தமோக்ஷத்வத்தை ப்ரதிபாதிக்கிற இந்த ப்ரபந்தம் நித்யாநுஸந்தேயமென்னுமத்தை அபியுக்தோக்திமுகேந அருளிச்செய்கிறார் (விடிவோரை இத்யாதி.) 'நாமிருந்தவிருப்பை' என்றது - இத்தப்ரபந்தத்தை அநுஸந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை என்றபடி. (௩௰)

---

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## ஸ்வாபதேஶவ்யாக்யாநம்.

அ.—முப்பதாம்பாட்டு. (வங்கக்கடல் இத்யாதி.) இப்பாட்டில் இப்ரபந்தம் கற்றார்க்கு உண்டாம் பலத்தைச் சொல்லுகிறார்கள்.

வ்யா.—(வங்கமித்யாதி)· மரக்கலத்துக்கு ஓருசலநம் பிறவாதபடி பாற்கடலே * மந்தரத்தை மத்தாக நாட்டி வாஸுகியாலே சுற்றித் தன்கையாலே கடைந்து பிராட்டியை லபித்தாற்போலே, சேதநர் பரிக்ரஹித்த ஶரீரத்துக்கு ஒருவாட்டம் வாராமல் ஸம்ஸாரமாகிற மஹாஸமுத்ரத்தைத் தன் ஸங்கல்பமாகிற மந்தரத்தை நாட்டி, க்ருபையாகிற கயிற்றாலே சுற்றி, கடாக்ஷமாகிற கைகளாலே கடைந்து, பிராட்டியிலும் ப்ரேமவிஷயமான ஆத்மவஸ்துவை லபித்தவன். இத்தால்- இஶ்ஶரீரத்தோடே யிருக்கச்செய்தே ["ஸ்ஜந்தி ஸேதவ:"] "ஸஜ்ஜநம் தேதாவிஷ்ணு:" என்னப் பண்ணினவனே யென்கிறது. (கேசவனை) - கேஶியை நிரஸித்தாற்போலே ஆத்மவஸ்துவை அநுபவிக்கும்போது அவ்வநுபவவிரோதியாய் இச்சேதநனுக்குப் பிறக்கும் போக்த்ருத்வாதிகளுக்கு நிவர்த்தகனானவனை.

(திங்கள் இத்யாதி.)-["[illegible]"] "ஹவிர்பாகுஜமதோர்வஸ்வஸ்ய ஶிவ:" என்கிறபடியே சந்த்ரனைப்போலே ஆஹ்லாதகரமான திருமுகமண்டல முடையவர்களாய், தத்தேகவிஷயமான ஜ்ஞாந பக்தி வைராக்யபூஷிதராய், அநந்யார்ஹரான பாகவதர்கள் ஆற்றாமையாலே அவனிருந்த விடத்தே போய்ப் பூஜித்து, த்வாபரயுகத்திலே நாட்டார்க்கு "பறை" என்று வ்யாஜமாத்ரமாய்த் தங்களுக்கு உத்தேஶ்யமான கைங்கர்யத்தைப் பரிக்ரஹித்த ப்ரகாரத்தை, பூமிக்கு ஆபரணமான ஸ்ரீவில்லிபுத்தூரிலே எழுந்தருளியிருக்கிற விஸ்த்ருதமாய்க் குளிர்ந்திருந்துள்ள தாமரைமணிகளாலே செய்யப்பட்ட மாலைகளையுடைய பெரியாழ்வார் திருமகளாரான சூடிக்கொடுத்தநாய்ச்சியார் அருளிச்செய்த ஸங்காநுபாவ்யமாய், கூட்டங் கூட்டமாயிருக்கிறதாய், தமிழாலே செய்யப்பட்டு மாலைபோலே போக்யமாய், ஶிரஸாவாஹ்யமாய், ஶ்லாக்யமான இப்ரபந்தத்தை, ஒருபாட்டுக் குறையாதே பிறபட்ட காலத்திலே இப்ரபந்தரூபமான பாசுரத்தை அநுஸந்திக்குமவர்கள், இப்பாசுரஶ்ரவணத்தாலே பணைத்துப் பலிஷ்டமான பெரியமலைபோலேயிருக்கிற நாலுதிருத்தோள்களையுடையனாய், வாத்ஸல்யத்தாலே சிவந்த திருக்கண்மலர்களையுடையனாய், விகஸிதமான திருமுகமண்டலத்தையுடையனாய், உபயவிபூத்யைஶ்வர்ய ஸம்பந்நனான ஶ்ரிய:பதியாலே த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டிலும் பிறந்த ஜ்ஞாநத்துக்கு விச்சேதம்வாராதபடி க்ருபையை லபித்து ஆநந்தநிர்ப்பரரா யிருப்பர்கள். (௩0)

ஶுத்தஸத்வம் தொட்டாசார்யர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருப்பாவை மூவாயிரப்படி வ்யாக்யாநத்தின்

# ப்ரமாணத் திரட்டு.

---

மாண்டூக்யோபநிஷத், உ - கண்டம், உக - வாக்யம்.

க. 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾𑌸𑍁𑌪𑍍𑌤𑌃 𑌯𑌦𑌾𑌜𑍀𑌵𑌃𑌪𑍍𑌰𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 ।
𑌅𑌜𑌮𑌨𑌿𑌦𑍍𑌰𑌮𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌦𑍍𑌵𑌰𑍈𑌤𑌂𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇𑌤𑌦𑌾 ॥

அநாதிமாயயா-காரணபூதையான ப்ரக்ருதியினாலே, ஸுப்த:-உறங்கிக்கிடக்கிற, ஜீவ: - ஜீவாத்மாவானவன், யதா-எப்பொழுது, ப்ரபுத்யதே-ஜ்ஞாநவானாகிறானோ, ததா - அப்பொழுது,—அஜம் - (தன்னைப்) பிறப்பில்லாதவனாகவும், அநித்ரம் - உறக்கமில்லாதவனாகவும், அஸ்வப்நம் - ஸ்வப்நஶூந்யனாகவும், அத்வைதம் - (பரமாத்மாவுக்கும் தனக்கும்) பேதமில்லாதவனாகவும், புத்யதே - அறிகிறான்.

ஸ்ரீராமாயணம் - பாலகாண்டம் - கஅ - உஎ.

உ. 𑌬𑌾𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌸𑍁𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑍋𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌃 ।
𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌲𑍋𑌕𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌭𑍍𑌰𑌾𑌤𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 ॥

லக்ஷ்மிவர்த்தந: - ஶோபையை வ்ருத்திபண்ணுமவரான, லக்ஷ்மண:- இளையபெருமாள்,—ஜ்யேஷ்டஸ்ய ப்ராது: - பெரிய தமையனான, லோகராமஸ்ய - ஜநங்களை ஆநந்திப்பிக்கிற, ராமஸ்ய - சக்ரவர்த்தித்திருமகனுக்கு, பால்யாத் ப்ரப்ருதி- தொட்டிற்பருவமே தொடங்கி, நித்யஶ:-எப்போதும், ஸுஸ்நிக்த: - பரமஸ்நேஹிதராயிராநின்றார்.

ஸ்ரீராமாயணம் - அயோத்யாகாண்டம் - ககஅ - ஙச. அநஸூயையைப் பார்த்துப் பிராட்டி அருளிச்செய்தது.

ங. 𑌪𑌤𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌸𑍁𑌲𑌭𑌂 𑌵𑌯𑍋𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌚𑌮𑍇𑌪𑌿𑌤𑌾 ।
𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌣𑌵𑌗𑌤𑌃𑌪𑌾𑌰𑌂 𑌨𑌾𑌸𑌸𑌾𑌦𑌾𑌪𑍍𑌲𑌵𑍋𑌯𑌥𑌾 ॥

மே - என்னுடைய, பிதா- தமப்பனான ஜநகமஹாராஜர், பதி ஸம்யோக ஸுலபம் - நாயகனோடு சேர்த்தற்குத் தகுந்த, வய: - என் யௌவநத்தை, த்ருஷ்ட்வா ச-பார்த்து, சிந்தார்ணவகத: - வ்யஸநமாகிற ஸமுத்ரத்தை யடைந்தவராய்க்கொண்டு,—அப்லவோ யதா புணையற்றவன் போலே, பாரம்- கரையை, ந ஆஸஸாத - சேரவில்லை.

ஸ்ரீவிஷ்ணுபுராணம், ரு - அம்ஶம், ௧௩ - ௨௭.
க்ருஷ்ணலீலைகளைக் கோபஸ்த்ரீகள் ஒருவர்க்கொருவர் சொல்லியது:—

ச. ஊஷகாலிய திஷாத்ர க்ரஷ்ணோஹமிதிவாபரா |
வாஹுமாஸ்ஹோட்ய க்ரஷ்ணஸ்ய லீலயா ஸவ்வமாஉஉெ ||

'துஷ்டகாலிய - க்ரூரனான காளியனே! அத்ர - இவ்விடத்தில், திஷ்ட - இரு; அஹம் - நான், க்ருஷ்ண: - க்ருஷ்ணன்,' இதி - என்று, அபரா ச - வேறொருகோபஸ்த்ரீயும், பாஹும் ஆஸ்போட்ய - கைகளைத் தட்டிக்கொண்டு, க்ருஷ்ணஸ்ய லீலயா - கண்ணன் விளையாட்டால், ஸர்ப்பம் - மஹாநாகத்தை' ஆததே - எடுத்துக்கொண்டாள்.

ரு. ஶாஸநாச்சாஸ்த்ரம்.

ஶாஸநாத் - (இன்னது செய்யத்தக்கது இன்னது செய்யத்தகாதது என்று) விதிக்கையால், ஶாஸ்த்ரம் - ஶாஸ்த்ரமென்று சொல்லப்படுகிறது.

ஸ்ரீராமாயணம் - யுத்தகாண்டம் - ௧௩௧ - ௧௧. சக்ரவர்த்தித் திருமகனைக் குறித்துப் பர்தாழ்வான் வாக்யம்:—

சு. யாவதாவத்ததெ சக்ரம் யாவதீ ச வஸுந்தரா |
தாவத்த்வமிஹ ஸவ்வஸ்ய ஸ்வாமித்வமநுவத்தய ||

சக்ரம் - த்ருவாதிசக்ரமானது, யாவத் ஆவர்த்ததே - எவ்வளவுகாலம் சுழல்கிறதோ, வஸுந்தரா ச - பூமியும், யாவதீ - எவ்வளவுவிஸ்தீர்ணையாயிருக்கிறதோ, தாவத் - அவ்வளவுகாலமும் அவ்வளவுதேஶமும், த்வம் - தேவரீர், இஹ - இவ்வுலகத்தில், ஸர்வஸ்ய - எல்லாப்பொருள்கட்கும், ஸ்வாமித்வம் - தலைமையை, அநுவர்த்தய - அநுஸரியும்.

எ. வாஸுதெவதரூச்சாயா நாதிஶீதா நவமா |
நரகாங்காரஶமநீ ஸாகிமத்தம் நவெவ்யதெ ||

ந அதிஶீதா - அத்யந்தம் ஶீதளமாய் வவ்வலிடாமலும், ந கர்மதா - அத்யந்தம்தாபத்தையுண்டாக்கிவேர்த்தல்செய்யாமலும்; நரக அங்கார ஶமநீ - ரௌரவாதி நரகங்களாகிற பெருநெருப்பை அவிக்கவல்லதாய், ஸா - இப்படிப்ரஸித்தமாயிருக்கிற,வாஸுதேவதரு ச்சாயா-நாராயணனாகிற மரத்தின் நிழலானது, கிம் அர்த்தம் ந ஸேவ்யதே - ஏன் அடையப்படவில்லை?

கீதை - ௧௦ - ௩௫ அர்ஜுநனைப்பார்த்துக் கண்ணனருளிச்செய்தது:—

அ. ஊஸாநாம்ஊாஸ்ஶிஷொஹம்ஜீத்தநாம்காஸஊாகர: |
ஊூத்தம் சலயதாமஸ்மி தேஜஸ்தெஜஸ்விநாமஹம் ||

அஹம் - நான், மாஸாநாம்-மாஸங்களுக்குள், மார்க்கஶீர்ஷ: - மார்கழி மாஸமாகவும், ருதூநாம் - ஆறுருதுக்களுக்குள், குஸுமாகர: - வஸந்த ருதுவாகவும், சலயதாம் - (மநஸ்ஸை) ப்ரமிப்பிக்கிற விளையாட்டுக்களுள், த்யூதம் - பாச்சிகைவிளையாட்டாகவும், தேஜஸ்விநாம் - தேஜஸ்ஸையுடைய வர்களுக்குள், தேஜ: - பரமதேஜோரூபனுகவும், அஸ்மி - ஆகிறேன்.

ஸ்ரீராமாயணம் - அயோத்யாகாண்டம் - ந - ௬.
வஸிஷ்டாதிகளைக்குறித்து தஶரதமஹாராஜர்வார்த்தை:—

௯. சைத்ர: ஸ்ரீமாநயம் மாஸ: புண்ய: புஷ்பிதகாநந:
யௌவராஜ்யாய ராமஸ்ய ஸர்வமேவோபகல்ப்யதாம் ॥

அயம் - இந்த, சைத்ரமாஸ: - சித்திரைமாதமானது, ஸ்ரீமாந் - ஶோபா வஹமாயும், புண்ய:-பரிஶுத்தமாயும், புஷ்பித காநந: -மலர்ந்தபுஷ்பங்கள் நிறைந்த வநத்தையுடையதாயு மிருக்கின்றது; (ஆகையால், இந்தக்காலத்தில்), ராமஸ்ய - ஸ்ரீராமனுடைய, யௌவராஜ்யாய - யுவராஜபட்டாபிஷேகத்திற் காக, ஸர்வம் ஏவ- ஸமஸ்த கார்யமும், உபகல்ப்யதாம் - செய்யப்படட்டும்.

உத்தரஸ்ரீராமாயணம் - அ௨-கூ சக்ரவர்த்தித்திருமகனைக்குறித்து அகஸ்த்யர் வார்த்தை :—

௧௦ அத்புதமிதம் வாக்யம் தவ ராம ஶுபாக்ஷரம் ।
பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந ॥

ராம - ராமனே! தவ - தேவரீருடைய, இதம் - இந்த, வாக்யம் - வார்த்தையானது, அத்யத்புதம்- மிகவும் ஆச்சர்யகரமாயும், ஶுப அக்ஷரம்- ஸுகுமாரமான பதங்களையுடைத்தாயும், (இராநின்றது); ரகுநந்த - ரகு வின்கோத்திரத்திற் பிறந்த ஸ்ரீராமமூர்த்தி ! த்வம் ஏவ - தேவரீரே, ஸர்வ லோகாநாம் - எல்லா வுலகங்களுக்கும், பாவந: - பரிஶுத்திகரமான ஸ்வ ரூபத்தை யுடையவர்.

ஸ்ரீராமாயணம் - அயோத்யாகண்டம் - ந - உஅ.

௧௧. சந்த்ரகாந்தாநநம் ராமம் அதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம் ॥

சந்த்ரகாந்தாநநம் - சந்த்ரனைவிடமனோகரமான திருமுகமண்டலத்தை யுடையவரும், அதீவ ப்ரியதர்ஶநம் - அத்யந்தம் இஷ்டமான தோற்றத்தை யுடையவருமான,— ரூப ஔதார்ய குணை: - ஸௌந்தர்யாதிகுணங்களென்ன தாநாதிகுணங்களென்ன இவற்றால், பும்ஸாம் - புருஷர்களுடைய, த்ருஷ்டி சித்த அபஹாரிணம் - கண்களையும் செஞ்சையும் கவராநிற்கிற, ராமம் - ஸ்ரீராமமூர்த்தியை, (தஶரதமஹாராஜா பார்த்தார்).

